உ

பல வித்துவான்கள் பாடிய

# தனிப்பாடற்றிரட்டு

## இரண்டாம் பாகம்

தமிழ்ப் பேராசிரியரும், தாகூர் சட்ட விரிவுரையாளருமாகிய

திருநெல்வேலி

**திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்**

(எம். ஏ., எம். எல்., அட்வகேட்)

இயற்றிய

**உரையுடன்**



சென்னை:

**B. இரத்தின நாயகர் ஸன்ஸ்**

அவர்களால் பதிப்பித்தது.

காப்பிரைட்] 1955 [விலை ரூ. 5-0-0.

# முன்னுரை



சுமார் சென்ற இரண்டு மூன்று நூற்றாண்டுகளுள் தமிழுலகில் வாழ்ந்து நயம் நிறைந்த பலவகைச் செந்தமிழ்ப் பாடல்களியற்றிய சிறந்த பாவலர்களது தேர்ந்தெடுத்த அரிய கவிகள் இப் பகுதியிற் றொகுக்கப் பெற்றுள்ளன. பல கவிகளுக்கு அவற்றின் ஆசிரியர் திருப்பெயர் கண்டுபிடிக்கப்பெற்றுக் குறிக்கப்பெற்றுள்ளன. இப் பாகத்தின் பாதிப் பகுதி ஆசிரியர் பெயர்களோடு இலங்குவதாகும். இங்கே தொகுக்கப்பெற்ற பாடல்களின் ஆசிரியர்கள் பல சமயங்களையும், பல மரபுகளையுஞ் சார்ந்தவர்கள். பலவேறு வகைப்பட்ட அரும் பொருள்களைப்பற்றி யவர்கள் பாடியுள்ளார்கள். அவர்கள் பாடல்களால் பல வள்ளல்களின் பெயர்கள் உலகத்திற் புலனாகின்றன.

இதன்கண் பல தெய்வங்களைப் பற்றிய துதிகளோடு தமது ஆற்றல் தெரியாதாரிடம் சரவண பெருமாட் கவிராயர்போலத் தற்புகழ்ச்சியை அழகாகப் பாடுமுறை, உலகியலைப் படமெடுத்துக் காட்டுவது போன்ற வேசிகளி னியல்பு, வறுமையின் அல்லல், மாதர்களி னியற்கை நுட்பங்கள், கள், ஊனுண்பாரது இயல்பு, கால மழையின் கபடம், துறவிகளின் வஞ்சக வொழுக்கம், அகத்துறை நயங்கள், மனித வியற்கை நுட்பங்கள் முதலிய அரும் பல பொருள்களின் வருணனை இயற்கையை இற்றெனக் கிளக்கும் சிறப்பு வாய்ந்திருப்பன.

தெய்வங்களின் நிந்தாஸ்துதிகள், வள்ளல்களின் புகழ்ச்சி, தலங்களின் வருணனை, மன்மதன் செயல் வருணனை, புராணக் கதை வருணனை முதலிய உயர்வு நவிற்சியைச் சிறப்பாக எடுத்துக் காட்டிக் கற்பனை நயங்களை இனிது விளக்குவன.

மேலும், வாய்மை, பணிவு, அன்பு, தீரம், தூயமனம், பக்தி முதலிய நல்லொழுக்கப் பகுதிகளும் பல பாடல்களால் செவ்விதில் தெளிவுபடுத்தப் பட்டுள்ளன. சிலேடை நயங்கள், பல பொரு ளொருசொல் லமைப்புகள், யமகம் திரிபுகள், நடுவெழுத்தலங் காரம், அலர்க்குறி வருணனை முதலியன செந்தமிழி லிலக்கியத்தின் அளவற்ற சொன்னயங்களை விளக்கிக் கற்பாருள்ளத்திற் கின்பம் பயப்பன. ஒப்பற்ற பரம்பொருளின் மெய்யியல்பும அங்கங்கே பல பாடல்களிற் றெள்ளிதிற் புலனாகும். ஆதலால், தனிப்பாடற் றிரட்டின் இவ்விரண்டாம பாகமானது கற்போர்க்குப் பெரிய தொரு அறிவு விருந்தினை யளித்தலின், தமிழன்பர் யாவரும் இதனை வாங்கி வாசித்துப் பெரும பயனைத் துதிப்பாராக !

மணிவாசக மன்றம்
திருநெல்வேலி
2—11—39.

இங்ஙனம்,

கா. சுப்பிரமணிய பிள்ளை.

# பொருளடக்கம்



# செய்யுளகராதி

உ

கடவுள் துணை

# தனிப்பாடற்றிரட்டு

## மூலமும் - உரையும்

## ( இரண்டாம் பாகம் )

### விநாயகர் காப்பு

வெண்பா

திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கு—முருவாக்கு
மாதலால் வானோரு மானை முகத்தானைக்
காதலாற் கூப்புவர்தங் கை.

உரை:—ஆனைமுகத்தான் - ஆனைமுகக் கடவுளாகிய விநாயகர், திருவாக்கும் - எடுத்த காரியத்தை மங்கலமுடையதாகச் செய்வர் அல்லது செல்வத்தை யுண்டாக்குவர், செய் கருமம் கைகூட்டும் - செய்கின்ற தொழிலில் காரிய சித்தியுண்டாக்கும், செம் சொல் பெருவாக்கும் பீடும் பெருக்கும் - செம்மையாகிய மொழியினாலமைந்த பெரு நூலறிவையும் பெருமையையும் அதிகப் படுத்துவர், உருவாக்கும் - அழகிய திருமேனியை யளிப்பர், ஆதலால் - ஆதலினால், வானோரும் - தேவர்களும், காதலால் - அன்பினோடு அவரை, தம் கை கூப்புவர் - தமது கைகளினாற் றொழுவார்கள், என்றவாறு.

குறிப்பு:—ஆனை முகத்தானை என்னுஞ் சொற்றொடரை ( ஆனை முகத்தான் + ஐ ) எனப் பிரித்து யானைமுகத்தை யுடைய தலைவர் என்று பொருள் கொண்டு, ‘ஐ’ என்பதைத் திருவாக்கு முதலிய பயனிலைகளுக்கு எழுவாயாகக் கொள்க. ஆனைமுகத்தானை என்பதை இரண்டாம் வேற்றுமையாகக் கொண்டு கூப்புவர் என்பதற்குச் செயப்படு பொருளாகவுங் கொள்க.

# சீர்காழி அருணாசலக் கவிராயர்

## பாடியது

இராமநாடகம் அரங்கேற்றுகை விஷயமாக
மணலி முத்துக்கிருஷ்ண முதலியார்மீது பாடியன.

1. சித்திதரு கிறவல்லி புத்திதரு கிறவல்லி
தேவர்கள் வணங்கு வல்லி
தில்லைநா யகவல்லி சிவகாம வல்லியிரு
திருவிழிக் கருணை யாலே
சத்தியவா சகனென்று பூமண்ட லாதிபர்க
டாமெங்க ணுந்து திக்குஞ்
சகலபா ஷாநிபுண மணலிமுத்துக் கிருஷ்ண
சதுரநீ வாழி கண்டாய்
நத்துமலர் குவளைநான் மதியநீ செஞ்சாலி
நான்கருவி மழைமே கநீ
நளினநான் பரிதிநீ பிள்ளைநா னன்னைநீ
நான்கவிஞன் வழுதி நீகாண்
சுத்தமுள ராமாய ணந்தனைக் கொண்டுனது
சமுகம துதேட வருகிறேன்
சொற்பொரு ளறிந்தளவு சொல்லுவேன் கேட்கவே
துணையாக வேணு நீயே.

உரை :—சித்திதருகிறவல்லி - காரியசித்தியை யளிக்கின்ற கொடி போன்ற அம்பிகை, புத்தி தருகிற வல்லி - போக மளிக்கின்ற அம்பிகை, தேவர்கள் வணங்கு வல்லி - விண்ணவர்கள் வழிபடுகின்ற தேவி, தில்லை நாயகவல்லி - தில்லைக்குத் தலைமை பூண்ட அம்பிகை, சிவகாமவல்லி - சிவகாமி யென்னும் திருப் பெயருடைய அம்பிகை என்பவளுடைய, இரு திரு விழிக் கருணையாலே - இரண்டு திருக் கண்களின் கிருபா கடாட்சத்தாலே, சத்தியவாசகன் என்று பூமண்டலாதிபர்கள் தாம் துதிக்கும் - மெய் வாக்கினனென்று பூவுலகத்தார் போற்றுகின்ற, சகல பாஷா நிபுண மணலி முத்துகிருஷ்ண சதுர - எல்லா மொழிகளிலும் தேர்ச்சியுள்ள மணலி யென்னும் ஊரில் வீற்றிருக்கும் முத்துக்கிருஷ்ண முதலியாராகிய சாமார்த்தியவானே !, நீ வாழி கண்டாய் - நீ (நீடூழி) வாழ்வாயாக, நத்து

மலர் குவளை நான் மதியம் நீ - சங்குகள் தங்கும் குவளைப் பூப்போல்வன் நான்; அதற்கு மலர்ச்சி தருகின்ற சந்திரனைப் போல்வாய் நீ, செஞ்சாலி நான் கருவி மழை மேகம் நீ - செந்நெற் கதிர் நான்; கார்காலத்து மழை பொழிகின்ற மேகம் நீ, நளினம் நான் பரிதி நீ - தாமரைப் பூ நான்; சூரியன் நீ, பிள்ளை நான் அன்னை நீ - குழந்தை நான்; தாய் நீ, நான் கவிஞன் வழுதி நீ - நான் பாவலன்; நீ (பாட்டிற்குப் பரிசளிக்கின்ற) பாண்டியன், சுத்தமுள ராமாயணந்தனைக்கொண்டு உனது சுமுகமது பெற வருகிறேன் - குற்றமில்லாமற் செய்த இராமாயணக் கீர்த்தனையோடு உனது நன்மதிப்புப் பெறவருகிறேன், சொல் பொருள் அறிந்த அளவு சொல்லுவேன் கேட்கவே துணையாக வேணு நீயே - சொல்லின் பொருளை யானறிந்த அளவு எடுத்தியம்புவேன் (அதை எல்லாரும்) கேட்கும்படி நீ உதவி செய்யவேண்டும். காண் - அசை, ஏ - று.

மணலி முத்துக்கிருஷ்ண முதலியார் உதவியை வியந்தது.

2. கனந்தந்தான் கனகாபி டேகந்தந்தான்
களங்கமிலாக் கருப்பொருளை யழைத்துத்தந்தான்
மனந்தந்தான் முடிசூட்டு மாலைதந்தான்
வாணிசிங்கா சனத்திருத்தி வரிசைதந்தான்
இனந்தந்தா னிராமகதை யெவர்க்குந்தந்தா
னெனைராமா யணக்கவிஞனெனப் பேர்தந்தான்
அனந்தந்தான் மணலிமுத்துக் கிருஷ்ணபூப
னகந்தந்தா னிருமையிலுஞ் சுகந்தந்தானே.

உரை:—மணலி முத்துக்கிருஷ்ண பூபன் - மணலியில் வாழ்கின்ற முத்துக்கிருஷ்ண பூபதி, கனம் தந்தான் - எனக்கு மதிப்புக் கொடுத்தான், கனகாபிடேகம் தந்தான் - பொன்னினாலே முழுக்காட்டினான், களங்கம் இலா கருப்பொருளை யழைத்துத் தந்தான் - குற்றமற்ற மூலப்பொருளைத் தோன்றும்படி செய்தான், மனம் தந்தான் - தன்னுடைய உள்ளத்தைக் கொடுத்தான், முடி சூட்டு மாலை தந்தான் - தலையி லணியக் கூடிய பூமாலையை யளித்தான், வாணி சிங்காதனத் திருத்தி வரிசை தந்தான் - சரஸ்வதியின் சிம்மாசனத்தில் என்னை இருக்கும்படி செய்து தகுதியான பரிசளித்தான், இனம் தந்தான் - பசுக்கூட்டத்தைப் பரிசாக அளித்தான், இராமகதை எவர்க்கும் தந்தான் - இராம நாடகக் கீர்த்தனையை எல்லாரும் கேட்கும்படி செய்தான், எனை இராமாயணக் கவிஞன் எனப் பேர் தந்தான் - எனக்கு இராமநாடகாசிரியர் என்ற பெயரைக் கொடுத்தான், அனம் தந்தான் - உணவு கொடுத்தான், அகம் தந்தான் - குடியிருப்பதற்கு வீடும் கொடுத்தான், இருமையிலும் சுகம் தந்தான் - இம்மை மறுமையில் நான் இன்பமடைதற்குக் காரணமானான், ஏ-தேற்றேகாரம். எ - று.

## பாப்பையவேள்மீது பாடியது

3. பத்துரு பாயனைநேர் பாப்பையவே ளேயுனக்குப்
பத்துரூபா யென்ன பஞ்சமோ—முத்தநகை
விழியாய்ப் பாலுண்ட வேந்தன் பிறந்தசீ
காழியரு ணாசலன்யான் காண்.

உரை:—முத்தநகை வீழிவாய்ப் பால் உண்ட வேந்தன் - முத்துப் போன்ற பல்லும் நீர்முள்ளிக் கனிபோன்ற வாயுமுடைய அம்பாளிடம் ஞானப்பா லுண்ட மன்னனாகிய திருஞானசம்பந்தர், பிறந்த சீகாழி அருணாசலன் யான் - அவதரித்த சீர்காழிப் பதியிலுள்ள அருணாசலக் கவிராயன், பத்து உரு உபாயனை நேர் பாப்பை வேளே - பத்தாவதார மெடுத்த தந்திரக்காரனாகிய கண்ணன் போன்ற பாப்பைய வள்ளலே !, உனக்குப் பதது ரூபாய் என்ன பஞ்சமா - எனக்குக் கொடுப்பதற்கு உனக்குப் பத்து ரூபாய் கிடையாதா, எ - று.

4. தன்னைப் புகழ்வானுஞ் சாட்சிசொல்லி நிற்பானும
பொன்னைமிகத் தேடிப் புதைப்பானும்—ஒன்னலர்தம
நண்புத்தி கேட்பானு நாணமில்லா தானும்
பெண்புத்தி கேட்பானும் பேய்.

உரை:—தன்னைப் புகழ்வானும் - தன் பெருமை பாராட்டுகின்ற வனும், சாட்சி சொல்லி நிற்பானும் - பொய சாட்சி சொல்லுபவனும், பொன்னை மிகத் தேடிப் புதைப்பானும் - பொருளதிகமாகச சமபாதிதது நிலத்திற்குள் மறைதது வைப்பானும், ஒன்னலா தம் நணபுததி கேட்பா னும் - பகைவருடைய பொய் நட்பாகக கூறும் அறிவுரையை நம்புவானும், நாணம் இல்லாதவனும் - தன் மதிப்பில்லாதவனும், பெணபுதது கேட்பா னும் - (மயல் காரணமாக) பெண்கள் கூறுவதற்குச செவிசாயப்பவனும், பேய் - பிசாசு போல்வார், எ - று.

5. பொன்றேடி மண்புதையான் போரதனி லம்புதையான்
மன்றேடி வந்தவரை வாழ்விப்பான்—நன்றேடும்
எப்பாவலரு மியம்பும் புதுவையில் வாழ்
அப்பாசா மிக்குநிக ரார்.

உரை:—பொன் தேடி மண் புதையான் - பொருட்சேர்த்து அதைப் பூமியிற் புதையாதவன், போர் அதனில் அம்புதையான் - சண்டை யிடத தில் புறங்காட்டிக் கணையினாற் றுளைக்கப்படாதவன், மன்தேடி வந்தவரை வாழ்விப்பான் - நிலைபெறுவதை விரும்பித் தன்பால் வந்தவர்களை வாழ் விக்கின்றவன், நன் தேடும் எப்பாவலரும் இயம்பும் - நலத்தை நாடுகின்ற எல்லாப் புலவர்களும் துதிக்கின்ற, புதுவையில் வாழ் - புதுச்சேரியில்

வசிக்கின்ற, அப்பாசாமிக்கு நிகர் ஆர் - அப்பாசாமி வள்ளலுக்கு ஒப்பாவார் ஒருவருமில்லை, எ - று.

6. வெற்றிலைக்கு முன்னே வெறும்பிளவை வாயிலிட
நற்றிருவா மங்கை நடப்பளே—வெற்றிலையை
முன்னிட்டுப் பின்பிளவை மெல்குவரே யாமாயின்
மன்னரைப்போ லாவார் மகிழ்ந்து.

உரை.—வெற்றிலைக்கு முன்னே - வெற்றிலை வாயிற் போடுவதற்கு முன்னாக, வெறும் பிளவை வாயிலிட - வெறும் பாககுத துண்டை வாயிற் போட்டால், நற்றிருவாம் மஙகை நடப்பளே - நன்மையளிககினற திருமகள் அவனை விட்டு வேறு செல்வள், வெற்றிலையை முன்னிட்டுப் பின் பிளவை மெல்குவரேயாமாயின் - வெற்றிலையை முன்னாகப் போட்டுப் பிற்பாடு பாககுத துணடைப் போட்டுக கொண்டு சுவைப்பாரானால், மகிழ்ந்து மன்னரைப்போ லாவார் - சந்தோஷத்துடன் அரசர்களைப்போல உயர்நிலையை அடைவார்கள், எ - று.

7. மிகப்பட்ட வெம்பசியால் வெம்பருந்தின் வாயில்
அகப்பட்ட கோழிப்பார்ப் பானேன்—நகப்பட்ட
கல்லையோ கைதொழுதேன் காகமணு காமலையில்
இல்லையோ ரத்நகிரி யே.

உரை:—நகப்பட்ட கல்லையோ கைதொழுதேன் - மலையிற் பொருந்திய கறறெயவததையோ நான் வழிபட்டேன, காகம் அணுகா மலையில் - காகமை போகாதபடி உயர்ந்த குன்றினமீது, இரத்னகிரி இல்லையோ - இரத்தின மலைபோன்ற சிவபெருமானில்லையோ, மிகப்பட்ட வெம்பசியால் - அளவுககு மிஞ்சின கொடிய பசி நோயால், வெம்பருந்தின் வாயில் அகப்பட்ட கோழிப் பார்ப்பானேன - கொடிய பருந்தின் வாயிலகப்பட்ட கோழிக்குஞ்சுபோ லானேன், எ - று.

8. சோமனுடா வாழ்வுஞ் சோறிடா நல்லுறவும
நாமநீ றில்லாத நன்னுதலும—ஓம
நெருப்பில்லா வேதியரு நெய்பா லுடனே
பருப்பில்லாப் போசனமும பாழ்.

உரை:—சோமனுடா வாழ்வும் - ஆடை தரியாத பிழைப்பும், சோறிடா நல்லுறவும் - சாதம் போடாத நீசசுற்றததாரும், நாமம் நீறு இல்லாத நன்னுதலும - நாமமாவது திருநீறாவது அணியாத தீய நெற்றியும், ஓமநெருப்பு இல்லாத வேதியரும் - அக்கினி காரியஞ் செய்யாத அந்தணரும், நெய்பாலுடனே பருப்பு இல்லாப் போசனமும் - நெய்யும் பாலும் பருப்புஞ் சேராத வுணவும், பாழ் - வீணானவை, எ - று.

பரிசு பெறாது தன்னைத்தானே நொந்தது

9. கால்விழ்ந்து நம்மைக் கவிபாடச் சொன்னானோ
மேல்விழ்ந்து நாமே விளம்பினோம்—நூலறிந்து
தந்தக்காற் றந்தான் றராக்கா னமதுமனம்
நொந்தக்கா லென்னாகு மோ.

உரை :—கால்விழுந்து நம்மைக் கவிபாடச் சொன்னானோ (நாம் வேண்டிய செல்வன்) தானாக நம்மைக் கும்பிட்டுப் பாட்டுப்பாட நம்மைக் கேட்டுக்கொண்டானா, மேல்விழுந்து நாமே விளம்பினோம் - நாமே அவன் பால் விரும்பிச் சென்று பாட்டைப் பாடினோம், நூல் அறிந்து தந்தக்கால் தந்தான் - பாட்டின் நயந்தெரிந்து கொடுக்க விரும்பினால் அவன் கொடுப் பான், தராக்கால் நமது மனம் நொந்தக்கால் என்னாகுமோ - அவன் தராத போது நம்முடைய மனம் வருந்தினால் அது எவவாறு முடியுமோ, எ - று.

10. கடம்பவனஞ் சூழ்கூடற் கன்னிமத னம்பை
அடர்ந்தவிழி யங்கையற்கண் ணம்மை—நடந்த
நடைக்குவமை யன்ன நகைக்குவமை முல்லை
இடைக்குவமை யில்லை யினி.

உரை:—கடம்பவனம் சூழ் கூடல் கன்னி - கடப்ப மரஙகளின் செறிவு நிறைந்த மதுரைப்பதியில் வீற்றிருக்கும் சிறு பெண்ணாகிய, மதன் அம்பை அடர்ந்தவிழி அங்கையற்கண் அம்மை - காமன் கணையைத் தோற் கடித்த மீனாட்சி யம்மையானவள், நடந்த நடைக்கு உவமை அன்னம் - அவள் நடந்த நடைக்கு உவமையாகக கூறககூடியது அன்னத்தின் நடையே, நகைக்கு உவமை முல்லை - அவளுடைய பல்லுக்கு இணையாகக் கூறக்கூடியது முல்லையரும்பு, இனி இடைககு உவமை இல்லை - இடைக்கு நிகராகக் கூறக்கூடியது யாதுமில்லை, எ - று.

11. கூப்பிட்டேன் செங்கைதனைக் கூற்றுவனைக் கண்டஞ்சிக்
கூப்பிட்டே னென்னையாட் கொண்டருள்வாய்—கூப்பிட்டே
ஏனமாச் சென்றற் கிளையவளே யட்டியின்னம
ஏனமா காமாட்சி யே.

உரை :—கூப்பிட்டு ஏனமாச சென்றற்கு இளையவளே - பூமியைப் பிளந்துகொண்டு பன்றி வடிவெடுததுச சென்றவராகிய திருமாலுக்குத் தங்கையே!, காமாட்சியே - ......, 'செங்கைதனைக கூப்பிட்டேன் - சிவந்த கைகளால் உன்னை வணஙகினேன், கூற்றுவனைக் கணடு அஞ்சிக் கூப்பிட் டேன் - எமன் வருவானென்று பயந்து உன்னை யழைத்தேன், என்னை யாட்கொண்டு அருள்வாய் - என்னைத் தொண்டனாகக்கொண்டு காப்பாற்று

வாய், அமா இன்னம் அட்டி என் - என்னை யாள்வதற்கு இன்னும் கால தாமதம் எதனால், எ - று.

12. வானவரு மிந்திரு மால்பிரம ருஞ்செத்துப்
போனவிடம் புன்முளைத்துப் போகாதோ—ஞானமருள்
அத்த ரருணேச ரன்பாக நஞ்சதனைப்
புத்தியுடன் கொள்ளாத போது.

உரை :—ஞானம் அருள் அத்தர் அருணேசர் - சிவஞானத்தைக் கொடுக்கின்ற தலைவராகிய அருணாசலேசுரர், அன்பாக நஞ்சுதனைப் புத்தியுடன் கொள்ளாதபோது - இரக்கம் வைத்து விடத்தை தன்னறிவு மயங்காமல் உண்ணாதிருப்பாராயின், வானவரும் இந்திரும் மால் பிரமரும் செத்துப் போனவிடம் புல் முளைத்துப் போகாதோ - ......, எ - று.

13. நெஞ்சடைந்த வேட்கையெல்லா நீங்கி யிருவிழியும்
பஞ்சடைந்துள் ளாவி படுமுன்னே—செஞ்சடைமேல்
வெள்ளாறு வெந்நாளும் வேள்விப் புகைமாறு
நள்ளாறு வென்றே நவில்.

உரை :—நெஞ்சு அடைந்த வேட்கை எல்லாம் நீங்கி - மனதிற் பொருந்திய ஆசையெல்லாம் ஒழிந்து, இருவிழியும் பஞ்சு அடைந்து உள் ஆவி படுமுன்னே - இரண்டு கண்ணும் மயக்கமடைந்து உடம்பிலிருக்கின்ற உயிர் நீங்குவதற்கு முன்னாலே, செஞ்சடைமேல் வெள்ளாறு - சிவந்த சடைமேல் வெண்கஙகையைச சூடியவனே!, எந்நாளும் வேள்விப் புகை மாறு - எப்போதும் ஓமப்புகை நீங்காத, நள்ளாறு - நள்ளாற்றுப் பெருமானே, என்று நவில் - என்று சொல்லி அவனைத் துதி செய்வாயாக எ - று.

14. செங்கமலப் போதலர்ந்த செவ்விபோ லும்வதனம்
தங்குமொழி சந்தனசீ தம்போலும்—அங்கியெரி
கத்திரியைப் போலுமாங் காரிகையே வஞ்சர்மனம்
குத்திரர்பான் மூன்று குணம்.

உரை :—காரிகையே - பெண்ணே; வஞ்சமனக் குத்திரர்பால் மூன்று குணம் - கபட நெஞ்சமுடைய பொய்யரிடத்தில் மூன்று தன்மைகள் காணப்படும் (அவையாவன) வதனம் செங்கமலப்போது அலர்ந்த செவ்வி போலும் - (அவருடைய முகமானது) செந்தாமரைப் பூவின் மலர்சசிபோல அழகுடையது, தங்கு மொழி சந்தன சீதம்போலும் - அவர்கள் வாயில் தஙகிப் பேசப்படும் சொல்லானது சந்தனத்தின் குளிர்ச்சியைப்போலும் பொங்கு இதயம் கத்திரியைப்போலுமாம் - வெப்பமுள்ள உள்ளமானது எதையும் துண்டுபடுத்துகின்ற கத்தரியைப் போல்வுதாகும், எ - று.

## தோழி தூது

15. அனங் கனம்பா லந்நடை யங்குழல் சொற்றையல்
அனங்கனம்பான் மெய்சோர்ந் தயர்ந்து—மனங்கலங்கி
வாடியென்றாள் பற்றியெழின் மாயவனைப் போயழைத்து
வாடியென்றாள் சேர்ந்தணைய வா.

உரை:—அனம் அந்த நடை - அன்னம் போன்ற அழகிய நடையும், கனம் அம் குழல் - மேகத்தைப்போன்ற அழகிய கூந்தலும், பால் சொல்-பால்போன்ற மொழியுமுடைய, தையல் - பெண்ணாகிய தலைவி, அனங்கன் அம்பால் மெய்சோர்ந்து அயர்ந்து - காமன் கணையால் உடம்பு மெலிந்து தன்னை மறந்து, மனங் கலங்கி வாடி - நெஞ்சில் வருத்தமுற்றுத் தளர்ந்து, என் தாள்பற்றி - என் பதத்தைப் பிடித்துக்கொண்டு, எழில் மாயவனைப் போய் அழைத்து வாடி என்றாள் - அழகு மிக்க மாயவனைக் கூட்டிக்கொண்டு வருக என்று என்னை வேண்டினாள், சேர்ந்து அணையவா - ......, எ - று.

16. வாமாதா போகே மனமே துதுதுது
ஆமா பசுமாதை யத்தனார்—தாமாய்
நடித்தவர் பாகர் நடந்தவர் வேணி
முடித்தவர் கங்கணர்கேண் மோ.

உரை:—மா பசுமாதை யத்தனா - பெருமை பொருந்திய பசுமாதையில் வீற்றிருக்கும் தலைவராகிய சிவபெருமான், தாமாய் - தாமாகவே, வாது நடித்தவர் - காளியோடு வாதுசெய்து நிருத்தம் புரிந்தவர், மாது பாகர் - உமையை வாமபாகத்தி லுடையவரானா, தூது நடந்தவர் - சுந்தர மூர்த்திக்காகத் தூது போனவா, போது வேணி முடித்தவர் - கொன்றைப் பூவைச் சடைமுடியிற் றரித்தவர், கேது கங்கணா - பாம்பைக் கடகமாக அணிந்தவர், மனமே ஆ - நெஞ்சமே அவர் மயம் ஆவாயாக, எ - று

17. கங்கொன்றை சோதுமறு கைகைறகம மன்னைபகு
துங்கச் சடைமேற் றுலங்கவைத்தார்—மங்கையிடப்
பாகத்தார் மாதைப் பதியார் பசுபதிப்பேர்
ஆகத்தார் வைக்கு மவை.

உரை:—மங்கை இடப்பாகத்தார் - பார்வதியை இடதுபாகத்தி லுடையவர், மாதைப் பதியார் - மாதைத் தலத்தி லுறைபவர், பசுபதிப்பேர் ஆக அத்தர் - பசுபதி யென்ற பேருடைய தலைவர், வைக்கும் அவை - அணிபவைகளாவன, கங்கை கொன்றை நாகம் சோமன் - (சந்திரன்) தும்பை அறுகு என்பனவாம், துங்கச சடைமேல் துலங்க வைத்தார் - அவற்றைத் துலங்கும்படி சடைமுடிமே லணிந்தார், எ - று.

18. வெண்ணெயுற்று நெய்தேட வேண்டுமா தீபமுற்று
நண்ணு கனறேட னன்றுமோ—என்மனத்தை
நாடிச் சிவனிருக்க நாடாம லூர்தோறும்
தேடித் திரிவதென்ன செப்பு.

உரை :—வெண்ணெய் உற்றும் நெய்தேட வேண்டுமா - வெண்ணெய் கையிலிருக்கும்போது நெய்யைத் தேடவேண்டுவது அவசியமில்லை, தீபம் உற்றும் நண்ணு கனல் தேடல் நன்றுமோ - விளக்கிருக்கும்போது அதில் பொருந்திய அனலைத் தேடுதல் நலமா, என்மனத்தை நாடிச சிவன் இருக்க - தன்னைத் தியானிக்கிற வுள்ளத்தை விரும்பித் தங்குவதற்குச சிவ பெருமான் தயாராயிருக்கும்பொழுது, நாடாமல் - அவரை யுள்ளத்திலே தேடிக் காணமல், ஊர்தோறும் தேடித் திரிவதென்ன செப்பு - தலங்கள் தோறும் தேடி யலைவதற்குக் காரண மென்னவென்று கூறுக, எ - று.

19 நல்லவர்கள் வாயா னவிலுமொழி பொய்யாமல்
இல்லையெனு துள்ளமட்டு மீவார்கள்—நல்லகுணம்
அல்லவர்கள் போவாவென் றாசைசொல்லி நாட்கழித்தே
இல்லையென்பா ரிப்பாரிலே

உரை :—இப்பாரிலே - இந்தப் பூமியிலே, நல்லவர்கள் வாயால் நவிலு மொழி பொய்யாமல் - நல்ல இயல்புடையவர்கள் தம்முடைய வாயினாற் கூறிய வார்த்தை தப்பாதபடி, இல்லை எனு து உள்ளமட்டும் ஈவார்கள் - இரப்பவர்களுக்கு இல்லையென்று சொல்லாது தங்களிடத்தில் இருக்கிற அளவு கொடுப்பார்கள், நல்ல குணம் அல்லவர்கள் போ வா என்று ஆசை சொல்லி நாள் கழித்தே இல்லை என்பார் - தீக்குணமுடையவர்கள் யாசகர் களைப் போயகள் வாருங்களென்று ஆசைவார்த்தை சொல்லி வீணகக் கால தாமதஞ் செய்து கடைசியாக இல்லையென்று சொல்லுவார்கள், எ - று.

20. ஞானம் பெருமை நயங்கருணை யுண்மையபி
மானம் பொறுமை வணக்கமுயர்—தானமுடன்
சற்குணமா சாரந் தருகல்வி நீதிநெறி
துர்க்குணருக் கில்லென்றே சொல்.

உரை :—ஞானம் - அறிவு, பெருமை - தன் மதிப்பு, நயம் - நியாயம், கருணை - இரக்கம், உண்மை - சத்தியம் அல்லது வாய்மை, அபிமானம் - பற்று, பொறுமை - சாந்தம், வணக்கம் - பணிவு, உயர் தானமுடன் - மேலான ஈகையென்பவற்றோடு, சற்குணம் - நல்ல தன்மை (உபசாரம்) ஆசாரம் - ஒழுக்கம், தரு கல்வி - தக்க படிப்பு, நீதி நெறி - நேர்மையான வழி யென்பன, துர்க்குணர்க்கு இல் என்றே சொல் - தீக்குண முடைய வர்களுக்கு இல்லாதன வென்று கூறுக, எ-று.

21. ஞானமு பெருமை நயங்கருணை யுண்மையபி
மானமு பொறுமை வணக்கமுயர்—தானமுடன்
சற்குணமா சாரந் தருகல்வி நீதிநெறி
சற்குணருக் குண்டென்றே சாற்று.

குறிப்பு:—ஞான முதலியவெல்லாம் நற்குண முடையவர்களுக்கு உள்ளனவென்று கூறுக.

22. நினைத்த வதுவொழிந்து நேரிடும்வே றொன்று
மனித்த கருமங்கள் வாயா—கனத்த
அயனமர ராலு மரியாலுந் தெய்வச்
செயலினைக்கா ணப்படா தே.

உரை:—நினைத்த அது ஒழிந்து நேரிடும் வேறு ஒன்று - எண்ணிய காரியம் நடைபெறாது எண்ணாத மற்றொரு காரியம் நிகழும், மனித்த கருமங்கள் வாயா - மக்களுடைய செயல்கள் நினைத்தபடி சித்தி பெறுவதில்லை, கனத்த - மேலான, அயன் அமரராலும் அரியாலும் - தேவராலும் பிரமாவாலும் விஷ்ணுவாலும், தெய்வச் செயலினைக் காணப்படாதே - கடவுளின் அருட்செயல் நடப்பதைக் கண்டுபிடிக்க முடியாது, எ - று.

23. உன்னைப் பணிந்தே னுனக்கடிமை யாயினேன்
என்னைக் கருணைபுரிந் தீடேற்றாய்—கன்னியுமை
வாமா பசுமாதை வாசா வலர்ந்த கொன்றைத்
தாமா பசுபதி நாதா.

உரை:—கன்னியுமை வாமா - பார்வதியாகிய கன்னியை இடப்பாகத்திலுடையவனே!, பசுமாதை வாசா - பசுமாத்தூரில் வீற்றிருப்பவனே! அலர்ந்த கொன்றைத் தாமா - விளங்குகின்ற கொன்றைமாலை யணிந்தவனே!, பசுபதி நாதா - பசுபதியெனனும் திருப்பெயருடைய தலைவனே!, உன்னைப் பணிந்தேன் உனக்கு அடிமை யாயினேன் - உன்னை வழிபட்டு உனக்குத் தொண்டனுனேன், என்னைக் கருணைபுரிந்து ஈடேற்றாய் - எனக்கு இரங்கி என்னைக் கதியடையச் செய்யவேண்டும், எ - று.

24. குவளைத்தார்த் தேவர்கடங் கோவே தணிகைக்
கவளக் கரிக்கிளைய கந்தா—தவளச்
சலசத்தாள் கோவைத் தனைப்பூட்டி யாக்கை
அலையச்செய் தாய்நன்மை யா.

உரை:—குவளைத்தார் தேவர்கள் தம கோவே - நீலோற்பல மாலை யணிந்த விண்ணவர்களுக்குத் தலைவனே!, கவளக்கரிக்கு இளைய தணிகை கந்தா - வளமான உணவு உட்கொள்ளுகின்ற யானை முகவனுக்குத் தம்பி

யாகிய திருத்தணிகைப் பதியில் வதியும் கந்தப் பெருமானே !, தவளச சல சத்தாள் கோவை - வெண்டாமரையிலிருக்கும் கலைமகளின் கணவனாகிய நான்முகனை, தளை பூட்டி - விலங்கிட்டு, ஆக்கை அலையச் செய்தாய் - அவனது உடம்பைத் துன்பப்படுத்தினாய், நன்மையா - இது நீதியாகுமா ? எ - று.

25. பிஞ்சகன் றிங்கள் பிறங்க வரும்புனல்
அஞ்சவிர் கொன்றை யமர்ந்திட வுஞ்சுத
பஞ்செய் தனவோ பசுபதிநாயக
விஞ்சிய செஞ்சடை மேல்.

உரை:—பிஞ்சக - தலைக்கோல மணிந்த பெருமானே!, பசுபதிநாயக - பசுபதீச்சுரனே, விஞ்சிய செஞ்சடைமேல் - சிறப்புற்றோங்கும் உனது சடையின்மேல், திங்கள் பிறங்க - சந்திரன் கலைபெற்று விளங்கும்படியாகவும், வரும் புனல் அஞ்ச - கங்கை பயந்து அடங்கவும் அவிர்கொன்றை - திகழ்கின்ற கொன்றைப் பூவும், அமர்ந்திடவும் - தங்குவதற்கு, சுதபம் செய்தனவோ - நற்றவம் ஆற்றினவோ, எ - று.

26. தென்னாலங் காட்டத்தா சேயிழைமே னாட்டத்தா
நன்ஞா யிறுதிங்க ணாட்டத்தா—வன்னிகையா
காலகா லாநாக கங்கணா கண்டத்தில்
ஆலகா லாசங்க ரா.

உரை :—தென் ஆலங்காட்டு அத்தா - அழகிய திருவாலங்காட்டில் நடனஞ் செய்யும் அப்பனே !, சேயிழை மேல் நாட்டு அத்தா - சிவந்த ஆபரணமணிந்த உமை யம்மையைத் திருமேனியில் வைத்துக் கொண்ட பாதிப் பாகமுடையவனே!, நல் ஞாயிறு திங்கள் நாட்டத்தா - நல்ல சூரியனும் சந்திரனும் கண்களாக வுடையவனே !, வன்னிகையா - நெருப்பைக் கையிலுடையவனே !, காலகாலா - காலனுக்குக் காலனே !, நாக கங்கணா - பாம்புக் காப்பை யுடையவனே !, கண்டத்தில் ஆலகால - கழுத்தில் ஆலகால விஷத்தை யுடையவனே !, சங்கரா - சுகங்கொடுப்பவனே!, எ - று.

## மொழி மாற்றுப் பொருள் கோள்.

27. சாரங்கபாணி தலையி லிரந்துண்டான்
சீரங்கம் பாதி சிவனுண்டான்—பாருங்கள்
பாற்கடலை யாண்டான் பசுபதிநா ராயணன்றான்
ஏற்கயிலை யாண்டா னிவன்.

உரை:—அங்கம் சார் பாணி - தலையோடு அமைந்த கையில், தலையில் - இடந்தோறும், இரந்து உண்டான் - ஐயமேற் றுண்டவனான சிவபெரு

மான், சீரகம் பாதி யாண்டான் - சிறப்புடைய திருமேனியிற் பாதியைத தனக்குரிமை யாகக்கொண்டான், பசுபதி ஏர் கைலை யாண்டான் - உயிா களுக்குத் தலைவனுகிய கடவுள் தனக்குத் தகுதியான கயிலைமலையில் ஆட்சி புரிந்தான், நாராயணன் தான் பாற்கடலை யாண்டான் - விண்டுவானவா திருப்பாற்கடலில் ஆட்சி செய்கிருர், எ - று.

குறிப்பு :—சாரங்கபாணி யென்பதற்கு மானைக் கையிலுடையவன் என்பதும் பொருள்.

28. மையிருண்ட சோலை வளர்கச்சி யேகம்பன்
கையிரண்டுஞ் சேர்த்துக் கலவாநாள்—ஐயிரண்டு
தேரோன் மதலைத் திருமஞ் சனமாடும்
நீரோ வெழுந்த நிலா.

உரை :—மை இருண்ட சோலைவளா கசசி ஏகம்பன் - மைபோலக கருதத பொழில்கள் ஓஙகிய காஞ்சிப்பதியில் வீற்றிருக்கும் ஏகம்பநாதர், கை இரண்டும் சேர்தது கலவா நாள் - இரு கையினுலும் ஆலிஙகனஞ் செய்து சோாத நாளில், எழுந்த நிலா - தோன்றிய சநதிரனின் ஒளியா னது, ஐ இரண்டு தேரோன் - தசரதனுடைய, மதலை - மகனுகிய இராம னுடைய, திரு - மனைவியாகிய சீதை, மஞ்சனம் ஆடும் - முழுகும், நீரோ - நீராகிய நெருப்பா யிருப்பதோ, எ - று.

---

## சுப்ரதீபக் கவிராயர்

### பாடியது

குன்னரங்கனென்னும் அரசன் இறந்தபோது பாடியது

1. தென்னரங்க னரங்கனென்பார் வாய்திறவான்
கண்விழியான் றிருமபிப் பாரான்
என்னரங்கன் றாங்கரங்க னேழையர்பாற்
கருணையுட னிரங்கா ரங்கன்
மன்னரங்கன் றமிழ்ப்பெருமான் மழவரங்க
னளித்தருளு மைந்தனை
குன்னரங்கா வெனக்கிரங்காய் கொண்டுவந்த
தமிழ்க்கிரங்கிக் குழைழுந் தெழாயே.

உரை :—தென்னரஙகன் - அழகிய சீரங்கததிலுள்ள பெருமானே, அரங்கன் என்பார் - சபைக்கதிபதி யென்பார்கள், வாய்திறவான் - அவன்

பேசுவதில்லை, கண் விழியான் - கண்ணைத் திறந்து பார்க்கமாட்டான், திரும்பிப் பாரான் - தான பார்க்குந் திசையிலிருந்து மாறிப் பார்க்கமாட்டான், என்ன அரங்கன் - அவன் எத்தன்மையான அரங்கனென்றால், துயிலரங்கன் - துயில்கின்ற அரங்கன், ஏழையர்பால் கருணையுடன் இரங்கா ரங்கன் - எளியவர்களிடத்துத் தயவு வைதது இரக்கங் காட்டாத அரங்கநாதசாமி, மன்னர் அரங்கன் - வேந்தர்களைத தனக்கு உறுப்பாக வுடையவனான, தமிழ்ப்பெருமான் - தமிழுக்குத் தலைவனான, மழவரங்கன் அளிததருளும் மைந்தனான குன்னரங்கா - மழவரங்க பூபதிபெற்ற மகனாகிய குன்னரங்கனே!, எனக்கு இரங்காய் - என்பாற் கருணைவையாவிடினும், கொண்டுவந்த தமிழ்க்கு இரங்கி - நானியற்றிக் கொணர்ந்த தமிழ்ப் பாட்டிற்கு இரக்கம் வைதது, குழைந்து எழாய - மனமுருகி உயிர்தெழுவாயாக, எ - று.

2. எண்டிசைக்கும புகழ்படைத்த குன்னரங்க
மகிபாலா வினிமேலிந்த
மண்டலத்துக் கரசாள வொப்பிலா
நின்புதல்வன் மழவன்போதும
விண்டலத்துக் கிந்திரனுக் கரசுநிலை
யில்லாமல் வெகுநாளாக
நண்டளந்த நாழியாக் கிடக்குதந்த
விண்ணாள நடந்திடாயே.

உரை :—எண்டிசைககும் புகழ் படைத்த - எட்டுத திசைகளிலும் புகழ பரவப்பெற்ற, குன்னரங்க மகிபாலா - குன்னரங்க பூபதியே!, இனிமேல் இந்த மண்டலததை யரசாள - எதிர்காலத்தி லிந்தப் பூமியை யாள்வதற்கு, ஒப்பிலா நின புதல்வன் மழவனபோதும் - இணையற்ற உன மகனாகிய மழவரங்கன் தகுதியுடையவனே, விண்டலததுக்கு இந்திரனுககு அரசுநிலை இல்லாமல் - வானுலகததில இந்திரனுடைய ஆட்சி நிலை பெறாது, வெகு நாளாக நண்டளந்த நாழியாக கிடக்குது - நெடுங்கால மாகத் தகுதியற்றவ ராட்சியி லிருககிறதாகிய, அந்த விண்ணாள நடநதிடாயே - அந்தத தேவலோகத்தை யரசாட்சி செய்வதற்குச செல்வாயாக, எ - று.

## திருவாரூர்த் தியாகராசப் பெருமானைப்பற்றிப் பாடியது

3. ஐயநீ புரங்கள்வென்ற தொக்குமிக்க காலனார்
அழியவென்ற தொக்குமிவ் வனைத்து மொக்கு மாயினும
வெய்யகாம தகனரென்னும விருதுசின்ன வோசையில்
வெட்கினே னுமக்குமிந்த விருதுசின்ன மேற்குமோ

வெய்யவா சுகங்கள்பட்டு வெருவியோடி யரணிலா
ஏழைவீடு புக்கொளித்து மின்னு மாரன் வருவனச்
செய்யமேனி பாதியும் வெளிப்படாத கமலைவாழ்
தியாகராய ரேசிறந்த தென்றல்வாச லழகரே.

உரை :—அச் செய்யமேனி பாதியும் - (உமையம்மையால் கவரப்பட்ட) அந்தச் சிவந்த திருமேனியின் ஒரு பாகி, வெளிப்படாத - தோன்றாத, கமலைவாழ் தியாகராயரே - திருவாரூரில் வாழ்கின்ற தியாகராசப் பெருமானே !, சிறந்த தென்றல் வாசல் அழகரே - நல்ல தென்றற்காற்று வீசுகின்ற தெற்குச் சாளர வாசலையுடைய அழகிய பெருமானே !, ஐயநீ புரங்கள் வென்றது ஒக்கும் - ஐயனே நீ திரிபுரங்களை யழித்து வெற்றி நாட்டியது பொருந்தும், மிக்க காலனோ அழிய வென்றது ஒக்கும் - எமனை யுதைத்துக் கொன்று வெற்றி நாட்டியது பொருந்தும், இவவனைத்தும் ஒக்குமாயினும் - இவை போன்ற பிற வீரச் செயல்கள் ஒப்புகொள்ளத் தக்கனவேயானாலும், வெப்ய காம தகனமென்னும் விருது சின்ன ஓசையில் வெட்கினேன் - கொடிய காமனை யழித்தவனென்று ஊதுகின்ற வெற்றிச் சின்ன ஒலியைக் கேட்டு நான் வெட்கமடைந்தேன், உமக்கு மிந்த விருது சின்னம் ஏற்குமோ - உமக்கு இந்த வெற்றிச் சின்னம் தக்கதாகுமா, வெய்ய ஆசுகங்கள் பட்டு - கொடிய அம்புகள் தைக்கப் பெற்று, வெருவியோடி அரண் இலா - அஞ்சியோடிப் பாதுகாப்பில்லாத, ஏழை வீடு புகஒளித்தும - பெண்களுடைய இல்லங்களிற் போய மறைந்து, இன்னும் மாரன் வருவன் - மன்மதன் வந்து கொண்டிருக்கிறான், எ - று.

4\. ஒருமாடு மில்லாமல் மைத்துனனு
ருலகமெலா முழுதே யுண்டார்
நரைமாடோ வொன்றிருக்க வுழுதுண்ண
மாட்டாம னஞ்சை யுண்டீர்
இருநாழி நெல்லிருக்க விரண்டுபிள்ளை
தானிருக்க விரந்தே யுண்டீர்
திருநாளு முண்டாச்சே செங்கமலைப்
பதிவாழுந் தியாக னாரே.

உரை :—செங்கமலப் பதிவாழும் தியாகனாரே - சிறந்த இலக்குமி வீற்றிருக்கின்ற திருவாரூரில் வாழும் தியாகராசப் பெருமானே !, ஒரு மாடு மிலலாமல் மைத்துனனார் உலகமெலாம் உழுதே யுண்டார் - உன்னுடைய மைத்துனனாராகிய விஷ்ணு ஒரு மாட்டின் உதவியும் வேண்டாது பன்றியவதார மெடுத்தபோது தனது கோட்டினாலே நிலத்தை புழுததோடு பூமியையும் விழுங்கினர், நரைமாடோ ஒன்றிருக்க - உமக்கு வெள்ளைக்

காளை யொன்று சொந்தமாக இருக்கவும், உழுது உண்ணமாட்டாமல் நஞ்சை யுண்டீர் - . , இரு நாழி நெல் இருக்க - இரண்டு படி நெல் உமையம்மையிட மிருக்கவும், இரண்டு பிள்ளை தாளிருக்க - அவற்றை விதைப்பதற்குக் கணபதி குமரன் என்ற இரண்டு புத்திரர்க ளிருக்கும் போது, இரந்தே உண்டீர் - பிச்சை யெடுத்துச் சாப்பிட்டீர், திருநாளும் உண்டாச்சே - உமக்கு திருவிழா ஏற்பட்டது வேடிக்கையே, எ - று.

தக்காராதவைச் சேரவேண்டுமெனப் பாடியது

5. சிறியரா யினோர் சார்பினை விழையன் மின்றிறல்கெழுபெரியோ ராம்
அறிஞரா யினோர் சார்பினை விழைமினோ வலரிதழ்விரி கொன்றை
வெறிநறுந் தொடை யெம்பிரான் சார்பினை விழைதலா னுரகங்கள்
மறுவிலாற்றல் சால்கலுழனை வினவினவாழ்ந் தனையோ வென்ன.

உரை :—சிறியராயினோர் சார்பினை விழையல்மின் - அற்பரானவர்கள் நட்பில் இச்சை வையாதீர்கள், திறல் கெழு பெரியோராம் அறிஞராயினோர் சார்பினை விழைமினோ - திறமை பொருந்திய பெரியோராகிய அறிவுடையோர் நட்பினைப் பிரியப்படுங்கள், அலர் இதழ் விரி கொன்றை வெறிநறுந் தொடை எம்பிரான் - மலர்ந்த இதழ்கள் விரியப்பெற்ற கொன்றைப்பூவின் தேன மணங்கமழும் மாலை யணியப்பெறற எமது கடவுளுடைய, சார்பினை விழைதலால் - ஆதரவை விரும்புவதால், உரகங்கள் மறுவிலாற்றல் சால்கலுழனை - பாம்புகள் குற்றமற்ற திறமையுடைய கருடனை, வாழ்ந்தனையோ என்ன வினவின - நீ சுகமா என்று அஞ்சாமல் கேட்கலாயின, எ - று.

சதுரானன பண்டிதன் மனைவி தனக்குச் செய்த வுபசாரத்தினால் அவளைப் புகழ்ந்து பாடியது

6. நடக்கி லன்னமு மாநிற்கில் வஞ்சியாம்
கிடக்கி லோவியப் பாவைகி டந்தவா
தடக்கை யான்சது ரானன பண்டிதன்
மடத்து ளாளென் மனத்துறை வல்லியே.

உரை :—என் மனத்துறை வல்லியே - என்னுடைய உள்ளத்தில் நன்றி யறிதலின காரணமாகத தங்குகின்ற கொடிபோன்ற மாதானவள், தடக்கையான சதுரானன பண்டிதன் மடத்துளாள் - கொடையால் விரிந்த கையையுடைய நான்முகப் புலவனது இல்லத்தி லிருக்கின்றவளாவள, நடக்கில் அன்னமும ஆம் - சென்றால் அவள் நடை அன்னத்தின் நடைபோலிருந்தும், நிற்கில் வஞ்சியாம் - நின்றால் அவள் வஞ்சிக்கொடி போன்றவளாம், கிடக்கில் ஓவியப் பாவை கிடந்தவா - படுத்தால் படத்திலிருக்கும் பதுமைபோல விளங்குவள், எ - று.

## சீனக்கனைப் புகழ்ந்து பாடியது

7. அளிக்கொ ளுந்தொடை யானர சைக்குமன்
ஒளிக்கொள் சீனக னின்றுவந் திட்டசீர்ப்
புளிக்குஞ் சோறுமென் புந்தியிற் செந்தமிழ்
தெளிக்குந் தோறெலாந் தித்தியா நிற்குமே.

உரை :—அளிக்கொளும் தொடையான் - வண்டுகள் தங்குகின்ற மாலை யணிந்தவன், அரசைக்கு மன் - அரசுருக்குத் தலைவனாகிய, ஒளிக்கொள் சீனக்கன் - புகழ் மிகுந்த சீனக்கனென்னும் வள்ளல், இன்றுவந்து இட்ட சீர் புளிக்கும் சோறும் - இன்றைக்கு விருப்பத்தோடு அளித்த செம்பாகமான புளியன்னம், என் புந்தியில் செந்தமிழ் தெளிக்குந்தோறும் - என்னுடைய அறிவினால் செந்தமிழை யாய்கின்ற எக்நேரத்திலும், தித்தியா நிற்குமே - இனிமை தந்துகொண்டிருக்கும், எ - று.

## தாசியை வியந்தது

8. படைத்தமதன் றனையெரித்த பழமலையார்
நன்னாட்டிற் பாவை யாடன்
கடையரிக்கண் ணான்மருட்டி மயல்பூட்டி
வரவழைத்துக் கைக்குள் ளாக்கி
இடைதுவள முலைகுலுங்க வெனையணைத்த
சுகத்தைநினைத் தேங்கி யேங்கி
அடைமழைபு மூளைவழியும பொதியெருது
மொருவனும்போ லலைகின் றேனே.

உரை:—படைத்த மதன் தனை எரித்த பழமலையார் நன்னாட்டில் - ஆயுதபாணியாய் வந்த மன்மதனை யழித்த திருமுதுகுன்ற நாதருடைய நல்லதேசத்திலுள்ள, பாவையாள் தான - பதுமை போல்வாளாகிய பெண், கடையரிக்கண்ணால் மருட்டி - வரிகள் படர்ந்த கடைக்கண்ணினால் மயக்கி, மயல் பூட்டி வரவழைத்துக் கைக்குள்ளாக்கி - மோக விலங்கு போட்டுத் தன்பால் வரும்படி செய்து தன்வசப்படுத்தி, இடை துவள முலை குலுங்க எனை அணைத்த சுகத்தை நினைத்து ஏங்கி ஏங்கி-இடையும் கொங்கையும் அசையும்படி என்னை யாலிங்கனஞ்செய்து கொடுத்த இன்பத்தை யெண்ணியது கிடைக்கப்பெறாது மிக வருந்தி, அடை மழையும் உளை வழியும் பொதி யெருதும் ஒருவனும்போல அலைகின்றேனே - இடைவிடாது பெய்யும் மழையில் சகதி வழியில் பொதி சுமக்கின்ற மாட்டை நடத்துகின்ற ஒருவனைப்போல மயற் சேற்றினி லீடுபட்டு வருந்துகின்றேன், எ - று.

செகநாத் வள்ளலிடஞ் சால்வைக்காகப் பாடியது

9. சூல்வைக்கு நெல்வயல்சூழ் சிங்கரிவாழ்
செகநாத சுகுண மேன்மைச்
சால்வைக்கு மனதுவைத்து மாலயன்
சங்கரனையுற்றாற் சலமபூக் கல்லாம்
ஆல்வைக்குஞ் சயனனென்று நூல்வைக்கு
மார்பனென்று அசையும் வேழத்
தோல்வைக்குந் தோளனென்று நாணியவ
ருனைக்காட்டிச் சொன்னார் மன்னே.

உரை :—சூல்வைக்கும் நெல் வயல்சூழ் சிங்கரி வாழ் செகநாத - நெற்கதிர்கள் முதிர்ந்த கர்ப்பம்போற் றோன்றும் வயல்கள் சுற்றியுள்ள சிங்கேரிப்பதியில வசிக்கின்ற செகநாதனென்னும் நற்குண சீலனே !, மேன்மைச் சால்வைக்கு மனதுவைதது - உயர்ந்த உத்தரீயத்தை (மேலாடையை) விரும்பி, மால் அயன் சஙகரனை யுற்றால் - அரியயன் அரனை யடைந்தால், சலம் பூக்கல்லாம் - முறையே தஙகளிடம் பாற்கடல் தாமரைப்பூ மலையென்றும், ஆல்வைக்கும் சயனன் என்றும் - ஆலிலையிற் பள்ளி கொள்வோனென்றும், நூல் வைக்கும் மார்பன் என்றும் - பூணூலைத் தரிக்கும் மார்பை யுடையவ னென்றும், அசையும் வேழத்தோல் வைக்கும் தோளன் என்றும் - அசைகிற யானைததோலைப் போர்ததத தோளினை யுடையவனென்றும், நாணி - கூறி வெட்கப்பட்டு, அவர் உனைக் காட்டிச சொன்னார் - அவர்கள உன்னிடததில் அது கிடைக்குமென்று தெரிவித்தார்கள், மன்னே - அசை, எ - று.

கனவு வுரைத்தல்

10. ஏழி லொருகிரியா னேழிலே யொன்றணிவான்
ஏழிலே யொன்றீ யெனக்கேட்டான்—ஏழிலே
ஒன்றீயென் றேனுண்ப தோடென்றா னோடென்றேன்
என்று மறிந்தவருக் கே.

உரை:—ஏழில் ஒரு கிரியான் - ஏழுசசியில் அதாவது உயரத்தில் ஒப்பற்ற மலையாகிய கைலைமலையை யுடையவன, ஏழிலே ஒன்று அணிவான் - ஏழு நதிகளி லொன்றாகிய கஙகையைத் தரித்தவன், ஏழிலே ஒன்று ஈ எனக்கேட்டான் - ஏழு வாரங்களி லொன்றாகிய செவ்வாயை (சிவந்த வாயினை)க் கேட்டான், ஏழிலே ஒன்று ஈ என்றேன் - ஏழு வாரங்களி லொன்றாகிய வியாழன் (அதாவது பொனனைக்) கொடுவென்று கேட்டேன், உண்பது ஓடு என்றான் - (பொன் கிடையாது) நான் உணவு கொள்வது ஓட்டிலே யென்றான், என்றும் அறிநதவருக்கே ஓடு என்

றேன் - எக்காலத்தும் புலவர்களுக்கு ஓடுதான் கிடைக்கு மென்றேன் (அல்லது எக்காலத்தும் தெரிந்தவர்களிடம் விரைந்துபோ என்றேன்) எ - று.

11. மாரன் படைத்தலைவி மங்கைசி ரோமணியாம்
தாரிலகு மாறு டனதொழிலோ—வர்பெரிய
துன்னுவிழி நான்மூன்று தூயதன நாலிரண்டு
பன்னிரண்டு சிற்றிடையாம் பார்.

உரை:—மாரன் படைத்தலைவி - காமனது சேனைக்கு அதிபதி, மங்கை சிரோமணி - பெண்களுக்குச் சிகாமணி போன்றவர், தார் இலகு மானுள் தன் - மலர் விளங்குகின்ற மான் போன்றவளுமாகிய கன்னியின், எழிலோ - அழகோ, வர் பெரிய - எழுச்சியும் பெருமையு முடையது, துன்னு விழி - அவளுடைய கண்ணானது, நால் மூன்று - ஏழாவது இராசியாகிய மீன் போன்றது, தூயதனம் நால் இரண்டு - சுத்தமான கொங்கை எட்டாவது இராசியாகிய கும்பம் போன்றது, பன்னிரண்டு சிற்றிடையாம் - நுட்பமான இடையானது பன்னிரண்டாவது இராசியாகிய சிங்கம் போன்றது, பார் - இதைத் தெரிவாயாக, எ - று.

## பாலனையும் பரத்தையரையும் பழித்தல்

12. கச்சிருக்கும் போது கரும்பானேன் கைக்குழந்தை
வச்சிருக்கும் போது மருந்தானேன்—நச்சிருக்கும்
கண்ணார் கரும்பானார் காணவுநான் வேம்பானேன்
அண்ணா மலையர சுக்கு.

உரை:—அண்ணாமலை அரசுக்கு - அண்ணாமலை யென்னும் மன்னனுக்கு, கச்சிருக்கும்போது கரும்பானேன் - கச்சு இறுக்கமாய் முலை விம்மும்படி இருந்தபோது கரும்புபோல இனியவளானேன், கைக்குழந்தை வச்சிருக்கும்போது மருந்தானேன் - குழந்தைபெற்றுக் கையில் வைத்திருக்கும்போது நோய்க்கு மருந்துபோற் பயன்பட்டேன், நச்சிருக்கும் கண்ணார் கரும்பானார் - விடம் தங்கும் கண்களையுடைய விலைமகளிர் கரும்புபோலானார்கள், (அப்போது) காணவும் நான் வேம்பு ஆனேன் - பார்ப்பதற்குக் கூட நான் வேம்புபோலக் கசப்பவளானேன், எ - று.

# குருநமச்சிவாய தேவர்

## பாடியது

—∞∞—

### திருவண்ணாமலையில் அம்பிகையை தனக்குச் சோறு கொண்டுவரும்படி வேண்டியது

1. அண்ணா மலையா ரகத்துக் கினியாளே
உண்ணா முலையே யுமையாளே —நண்ணா
நினைதோறும போற்றிசெய நின்னடியா ருண்ண
மனைதோறுஞ் சோறுகொண்டு வா.

உரை :—அண்ணாமலையார அகத்துக்கு இனியாளே - அண்ணாமலைநாதருடைய உள்ளததிறகு உவப்பானவளே !, உண்ணாமுலையே - எக குழந்தையும் பால் பருகாத தனஙகளை யுடையவளே !, உமையாளே - உமாதேவியே !, நண்ணா - விரும்பி, நினைதோறும் போறறிசெய - எண்ணுந்தோறும் துதிககுமபடியாகவும், நின அடியாா உண்ண - உன்னுடைய அன்பாகள் உணவு கொளளுமபடியாகவும, மனைதோறும் சோறு கொண்டு வா - வீடுதோறும் சோறு கொணடு வருவாயாக, எ - று.

2. தாயிருக்கப் பிள்ளை தளருமோ தாரணியில்
நீயிருகக யான்றளர நீதியோ—வேயிருக்கும
தோளியே விண்ணோா துதிக்குந் திருமுத்து
வாளியே சோறுகொண்டு வா.

உரை :—வேயிருககும் தோளியே - மூஙகிலின றன்மையமைநத தோள்களை யுடையவளே !, விண்ணோா துதிககும் திருமுதது வாளியே - வானவாகள புகழகினற அழகிய முத்து அஙகியை அணிந்தவளே !, தாயிருக்கப் பிளளை தளருமோ - (சோறூட்டும்) அன்னை யிருக்கும்போது பிள்ளை வாடுவதுண்டா, தாரணியில் நீ இருகக யான் தளர நீதியோ - உலகத்தில் தாயாகிய நீ எனனைக் காப்பதற்கு இருககுமபோது நான உணவின்றி வாடுவது நியாயமாகுமா, சோறு கொண்டுவா - ......, எ - று.

3. நன்றிபுனை யும்பெரிய நாயகி யெனுங்கிழத்தி
என்றுஞ் சிவன்பா லிடக்கிழத்தி—நின்ற
நிலைக்கிழத்தி மேனி முழுநீலக் கிழத்தி
மலைக்கிழத்தி சோறுகொண்டு வா.

உரை :—நன்றி புனையும் பெரிய நாயகி யெனும் கிழத்தி - நன்மையே செய்யும் பெரும் தலைவியா யிருத்தற்குரிய உரிமை பூண்டவள், என்றும சிவன்பால் இடக்கிழததி - எக்காலத்தும் சிவனது இடப்பாகதலி லிருக்

கும் உரிமை பூண்டவள், நின்றநிலைக கிழத்தி - நிறநின்ற திருவுருவ முடைய அம்மை, மேனிமுழு நீலக் கிழத்தி - உடம்பு முழுதும் நீலநிற முடைய தாயே !, மலைகிழத்தி - மலையரையன் மகளே !, சோறுகொண்டு வா - ......, எ - று.

4. முத்தநதி சூழு முதுகுன் றுறைவாளே
பத்தர் பணியும பதத்தாளே—அத்தர்
இடத்தாளே மூவா முலைமேலோ ரார
வடத்தாளே சோறுகொண்டு வா.

உரை :—முத்தநதி சூழும் முதுகுன்று உறைவாளே - மணி முத்தா நதி சூழப்பெற்ற திருமுதுகுன்றத்தில வீற்றிருப்பவளே !, பத்தர் பணியும் பதத்தாளே - அன்பர்கள வணங்குகின்ற திருவடியை யுடையவளே !, அத்தா இடத்தாளே - நமது தந்தையாகிய சிவபெருமானது இடப்பாகத்தி லுள்ளவளே !, மூவா முலைமேல் ஓரார வடத்தாளே - என்றும் இளமைத தன்மையுடைய தனங்களின்மீது முத்துமாலையை அணிந்தவளே !, சோறு கொண்டுவா - ......, எ - று.

5. ஊன்பயிலுங் காய முலராம லுந்தனது
வான்பயிலும் பொன்னடியை வாழ்த்துவேன்-தேன்பயிலும்
சொல்லி யனல்லார் துதிக்குஞ் சிவகாம
வல்லியே சோறுகொண்டு வா.

உரை :—தேன பயிலும் சொல் இயல் நல்லார் துதிக்கும் சிவகாம வல்லியே - தேனபோன்ற இனிமை பொருந்திய மொழியினையுடைய நன்மாதா வாழ்த்துகின்ற சிவகாம வல்லியே !, ஊன் பயிலும் காயம உலராமல் - இந்தப் புலாலுடம்பானது வாடாதபடி, உந்தனது வான்பயிலும் பொன்னடியை வாழ்த்துவேன் - உன்னுடைய தெய்வத்தன்மை பொருந்திய திருவடியை நான் துதிக்கின்றேன், சோறு கொண்டுவா - ......, எ - று.

## சிதம்பர தரிசனப் பலன்

6. கோபுரங்க ணான்கினையுங் கண்டமட்டிற் குற்றமெலாந்
தீபரந்த பஞ்சதுபோற் சென்றதே—நூபுரங்கள்
ஆர்க்கின்ற செஞ்சரண வம்பலவா நின்பாதம
பார்க்கின்றார்க் கென்னோ பலன்.

உரை:—கோபுரங்கள் நான்கினையும் கண்டமட்டில் - நான்கு கோபுரங் களையும் தரிசித்த மாத்திரத்திலேயே, குற்றம் எல்லாம் தீபரந்த பஞ்சது போல் சென்றதே - பாவங்களெல்லாம் நெருப்புப் பற்றிய பஞ்சுபோல ஒழிந்தன, நூபுரங்கள் ஆர்க்கின்ற செஞ்சரண அம்பலவா - சிலம்புக ளொலிக்கின்ற செவ்விய திருவடிகளையுடைய சபா நாயகரே !, நின் பாதம்

பாரகின்றாக்கு என்னே பலன் - உன்னுடைய திருவடியைத் தரிசிக்கின்றவர்களுக்குப் பயன் எவ்வளவு அதிகமோ அருள்வாயாக, எ - று.

## தீர்த்தப் பலன்

7. கண்டமட்டிற் கண்டவினைச் சத்தமபோங் கையிலள்ளிக்
கொண்டமட்டிற் கொண்டவினைக் கொள்ளைபோம-வண்டமி
வாயார வேபுகழும் வண்ணச்சி வகாமித் [ழோர்
தாயார் திருமஞ் சனம்.

உரை :—வண்டமிழோர் வாயாரவே புகழும் வண்ணச சிவகாமித் தாயாா திருமஞ்சனம் - வளப்பமான தமிழப புலவாகள் வாய குளிரப் போற்றுகினற அழகு மிகக சிவகாமி யனனையின நீராட்டுத தீாததம், கணடமட்டில் கணடவினைச சததம் போம் - பார்தத அளவில் தததுககுக காரணமாகிய கருமமென்ற ஓசையே இலலாமறபோகும், கையில அளளிக கொண்டமட்டில கொணட வினைக் கொள்ளை போம் - அதைக கையிலெடுத்து உட்கொணட அளவில் முனனேக ஏறபட்டிருந்த கருமக கூட்டங்கள் தொலைந்தொழியும, எ - று.

## கடவுள் திருவுளம் அறிய முடியாதென்றல்

8. அல்லலாகிய விருவினைதனை யறுத்தடி யிணைத்தருவாரோ
மல்லனீடியபுவியின்மேலின்னமும் வருமபிறப்பறுப்பாரோ
நல்லமாமுலைமாதுமைநாயகர் நாணிதநவின்றேத்தும்
தில்லைநாயகரமபலத்தாடுவார் திருவுளந்தெரியாதே.

உரை :—நலல மாமுலை மாதுமை நாயகா - நன்மை செயது காககும் பெருந தனஙகளை யுடைய அழகிய உமையமமையின கணவா, நான நிதம நவினறு ஏததும - நான நாளதோறும துதிதது வணஙகும், தில்லை நாயகா அமபலததாடுவாா - தில்லைச சபையில் நடனமியறறும பெருமானேனவா, அல்லலாகிய இருவினைதனை யறுதது அடியினை தருவாரோ - துனபததிறகுக் காரணமான நல்வினை தீவினை யெனனும் இரு கட்டுகளையும அறுததுத தமமுடைய இரணடு திருவடி நிழலை எனககு அளிப்பாரோ, மல்லல் நீடிய புவியின்மேல இன்னமும வரும பிறப்பு அறுப்பாரோ - வளஙகள் மிகுநத இநத நிலவுலகததில் இனி யேற்படககூடிய பிறவியைத தொலைப்பாரோ, திருவுளம தெரியாதே - அவா என்ன செயயக் கருதியுள்ளாரெனபதை நாம் அறியமாட்டோம, எ - று.

## அனவரத தாண்டவத்தைப்பற்றி பாடியது

9. தூக்கியகால் நோகாதோ துட்டமுய லகன்மேல்
தாக்கியகா றுனுஞ் சலியாதோ—வாக்கார்
தினவரதா தில்லைத் திருத்தாண்ட வாநீ
அனவரதங் கூத்தாடி னல்.

உரை:—வாக்கு ஆர் தினவரதா - புகழ்ச்சி பொருந்திய நாடோறும் வரங் கொடுப்பவனே !, தில்லைத் திருத்தாண்டவா - தில்லையில் அழகிய நடனஞ் செய்யும் பெருமானே !, நீ அனவரதம் கூத்தாடினால் - நீ எக்காலத்தும் ஆடிக் கொண்டிருந்தால், தூக்கிய கால் சோவாதோ - உமது குஞ்சித பாதமானது வருந்தாதா, தட்ட முயலகன்மேல் தாக்கிய கால் தானும் சலியாதோ - பொல்லாத முயலகனை மிதித்தழுத்திய பாதமும் தளர்ந்து போகாதா ?, எ - று.

---

# தொட்டிக்கலை சுப்பிரமணியத் தம்பிரான்

## பாடியது

தொட்டிக்கலை சுப்பிரமணியத் தம்பிரான் திருவொற்றியூர்ப் பெருமானைப் பாடியது

1. வல்லவகு ளத்திருக்கு மன்னவா வாசமலி
நல்லவகு ளத்திருக்கு நாதனே—மெல்ல
வடிவாளைக் கொண்ட மணவாளா கணிச்சி
வடிவாளைக் கொண்டென்னிடர் மாற்று.

உரை:—வல்லவ - எல்லாத திறமையுமுடையவனே !, குளத்திருக்கு மன்னவா - நெற்றியிற் கண்ணுடைய வேந்தனே !, வாசமலி நல்ல வகுளத் திருக்கும் நாதனே - மணநிறைந்த செழிப்பான மகிழமரத்தினடியின் கீழ்த் தங்கிய பெருமானே !, மெல்ல வடிவாளைக் கொண்ட மணவாளா-மென்மையான வடிவுடையவளாகிய உமாதேவியை மணந்த கணவனே ! கணிச்சி வடிவாளைக் கொண்டு - மழுவாகிய கூறிய ஒளியுள்ள ஆயுதத்தினாலே, என் இடர் மாற்று-என்னுடைய துயரத்தை மாற்றி யொழிப்பாயாக, எ - று.

2. திருவல்லிக் கேணிவடி வந்தனஞ் சொற்கண் சேர்ச்சிலம்ப
திருவல்லிக் கேணியலல் குழுன் னேயருள் செய்யவெழுந்
திருவல்லிக் கேணிபஞ் சொல்லிற் கண்முத்தங்கள் சிந்துங்
திருவல்லிக் கேணி மருவிய சங்கத திருக்கரனே. [கண்டாய்

உரை:—திருவல்லிக்கேணி மருவிய சங்கத திருக்கரனே - திருவல்லிக் கேணிப் பதியில் வீற்றிருக்கும் பாஞ்சசன்யமென்ற சங்கினையுடைய திருக்கையை யுடையவனே !, திருவடிவம - இலக்குமியின் திருவுருவையும், வல் தனம் - சூது கருவிபோன்ற கொங்கையையும், இக்குசசொல் - கரும்பு போன்ற மொழியையும், ஏணிக் கண் - மான் கன்றின் பார்வையை யுடைய

கண்ணையு முடையவளாய், சீர்சிலம்பு அதிர் வல்லிக்கு - செம்மையான சதங்கை காலில் ஓசை செய்யப்பெற்ற கொடிபோன்ற இந்தப்பெண்ணுக்கு, ஏண் இயல் அல்கு முன்னே-வலிமையான தன்மை குறைவதற்கு முன்னே, அருள் செய்ய எழுந்திரு - கிருபை பாலிக்கும்பொருட்டு எழுந்தருள்வாயாக, வல் இக் கேள் நிபம் சொல்லில் - வன்மையான இவள் சுற்றத்தார் புறங் கூறினால், கண் முத்தங்கள் சிந்தும் - இவள் கண்கள் முத்துக்கள்போன்ற கண்ணீரைச் சொரியும், கண்டாய் அறிவாயாக, எ - று.

---

# இராமசாமிக் கவிராயர்

## பாடியது

---

மணலி சோலையப்ப முதலியார்மீது பாடியது

தலைவி கூற்று

1. மாலைதனைப் புனைந்தாலும் மலரணையிற்
படுத்தாலு மருவார் பன்னீர்
ஏலமுறத் தெளித்தாலு மெவ்வள
வேனுங்குளிர விலையென் செய்வேன்
கோலமுறு மணலியிலே கிளைகளொடு
சுகமபடைத்துக் குலாவு மெங்கள்
சோலைதனைச் சேராமற் காமவிடாய்
தணியாதே தோகை மாரே.

உரை:—தோகைமாரே - பாங்கியர்களே !, மாலைதனைப் புனைந்தாலும் - பூமாலையை அணிந்தாலும், மலர் அணையில் படுத்தாலும் - பூக்கள் பரப்பிய படுகையிற் படுத்திருந்தாலும், மருவார் பன்னீர் ஏலமுறத் தெளித்தாலும - வாசனை நிறைந்த பன்னீரைப் போதுமான அளவு நன்றாகத் தெளித்துக்கொண்டாலும், எவ்வளவேனும் குளிரவிலை - ஒரு சிறிது கூட உடம்பு குளிர்ச்சி யடையவில்லை, என் செயவேன்-யான் யாது செய்யக்கூடும், கோலமுறு மணலியிலே கிளைகளொடு சுகம் படைத்துக் குலாவும - வனப்பு மிகுந்த மணலியூரிலே உறவினரோடு நலமுற்று வாழ கின்ற, எஙகள் சோலைதனைச சேராமல் காமவிடாய்த தணியாதே - எங் கள் சோலையப்ப முதலியாரைத் தழுவாமல் வேட்கைத் தாபமானது நீஙகாது, எ - று.

## தோழி தூது

2. பாலனிகர் மொழிமாதே யென்னிடத்திற்
பூரணமாய்ப் பட்சம் வைத்துக்
காலமுகி லனையகரன் மணவியில்வாழ்
சோலையெனுங் கன்னன் பாற்போய்
மாலைகேண் மறுத்தாலென் மனத்தைக்கேண்
மறுக்கின்மதன் வாரா வண்ணம்
ஓலைகேண் மறுத்தக்காற் கிள்ளார்க்குக்
கேள்வேறொன் றோதிடாயே.

உரை:—பாலை நிகர் மொழி மாதே - பால்போன்ற சொல்லையுடைய பாங்கியே!, என்னிடத்தில் பூரணமாய்ப் பட்சம் வைத்து - என்னிடத்தில் முழு அன்பு முடையவளாய், காலை முகில் அனைய கரன் - பருவத்திற் பெய்யும் மழையைப்போன்ற கையையுடையவனாகிய, மணவியில் வாழ் சோலை யெனும் கன்னன்பால் போய் - மணவியில் வசிக்கும் சோலையப்ப வள்ளலாகிய கர்னன்போன்ற கொடையாளியிடம்போய், மாலைகேள் - அவனுடைய தார் வேண்டுமென்று கேட்பாயாக, மறுத்தால் என் மனத்தைக் கேள் - மாலை கொடுக்கமாட்டே னென்றால் அவன்பாலுள்ள என் நெஞ்சைக் கேட்டுத் திருப்பிக் கொண்டு வா, மறுக்கில் - அது கொடுக்க மறுத்தால், மதன் வாராவண்ணம் ஓலை கேள் - மன்மதன் வந்து துன் புறுத்தாதபடி அவனைக் கண்டிக்கவும் ஓலைசசுருள் கேட்பாயாக, மறுத் தக்கால் கிள்ளாக்குக் கேள் - அதுவும் தராவிட்டால் சிறு சீட்டுக்கேள்; வேறு ஒன்றும் ஓதிடாயே - வேறு யாதுங் கூறவேண்டாம், எ - று.

## திருத்தணிகை பெருமான்மீது தலைவி கூற்று

3. அரக்கனலை யிலங்கையைவென் றோன்மருகன்
றணிகேச னன்பர் பாநெஞ்
சிரக்கனலை யாமலுனைக் காப்பானென்
றனையடிதே மொழியே மாலை
வரக்கனலை மதிவீசப் படுமோவவ்
வேளைதனில் வாதுக் கேமெ
துரக்கனலை மதப்பயலென் முனங்குனிக்கத்
தகுமோசொற் றேகை நீயே.

உரை :—தே மொழியே - தேன்போன்ற சொல்லுடைய பாங்கியே! அரக்கன் அலை இலங்கையை வென்றோன் மருகன் - இராவணனுடைய கடல் சூழ்ந்த இலங்கையிற் சென்று வெற்றி கொண்டவனாகிய விஷ்ணு வின் மருமகனாகிய, தணிகேசன் - திருத்தணிகைப் பெருமான், அன்பர்

பால் நெஞ்ச இரக்கன் - பக்தரிடத்திற் கனிவான உள்ளமுடையவன், அலையாமல் உனைக் காப்பான் என்றனடி - துயரப்படாமல் உன்னைக் காப்பாற்றுவானென்று நீ கூறினையே, (அப்படியானால்) மாலை வரமதி கனலை வீசப்படுமோ - சாயங்காலம் வரும்போது சந்திரன் தீயைக் கிரணமாக விடலாமா, அவ் வேளைதனில் - அந் நேரத்தில், வாதுக்கே - சண்டைக்காகவே, மதுரக்கனலை - இனிய கரும்பை, மதப்பயல் - மன் மதச் சிறுவன், என் முனம் குனிக்கத் தகுமா - என்னெதிரில் வில்லாக வளைப்பது தக்கதா, சொல் தோகை நீயே - பெண்ணே நீயே சொல் வாயாக, எ - று.

## வரதுங்கராம பாண்டியன்மீது பாடியது

4. என்னையவர மறந்தும்யானவரை மிகநினைந்திங்கிருந்துவாட
முன்னைவிதிப்படிதானோமுற்பிறப்பிற் செய்தவினைமுடிந்தவாறோ
கன்னனெங்களபிராமன்வரதுங்கராமன்றென்காசிநாட்டில்
அன்னவயற்குருகினங்காடனித்திருக்கமுடியாதென்றறைகுவீரே.

உரை :—கன்னன் எங்கள் அபிராமன் வரதுங்கராமன் தென்காசி நாட்டில் - கர்ணனைப்போன்ற கொடையாளியாகிய நல் வனப்புடைய வரதுங்கராம பாண்டியனது தென்காசியைச் சூழ்ந்த தேசத்தில், அன்ன வயல் குருகினங்காள் - நெற்கழனிகளிற் பயில்கின்ற அன்னக் கூட்டங் களே!, என்னை யவர் மறந்தும் யானவரை மிகு நினைந்து இங்கு இருந்து வாடல் - தலைவர் என்னை முற்றிலும் மறந்த பிற்பாடும் நான் அவரையே அதிகமாக நினைந்திருந்து தளர்தல், முன்னை விதிப்படி தானோ - பிறக்கு முன் தலையி லெழுதிய விதிப்பிரகாரம் ஏற்பட்டதோ, முற்பிறப்பில் செய்த வினை முடிந்தவாறோ - சென்ற பிறவியிற் செய்த கருமம் இப் போது அநுபவித்து முடிவதற்காக ஏற்பட்டதோ, (அது எதுவானாலும்) இனி தரிசிக்க முடியாது என்று அறைகுவீரே - இனித் தாமதிக்க வியலா தென்று (தலைவரிடம்) தெரிவிப்பாயாக, எ - று.

## சிவன் விஷ்ணு சம்பந்தத்தைப் பற்றியது

5. தன்மனை யிரத மாக்கித் தன்மகன் வலவ னாக்கித்
தன்மகன் பேர னோடு தனக்குமைத் துனன்கா லாக்கித்
தன்னணை நாரியாக்கித் தானுமோ ரம்பு மானான்
தன்மனமி டங்கொண் டுய்த்த சங்கரன் றனக்கு மாயன்.

உரை :—தன் மனம் இடங்கொண்டு உய்த்த சங்கரன் தனக்கு மாயன் - தன் மனக் கருத்தின்படி தனது இடப்பாகத்தில் தன்னை வைத் துக் காப்பாற்றிய சிவபெருமானுக்கு விண்டுவானவர், தன் மனை இரத

மாக்கி - (திரிபுர சங்கார காலத்தில்) தன்னுடைய மனைவியாகிய பூதேவி யைத் தேராயிருக்கும்படி செய்து, தன் மகன் வலவனுக்கி - தன்னுடைய புதல்வனாகிய அயனைத் தேர்ப்பாகனுக்கி, தன் மகன் பேரனோடு தனக்கு மைத்துனன் காலாக்கி - தன் புதல்வனுக்குப் பேரனாகிய பகலவனையும், தனக்கு மைத்துனனாகிய சந்திரனையும் அதற்குச் சக்கரங்களாக்கியும், தன் அணை நாரியாக்கி - தன் படுக்கையாகிய ஆதிசேஷனை நாணாக்கி, தானும் ஓர் அம்பும் ஆனான் - தானும் ஒப்பற்றக் கணையாக விளங்கினான், எ - று.

6. முன்னொரு வூரின் பேரா முதலெழுத் தில்லா விட்டால்
நன்னகர் மன்னர் பேரா நடுவெழுத் தில்லா விட்டால்
கன்னமா மிருகத் தின்பேர் கடையெழுத் தில்லா விட்டால்
உன்னிய தேனின் பேரா மூரின்பேர் விளம்பு வீரே.

உரை:—முன்னொரு ஊரின் பேராம் - முதலில் முழுதாகக் கூறினால் ஒரு ஊரின் பேராக வருவது, முதல் எழுத்து இல்லாவிட்டால் நன்னகர் மன்னர் பேராம் - அச் சொல்லின் முதலெழுத்தை யெடுத்து விட்டால் எஞ்சிய பகுதி ஊர்த்தலைவன் பெயராகும், நடுவெழுத்து இல்லாவிட்டால் கன்னமாம் மிருகத்தின் பேராம் - அச்சொல்லின் நடுவெழுத்தை யெடுத்து விட்டால் எஞ்சிய பகுதி அருகம்புல் தின்னும் விலங்கின் பேராகும், கடை எழுத்து இல்லாவிட்டால் உன்னிய தேனின் பேராம் - அச்சொல்லின் இறுதி யெழுத்தை யெடுத்து விட்டால் எஞ்சிய பகுதி உண்ணும்படியான தேனினுடைய பெயராகும், ஊரின் பேர் விளம்புவீரே - புலவர்களே அது எந்த ஊர் என்று சொல்வீராக (மதுரை - துரை - மரை - மது) எ-று.

புதுக்கோட்டைத் தொண்டமானைப் புகழ்ந்து பாடியது

7. புதுவைமுத்துக் குமரதொண்டன் றமிழ்போலக்
கவிமதுரம் பொழியப் பாடும
சதுரருண்டோ வெனவிரிஞ்சன் வினவினான்
சேடனான் றுனென் றுனோர்
பதமெனினுந் தோன்றுமன் மால்கொண்டு
கடல்வீழ்ந்தான் பதுமன் சீறி
மதமுறுநா வைப்பிளந்து காதறுத்து
மண்சுமக்க வைத்திட் டானே.

உரை:—புதுவை முத்துக் குமர தொண்டன் தமிழ்போல - புதுக் கோட்டையிலுள்ள முத்துக் குமர தொண்டமானுடைய தமிழ்ப் பாடலைப் போல, கவி மதுரம் பொழியப் பாடும் சதுரர் உண்டோ என - இனிமை ததும்பும்படி பாட்டியற்றக்கூடிய திறமைசாலிக ளிருக்கின்றார்களா வென்று, விரிஞ்சன் வினவினான் - அயன் தேவர்களைக் கேட்கலாயினான்,

சேடன் நான்தான் என்ருன் - ஆதிசேடன் நான் அவ்வாறு பாட வல்லவ னென்ருன், ஓர் பதமெனினும் தோன்ருமல் மால் கொண்டு கடல் வீழ்ந் தான்-பாடல் சொல்லத் தொடங்கியபோது ஒரு சொல்லும் வாயிலுதிக்கப் பெருமல் மயக்கங்கொண்டு அல்லது திருமாலேச் சுமந்து கொண்டு திருப் பாற்கடலிற் கிடந்தான், பதுமன் சீறி - அயன் சீற்றங்கொண்டு, மதமுறு நாவைப்பிளந்து - செருக்குடைய அவனது நாக்கினை யிரு பிளவு படும் படியாகசெய்து, காது அறுத்து மண் சுமக்க வைத்திட்டானே - காதில் லாது செய்து பூமியைத் தாஙகும்படி செய்துவிட்டான், எ - று.

## கிளிவிடு தூது

8. மதுகரத்தை யிகழ்ந்துகுயில் வடிவேலர்
தமையழைதது வருவே னென்ற
இதமுரைத்துச் சென்றதென்ன வின்னமுங்கா
ணேனதனுக் கிரக்க மேது
சதமிதென வளர்தெடுத்த தாய்க்குதவா
தார்க்குதவுந் ததைதை யேநீ
முதுமறைதேர் குமரர்தமை யழைத்துவா
மதப்பயலே முடுக்கத் தானே.

உரை :—குயில் - குயிலானது, (தூதுவிடக் கருதியபோது) மது கரத்தை இகழ்ந்து - வண்டைக் குறைகூறி, வடிவேலா தமை யழைத்து வருவேனென்றே - கூறிய வேலாயுததகதை யுடைய பெருமானைத் தான் விரைவில் கூட்டிக்கொண்டு வருவதாக, இதம் உரைத்துச் சென்றது என்ன - இனிமையான வார்தகதை சொல்லிப்போனது என்னயிற்று, இன்னமும் காணேன் அதனுககு இரக்கம் ஏது - இன்னும் அது வரக் காண வில்லே அதற்குத் தயவில்லே, சதம் இது என வளர்த்து எடுத்த தாய்க்கு உதவாது யாாக்கு உதவும் - இதைத் தஞ்சமென்றெண்ணி வளர்த்துப் பாராட்டிய அன்னேக்குப் பயன்படாமல் யார்க்குப் பயன்படக் கூடும், தத்தையே - கிளியே !, மதப்பயலே முடுக்கத்தானே - நம்மை வருத்து கின்ற மன்மதச சிறுவனே ஓட்டுவதற்காக, நீ முது மறை தேர் குமரர் தமை அழைத்துவா - பழைய வேதங்கள் ஆய்ந்தறிகின்ற முருகப் பெருமா னேக் கூட்டிக்கொண்டுவா, எ - று.

## தியாகரைப் புகழ்ந்து பாடியது

9. குருமூர்த்தமாய் வந்துவினேயொழித்து முத்திதனேக் கொடுக்கத்தி
ஒருமூர்த்தியல்லாமன் மற்றுமொருமூர்ததிகளு முண்டோ [யாகர்
திரிமூர்த்தியென்பார்களவரவர்வாகனமேறிச்சேணிற்சும்மா[நெஞ்
திரிமூர்த்தியல்லாம லொருமூர்த்தி யுங்கதியிற்சேர்த்திடாரே. [சே

உரை :—நெஞ்சே - மனமே ! குருமூர்த்தமாய் வந்து வினையொழித்து முத்திதனைக் கொடுக்க - ஞானாசாரியனாய் வந்து இருவினைத் தொடர்பை யறுத்து வீட்டின்பந் தருவதற்குத் தகுதியானவர், தியாகர் ஒரு மூர்த்தியு மல்லாமல் மற்றுமொரு மூர்த்தியும் உண்டோ - தியாகராசப் பெருமான் ஆகிய ஒப்பற்ற தெய்வமேயல்லாமல் வேறொரு தெய்வம் உலகத்திலிருக் கிறதா, திரிமூர்த்தி யென்பார்கள் - மும்மூர்த்தி யென்று சொல்லப்படு கின்றவர்கள், அவரவர் வாகனமேறிச் சேணில் சும்மா திரிமூர்த்தி யல்லா மல் - தத்தம் ஊர்திகளிலேறி வானத்திற் பயன்றராது திரிகின்ற மூர்த்தி களே யல்லாமல், ஒரு மூர்த்தியும் கதியில் சேர்த்திடாரே - அவர்களில் ஒரு தெய்வமும் வீடு செல்லும் வழியிற் கொண்டு சேர்க்கமாட்டார்கள், எ - று.

நற்றாயிரங்கல்

10. இருக்கோல மிடுங்கலைசைத் தெய்வசிகா
மணிமுகில்வந் திணங்கா நாளில்
உருக்கோல வடிவானன் மைந்தனுமைத்
துனனுநித மோய்வி லாமல்
மருக்கோலஞ் செய்வதினும் வடவனலைச்
சொரிவதினு மயக்க முற்றுத்
திருக்கோலங் கொண்டமக டயங்குகின்றாண்
மயங்குகின்று டினமுந் தானே.

உரை :—இருக்கோலம் இடுங்கலைசை - மந்திரங்கள் கடவுளை ஓல மிட்டுக் கூவுகின்ற கலைசைப் பதியில் வதிகின்ற, தெய்வ சிகாமணி முகில் வந்து இணங்கா நாளில் - தெய்வ சிகா மணியாகிய மேகம் போன்ற ஈகையாளி வந்து கூடாத நாளில், உருக்கோல வடிவானன் மைந்தனும் மைத்துனனும் - பன்றி வடிவெடுத்த விஷ்ணுவின் புதல்வனா கிய மன்மதனும் மைத்துனனாகிய சந்திரனும், நிதம் ஓய்வில்லாமல் மருக் கோல் அஞ்சி செய்வதினும் - தினந்தோறும் இடைவிடாமல் வாசனை யுடைய அம்பாகிய ஐந்துவகைப் பூக்களைச் செலுத்துவதினாலும், வட அன லைச் சொரிவதினும் - வடவாமுகாக்கினியை வீசுவதினாலும், மயக்கமுற்று - பூர்த்தியாக அவற்றைப் பெற்று அல்லது அவை யிரண்டுஞ் சேரப்பெற்று, திருக்கோலங்கொண்ட மகள் தியங்குகின்றாள் மயங்குகின்றாள் தினமுந் தானே - ஒவ்வொரு நாளும் இலக்குமிபோன்ற வடிவுடைய என் மகள் திகைத்து மயல் கொள்ளுகின்றாள், எ - று.

## தலைவிக் கூற்று

11. மூந்தனத்தைத் தூதுவிட்டேன் வரவுமில்லை
மதராசன் முனிந்தே வில்லால்
எந்தனத்துக்கிலக்காக மலர்வாளி யெய்கின்று
னினியென் செய்வேன்
கந்தனத்தை யகலாத பூமபாவை
வேலப்பன் கையாற் பூசுஞ்
சந்தனத்தைச் சவ்வாதை நினைந்துமன
துருகுதடி தையலாளே.

உரை :—தையலாளே - தோழியே !, மூந்து அன்னத்தைத் தூது விட்டேன் வரவும் இல்லை - முன்னமே அன்னத்தைத் தலைவர்பால் தூது போகவிட்டேன் அது திரும்பி வரவில்லை, மதராசன் முனிந்தே வில்லால் என் தனத்துக்கு இலக்காக மலர் வாளி எய்கின்றான் - மன்மதன் சினந்து தன் வில்லை வளைத்துப் பூங்கணைகளை என் கொங்கைமேல் குறிவைத்துச செலுத்துகின்றான், என் செய்வேன் - நான் இதனால் யாது செய்யக்கூடும், கந்தனத்தை அகலாத பூம்பாவை வேலப்பன் - அறிவென்னும் ஐசுவரியத்தைக் கைவிடாத பூம்பாவை வேலப்ப னென்னும் வள்ளல், கையால் பூசும் சந்தனத்தை சவவாதை நினைந்து மனது உருகுதடி - ......, எ - று.

## வெறி விலக்கல்

12. குருத்துக் கதலிப் பசுந்தேனை யள்ளிக்குரங் குகுட்டிக்
கருத்திக் களிக்குங் குறுங்குடிவாழ் தருமண்ணல் வெற்பில்
பருத்திப் பொதிக்கிட் டதீப்போலக் காமம் படைத்தவிந்த
ஒருத்திக் கொருவன் பகையோ நடுச்சொல்லு மூரவரே.

உரை :—கதலிக் குருத்து பசுந்தேனை - வாழை யிளந்தளிர்ச சுருளிலுள்ள புதிய தேனை, குரங்கு அள்ளி குட்டிக்கு அருத்திக்களிக்கும் - குரங்கானது எடுத்துத் தன்னுடைய குட்டிக்கு உண்பித்துச் சந்தோஷப்படுமிடமாகிய, குறுங் குடிவாழ் தரும் அண்ணல் வெற்பில் - திருக்குறுங்குடியில் வீற்றிருக்கும் பெருமாளின் மலையின்மீது, பருத்திப் பொதிக்கிட்ட தீப்போல - பஞ்சுப் பாரத்தில் வைத்த நெருப்புப் படருவதுபோல, காமம் படைத்த இந்த ஒருத்திக்கு - மிகுந்த இச்சைசை வளரப்பெற்ற இந்தப் பெண்ணுக்கு ஒருவன் பகையோ - ஆடானது வலுத்த எதிரியாகுமோ, ஊரவரே நடுச சொல்லும் - அதைக் சொல்லுவது நியாயமா வென்பதைப் பற்றி ஊர்க்காரர்களே நீதி கூறுவீர்களாக, எ - று.

## அட்டாவதானம்

# சரவணப்பெருமாட் கவிராயர்

## பாடியது



இவர் பாண்டி நாட்டில் முதுகுளத்தூரிற் பிறந்த வேளாளர். சிவ ஞான யோகிகளின் மாணுக்கரு ளொருவராகிய சோமசுந்தரம் பிள்ளை யின் மாணுக்கர். இவர் கல்வியிற் றேர்ச்சியுற்று அட்டாவதானஞ் செய்து சேது சமஸ்தான வித்வானுயிருந்தவர்.

1. வெண்பாச்சொல் கவிஞரே வந்ததேதும்
 மீதுமெய்த் தமிழ்ப்பாடி வந்தோம்
 வெகுநேர்த்தி முன்னமே நானூறு கோவையொரு
 வித்துவான் பாடிவந்தான்
 நண்பாக மனம்வைத்து மூன்றுபடி பெருவரகு
 நான்கொடுத்தே னதற்கிந்
 நாடெலாந் தெரியுமென் மனையாட்டி மூன்றுதர
 நான்றுகொண் டுயிர்பிழைத்த
 புண்பாடெலா மறிந்தின்ன நீர்கவிசொலும்
 புலவரென் றிங்குவந்தீர்
 போம்போ மெனச்சொலிப் புலையாடு புலையரொடு
 போராடவோ படைத்தாய்
 தெண்பாவெ னும்பொருட் பாமாலை பூண்டுபத
 சேவைதந்தருள் புரிகுவாய்
 தேசிகம் பூத்தவுமைநேச பொன்னம்பலவ
 தேசிகசி ரோரத்நமே.

உரை :—தேசிகம் பூத்த உமைநேச - அழகு பொருந்திய உமை யம்மையின் அன்பனே!, பொன்னம்பலவ - கனக சபையை யுடைய வனே!, தேசிக சிரோரத்தினமே - குருமார்களின் சிகாமணியே!, வெண் பாச் சொல் கவிஞரே வந்ததேது - வெண்பா வியற்றுகின்ற பாவலரே நீர் வந்த காரணமென்ன வென்றபோது, உன்மீது மெய்த்தமிழ் பாடி வந் தோம் - உங்கள் மீது உண்மையான தமிழ்பாட லியற்றிக்கொண்டு வந்தோமென்று சொன்னால், வெகு நேர்த்தி - மிக நன்றுயிருக்கிறது, முன்னமே நானூறு கோவை ஒரு வித்வான் பாடிவந்தான் - உனக்கு முன்

ளுகவே நானூறு பாடல் கொண்ட கோவை ஒரு கல்விமான் இயற்றிக் கொண்டு வந்தான், நண்பாக மனம் வைத்து - பிரியமாகக் கருதி, மூன்று படி பெரு வராகு நான் கொடுத்தேன் - ......, அதற்கு இந்நாடெலாம் தெரியும் - அதனாலேற்பட்ட செய்தி யாதென்று ஊரரெல்லாரும் அறிவார்கள் (அதாவது) என் மனையாட்டி மூன்றுதாம் நான்றுகொண்டு - என் பெண்சாதி மூன்று முறை தற்கொலை செய்யத் தொடங்கி, உயிர் பிழைத்த புண்பாடெலாம் அறிந்து - அவள் உயிரைக் காப்பாற்றுவதற்கு நான் பட்ட துன்பத்தையெல்லாம் நீ தெரிந்து, இன்னம் நீர் கவிசொலும் புலவர் என்று இங்கு வந்தீர் - அதன் பிற்பாடும் பாட்டுப் பாடுகிற புலவராக என்னிடம் வந்தீர், போம் போம் எனச் சொல்லி புலையாடு புலையரோடு போராடவோ படைத்தாய் - போம்போ மென் றிகழ்ந்து இழிவான சொற் சொல்லுகின்ற கீழ் மக்களொடு சண்டையிடவோ என்னைப் படைத்தாய், தெண்பா எனும் பொருள் பாமாலை பூண்டு பதசேவை தந்தருள் புரிகுவாய் - தெளிந்த கவியாகிய பொருள் நிறைந்த பாட்டுக்களின் மாலை யணிந்து உன்னுடைய திருவடிக் காட்சியை எனக்கு அளித்தருள்வாயாக, எ - று.

2. வந்தவரி யாவர்காண் கவிராஜ ரெந்தவூர்
   வடகாசி யெங்குவந்தீர்
 மகராஜ னென்றுனது கீர்த்தியைக் கேட்டுன்மேன்
   மதுரகவி பாடிவந்தோஞ்
சந்ததமும் வித்துவா னல்லநீ யென்னுடைய
   தாதைமூ தாதைவழியிற்
 றமிழ்கேட்ட தியாவர்காண் டலைமுறையி லில்லாத
   தாழ்வினைச் செய்துவந்தீர்
இந்தமொழி மற்றுமொரு தரநீயுரைக்கிலோ
   விரணைகள மாகுமப்பா
 லேகுமென் றேகிடும் புல்லர்தம் பாற்செலா
   தெனையாள விதுதருணமே
சிந்திக்கு மன்பருக் கருண்மழை சொரிந்ததிக
   செல்வங்கொ டுக்குமுதலே
 தேசிகம் பூத்தவுமை நேசபொன் னம்பலவா
   தேசிகசிரோ ரத்நமே.

உரை :—சிந்திக்கும் அன்பர்க்கு அருள்மழை சொரிந்து அதிக செல்வங் கொடுக்கும் முதலே - தியானிக்கின்ற அடியார்களுக்குக் கருணையை மழைபோலப் பெய்து மிகுந்த ஐசுவரியத்தை யளிக்கின்ற முதல்வனே!, தேசிகம் பூத்த உமை நேச - அழகு பொருந்திய உமையம்மையின் அன்பனே!, பொன்னம் பலவ - கனக சபையை யுடையவனே!, தேசிக சிரோ

ரத்தினமே - குருமார்களின் சிகாமணியே !, வந்தவர் யாவர் காண் - வந்தவர் யாரென்று கேட்க, கவிராசர் - பாட்டரசனென்று சொல்ல, எந்த வூர் - எந்த வூரெனக் கேட்க, வடகாசி - வடகாசி யென்று சொல்ல, எங்கு வந்தீர் - எதற்காக வந்தீரென வினவ, மகாராசனென்று உனது கீர்த்தியைக் கேட்டு உன்மேல் மதுரகவி பாடி வந்தோம் - பெரிய அரசன் போல்வாய் நீயென்று உன்னுடைய புகழைக் கேட்டு உன்மீது இனிமையான பாட்டியற்றிக்கொண்டு வந்தோ மென்று சொல்ல, சந்ததமும் வித்துவான் அல்ல நீ - நீ எப்போதும் கல்விமானாக இருக்கிறவனில்லை, என்னுடைய தாதை மூதாதை வழியில் தமிழ்க் கேட்டது யாவர்காண் - என்னுடைய தந்தை பாட்டனார் பாரம்பரையில் தமிழ்ப் பாடலை யொப்புக்கொண்டு கேட்டவர்கள் யார், தலைமுறையில் இல்லாத தாழ்விதைச் செய்துவந்தீர் - எங்கள் பரம்பரையிலேயே இல்லாத இழிவை நீர் ஏற்படுத்த வந்தீர், இந்த மொழி மற்றும் ஒருதரம் நீ யுரைக்கிலோ இரணகளமாகும் - இந்த வார்த்தையை இன்னொருதரம் சொன்னால் உனக்கும் எனக்கும் சண்டை வந்து இந்தவிடம் போர்க்களமாகும், அப்பால் ஏகும் என்றோதிடும் புல்லர் தம்பால் செலாது - அப்புறம் போவென்று துரத்துகின்ற அற்பரிடத்திற் போகாமல், எனை ஆள இது தருணமே - என்னை யாட்கொள்வதற்கு இது சமயம், எ - று.

3. வாருநீர் யாரென்ன வித்துவா னென்னவு
      மதிமோசம் வந்ததென்றே
   வாய்குளறி மெய்யெலா மிகநடுக் குற்றுநீர்
      வந்தகா ரியமேதெனச்
சீருலா வியகாம தேனுவே தாருவே
      சிந்தாம ணிக்குநிகரே
   செப்புவச னத்தரிச்சந்த் ரனேயெனலுஞ்
      சினந்திருக ணுஞ்சிவந்தே
யாரைநீ மாடுகல் மரமென்று சொன்னதுமலா
      லரிச்சந்த்ர னென்றே
   யடாதசொற் சொன்னையே யார்க்கடிமை யாகினே
      னூர்கையிற் பெண்டுவிற்றேன்
தீருமோ விந்தவசை யென்றுரைசெய் வெகுகொடிய
      தீயரைப் பாடி நொந்தேன்
   றிருமன்று ணடுநின்று நடமொன்று புரிகின்ற
      தென்றில்லை நடராஜனே.

உரை :— திரு மன்றுள் நடுநின்று நடமொன்று புரிகின்ற தென்றில்லை நடராசனே - அழகிய சபையில் நியாயத்திற்குச சாட்சியாக நின்று

இணையற்ற திருநடனம் செய்கின்ற அழகிய தில்லேப்பதியி லுறையும் நடேசப் பெருமானே !, வாரும் நீர் யார் என்ன வித்துவான் என்னவும் - வாருங்கள் நீங்கள் யாரென்று கேட்க யான் புலவனென்று சொல்ல, மதி மோசம் வந்தது என்றே வாய் குளறி மெய்யெலாம் மிக நடுக்குற்று - அறிவுக்கு மோசமான காரியம் ஏற்படப்போகிறதே என்று சொற்றடுமாறி உடம்பெலாம் நடுநடுங்கி, நீர் வந்த காரியம் ஏதெனை - நீர் எதற்காக வந்தீரென்று வினவ, சீர் உலாவிய காமதேனுவே - புகழ் பரவிய காமதேனுவைப் போன்றவரே!, தாருவே - கற்பகத் தருப்போன்ற கொடையாளியே!, சிந்தாமணிக்கு நிகரே - சிந்தாமணிக்குச் சமானமானவரே !, செப்பு வசனத்து அரிச்சந்திரனே - பேசும் பேச்சில் அரிசசந்திரன்போல உண்மையானவரே !, எனலும் சினந்து இரு கணும் சிவந்தே - என்று கூறியவுடன் கோபத்தால் இரு கண்களும் சிவக்கப்பெற்று, யாரை நீ மாடு கல் மரம் என்று சொன்னதும் அலால் அரிசசந்திரன் என்று அடாத சொல் சொன்னையே - காமதேனுவைப்போல் மாடென்றும் கற்பகம்போல் மரம் என்றும் சிந்தாமணியைப்போல் இரத்தினக்கல் லென்றும் வைதது மல்லாமல் அரிச்சந்திர னென்று பொருந்தாச சொல்லே யாரை நீா கூறினீர், யார்கு அடிமையானேன் - அரிசசந்திரனைப்போல யான் யாருக்கு அடியவனுனேன், யார் கையில் பெண்டு விற்றேன் - யாரிடத்தில் யான் பெண் சாதியை விற்றேன், தீருமோ இந்த வசை - இவவகையாக இகழ்ச்சி மறக்கக்கூடியதா, என்று உரைசெய் வெகுகொடிய தீயரைப் பாடி நொந்தேன் - என்று பேசிப் புலவரைக் கடிகின்ற மிகக்கொடிய தீயவர்களைப் பாடி வருந்தினேன், எ - று.

4. நீதிபெறு கல்விப்ர தானந்தெளிந்திடு
 நிதானஞா னப்ரகாச
 நித்தியசு மங்களக்கவி தாப்ரசங்கமன்
 னேயசுந்தர விலாசம்
 வேதாந்த சாகரஞ்சித் ராவதானதமிழ்
 மேகஞ்சபா ரஞ்சிதம்
 வித்வசன சேகரஞ்சே துபதிவாசலில்
 விளங்குநவ ரத்நதீபம்
 சீதரன் சோமசுந்தர குருசுவாமியிரு
 திருவடிதுதிக்கு மடிமைச்
 சீர்பெறுஞ் சரவணப்பெ ருமாள்கவிச் சுரச்செய
 சிங்கமெழுது மோலே
 மாதவன் விசயரகுநாத துரைத்தொண்ட
 மானெதிர்நடந்து காண்க

வரிசைபெறு தூதொன்று பாடிவந்தன முனதுமன
மகிழ்ந்தருள் புரிவையே.

உரை:—நீதி பெறு கல்விப் பிரதானம் - முறைமையுடைய கல்வியில் முக்கிய மடைந்தவன், தெளிந்திடு நிதானம் - ஆராய்ச்சிபண்ணித் தேர்ந்த நடுவு நிலைமை யுடையவன், ஞானப்பிரகாச - அறிவு விளக்கமுடைய, நித்திய சுமங்கல கவிதா பிரசங்கமன் - என்றும் மங்கலமான கவிகளைப் பிரசங்கமாகப் பொழிகின்ற கவியரசன், நேயர் சுந்தர விலாசம் - அன்பும் அழகும் பரவிய தன்மை யுடையவன், வேதாந்த சாகரம் - வேதாந்த நூற்கடலாயுள்ளவன், சிதராவதானம் - விசித்திரமான அட்டாவதானஞ் செய்கின்ற, தமிழ் மேகம் - தமிழ் பொழியும் முகில்போன்றவன், சபா ரஞ்சிதன் - சபைக்கு ரம்மியம் தருகின்றவன், வித்வசன சேகரன் - கல்விமான்களுடைய கூட்டத்திற்குத் தலைவன், சேதுபதி வாசலில் விளங்கு நவரதனதீபம்-சேதுபதியின் சமஸ்தானத்தில் ஒளிவீசுகின்ற நவரத்தின விளக்குப் போல்பவன், சீதரன் - திருமகள் தங்குபவன், சோமசுந்தர குருசாமி இரு திருவடி துதிகளும் - சோமசுந்தரம் பிள்ளை என்ற ஆச்சாரிய சுவாமிகளின் இரண்டு பொற்பாதங்களையும் வாழ்த்துகின்ற, அடிமைச சீர்பெறும் சரவணப் பெருமாள் - அவருடைய தொண்டனென்னும் பெயர்பெற்ற சரவணப்பெருமாளென்ற, கவீச்சுர செயசிங்கம் - கவிராய வெற்றிச சிங்கம்போன்றவன், எழுதும் ஓலை - வரைந்து விடுக்கின்ற திருமுகமானது, மாதவன் விஜய ரகுநாத துரைத் தொண்டமான் - திருமாலின் அமிசமான வெற்றிப் பிரதாபமுடைய ரகுநாத துரையென்கின்ற தொண்டமானின், எதிர் நடந்து காண்க - சந்நிதியிற் போய்ப் பார்க்கப் படுவதாக, வரிசை பெறு தூது ஒன்று பாடி வந்தனம் - பரிசு பெறக் கூடிய தூது நூலொன்று பாட்டு வடிவி வியற்றிக்கொண்டு வந்தோம், உனது மனம் மகிழ்ந்து அருள புரியவே - ......, எ - று.

---

# சிவஞான யோகிகள்

## பாடியது

---

தன் விருப்பப்படி அடியார்களுக்கு அன்னமிட்ட
தன் தாயாரைப் புகழ்ந்து பாடியது

1. அருந்ததி யென்னம்மை யடியவர்கட் கென்றுந்
திருந்த வமுதளிக்குஞ் செல்வி—பொருந்தவே
ஆனந்தக் கூத்த ரகமகிழத் தொண்டுசெயும்
மானந்த வாத மயில்.

உரை:—ஆனந்தக் கூத்தர் அகம் மகிழத் தொண்டு செயும் - (எனது தந்தையாகிய) ஆனந்தக் கூத்தர் உள்ளங் களிக்கும்படியாகப் பணிவிடை செய்கின்ற, மானம் தவாத மயில் - பெருமை குறைவுபடாத மயில் போன்ற சாயலுடையவளாகிய, அருந்ததி என் அம்மை - அருந்ததியோ டொத்த கற்புடைய என் தாய், பொருந்தவே - பொருத்தமாக, அடியவர் களுக்கு என்றும் இருந்த அமுது அளிக்கும் செல்வி - சிவனடியார்களுக்கு எக்காலத்தும் சேவையாக அன்னமிடக்கூடிய திருமகளாய் விளங்கு கின்றாள், எ - று.

---

# தில்லைவிடங்கன் மாரிமுத்துப்பிள்ளை

## பாடியது

## வெறி விலக்கல்

1. குவளைமலர் தோறுங் குருகார் வேளூரிற்
பவளவிதழ்ச் செங்கமலப் பாவாய்—இவள்கண்ணோய்
மைபட்டாற் றீருமோ வந்து வயித்தியனார்
கைபட்டாற் றீருநிசங் காண்.

உரை:—குவளை மலர் தோறும் - நீலோற்பலப் பூக்கள் ஒவ்வொன்றி லும், குருகு ஆர் - அன்னங்கள் சார்ந்திருக்கும், வேளூரில் - புள்ளிருக்கும் வேளூரிலுள்ள, பவள இதழ்ச் செங்கமலப் பாவாய் - பவளம்போன்ற உதட்டினையுடைய செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகளைப்போன்ற பெண்ணே!, இவள் கண்ணோய் - இவளிடத்திலேயுள்ள நோயானது அல் லது இவள் கண் வியாதியானது, மை பட்டால் தீருமோ - ஆடு பலியிடப் பட்டால் நீங்குமா அல்லது மை தீட்டினால் கண்ணோய் நீங்குமா, வந்து வயித்தியனார், கைபட்டால் தீரும் - வயித்தீசுரப்பெருமான் தோன்றித் திருக்கையினாற் றொட்டால் நீங்கும், நிசம் காண் - அஃது உண்மையே எ - று.

2. தென்றலையிற் றென்றலைத்தண் டீமதியைக் கண்டிரங்கி
மன்றனறுங் கோதை வருந்தினால்—நின்றபரு
வத்தகரைக் காட்டி மயங்குவதென் றில்லையில்வாழ்
வித்தகரைக் காட்ட விடும்.

உரை:—தென்றலையில் தென்றலை - அழகிய இருப்பிடத்தி லுலாவு கின்ற தென்றலை அல்லது அழகிய தலைமீது வீசுகின்ற தென்றலை, தண் தீ மதியை - குளிர்ந்தாலும் வெப்பஞ் செய்கின்ற சந்திரனையும் கண்டு

இரங்கி - பார்த்து அஞ்சி, மன்றல் நறும் கோதை வருந்தினால் - நறுமணம் வீசும் கூந்தலையுடைய பெண் துன்பப்பட்டால், நின்ற பருவத் தகரைக் காட்டி மயங்குவதென் - நின்ற பருமையான அந்த ஆட்டைக் காட்டி மயக்கஞ் செய்வதால் என்ன பயன், தில்லையில் வாழ் வித்தகரைக் காட்ட விடும் - தில்லையில் வாழ்கின்ற அறிவுத் தெய்வத்தைக் காட்டினால் துன்பம் நீங்கிவிடும்; எ - று.

3. பாயல் வெறுத்துப் பணிவெறுத்துப் பூவெறுத்துத்
தாயைவெறுத் தூனைவெறுத் தாடகைக்கு—நீயுமினித்
துள்ள லடக்கியதாற் றுன்பமடங் காதுதில்லை
வள்ள லடக்குவரிம் மால்.

உரை :—பாயல் வெறுத்து - படுக்கையை விரும்பாமல், பணி வெறுத்து - நகையைப் பூணாமல், பூ வெறுத்து - மலர் சூடுவதை நீக்கி, தாயை வெறுத்து - அன்னையைப் பகைத்துக் கொண்டு, ஊனை வெறுத்தாள் தகைக்கு - உணவையும் வெறுத்தவளுடைய நிலைமையின் பொருட்டு, நீயும் இனித் துள்ளல் அடக்கியதால் துன்பம் அடங்காது - அன்னையே நீ துள்ளுகின்ற ஆட்டைப் பலி செய்து அடக்குவதனால் அவளுடைய நிலைமை மாறாது, தில்லை வள்ளல் அடக்குவார் இம்மால் - தில்லையில் வீற்றிருக்கும் நடேசப் பெருமானாகிய கொடையாளி அவள் மயக்கத்தை அடங்கச் செய்வார், எ - று.

---

## வசைகவி ஆண்டான் புலவர்

### பாடியது

ஆவுடை என்னுந் தாசிக்குப் பொட்டுக் கட்டியபோது கூறியது

1. நீண்ட பிரான்கட்டி னான்றிரு மாதுக்கு நெட்டரவம்
பூண்ட பிரான்கட்டி னானுமை மாதுக்குப் புண்டரிக
மூண்ட பிரான்கட்டி னான்கலை வாணிக்கு முன்னற்சிக்கல்
ஆண்ட பிரான்கட்டி னான்றிரு நாணிந்த வாவுடைக்கே.

உரை :—திருநாண் - திருமங்கிலியக் கயிற்றை, நீண்டபிரான் திரு மாதுக்குக் கட்டினான் - நெடிய திருமால் திருமகள் கழுத்திற் கட்டினான், நெட்டரவம் பூண்டபிரான் கட்டினான் உமை மாதுக்கு - நெடியபாம்பினைத் தரித்த சிவபெருமான் உமையம்மைக்குக் கழுத்தில் அணிவித்தான், புண்டரிகம் மூண்டபிரான் கட்டினான் கலைவாணிக்கு - தாமரையிற் றங்கிய பிரமா சரஸ்வதிக்குக் கழுத்திற் கட்டினான், முன்னர் சிக்கல் ஆண்ட

பிரான் கட்டினன் இந்த ஆவுடைக்கே - முன்னே சிக்கல் என்னும் பதியினை யாண்ட குமரப்பெருமான் இந்த ஆவுடையென்னும் தாசிக்குக் கட்டினன், எ - று.

2. பேசிக்கல் லாரமுந் திங்களும போனட்புப் பேணியரை
வாசிக்கல் லாலரைக் காசுக்கொ டார்கடன் வாங்கினதை
யேசிக்க லாகவெ டாதுவி டாரிவ ரென்னசென்மம்
சீசிக்க லாருற வாகாது காணிச் செகத்தென்றுமே.

உரை :—கல்லாரமும் திங்களும் போல் பேசி - நீர்க் குளிரியும் சந்திரனும் போலக் குளிர்ச்சியாகப் பேசி, நட்புப் பேணியரை - நட்புப் பாராட்டியவர்களுக்கு, வாசிக்கல்லால் அரைக்காசும் கொடார் - வட்டப் பணங் கழிக்காமல் அரைக்காசு கூடக் கொடுக்கமாட்டார்கள், கடன் வாஙகினதையே சிக்கலாக எடாது விடார் - கடன் கொடுத்த பணத்தைக் கஷ்டப்பட்டாகிலும் வசூல் செய்யாது விடமாட்டார்கள், சிக்கலார் என்ன சென்மம் - அத்தகைய சிக்கல் என்னும் ஊரிலுள்ளாருடைய பிறப்புப் பயனற்றது உறவாகாது - இப்பூமியில் அவர்களுடைய இணக்கம் எக் காலத்திலுமாகாது, எ - று.

3. கானைநகர் கண்டேன் கன்மவினையைத் தொலைத்தேன்
ஆனைமடுவிற் றீர்த்த மாடினேன்—ஞானம
பொருந்தினேன் காளீசர் பொற்றூண் மரையில்
வருந்தினேன் பெற்றேன் வரம.

உரை :—கானை நகர் கண்டேன் - திருக்கானப்பேர் என்னும் திருப்பதியைத் தரிசித்தேன், கன்ம வினையைத் தொலைத்தேன் - சஞ்சிதமான கரும வினையை ஒழிததேன், ஆனை மடுவில் தீாததமாடினேன் - ஆனைக குள மென்கிற புனிதநீரில் மூழ்கினேன், ஞானம் பொருந்தினேன் - அதனால் உயாந்த அறிவு வரப் பெற்றேன், காளீசர் பொற்றாள் மரையில் - காளீசருடைய அழகிய திருவடிக் கமலங்களில் வழிபட்டுக் குறைவிரந்தேன், வரம் பெற்றேன் - எண்ணிய வெண்ணம் பூர்த்தியாகப் பெற்றேன், எ - று.

---

# சுந்தர கவிராயர்

## பாடியது



### தையூர் பொன்னுசாமி முதலியார் குமாரர் முத்து முதலியார்மீது பாடியது

1. *முத்துகட லிற்பூத்த முத்தையெட்டு மாக்களுந்தம்
நத்துமணிக் கிச்சைகொண்டு நண்ணுவார்—அத்தமரைப்
பேராசை சாமிபால் பெட்பகஞ்சேர் நின்பெருமைக்
காராசை கொள்ளா ரறை.*

உரை:—*முத்து கடலில் பூத்த முத்தை - பழமையாகிய பாற்கடலிற் றோன்றிய முத்தினை, எட்டு மாக்களும் - எண்வகைத் திருமகளும், நத்து மணிக்கு இசசை கொண்டு நண்ணுவார் - நத்து என்ற மூக்கு நகையில் வைக்கும் இரத்தினமாக அதைப் பெறுவதற்கு விரும்பி யதனைப்போ யடைவர், அத்தமா - அதனோடு ஒத்த முத்து என்னும், பேரை - அழகிய பெயரை யுடையவராய், ஆசை சாமி பால் பெட்பகம் சேர - பொன்னு சாமி முதலியாருடைய விரும்பப்பெற்ற வீட்டினிற் பிறந்த, நின் பெரு மைக்கு யார் ஆசை கொள்ளார் - உன்னுடைய உயர்வினை விரும்பாதார் யாவரென்று, அரை - சொல், எ - று.*

### வறுமையை வருணித்தது

2. *அன்ன முணற்கரிதா மாறுமூன் றும்மரிதாம்
பன்ன மரிதாம் பகலின்கண்—துன்னிசியில்
நேய மரிதாகு நித்திரைக்குப் பாயரிதாம
காயக் கரிதாங் கலை.*

உரை:—*அன்னம் உணற்கு அரிதாம் - சோறு உண்பதற்குக் கிடைப்ப தில்லை, ஆறும் மூன்றும் அரிதாம் - அறுசுவை யுணவும் பால் தயிர் நெய் மூன்றும் கிடைத்தற் கரியனவாயின, பகலின் கண் பன்னம் அரிதாம் - பகற்பொழுதில் வெற்றிலை கிடைப்பது அறியதாயிருக்கிறது, துன் நிசியில்- இருள் நிறைந்த நடு இரவில், நேயம் அரிதாம் - காதலி கிடைப்பதில்லை, நித்திரைக்குப் பாய் அரிதாம் - படுத்துத் தூங்குதற்குப் பாய் கிடைப்ப தில்லை, காயக்குக் கலை அரிதாம் - உடலுக்கு உடையில்லை, எ - று.*

முத்துக்கருப்பன் கொடையை வியந்தது

3. காணியொரு மாசோமன் காலிலரை யாங்குமணன்
மாணிரவி சேயைந்து மாவிருகால்—வேணிமால்
முக்காற் பலியா முழுக்கொடைமுத் துக்கறுப்பன்
இக்காலத் தீவோர்க் கிறை.

உரை:—சோமன் காணி ஒருமா - சோமனென்ற வள்ளல் மாகாணிப் பங்கு ஈகையாளனவன்; குமணன் காலில் அரையாம் - குமண வள்ளல் அரைக்காற் பங்கு ஈகையாளனானவன்; மாண் இரவி சேய் ஐந்துமா - பெருமையுள்ள சூரியனது மகனாகிய கன்னன் காற்பங்கு ஈகையாளனவன்; வேணி மால் இருகால் - வானிலுள்ள முகில் அரைப் பங்கு வள்ளன்மை யுடையது பலி முக்கால் ஆம் - மாவலிச சக்கரவர்த்தி முக்காற் பங்கு வள்ளல், இக்காலத்து ஈவோர்க்கு இறை - இக்காலத்திற் கொடுப்பவர்களுக்கு மன்னனா யிருக்கின்ற, முத்துக்கறுப்பன் முழுக்கொடை - முத்துக்கறுப்ப னென்னும் வள்ளல் பூர்த்தியான ஈகையாளியாவன், எ - று.

எட்டையாபுரம் அருணசல துரையை வியந்தது

4. சந்திரன் காற்காற் குமணனே வரைக்காற்
றனிக்கொடைக் கொருகால்
கந்தர மிருகாற் பலியுமோ முக்காற்
காழவிர்கொடை யுடையவராம்
இந்தமாநிலத்தின் முழுக்கொடை யுடையோ னிதமலி
யெட்டையா புரம்வாழ்
சந்திர வதனன் மந்தர புயத்தன்
றனியருணசல துரையே.

உரை:—சந்திரன் கால் கால் - மதியானவன் மாகாணிப் பங்கும், குமணனே அரைக்கால் - குமணன் அரைக்காற் பங்கும், தனிக் கொடை கன்னனே ஒருகால் - இணையற்ற கன்னன் ஒரு காற்பங்கும், கந்தரம் இருகால் - மேகம் பாதிப் பங்கும், பலியுமோ முக்கால் - மாவலிச் சக்கரவர்த்தி முக்காற் பங்கும், காழ் அவிர் கொடையுடையவராம் - உறுதியாய்த் திகழுகின்ற வள்ளல்களாவர், இந்த மாநிலத்தில் - இந்த அகன்ற பூமியில், முழுக் கொடை யுடையோன் - பூர்த்தியான வள்ளலா யிருப்பவன், இதம் மலி எட்டையாபுறம் வாழ் சந்திரவதனன் - இதமலிந்த எட்டையாபுரத்தில் வசிக்கின்ற மதிபோன்ற முகத்தை யுடையவனும் மந்தர புயத்தன் - மந்தர மலையைப்போன்ற தோள்களை யுடையவனுமாகிய, தனி அருணசல துரையே - இணையற்ற அருணசல வள்ளலாவன், எ - று.

## திருவிரிஞ்சைப் பெருமானைப் பாடியது

5. தேன்பாயுஞ் சோலைத் திருவிரிஞ்சை மார்க்கேசா
நான்பாவி வந்துன்னை நாடினால்—என்பாவி
என்றுபே சாம லிருந்தீர் தலைவளைத்து
இன்றுதுணை யாரு மிலையே.

உரை :—தேன் பாயுஞ் சோலை திருவிரிஞ்சை மார்க்கேசா - தேன் பொழிகின்ற பொழில்களையுடைய திருவிரிஞ்சைப்பதியில் வீற்றிருக்கும் மார்க்கசகாய சுவாமியே!, நான் பாவி வந்துனை நாடினால் - பாவியாகிய நான் உன்பால் வந்து உன்னருளை விரும்பினால், தலை வளைத்து என் பாவி என்று பேசாமல் இருந்தீர் - தலை குனிந்துகொண்டு பாவியே ஏன் வந்தாய் என்று கேளாம லிருந்தீரே, இன்று துணை யாரும் இலையே - இந்நாளில் உன்னைத் தவிர எனக்கு உதவிபுரிவார் யாருமில்லையே, எ - று.

## இதுவுமது

6. இலையே துணையெனக் கீசாமார்க் கேசா
தலையே வளைக்கத் தகுமோ—அலையுமென்மேல்
ஏனோதா னோவென் றிருப்பதழ கோநீர்
தானோ வழித்துணை நாதன்.

உரை :—ஈசா மார்க்கேசா - கடவுளே! மார்க்கசகாய சுவாமியே!, எனக்குத் துணை இலையே - ......, தலையே வளைக்கத் தகுமோ - நீ தலை குனிந்து சும்மாயிருப்பது முறையோ?, அலையும் என்மேல் ஏனோ தானோ என்று இருப்பது அழகோ - திரிந்துழலும் என்மீது கருணை வையாமல் எப்படியானால் நமக்கென்ன வென்று சும்மா இருப்பது நன்றாகுமோ, நீர் தானோ வழித்துணை நாதன் - நீர்தானோ மார்க்க சகாயர் என்ற பெயருடையவர், எ - று.

## இதுவுமது

7. ஆறணியா ராடுசடை யாரூர்சே வூர்திகொடி
நீறணி விரிஞ்சைபுரி நித்தனைக்—கூறுவது
பித்தனென விந்திரன்றன் பெண்படைத் தலைசுமந்து
அத்தியைமார் வைத்த வதனால்.

உரை :—ஆறு அணியார் - கங்கையை யணியாகத் தலையிற் றரித்தவர், ஆடு சடை - ஆடுகின்ற சடையையுடையவர், ஆரூர் - ஆரூரினையுடையவர், சே ஊர்தி கொடி - காளையை வாகனமாகவும் கொடியாகவு முடையவர், நீறு அணி - திருநீறு தரித்தவர், விரிஞ்சைபுரி நித்தனை - விரிஞ்சைப் பதியிலுறையும் நித்தியராகிய பெருமானை, பித்தன் எனக் கூறுவது - பைத்தி

யக்காரனென்று சொல்வதற்குக் காரணம் யாதெனில், இந்திரன் பெண்டைத் தலை சுமந்து - இந்திரன் மனைவியாகிய சசி (அதாவது சந்திரனைத்) தலையிற் றாங்கி, அத்தியை மார் வைத்தவன் ஆதல் - எலும்பு மாலையைத் திருமார்பி லணிந்து கொண்டவனா யிருப்பதே என்க, எ - று.

இதுவுமது

8. சோற்றுக்குந் தண்ணீர்க்குந் துக்கப்பட் டெஞ்ஞான்றும்
காற்றினெரி யானென்னைக் கண்பாராய்—ஊற்றமிகு
வெங்கராக் கொன்ற விடையூர் விரிஞ்சைவாழ்
சங்கரா கங்கா தரா.

உரை :—ஊற்றமிகு வெங்கராக் கொன்ற விடையூர் - அழுத்தமானப் பிடிப்புடைய கொடிய முதலையை யழித்த விண்டுவாகிய காளைவாகனத்தி லேறிவரும், விரிஞ்சை வாழ் சஙகரா - விரிஞ்சைப்பதியில் வீற்றிருக்கும் சங்கரனே !, கங்காதரா - கங்கையைத் தரித்தவனே !, எஞ்ஞான்றும் சோற்றுக்கும் தண்ணீர்க்குந் துக்கப்பட்டு - எப்போதும் உண்ணச சோறும் குடிக்கத் தண்ணீரும் கிடையாமல் வருத்தப்பட்டு, காறறி னெரியான் என்னை - காற்றுப்பட்ட தீப்போல நெஞ்சந் துயரப்படுகின்ற என்னை, கண்பாராய் - ......, எ - று.

கலப்பை யோட்டுவதைக் குறிப்பது

9. பத்துக்கால் மூன்றுதலை பார்க்குங்கண் ணாறுமுகம்
இத்தரையி லாறுவா யீரிரண்டாம்—இத்தனையும்
ஓரிடத்திற் கண்டே னுகந்தேன் களிகூர்ந்தேன்
பாரிடத்திற் கண்டே பகர்.

உரை:—இத்தரையில் - இந்தப் பூமியில், பத்துக்கால் மூன்றுதலை ஆறுவாய் ஈரிரண்டாம் - பத்துக்காலும் மூன்றுதலையும் ஆறுவாயும் நான்கு கண்ணும், இத்தனையும் ஓரிடத்தில் கண்டேன் - ஆகிய இவவளவையும் ஓரிடத்திலேயே பார்த்தேன், உகந்தேன் - அதை விரும்பினேன், களி கூர்ந்தேன் - சந்தோஷப்பட்டேன், பாரிடத்தில் கண்டே பகர் - உலகததில் இதைக் கவனித்து என்னவென்று கூறுவாயாக, எ - று.

குறிப்பு :—இரு காளைகளைக் கலப்பையிற் பூட்டி யோட்டுங் காலத்தில் இரண்டு காளையின் கால்கள் எட்டும், ஓட்டும் மனிதன் கால் இரண்டும் ஆக பத்துக்கால்; காளையின் முகம் இரண்டும், மனிதன் தலை ஒன்றும் ஆக மூன்று தலை; இரண்டு காளையின் முகத்திலுள்ள கண்கள் நாலுடன் ஓட்டுபவன் முகத்திலுள்ள கண்களிரண்டும் சேர்தது் கண்களாறும் ஆவன காண்க. காளை மனிதன் முகத்தோடு கொழு முகம் மூன்றும் சேர்த்து

முகம் ஆறு—இம் மூன்று வாயுடன் நாழி வாய் ஒன்று சேர்த்து வாய் நான் காவது காண்க, எ - று.

## பொதுவானவைகள்

10. ஆறு குளந்தோப்பு மணிநியமஞ் சத்திரமுங்
கூறுவழித் தாறுநிழற் கோட்டமுடன்—மாறுமன
வேசிசபை நீர்ப்பந்தல் வேந்தன் மடமயிலே
காசினிக்கு ளேபொதுவாங் காண்.

உரை:—மடமயிலே - இளைய மயில்போன்ற சாயலுடைய பெண்ணே!, ஆறு குளம் தோப்பும் - நதி பொய்கை பொழில் என்பனவும், அணி நியமம் சத்திரமும் - அழகிய வீதியும் சத்திரமும், கூறு வழி தாறு நிழல் - பொது வாக வகுக்கப்பட்ட பாதை அதிலுள்ள பழக்குலை மர நிழலென்பனவும், கோட்டமுடன் - கோயிலும், மாறு மன வேசி - மாறுகின்ற வுள்ளமுடைய விலை மகளிரும், நீர்ப்பந்தல் - தண்ணீர்ப் பந்தலும், வேந்தன் - அரசர் களும், காசினிக்குளே பொதுவாம் - உலகத்திலே யாவர்களுக்கும் பொது வானவைகள் என்க; காண் - அசை, எ - று.

## பூட்டுவில் பொருள்கோளுக்கு உதாரணம்

11. ஆறு தலைசிவனுக் கைந்துமுக மைங்கரற்குக்
கூறுங்கை யைந்து குரவனுக்கு—வீறுதோள்
எட்டாஞ்சே டற்கிரட்டி யாயிரநா விந்திரற்குக்
கட்டா யிரங்கண் குகற்கு.

உரை:—குகற்கு ஆறுதலை - குமரக் கடவுளுக்கு ஆறுதலைகள் உள் ளன, சிவனுக்கு ஐந்து முகம் - ......, தோல் கற்கு கூறும் கை ஐந்து - யானைமுகக் கடவுளுக்குப் பேசப்படுகின்ற துதிக்கையைச சேர்த்துக் கரங்க ளைந்தாகும், குரவனுக்கு வீறு தோள் எட்டாம் - பரமசாரியனாகிய சிவ பெருமானுக்குத் தனிப்பெருமையையுடைய புயங்கள் எட்டாகும், சேடற்கு இரட்டி ஆயிரம் நா - ஆதிசேடனுக்கு இரண்டாயிரம் நாக்குகள் உள்ளன, இந்திரற்குக் கட்டு ஆயிரம் கண் - இந்திரனுக்கு உடம்பில் ஆயிரங் கண்க ளுள்ளன, எ - று.

## தோழி கூற்று

12. ஐந்து சிரமுள்ள வண்ணன்மே லேயெதிர்த்த
ஐந்து சரங்கொள நங்கனல்—ஐந்தான
பூதங் கடாமொடுங்கிப் பொன்றிடுவ ளாதலினால்
மாதங்க மாமயிலோய் வா.

உரை :—ஐந்து சிரமுள்ள அண்ணல் மேலே எதிர்த்த - ஐந்து திரு முகங்களை யுடைய சிவபெருமான்மீது அம்பு விடுத்துப் போர் செய்த, ஐந்து சரங்கொள் அனங்கனால் - ஐந்து பூங்கணைகளை விடுக்கும் மன்மதன் செய்யும் துயரால், ஐந்தான பூதங்கள் தாமொடுங்கி - உடம்பிலுள்ள ஐந்து பூதங்களடங்கப் பெற்று, மாது பொன்றிடுவ ளாதலினால் - மாது மரண மடைவா ளாதலினால், அங்கமா மயிலோய் வா - மேன்மையுடைய மயிலை இருப்பிடமாக உள்ள முருகப்பெருமானே வந்தருள்வாயாக, எ - று.

முருகர்மேல் நிந்தாஸ்துதி

13. வேலா வுனக்குமிகு வீணா ஜம்பமினி
ஏலாது வேலாது வேலாது—தோலாடை
கொண்டணிந்துந் தந்தை கோகனத தோன்சிரததில்
பண்டிரந் துண்டான் பலி.

உரை:—வேலா - வேலாயுதப் பெருமானே!, உன் தந்தை தோலாடை கொண்டணிந்து - உன் தகப்பனாராகிய சிவபெருமான் யானைத் தோலை யுரித்து ஆடையாக வுடுத்திக்கொண்டு, கோகனத்தோன் சிரத்தில் - தாமரைப் பூவிலிருக்கும் அயனுடைய தலையைக் கிள்ளியதன் கபாலத்தில், பலி பண்டு இரந்து உண்டான் - பழைய காலத்திற் பிச்சைச சோறேற்று அருந்தினானாதலினால்; உனக்கு வீணான ஜம்பம் இனி ஏலாது ஏலாது - இனிமேல் பயனில்லாத ஆரவாரம் உனக்கு எக்காலத்திலும் பொருந்தாது, எ - று.

சிவபெருமான் துதி

14. நாகந் தனையுரித்து நாகந் தனைவளைத்து
நாகந் தனைத்தரித்த நாதனே—நாகங்கொள்
பத்தானைக் கொன்றானைப் பாண்டி லெனவூர்ந்த
அத்தா வடியேற் கருள்.

உரை :—நாகந்தனை யுரித்து - யானைததோலை யுரித்து உடுத்தி, நாகந் தனை வளைத்து - மேரு மலையை வில்லாக வளைத்து, நாகந்தனைத் தரிதத நாதனே - பாம்பினை யாபரணமாக அணிந்த தலைவனே !, நாகங்கொள் பத்தானை - கைலைமலையை எடுத்த பத்துத் தலையையுடைய இராவணனை, கொன்றானை - கொன்ற திருமாலை, பாண்டிலென ஊர்ந்த அத்தா - வாகனமாகச் செலுத்திய அப்பனே!, அடியேற்கு அருள் - ......, எ - று.

கயவரை யிகழ்தல்

15. கயவரெலாங் கூடியொரு காரியத்தைச் செய்தும்
பயனடைவ துண்டோவிப் பாரில்—வியனுறும்
சோதினிமுன் பின்னுஞ் சோர்ந்துதேய்ந் தும்பயனை
யாது மடையாது போல்.

உரை :—வியலில் உறும் சோதினி - அகன்ற வீட்டிலுள்ள விளககு மாறுனது, முன்னும் பின்னும் சோர்ந்தும் தேய்ந்தும் - முற்பகுதியிலும் பிற்பகுதியிலும் நிலைத்தி லுறைந்து குறைவுபட்டும், பயனை யாதும் அடையாது போல் - ஒரு பயனும் பெருததுபோல, இப்பாரில் - இந்தப் பூமியில், கயவரெலாங்கூடி ஒரு காரியத்தைச் செய்தும் பயனடைவது உண்டோ - அற்பர் ஒருங்கு சேர்ந்து ஒரு முயற்சி செய்தாலும் அதன் பயனைப் பெறுவதில்லை, எ - று.

## களத்தூர் வள்ளலைப் புகழ்ந்து பாடியது

16. பொன்னெல்லை யெல்லாம் பொதிபொதியாய்ப் பூசுரர்க்குச்
செந்நெல்லே போலச் சிறந்தளித்தான்—பன்னகத்தின்
சீரார் மணியைவிலை செய்யானுஞ் செய்யகளத்
தூரானுஞ் செய்கரும மொன்று.

உரை :—பன்னகத்தின் சீரார் மணியை விலை செய்யானும் - பாம்பின் சிறந்த மணியாகிய நாகரத்தினத்தைப் பொருட்படுததாதவனும், செய்ய களததூரானும் - செம்மையாகிய களத்தூரென்னும் பதியில் வாழ்பவனுமாகிய வள்ளல், செய் கருமம் ஒன்று - செய்கின்ற ஈகைசசெயல ஒன்றுளது, பூசுரர்க்கு - உலகத்தில் தேவர்களைப்போல மதிப்புடையவாகளுக்கு, பொன் எல்லை எல்லாம் - மிகுந்த அளவுடைய தஙக முழுவதையும், பொதி பொதியாய் - சுமை சுமையாக, செந்நெல்லே போல - உயர்ந்த நெல்லைப்போல, சிறந்து அளிததான் - யாவரும் கொடாத வகையில் மிகுதியாகக் கொடுத்தான், எ - று.

## செல்வரியல்பு கூறியது

17. ஈரா று மீரரையு மில்லையென்றே னதலினல்
ஈரா று சொல்லா திருந்தீரே—ஈரா று
கட்டி யணைத்தேநீ காதலுட னேசேர்ந்தால்
வட்டியுடன் றுனே வரும்.

உரை :—ஈராறும் ஈரரையும் - பன்னிரண்டும் ஒன்றுமாகிய பதின் மூன்றுவது நக்ஷத்திரமாகிய அத்தம் அதாவது பொருள், இல்லை என்றேன் ஆதலினல் - என்னிடத்தில் இல்லையென்று நான் சொனனபடியாய் ஈராறு சொல்லாது இருந்தாரோ - பன்னிரண்டாவது நக்ஷத்திரமாகிய உத்திரம் அதாவது பதில் உரையாது இருந்தீரே, நீர் ஈராறு கட்டியணைத்தே காதலுடனே சேர்ந்தால் - வருடத்திற் பன்னிரண்டாவதாகிய வெகு தானியத்தை (மிகுந்த நெல்லை) மூட்டை மூட்டையாகக் கட்டிவைத்து அவற்றை யாசையுடனே சேர்த்து வைத்தால் பொருள், வட்டியுடன் தானே வரும் - ......, எ - று.

## பிரிவாற்ருமையாற் றலைவன் வருந்துதல்

18. நறையொழுகுங் குழலாளை யமுதொழுகு
மொழியாளை நயனவேலிற்
பிறையொழுகு நுதலாளைப் பிரிந்திருக்க
விப்பிறப்பிற் பெரிதுமயான்செய்
குறையெதுவோ மதன்கணைக்கு மிகவருந்த
வெனைவிதித்த கொடியோனை
மறையவனுங் கலைமகளைப் பிரிந்திருந்தாற்
றெரியுமந்த வருத்தந் தானே.

உரை:—நறை ஒழுகும் குழலாளை - தேன் சிந்தும் மலரணிந்த கூந்தலை யுடையவளை, அழகு ஒழுகும் மொழியாளை - அமுதம்போன்ற இனிமை பயக்கின்ற சொல்லுடையவளை, நயன வேலை - வேல்போன்ற கண்ணை யுடைய, பிறை ஒழுகும் நுதலாளை - பிறைபோன்ற அழகு விளங்குகின்ற நெற்றியுடையவளை, இப்பிறப்பிற் பிறந்திருக்க - ......, பெரிதும யான் செய் குறை எதுவோ - பெரிதாக நான் செய்த தீவினை யாதோ, மதன் கணைக்கு மிக வருந்த எனை விதிதத - மன்மதன் அம்பினுல் துயரப்படும்படி யாக என் தலையி லெழுதிய, கொடியோனை மறையவனும் - பொல்லாதவ னை பிரமனும், கலைமகளைப் பிரிந்திருந்தால் தெரியும் அந்த வருத்தந் தானே - ... ....., எ - று.

## இதுவுமது

19. பாங்காளை வேளை மருட்டு கண்ணாளைப் பகற்பொழுது
தூங்காளைக் காமசுர தஞ்செய் வாளையென் சொல்லுக்குப்பின்
வாங்காளை மோகமவ ளாவைப் பாளையென் மார்பைவிட்டு
நீங்காளை யெப்படியோ பிரிந்தா றுமென் னெஞ்சகமே.

உரை:—பாஙகாளை - அன்புடையவளை, வேளைமருட்டு கண்ணாளை - மன்மதனையும் மயக்குகின்ற கண்ணை யுடையவளை, பகல் பொழுது தூங காளை - பகற் காலத்தில் நித்திரை செய்யாதவளை, காமசுரதம் செய்வாளை - காதல் லீலைகள் செய்பவளை, என் சொல்லுக்குப் பின் வாங்காளை - என் சொற்படி நடப்பவளை, மோகம் அவளா வைப்பாளை - தானுகவே எனக்கு ஆசை விளைப்பவளை, என் மார்பைவிட்டு நீகாளை - மறக்க முடியாதபடி என் நெஞ்சில் நிற்பவளை, எப்படியோ பிரிந்து ஆறும் என் நெஞ்சகமே - என் மனமானது எவ்வாறு பிரிந்து வருத்தத்தைத் தணியப்பெறும், எ - று.

இதுவுமது

20. கூட்டியிருக்குஞ் சப்ரமஞ்சக்
குளிர்பஞ்சணைமேல் ரத்னவளை
பூட்டியிருக்குங் கரங்களொடு
பொருந்தியழுந்திக் கிடவாமல்
மூட்டியுடுத்த சேலையுமாய்
முன்கைதலைக்கணை யாகவைத்து
வேட்டிவிரித்துப் படுக்கவென்றே
விதித்தான்கமலத் துதித்தோனே.

உரை:—கூட்டியிருக்கும் சப்ரமஞ்ச குளிர் பஞ்சணைமேல் செவ்வையாய் அமைத்திருக்கும் மேல்விதானத்தோடு கூடிய கட்டிலில் விரிக்கப்பெற்ற குளிர்ச்சிதரும் பஞ்சு மெத்தைமீது, இரத்தனவளைபூட்டி இருக்கும் கரங்களோடு பொருந்தி யழுந்திக் கிடவாவல் - இரத்தினங்களினாற் செய்த வளையலணிந்த கைகளால் தழுவப்பெற்று ஆலிங்கனஞ் செய்து படுத்திராமல், மூட்டி உடுத்த சேலையுமாய் - கிழியல் தைக்கப்பெற்ற துணியுடன், முன் கை தலைக்கணியாக வைத்து - முன் கையைத் தலையணை போல் வைத்துக்கொண்டு, வேட்டி விரித்துப் படுக்கை யன்றே - ஆடையைக் கீழே படுக்கையாக விரித்து அதன்மேல் படுக்கும்படியாக, விதித்தான் கமலத்து உதித்தோனே - பிரமன் விதித்திட்டான், எ - று.

இதுவுமது

21. சங்கையிலா மதன்விடுத்த பகழிதைத்த
புண்வருத்தந் தன்னைநோக்கிக்
கொங்கையையொத் திடங்கொடுத்துக் குங்குமச்சாந்
தப்பற்றுங் குளிரப்பூசிச்
செங்கனிவா யிதழ்மருந்து முள்ளுக்கே
கொடுத்தெனக்குச் செய்தநன்றி
மங்கையரே யிந்திரவி தெற்குவடக்
குதித்திடினு மறந்திடேனே.

உரை :—மஙகையரே - மாதர்களே !, சங்கையிலா மதன் விடுத்த பகழி தைத்த-உறுதியான மன்மதன் செலுத்திய கணையழுந்தியதனு லேற்பட்ட, புண் வருத்தம் தன்னை நோக்கி - காயத்தின் நோவுதன்னைக் கவனித்து அது தீரும்படி, கொங்கையை ஒத்திடம் கொடுத்து - தனங்களால் ஒற்றியொற்றி, குஙகுமச சாந்தப் பற்றுங் குளிரப்பூசி - குங்குமப்பூச சேர்ந்த சந்தனக் குழம்பைத் தேகங் குளிரும்படியாகத் தடவி, செங்கனி வாய் இதழ் மருந்து உள்ளுக்கே கொடுதது - உடம்பினுல் செவவிய கனிபோன்ற வாயி

லும் உதட்டிலும் ஊறும் நீராகிய அமுதத்தினை உட்கொள்ள அளித்து எனக்குச் செய்தநன்றி-தலைவி எனக்குச் செய்த நன்மையை, இந்து இரவி தெற்கு வடக்கு உதித்திடினும் - சந்திரனும் சூரியனும் திசை மாறித் தெற்கேயாகிலும் வடக்கேயாகிலும் உதித்தாலும், மறந்திடேனே - மறந்திடமாட்டேன், எ - று.

## காமத்தின் வலிமை

22 ஒருகோட்டுக் கலைமுனியு மொளிதிகழும்
புலியாடை யுடுத்தகோவு
மருமலர்வாழ் திசைமுகனும் வானவர்க
ளுயகனு மயிடன்றானுங்
கரியநிறத் திருமாலும் வாலியும்ப
ராசனுமே காமனம்பால்
பெருமையிழந் தனரென்றாற் சிறுமனிதர்க்
கெப்படியோ பேசுங்காலே.

உரை:—ஒரு கோட்டுக் கலை முனியும் - கலைக்கோட்டு முனிவரும் ஒளி திகழும் புலியாடை யுடுத்த கோவும் - பிரகாசிக்கின்ற புலித்தோலைத் தரித்த அரசனும், மருமலர் வாழ்திசை முகனும் - வாசனையுடைய தாமரைப் பூவில் வீற்றிருக்கின்ற அயனும், வானவர்கள் நாயகனும் - தேவர் தலைவனாகிய இந்திரனும், மயிடன் தானும் - எருமை முகமுடைய மகிடாசூரனும், கரிய நிறத் திறமாலும் - ......, வாலியும் - ......, பராசரனும் - பராசர முனிவனும், காமன் அம்பால் பெருமை இழந்தனர் என்றால் - மன்மதன் கணையினால் தங்கள் உயர்வைக் கைவிட்டனரெனில், பேசுங்கால் சிறு மனிதற்கு எப்படியோ - ஆராய்ந்து கூறுமிடத்து அதனா லுண்டாகிய துன்பம் சிற்றறிவுடைய மனிதர்களுக்கு எவ்வளவு அதிகமாகும், எ-று.

## இதுவுமது

23. வாசவனும் பிறர்நகைக்க வுடலானா
னொருவனரா வடிவமானான்
தேசுபுகழ்க் கலைமதியு முடல்குறைந்தான்
மலர்வேதன் சிரமொன்றற்றான்
ஈசனுதல் விழிதிறந்தா னிராவணசுந்தோப
சுந்தரிறந்தார் மண்மேல்
காசினிப்புன் மானிடரோ மோக
சாகரமதனைக் கடக்கவல்லார்.

உரை:—வாசவனும் பிறர் நகைக்க வுடலானான் - இந்திரனும் மற்றவர்கள் பரிகசிக்கும்படியாக பலயோனிகளுடைய உடம்பைக் கவுதமர் சாபத்தா

லுடையவனுன், ஒருவன் அராவடிவமானுன் - இந்திர பதவியுற்ற நகுலன் அகத்தியர் சாபத்தால் பாம்பு வடிவமானுன், தேசு புகழ்க் கலைமதியும் உடல் குறைந்தான் - ஒளியும் கீர்த்தியுமுடைய பதினறு கலையோடு கூடிய சந்திரனும் தனது கலைகள் குறையப்பெற்றுன், மலர் வேதன் சிரம் ஒன்று அற்றுன் - தாமரை மலரிலுள்ள பிரமன் ஒரு தலை கிள்ளப்பெற்றுன், ஈசன் நுதல் விழி திறந்தான் - சிவபெருமான் நெற்றிக் கண்ணைத் திறக்கலாயினர், ராவண சுந்தோபசுந்தர் மண்மேல் இறந்தார் - இராவணனும் சுந்தன் உபசுந்தன் என்னும் அசுரர் இருவரும் பிடிவாதமான பெண் மயலால் உயிரிழந்தார்கள், (இவர்கள் இவவாறுனல்) காசினிப் புன் மானிடரோ - உலகத்திலுள்ள குறைந்த ஆற்றலுள்ள மக்கள்தானே, மோக சாகர மதனைக் கடக்க வல்லார் - காம சாகர மதனைத் தாண்டத் திறமையுள்ளவராவர், எ - று

இதுவுமது

24. உணங்கி யொருகான் முடமாகி யொருகண்
ணின்றிச் செவியிழந்து
வணங்கு நெடுவா லறுப்புண்டு மன்னு
முதுகில் வயிறொட்டி
அணங்கு மலியமெலி வெய்தியகல்
வாயோடு கழுத்தேந்திச்
சுணங்கன் முடுவல் பின்சென்றுல் யாரைக்கா
மன்றுயர் செய்யான்.

உரை :—சுணங்கன் - ஆண் நாயானது, உணங்கி - உடலுலர்ந்து, ஒரு கால் முடம் ஆகி - ஒரு கால் நொண்டியாகி, ஒரு கண் இன்றி - ஒரு கண்ணில்லாமல், செவி இழந்து காது கேளாமல், வணங்கு நெடுவால் அறுப்பு உண்டு - வளைந்து நீண்ட வால் கத்தரிக்கப் பெற்று, மன்னும் முதுகில் வயிறு ஒட்டி - எலும்பாயிருக்கும் முதுகு ஒன்றுபட்ட வயிறு பொருந்தும் படி யிருக்கவும், அணங்கு மலிய மெலிவு எய்தி - வியாதி வருத்த மெலிந்து போ யிருப்பினும் அகல் வாயோடு கழுத்து ஏந்தி - வாயைத் திறந்து கொண்டு கழுததை நீட்டிக்கொண்டு, முடுவல் பின் சென்றுல் - காமத்தினுல் பெண்ணுய் பின்னே ஓடினுல், யாரைக் காமன் துயர் செய்யான் - வேறு யாரைத் தான் மன்மதன் வருத்தாதிருப்பான், எ - று.

வெறி விலக்கல்

25. கட்டிறலை திருப்பிவைத்தாற் றலைவலிபோ
மோவந்தக் கதைபோலாட்டுக்
குட்டியி தென்னடிசகியே கெட்டிவயித்தியன்
பள்ளிகொண்டான் பாம்பின்

பெட்டியினுங் கையிடுவ னுண்டையும் பாய்ச்சிடுவ
னன்றாய்ப் பெலமாய்க்காயங்
கட்டிடுவ னிஃதல்லா லாறுதேமதன்
விடும்பகழிப் புண்டானே.

உரை:—அடி சகியே - அடி தோழியே!, கட்டில் தலை திருப்பி வைத்தால் தலை வலிபோம் - படுத்திருக்கிற கட்டிலைத் தலை மாற்றி வைப்பதால் தலைநோவு தீர்ந்திடுமா அந்தக் கதைபோல் ஆட்டுக்குட்டி இது என் - அந்த வேடிக்கையைப்போல இந்த ஆட்டுக்குட்டியைப் பலியிடுவதால் என் நோய் போமோ, கெட்டி வயித்தியன் பள்ளி கொண்டான் - பள்ளிகொண்டானென்னும் வள்ளலே சாமர்த்தியமான மருத்துவன், பாம்பின் பெட்டியிலும் கையிடுவன் - பாம்பு இருக்கின்ற பெட்டியிற் கையிட்டாலும் குணப்படுத்திக் கொள்வான், (அல்லது அல்குலிலும் லீலை செய்வான்) உண்டையும் பாய்ச்சிடுவன் - உருண்டை மருந்தும் கொடுப்பான் (அல்லது தனங்களின்மீது லீலை செய்வான்), நன்றாய்ப் பெலமாய்க் காயங் கட்டிடுவன் - புண்களுக்குச் செம்மையான கட்டுப்போட்டு உறுதியாய்க் கட்டி வைப்பான், (அல்லது நன்றாய்த்திறமாய் உடம்பைத் தழுவுவான்), இஃதல்லால் - இவ்விதமான சிகிச்சை யல்லாமல், மதன் விடும் பகழிப் புண் தான் ஆறுதே - மன்மதன் கணையாலேற்படுகின்ற சிரங்கு உலர்ந்து போகாது, எ - று.

## ஆலத்தி யெடுத்தல்

26. மரமது மரத்தி லேறி மரமதைத் தோளில் வைத்து
மரமது மரத்தைக் கண்டு மரத்தினால் மரத்தைக் குத்தி
மரமது வழியே சென்று வளமனைக் கேகும போது
மரமது கண்ட மாதர் மரமுடன் மரமெ டுத்தார்.

உரை:—மரமது - அரசு மரம், (அதாவது அரசன்), மரத்திலேறி - மாவிலேறி, அதாவது குதிரையிலேறி) மரமதைத் தோளில் வைத்து - வேலமரம், (அதாவது வேலினைத் தோளில் வைத்துக்கொண்டு), மரமது - அரசன், மரத்தைக் கண்டு - வேங்கை அதாவது புலியைக் கண்டு, மரத்தினால் மரத்தைக் குத்தி - வேலினால் அப் புலியைக் குத்தி, மரமது வழியே சென்று வளமனைக்கு ஏகும்போது - அரசன் வந்த வழியே திரும்பிப் போய் வளமான தனது அரண்மனையிற் புகும்போது, மரமது கண்ட மாதர் - அரசனைக் கண்ட பெண்கள், மரமுடன் மரம் எடுத்தால் - ஆல் அத்தி எடுத்தார்கள், (அதாவது ஆலாத்தி யெடுத்தார்கள்), எ - று.

குறிப்பு:—மரமது என்பது நான்கு அடியிலும் ' அரசு ' என்பதைக் குறித்து நின்றது. அரசு என்பது அரசனைக் குறிப்பதுபோல, மா, வேல்,

வேங்கை என்னும் மரத்தின் பெயர்கள் முறையே குதிரையையும், வேற் படையையும், புலியையும் குறித்தன. மாமுடன் மாமென்றபோது ஆலும் அத்தியும் என்பன குறிக்கப்பட்டு இரண்டும் சேர்த்து ஆலத்தியாயின.

---

# இராம கவிராயர்

## பாடியது



### உச்சிப்பிள்ளையார் தரிசனைக்குப் போனபோது திருடன் முடிச்சவிழ்த்துக் கொண்டதைப்பற்றி பாடியது

1. தம்பியோ பெண்டிருடி தாயாருடன் பிறந்த
வம்பனோ நெய்திருடி மாயனுமம்—அம்புவியில்
மூத்தபிள்ளை யாரே முடிச்சவிழ்த்துக் கொண்டீரே
கோத்திரத்தி லுள்ள குணம்.

உரை :—அம்புவியில் மூத்தப் பிள்ளையாரே - அழகிய பூமி மீது (உயர்ந்த மலையுசசியிற் றங்கும்) சிவபெருமானது முதல் குழந்தையாகிய கணபதியே!, தம்பியோ பெண திருடி - உன்னுடைய சகோதரனாகிய முருகர் வள்ளியம்மையைக் களவிற் கொண்டுபோனவர், தாயாருடன் பிறநத மாயனும் வம்பனோ - உம்முடைய அன்னையின் சகோதரனாகிய திருமாலாகிய கபட நாடககாரா, நெய திருடி - இடையர் பாடியில் வெண் ணெயை களவுசெய்தவர், முடிசசவிழ்ததுக் கொணடீர் - நீர எம்முடைய முடிசசை யவிழதது அதிலுள்ள பொனனை எடுத்துக் கொண்டீர், உம் கோத்திரததுக்கு உள்ள குணம - இது உமது குடும்பத்தாருக்கு இயற்கை யாக அமைந்த தன்மையாகும், எ - று.

### மாறை மதுக்குளுந்தான் செட்டிமேற் பாடியது

2. கூறவில்லை மாதர்வசை கொள்ளவில்லை மாமரத்தில்
சிறுகுயில் கூப்பிட்டுச் செப்பவில்லை—மாறை
மதுக்குளுந்தா னைப்பிறந்தாண் மாதென்றே வேளுக்
கிதுக்குளுந்தான் சொன்னவளிங் கார்.

உரை :—மாது - நம்முடைய மகள், மாறை மதுக்குளுந்தானைப் பிரித் தாள் என்று - மாறையிலுள்ள மதுக்குளந்தானென்னும் செல்வனைப் பிரிந்தாளென்று, மாதர் கூற விலை - தோழியர் யார்க்குந் தெரிவிக்கவில்லை வசை கொள்ளவில்லை - ஊரார் அறற்வுமிலலை, மாமரத்தில் சிறு குயில் கூப்பிட்டுச செப்பவில்லை - மாமரததிற் றங்கிச் சினந்து கூவுகின்ற குயிலா

னது உரத்த சத்தத்தோடு இதனைச் சொல்லவில்லை, வேளுக்கு இதக் குளுந்தான் சொன்னவள் இங்கு ஆர் - இதற்குள்ளே மன்மதனுக்கு இச் செய்தியைத் தெரிவித்தவள் யார்?, எ - று.

சிவபெருமான் பத்துத்தலை சுமந்தானென்று பாடியது

3. ஆழி கடைந்த வரவின் றலையைந்தும்
தாழ்வுபடா மானின் றலையொன் றும்—சூழ
விருந்தார் தலையிரண்டு மேற்றதலை யொன்றும
சுமந்தான் றலையோடும பதது.

உரை:—ஆழி கடைந்த வரவின் தலை ஐந்தும் - திருப்பாற்கடல் கடைவதற்குப் பயன்பட்ட வாசுகியின் ஐந்து தலையும், தாழ்வுபடா மானின் தலை ஒன்றும் - சிவபெருமான் திருக்கையில் கீழே விழாது தாங்கப்பெறும் மானுடைய தலை யொன்றும், சூழ இருந்தார் தலை இரண்டும - உடம்பின் பாகத்திலே றன்னைச் சுற்றியிருக்கும் பார்வதி, பெருமாள் என்பவர்களுடைய இரண்டு தலையும், ஏற்ற தலை ஒன்றும் - பிச்சை வாங்க உதவிய அயன் தலையொன்றும், தனது திருமுடி ஒன்றும் - ......, பத்து சுமந்தான் - ஆக பத்துத் தலைகளைச் சிவபெருமான் தாங்கினுன், எ - று.

குறிப்பு:—சிவலிங்கப் பெருமானுக்கு மேல் ஐந்தலை நாகம் மரம் போல் நிழல் தருவதால் அரவின் தலை ஐந்தென்று கூறினர் கவி.

பிரிவு கூறல்

4. நாமம பெறுஞ்செல்வங் கல்விக்கோ நாமபோகத
தூமக் குழன்மாதே சொல்லென்னப்—போமென்
றுளத்தே யெழுந்த வுரையு முயிரும
களத்தே பிணங்கியவா காண்.

உரை:—தூமக குழல் மாதே - புகைபோன்ற கூந்தலையுடைய பெண்ணே!, நாமம் பெறுஞ் செல்வம - பெருமையடைதற் கேதுவாகிய பொருளின் பொருட்டே, கலவிககோ - கலவியின் பொருட்டோ, நாம் போக - நாம் செலலலாமென்று, சொல் என்ன - கூறுகவென்று தலைவியைக் கேட்டபோது, போமென்று உளததே எழுந்த உரையும் - போவீராகவென்று மனதில் நினைததபோது எழுந்த சொல்லும், உயிரும் - நான் போவேனென்று சொல்லுகின்ற அவள் உயிரும், களததே பிணங்கிய வா - அவ்விடத்திலே அல்லது கண்டத்திலே ஒன்றோடொன்று சண்டை யிட்டன, எ - று. காண் - அசை.

கருத்து:—நீர் போனல் என் உயிர் போமென்றாள்.

## வன்சொல் விலக்கு

5. மெய்யே பொருண்மேற் பிரிதியேல் வேறொரு
தையலை நாடத் தகுமுனக்கு—செய்யிலைவேல்
வள்ளல் பிரிவற்றம் பார்த்தெங்கள் வாழ்நாளைக்
கொள்ள வுழலுமாங் கூற்று.

உரை :—செய்யிலை வேல் வள்ளல் - செய் தடவி இலைபோன்ற வடிவுடைய வேற்படையை ஏந்திய ஈகையாளனே!, கூற்று - எமன், பிரிவற்றம் பார்த்து - நீர் பிரியும் தருணத்தை நோக்கியிருந்து, எங்கள் வாழ்நாளைக் கொள்ள உழலுமாம் - எங்களுயிரைக் கொண்டுபோவதற்கு அலைகின்றனும், (ஆதலால்) மெய்யே பொருள்மேல் பிரிதியேல் - மெய்யாகப் பொருள் சேர்ப்பதன் பொருட்டு நீர் போகக் கருதினல், உனக்கு வேறொரு தையலை நாடத் தகும் - நீ இன்னொரு மனைவியைத் தேடிக்கொள்வதே பொருததம், எ - று.

## வாழ்த்து விலக்கு

6. செல்லு நெறியனைத்துஞ் சேம நெறியாக
மல்ல னிதியம் வளஞ்சிறக்க—வெல்லும
அடற்றோர் விடலை யகன்றுறைவ தாங்கோர்
இடத்தே பிறக்கவி யாம்.

உரை :—வெல்லும் அடல் தோ விடலை - வெற்றி யடையககூடிய திறமையுடைய ஆணமகனுகிய தலைவன், செல்லும நெறி யனைததும் சேம நெறியாக - போகின்ற வழியெல்லாம் பாதுகாப்புடைய வழியாகக் கடவது, மல்லல் நிதியம் வளம் சிறக்க - தேடுகின்ற வளமான பொருள பெருகுவதாக, அகன்று உறைவது ஆககு ஓர் இடததே - பிரிநதுறையு மிடததின் ஒரு பக்கத்தில், யாம் பிறக்க - யாம இறந்துபோய்ப் பிறப்போமாக, எ - று

## தலைமை விலக்கு

7. பொய்ம்மை நெறிதீர் பொருளு மிகப்பயக்கும
எம்முயிர்க்கு மேது மிடரில்லை—வெம்மைதீர்ந்
தேக வினிய நெறியணிய வென்றாலும்
போக லொழிவாய் பொருட்கு.

உரை —பொய்ம்மை நெறிதீர் பொருளும் மிகப்பயக்கும் - அசததியம் கலவாத வழியிற் கிடைக்கக் கூடிய பொருள் அதிகமாக வுண்டாகக்கூடியது, எம்முயிர்க்கும் ஏதும் இடர் இல்லை - எம்முடைய ஆயுசுக்கும் எவ வகையான இடைஞ்சலுமில்லை யென்றாலும், வெம்மை தீர்ந்து ஏக இனிய

நெறி அணிய வென்றாலும் - வழியில் வெப்பமில்லாது போவதற்குரிய நல்ல பாதையானது கிட்ட இருந்தாலும், பொருட்கு போகல் ஒழிவாய் - பொருளின் பொருட்டுப் பிரிவதைத் தவிர்ப்பாயாக, எ - று.

இகழ்ச்சி விலக்கு

8. ஆசை பெரிதுடையே, மாருயிர்மே லப்பொருண்மேல்
ஆசைசிறிது மடை கிலமால்—தேசு
வழுவா நெறியின் வருபொருண்மே லண்ணல்
எழுவா யொழிவா யினி.

உரை:—அண்ணல் - தலைவனே !, ஆர் உயிர்மேல் ஆசை பெரிதுடையேம் - அருமையாகிய உயிரின்மேல் மிகுந்த வேட்கையுடையோம், அப் பொருள்மேல் ஆசை சிறிதும் அடைகிலம் - நீ விரும்புகின்ற அந்தச செல்வத்தினமீது கொஞ்சமும் விருப்பம் எங்களுக்குண்டாகவில்லை, தேசு வழுவா நெறியின வருபொருள்மேல் - கீர்த்தி தவறாத வழியில் அடையக் கருதுகின்ற பொருளின் பொருட்டு, இனி எழுவாய் ஒழிவாய் - நாங்கள் இவ்வளவு சொல்லிய பிற்பாடு புறப்படுவாயோ அல்லது புறப்படாமல் இருப்பாயோ (உன்னிஷ்டம்), எ - று.

துணைசெயல் விலக்கு

9. வினைபொருண்மே லண்ணல் விரும்பினையே லீண்டெங்
கிளையழுகை கேட்பதற்கு முன்னே—விளைதேன்
புடையூறு பூந்தார் புனைகழலாய் போக்குக்
கிடையூறு வாராம லேகு.

உரை :—விளை தேன் புடையூறு பூந்தார் புனைகழலாய் அண்ணல் - பூக்களிலுண்டாகின்ற தேன் பக்கத்திற் கசிகின்ற மாலையையும் அழகான சிலம்பினையுமுடைய தலைவனே !, வினை பொருள்மேல் போக்கு விரும்பினையேல் - தேடிப் பெறக்கூடிய பொருளின் பொருட்டு நீ போவதற்கு ஆசைப்பட்டால், ஈண்டு - இங்கே, எம்கிளை அழுகை கேட்பதற்கு முன்னே - நாங்களிறந்து எங்களுடைய உறவினர் அழுகின்ற ஒலி செவியிற் படுவதற்கு முன்னே, இடையூறு வாராமல் ஏகு - உன் போக்கிற்குத் தடையேற்படாதபடி போவாயாக, எ - று.

முயற்சி விலக்கு

10. மல்லணிந்த தோளாயி தென்கொலோ வான்பொருண்மேல்
செல்க விரைநதென் றுளந்தெளிந்து—சொல்லுதற்கே
என்று முயல்வல்யா னேகனீ யென்றிடையே
தோன்றுகின்ற தென்வாயிற் சொல்.

உரை :—மல்லணிந்த தோளாய் - மல்லுத்தத்தால் அலங்காரம் பெற்ற புயத்தையுடையவனே !, வான் பொருள்மேல் விரைந்து செல்க என்று - சிறந்த பொருளின் பொருட்டுச சீக்கிரமாகப் போகலாமென்று, உளம் தெளிந்து சொல்லுதற்கே - தெளிவான எண்ணத்தோடு கூறுவதற்கே, என்று முயல்வல் யான் - இசைந்து யான் முயற்சி செய்கின்றேன், என் வாயிற் சொல் - என் வாயிலே தோன்றுகின்ற மொழியானது, அகல் நீ என்று இடையே தோன்றுகின்றது - நீ போகக்கூடாதென்ற வாக்கியமாக நடுவிலுதிக்கிறது இது என் கொலோ - இதற்குக் காரணம் யாதோ, எ - று.

## பரவச விலக்கு

11. செல்லை திருவுளமேல் யானறியேன் றேங்கமழ்தார்
மல்லகந் தங்கு மாதர்விழியின்—மெல்லிமைகள்
நோக்கு விலக்குமே னோவா ளிவள்காதல்
போக்கி யகல்வாய் பொருட்கு.

உரை:—செல்கை திருவுளமேல் யான் அறியேன் - போதற்கு நீ விரும்புவாயாளுல் அதைப்பற்றி நான் ஒன்றுஞ் சொல்ல அறியேன், தேம் கமழ்தார் - தேனின் வாசனை வீசுகின்ற உன்னுடைய மாலையைப் பார்க்கும், மல்லகந் தாங்கு மாதர் விழியின் மெல்லிமைகள் - வளம் பொருந்திய மாதர்ப் பனையுடைய கண்ணின மெதுவான இமைகள், நோக்கு விலக்குமேல் - அதனைப் பார்ப்பதைத் தடுக்குமேயாளுல், நோவாள் - அவள் வருந்துவாள், இவள் காதல் போக்கி பொருட்கு அகல்வாய் - இவளிச சையை யொழித்துப்பின் நீ பொருளுக்காகப் பிரிந்து செல்வாயாக, எ - று.

## உபாய விலக்கு

12. இன்னுயிர் காத்தளிப்பாய் நீயே யிளவேனில்
மன்னவனுங் கூற்றுவனும் வந்தணைந்தால்—அன்னோர்
தமக்கெம்மைத் தோன்றாத் தகைமையதோர் விஞ்சை
எமக்கின் றருள் புரிந்தே யேகு.

உரை:—இன்னுயிர் காத்தளிப்பாய் - எங்கள் இனிய வுயிரைக் காப்பாற்றிப் பேணுகின்ற தலைவனே !, இளவேனில் மன்னவனும் கூற்றுவனும் வந்தணைந்தால் - மன்மதனும் எமனும் நீ போனபிறபாடு வந்து சேர்ந்தால், அன்னோர் தமக்கெம்மைத் தோன்றாத் தகைமையதோர் விஞ்சை - அவர்களுக்கு எங்களைக் காண்பியாத தன்மையுடைய ஒரு மந்திரததை, நீயே எமக்கு இன்று அருள் புரிந்து ஏகு - நீயே எங்களுக்கு இப்போது தயைசெய்து கற்பித்துவிட்டுப் போவாயாக, எ - று.

சிவபெருமானைப்பற்றி வேடிக்கையாய்ப் பாடியது

13. அக்காளை யேறுவா னம்மானைக் கைப்பிடிப்பான்
சொக்காளைப் பக்கஞ் சொருகுவான்—நக்கனவன்
ஆட்டை யெடுப்பானா லம்பாலே யுண்டிடுவான்
காட்டிற் குடியிருப்பான் காண்.

உரை:—நக்கனவன் - திருவாணியான சிவபெருமான், அக்காளை ஏறுவான் - (திருமால் காளையாக வந்தபோது) அந்தக் காளையை வாகனமாகக் கொண்டவன், அம்மானைக் கைப்பிடிப்பான் - அழகிய மானை இடது கரத்திலுடையவன், சொக்காளைப் பக்கஞ் சொருகுவான் - சொக்கநாயகியாகிய மீனாட்சியை இடப்பக்கத்திற் சேர்த்துக் கொள்பவன், ஆட்டை எடுப்பான் - ஆடுதலாகிய திருத்தத்தை மேற்கொள்பவன், ஆலம்பாலே உண்டிடுவான் - விஷமாகிய பாலைக் குடிப்பான், காட்டில் குடி இருப்பான் - சுடுகாட்டில் அல்லது கடப்பங்காட்டில் வீற்றிருப்பான், எ - று. காண் - அசை.

குறிப்பு:—கடப்பமரம் - மதுரைக்குத் தல விருட்சம். ஆதலால் அதைக் கடம்பவனம் என்றுங் கூறுவர்

ஓர் விடு கவி

14. நாற்காணி மீதிருந்து நாகங் குதித்திறங்கிக்
காற்காணி மீதிவரக் கண்டேன்காற்—காற்காணி
கனியிருக்கக் கொட்டைதனைக் கவ்வினது போலத்
தனியிருக்க லாகாது தான்

உரை:—நாற்காணி மீதிருந்தும் - ஒரு மாமரத்தின்மேலே இருந்து, நாகம் குதித்து இறங்கி - குரங்கானது கீழே தாவி, காற்காணிமீது வரக் கண்டேன் - முந்திரி மரத்தின்மேற் செல்வதைப் பார்த்தேன், காற்காணி கனியிருக்கக் கொட்டைதனைக் கவ்வினது போல - முந்திரிப் பழமிருக்க அது கவ்வின கொட்டைபோல, தனி இருக்கல் ஆகாது தான் - தலைவனைப் பிரிந்து தனியே இருக்கக்கூடாது. (இருந்தால் மனக்கவலை யேற்படுமென்பது கருத்து), எ - று.

சிவபெருமானைப்பற்றி பாடியது

15. அவிட்டத்துக் கீரைந்தொன் றானை லுனைத்தப்
பவிட்டத்தி னாலே பலகால்—தவிட்டை
முழுங்குகின்ற செங்கோழி முட்டைக்கு நேரா
எழுந்தாய் செழுந்திங்க ளே.

உரை:—செழுந் திங்களே - வளமான சந்திரனே! அவிட்டத்துக்கு ஈரைந்து ஒன்று ஆனல் - அவிட்டத்திற்குப் பதினொன்றாவது நட்சத்திரமாகிய திருவாதிரைக்குரிய சிவபெருமான் உனைத் தப்பவிட்டதினால் - உன்னைச் சாகாதவண்ணம் காப்பாற்றிவிட்டதினால் பலகால் - பல தடவை, தவிட்டை முழுங்குகின்ற செங்கோழி முட்டைக்கு நேரா - தவிட்டை விழுங்குகின்ற சிவந்த கோழி முட்டையைப்போல, எழுந்தாய் - பூரண கலையோடு தோன்றித் துன்புறுத்துகின்றாய், எ - று.

### திருநாமத்தைப் பற்றியது

16. எருதாய்ச் சுமந்துபோ யேத்திக்கண் சாத்திப்
பொருதாழி வாங்கினதும் பொய்யோ—பெருமாள்
திருநாம மென்றுநெற்றி திட்டுவதுங் கச்சி
ஒருமா விலக்கமல்ல வோ.

உரை:—பெருமாள் - விஷ்ணுவானவர், எருதாய்ச சுமந்து, போய் - திரிபுர மெரித்த காலததில் விடையாகத் தாஙகினதும், ஏத்திக் கண் சாத்திப் பொருது ஆழி வாஙகினதும்-அாசசிததுத தனது திருக்கண்ணைச சாத்திச சக்கரம் பெற்றதும், பொய்யோ - ......, திரு நாமம் என்று நெற்றி திட்டுவதும்-திருநாம மென்ற பெயரால் நெற்றியிலிடப் படுவதும், கசசி ஒரு மா இலக்கம் அல்லவோ - காஞ்சிபுரத்திலுள்ள சிவபெருமான் வீற்றிருக்கின்ற ஒரு மாமரததின் குறியல்லவா?, எ - று.

### விடு கவி

17. ஆனெய்தனைப் பூனை யருந்தினது மல்லாமற்
பூனெய்தனை யீயெடுத்துப் போனதுவும்—மானனைய
கண்ணார் தலையதனிற் காய்காய்த் தறுத்ததுவும்
நண்ணா யறிந்து நவில்.

உரை:—ஆனெய்தனைப் பூனை அருந்தினதும் அல்லாமல் - பசுவின் நெய்யையும் தேனையும் சாப்பிட்டது மல்லாமல், பூ நெய்தனை ஈ எடுத்துப் போனதவும்-தேனில் ஈ மொய்த்ததுவும், மான் அனைய கண்ணார் தலையதனில் காய்காய்த்து அறுத்ததுவும் - மான்போன்ற கண்ணையுடைய கன்னியின் அதாவது வாழைமரத்தின் உசசியிற் காய் காய்த்து அதை வெட்டியதுவும், நண்ணா அறிந்து நவில் - நன்றாகத் தெரிந்து கூறுக, எ - று.

### நிரனிரைப் பொருள்கோளுக்கு உதாரணம்

18. கொங்கைகளங் கண்சொல் குழலிவையின் னாட்கென்று
செங்கமல வாவி திகழ்கூடற்—கங்கைகுலச்
சின்னத்தம் பிக்குத் தெரியவுரைப் பாரிலையே
வன்னத்தம் பிக்கு மழை.

உரை:—இன்னாட்கு - இப் பெண்ணிற்கு, கொங்கை களம் கண் சொல் குழல் இவை - தனமும் கழுத்தும் கண்ணும் மொழியும் கூந்தலும், வல் நத்து அம்பு இக்கு மழை என்று - சூது கருவியையும் சங்கையும் அம்பையும் கரும்பையும் மேகத்தையும் ஒப்பன என்று, செங்கமல வாவி திகழ் கூடல்- செந்தாமரைப் பொய்கை விளங்கும் கூடற்பதியில் வதியும், கங்கைகுலச் சின்னத் தம்பிக்கு - வேளாள குலத்திற் பிறந்த சின்னத்தம்பி யென்னும் வள்ளலுக்கு, தெரிய உரைப்பார் இலேயே - தெளிவாக எடுத்துத் தெரிவிப் பார் இல்லையே, எ - று.

உயர்ந்தால் கவனிக்கமாட்டா ரெனல்

19. திருவிருத்தி நாதர் திருவளியா தென்னைக்
கருவிருத்தி யென்னபலன் கண்டார்—எருதுபோய்க்
கோட்டிபத்திலேறினரோ கோவணமபோய்ப் பட்டாச்சோ
ஓட்டிலிரந் துண்டதும் போச்சோ.

உரை :—திருவிருத்தி நாதர் - திருவிருத்திநாதராகிய சிவபெருமான், திரு அளியாது - வீட்டுச் செல்வத்தைக் கொடாது என்னைக் கருவிருத்தி என்ன பலன் கண்டார் - என்னைப் பிறப்பிலிருக்கும்படி செய்து என்ன நன்மையைப் பார்த்தனர், எருது போய் கோட்டு இபத்தில் ஏறினரோ - காளையை விட்டு நீங்கி கொம்போடு கூடிய யானையின்மீது அமர்ந்தனரோ, கோவணம் போய் பட்டாச்சோ - கௌபீனங் கட்டியிருந்தது போய்ப் பட் டாக வுடுத்திக் கொண்டனரோ, ஓட்டில் இரந்து உண்டதும் போச்சோ - தலை யோட்டிற் பிச்சையேற்று அருந்தியதும் நீங்கி விட்டதோ, (உயர்நிலை யடைந்தபடியால் கவனிக்க வில்லை போலும் என்பது கருத்து), எ- று.

பாண்டியனைப் பற்றியது

20. கொங்க ருடல்கிழியக் குத்தியிரு கோடெடுத்து
வெங்க ணழலில் வெதுப்புமே—மங்கையர்கள்
சூழத்தா மம்புனையுஞ் சுந்தரத்தோன் மீனவனுக்
கீழத்தா னிட்ட இபம்.

உரை:—மங்கையர்கள் சூழத் தாமம் புனையும் சுந்தரத்தோன் மீனவ னுக்கு - பெண்கள் சுற்றி நின்று பார்க்கும்படி மாலைதரித்த அழகிய புயத்தை யுடைய பாண்டியனுக்கு, ஈழத்தான் - ஈழமண்டல மன்னன், இட்ட இபம் - கப்பமாகக் கொடுத்த யானைகள், கொங்கர் உடல் கிழியக் குத்தி - கொங்கு தேசத்துப் பகைவரின் உடம்புகளைக் குத்திக்கீறி, இரு கோட்டு எடுத்து - இரண்டு கொம்பினாலும் எடுத்து, வெங்கண் அழலில் வெதுப்புமே - வெம்மையான விடத்திலுள்ள தீயில் வாட்டும், எ - று.

## சிவபெருமான்மீது நிந்தாஸ்துதி

21. கல்லி னெறியக் கதியளித்தார் பூவினால்
மெல்ல வெறிய விழித்தெரித்தார்—நல்லுடைவிட்
டுட்டருக்குண் டான வுவாவி னுரிபோர்த்தார்
குட்டருக்குண் டான குணம்.

உரை :—கல்லின் எறியக் கதியளித்தார் - சாக்கிய நாயினார் கல்லைக் கொண்டு சிவலிங்கப் பெருமான்மீது எறிய அதற்காக அவர்க்கு முத்தி கொடுத்தார், பூவினால் மெல்ல எறிய விழித்து எரித்தார் - மன்மதன் பூக்களைக்கொண்டு மெதுவாக வீசவும் நெற்றிக்கண்ணைத் திறந்து எரித் தழித்தார், நல்லுடை விட்டு - நல்ல ஆடையை வேண்டாமென்று விடுத்து, உள் தருக்கு உண்டான உவாவின் உரி போர்த்தார் - உள்ளத்தில் அகந்தை யுடைய யானையின் தோலினால் தன்னை மூடிக்கொண்டார், குட்டருக்கு உண்டான குணம் - சிறுவர்களுக்கு இயற்கையான தன்மை அது, எ - று.

## செல்லப்ப னென்னும் வள்ளலைப் பற்றியது

22. வல்லைப் பொருமுலைபாய் வார்த்தைமுனிந் தன்பருடன்
சொல்லப் பிரியத் துணியாதே—செல்லப்பன்
கச்சியெல்லாங் காவந்தக் காவெல்லா மாமாவின்
உச்சியெல்லாங் காமா யுதம்.

உரை:—வல்லைப்பொரு முலையாய - சூது கருவியை யொத்த தனங் களை யுடைய பாங்கிமாரே!, வார்த்தை முனிந்து அன்பருடன் சொல்லத் துணியாதீர் - நான் சொல்வதற்காகக் கோபித்து அதனை அன்பரிடம் கூறும் பொருட்டு என்னை விட்டு நீங்கத் துணிவு கொள்ளாதீர்கள், (ஏனெனில்) செல்லப்பன் கச்சியெலாம் கா - செல்லப்ப வள்ளல் வசிக் கின்ற காஞ்சிப்பதியில் எவ்விடத்திலும் சோலைகளே யுள்ளன, அந்தக் கா எல்லாம் மா - அந்தச் சோலைகளிலெல்லாம் மாமரங்களே உள்ளன, மாவின் உச்சியெலாம் காமாயுதம் - அந்த மாமரங்களின் நுனியெங்கும் மன்மதன் கணையாகிய பூக்களே உள்ளன, எ - று.

## திருவாரூர்த் தியாகரைப்பற்றிப் பாடியது

23. கமலா லயமில்லாங் காரோ கணத்து
விமலா லயமில்லா மெய்யா—அமலாமன்
றூடியபொற் பாதத் தியாக நெடுமாலன்று
தேடியபொற் பாதத் தியாகா.

உரை :—கமலாலயம் இல்லா - திருவாரூரினை வீடாகவுடைய, காரோ கணத்து விமலா - காயாரோகணத்தில் வீற்றிருக்கும் பாசமற்ற பெரு

மானே!, லயம் இல்லா மெய்யா - அழியாத தேகத்தை யுடையவனே !, அமலா - குற்றமற்றவனே!, மன்று ஆடிய பொற்பாதத் தியாகா - பொன்னம்பலத்தில் நடனஞ் செய்யத தூக்கிய திருவடியை அடியார்களுக்கு அளித்தவனே!, மால் அன்று தேடிய பொற்பாதத் தியாகா - திருமால் முற்காலத்தில் தேடிக்காணாத திருவடியையுடைய தியாகராசப் பெருமானே! நீ என்னை ஆட்கொள்வாயாக !, எ - று.

## தலைவனூரைப் பழித்தல்

24. வாவிகளை யன்றி மலரா வயல்களுமப்
பாவிகணை யன்றிப் பயிராகா—காவினிலத்
தேரோன் விருதன்றிச் சேரா பிரிந்தவர்க்கு
ஊரோ குடிதாங்கி யூர்.

உரை :—பிரிந்தவர்க்கு ஊரோ குடிதாங்கி ஊர் - நம்மைப் பிரிந்த தலைவருக்குச சொந்தமான பதி குடிதாங்கி யூரென்பது, வாவி கணை அன்றி மலரா - பொய்கைகளில் காம னம்பாகிய தாமரை மலர்களன்றி வேறு பூக்கள் பூப்பதில்லை, வயல்களும் அப் பாவி கணை அன்றிப் பயிராகா - வயல்களிலும் அந்தத் தீயவனுடைய அம்புகளே விளைகின்றன, காவினில் கால் தேரோன் விருது அன்றிச சேரா - சோலைகளில் தென்றற் காற்றைத் தேராகவுடைய மன்மதனுடைய கொடியாகிய குயிலையன்றி வேறு பறவைகள் தங்குவதில்லை, எ - று.

## மயல் விலக்கு

25. கண்டிருந்துங் கேட்டிருந்துங் கற்றிருந்துந் தோடுமலர்
வண்டிருந்த பூங்குழன்மேன் மாலானோம்—பண்டை
வெறியோ விதியோ வெளிமயக்கோ வையோ
முறையோ வநியாய மோ.

உரை:—கண்டிருந்தும் கேட்டிருந்தும் கற்றிருந்தும் - பெண் மயலின் கெடுதியை நேரே பார்த்தும் பிறரிடம் கேட்டும் நூற்களிற் படித்தும் அறிந்திருந்தாலும், தோடு மலர் வண்டிருந்த பூங்குழல் மேல் - வண்டுகளூதி விரிக்கின்ற இதழ்களையுடைய மலர்ந்த அழகிய கூந்தலையுடைய பெண்ணின் மீது, மால் ஆனோம் - இச்சைகொண்டோம், பண்டை வெறியோ - இதற்குக் காரணம் முற்பிறப்பின் வாசனையோ, விதியோ - வினைப் பயனோ, வெளிமயக்கோ - வெளித தோற்றததினால் ஏற்பட்ட மோகமோ, முறையோ அநியாயமோ - இது நீதியா அநீதியா, ஐயோ - இது பரிதாபம், எ - று.

## முருகன்மீது நிந்தாஸ்துதி

26. தேங்குவளை யன்னவிழித் தேமொழியார்க் குன் றந்தை
தாங்குவளை விற்கத் தமியோங்கை—ஈங்குவளை
கொள்ளத் தலைப்பட்டாய் கோமயிலைச் செட்டிநீ
மெள்ளக் குலத்தொழிலை விட்டு.

உரை :—கோ மயிலைச செட்டி - அழகிய மயிலையில் வதியும் செட்டி யென்று பெயர் பெற்ற குமரனே !, தேஙகுவளை யன்ன விழி - மணம் வீசுகின்ற நீலோற்பலம் போன்ற கண்ணையுடைய, தேமொழியார்க்கு - இனிய சொல்லுடைய மாதர்களுக்கு, உன் தந்தை தாங்குவளை விற்க - உன்னுடைய தகபபனூர் சுமந்து கொண்டுபோன வளையலை விற்கவும், நீ மெள்ளக் குலத்தொழிலை விட்டு - நீ மெதுவாக அந்தச் சாதித தொழிலைக் கைவிட்டு, ஈஙகு - இந்த இடத்தில், தமியோம் கைவளை கொள்ளத தலைப்பட்டாய் - அடியேங்களுடைய கையிலுள்ள வளையல்களை ஏற்றுக் கொள்ளப் புறப்பட்டாய், எ - று.

## பிட்சாடனரைப்பற்றிய நிந்தாஸ்துதி

27. பாம்புக்குற தச்சன் பகைவனைக்கொண் டித்தெருவில்
தேம்பித் திரிவா ரிவராரோ—பாங்கியே
நான்பாவித் தேன்பாவி யுண்டார் சிலகாலம்
தான்பாவித் துண்ணாத தாழ்வு.

உரை :—பாங்கியே - தோழியே !, பாம்புக்குத் தசசன் பகைவனைக் கொண்டு - பாம்புககுப் புற்றைக் கட்டுகின்ற கறையானது விரோதியாகிய கரடியைப் பிடிதது்க்கொண்டு, இதெருவில் தேம்பித திரிவாா யாவரோ - இந்த வீதியில் உணவுக்காக அலைந்து திரிகின்றவர் யார், நான் பாவித் தேன் - நான் அவா தன்மையை எண்ணினேன், பாவி யுண்டார் சில காலம் - சிலகாலம் உள்ளத்தைக் கொடுக்க வாஙகியுண்டார், தான் பாவித்து உண்ணாத தாழ்வு - தான் சமையல்செய்து சாப்பிடாததால் வந்த இழிவு இதுவாகும் அல்லது தன்னுடைய பாட்டினை விற்றுப் பரிசு பெற்று உண்ணாததால் வந்த தாழ்வாகும், எ - று.

## திருவொற்றியூர்ப் பெருமானைப் பாடியது

28. ஓரொற்றி யூர்மனையா வுள்ளோன் கரவென்னும்
ஈரொற்றி யூர்வல்லி யீசனே—வேரி
மகிழுமருந் தாயே மலைப்பானீ யுள்ள
மகிழுமருந் தாயே வரும்.

உரை :—ஓர் ஒற்றியூர் மனையா உள்ளோன் - ஒப்பற்ற திருவொற்றியூரைத் தனக்கு வீடாக வுடையவனே, காரவென்னும் ஈர் ஒற்றியூர் வல்லி - க் ர் என்னும் இரண்டு மெய்யெழுத்தோடு இ சேர்வதா லுண்டாகிய கிரி வல்லி மலைக்கொடியாகிய உமை கணவனாகிய, ஈசனே - பெருமானே !, வேரி மகிழ் அமருந் தாயே - மணங் கமழுகின்ற மகிழ்மரத்தின் கீழ்த் தங்கிய அன்னைபோல்பவனே!, நீ உள்ளம் மகிழ - நீ திருவுள்ளத்திற் களிகூர்ந்தால், மலைப்பால் - உமையம்மையின் பாலாகிய ஞானப்பால், மருந்தாயே வரும் - பிறவிக்கு மருந்தாகக் கிடைக்கும், எ - று.



# திவ்யகவி பிள்ளைப்பெருமாளையங்கார்

## பாடியது

—•—

### திருமாலின் பெருமை

1. *ஞான மறையை நவின்றுரைக்கும போதெல்லாம்*
*ஆனமுறை யாலாதி யந்தத்தும்—ஊனமற*
*அந்தணர்க ளென்போ ரரியோ மெனுஞ்சொல்லைத்*
*தந்துரைத்தல் கேட்டிலிரோ தான்.*

உரை :—ஞான மறையை நவின்றுரைக்கும் போதெல்லாம் - அறிவு தருகின்ற வேதத்தைச் சுரந்தப்பாமல் ஓதுகின்ற எல்லா நேரத்திலும், ஆனமுறையால் ஆதி அந்தத்தும் - வழக்கப்படி முதலிலும் கடைசியிலும், ஊனம் அற - குற்றம் நீங்கும்படியாக, அந்தணர்கள் என்போர் - பிராமணர்களாயினோர், அரி ஓம் எனும் சொல்லை - அரி ஓம் என்ற மந்திர வாக்கியத்தை, தந்துரைத்தல் கேட்டிலிரோதான் - முன்னாலே சொல்வதை நீங்கள் கேட்கவில்லையா ?, எ - று

### திருமாலின் பிறப்புக்குக் காரணம்

2. *பிறப்பிலியாய்த் தானிருந்து பேருலகின் மாயோன்*
*உறப்பிறக்கு மென்றுமறை யோத—மறுத்துநீர்*
*அச்சுதனைச் சாதமுடை யானென் றறிவிழந்த*
*பிச்சரிற் பிதற்றுவதென் பேச்சு.*

உரை :—மாயோன் - திருமால், பேருலகில் பிறப்பிலியாய்த் தான் இருந்து - பெரிய உலகத்தில் தனக்காகப் பிறத்தல் இல்லாதவனாயிருந்தும், உறப்பிறக்கும் என்று - காரணம் பற்றித் தோன்றுவானென்று, மறை யோத - வேதங் கூறவும், மறுத்து நீர் - அதனை மறுத்து நீங்கள், அச்சு

தனை - அழிவில்லாத பெருமானை, சாதமுடையான் என்று-பிறப்புடையவ னென்று, அறிவிழந்த பிச்சரில் பிதற்றுவது - அறிவற்ற பைத்தியக்கார ரைப்போலக் குறை கூறுவது, என் பேசசு - எவ்வகையான சொல்லாகும், எ - று.

இதுவுமது

3. ஆய வறத்தை யறவோரை யாக்கவும்வெந்
தீயர்தமைப் போக்கவுமே திண்புவியில்—மாயுகங்கள்
தோறுமுற்ப விப்பனெனத் தொல்கீதையிற் கண்ணன்
கூறுமொழி தேர்கிலிரோ கூர்ந்து.

உரை :—திண்புவியில் - உறுதியான பூமியின்மீது, ஆய் அறத்தை, அறவோரை ஆக்கவும் - சிறந்த தருமத்தையும் தருமவான்களையும் தோற்றுவிக்கவும், வெம் தீயர்தமைப் போக்கவுமே - கொடிய அரக்கர்களை அழிப்பதற்காகவும், மா யுகஙகள் தோறும் உற்பவிப்பன் என - ஒவ்வொரு பெரிய யுகததிலும் அவதரிப்பதாக, தொல் கீதையிற் கண்ணன் கூறுமொழி கூர்ந்து தேர்கிலிரோ - பழமையான பகவத கீதையில் கண்ணபிரான் சொல்லி யிருககினற வாக்கியத்தை ஆராய்ந்து நீா நம்புவில்லையா, எ - று.

இதுவுமது

4. உடையானுக் கன்றி யுடைப் பொருளைக் காக்கப்
படையார் தமக்குண்டோ பாரம்—அடைவாகச்
சீதரனார் காக்கத் திருவவ தாரஞ்செய்வர்
சேதனருக் கேனச்செயல்.

உரை :—உடையானுக்கு அன்றி யுடைப்பொருளைக் காக்க - பொருள்களை யுடையவர்க்கு உரிமையாகிய பொருளைக காப்பதற்குப் பொறுப்புண்டே அல்லாமல், படையார் தமக்குண்டோ பாரம் - அப்பொருளை யுண்டாக்காத பிறர்க்குப் பொறுப்பிலலையே, அடைவாகக் காக்கச சீதரனார் திருவவதாரஞ் செய்வர் - பொருத்தமாக அவற்றைக் காப்பதற்கு இலக்குமி மணாளனாகிய பெருமாள் உலகத்தி லவதரிப்பார், சேதனருக்கு ஏன் அசசெயல் - அறிவுடைய மற்ற உயிர்களுக்கு அப்படிப் பட்ட செய்கைக்கு உரிமை யேது, எ - று.

திருவரங்கத் தேர் விஷயமாகப் பாடியது

5. ஒன்று மறியாத வூமர்கா டென்னரங்கர்
இன்று திருத்தேரி லேறினார்—நின்று
வடம்பிடிக்க வாருங்கள் வைகுந்த நாட்டில்
இடம்பிடிக்க வேண்டுமென் றக் கால்,

உரை:—தென்னரங்கர் - அழகிய திருவரங்கப் பெருமாள், இன்று திருத்தேரில் ஏறினர் - இன்றைக்கு அழகிய தேரின்மீது எழுந்தருளினர், ஒன்றும் அறியாத ஊமர்காள் - அதன் பயன் யாது மறியாத மூடர்களே !, வைகுந்த நாட்டில் இடம் பிடிக்கவேண்டு மென்றக்கால் - வைகுந்த லோகத்தில் நீங்கள் போய்த் தங்குவதற்கு இடத்தை யுரிமையாக்கிக் கொள்ள வேண்டுமானல், நின்று வடம் பிடிக்க வாருங்கள் - ஓடிப்போகாமல் தேர் வடத்தைப் பிடித்திழுக்க வாருங்கள், எ - று.

---

# மாசிலாமணித் தேசிகர்

## பாடியது

தஞ்சை மன்னர் தருமபுர ஆதீனத்தார் தொழில் யாதென்று வினவ அதற்கு உத்தரமாகக் கூறியது

1. ஆய்வார் பதிபசு பாசத்தி னுண்மையை யாய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கை யெல்லாங்கல்வி கேள்வியல்லால்
ஓய்வார் சிவானந்த வாரியுள்ளே யொன்றி ரண்டுமறத்
தோய்வார் கமலையுண் ஞானப்ர காசன் மெய்த் தொண்டர்களே.

உரை :—கமலையுள் ஞானப்பிரகாசன் மெய்த்தொண்டர்களே - திருவாரூரில் வீற்றிருக்கும் ஞானப்பிரகாச குருவின் உண்மை யடியார்களாகிய தருமபுரவாசிகள், பதி பசு பாசத்தின் உண்மையை ஆய்வார் - கடவுள், உயிர், இரண்டிற்கு மிடையிலுள்ள தடை யென்பவற்றின் மெய்யியல்பினை யாராய்வார்கள், ஆய்ந்து அறிந்து பிரபஞ்ச வாழ்க்கை யெல்லாம் காய்வார் - அதனை யறிந்து தெளிவடைந்து உலக வாழ்க்கையை வெறுப்பார்கள், கல்வி கேள்வி அல்லல் ஓய்வார் - நூற்களைக் கற்கின்றதினாலும் கேட்கின்றதினாலும் ஏற்படும் தொந்தரைவைவிட்டு நீங்குவார்கள், சிவானந்த வாரியுள்ளே ஒன்று இரண்டும் அறத்தோய்வார் - சிவபெருமானின் பேரின்ப வெள்ளத்திலே கடவுள் தானென்ற வேறுபாடின்றி யழுந்தி யனுபவிப்பர், எ - று.

தமது ஞானசிரியர்மீது பாடியது

2. கனக்கும் பொதிக்கு மெருதுக்குந் தன்னிச்சை கண்டதுண்டோ
எனக்கு முடற்கு மெனதிச்சை யோவிணங் கார்புரத்தைச்
சினக்குங் கமலைபின் ஞானப்ர காச சிதம்பரவின்
றனக்கிச்சை யெப்படி யப்படியாக வுரைத்தருளே.

உரை:—இணங்கார் புரத்தைச் சினக்கும் - தலைவர்களாகிய திரிபுரத்து அசுரர்களைக் கோபிக்கின்ற, கமலையின் ஞானப்பிரகாச சிதம்பர - திருவாரூரில் வீற்றிருக்கும் ஞானப் பிரகாச குருவே !, ஞான ஆடை தரித்தவரே !, கனக்கும் பொதிக்கும் எருதுக்கும் தன்னிச்சை கண்டதுண்டோ - பொதிமாட்டைக் கவனிக்கும்போது பாரமான பொதிக்காவது மாட்டிற்காவது தன் விருப்பப்படி நடக்க யாராவது பார்த்தார்களா எனக்கும் உடற்கும் எனது இச்சையோ - அதுபோலப் பொதிபோன்ற எனக்கும் உடம்புக்கும் சுவாதீனமுண்டோ, இன்று உனக்கு இசைவை எப்படி அப்படியாக உரைத்தருளே - இப்பொழுது உமக்குத திருவுளமெப்படியோ அவ்விதமாகக் கிருபைபுரிவாயாக, எ - று.

இதுவுமது

3. எல்லா முனது செயலென் றறிந்து மெனதுளத்திற்
பொல்லாத சங்கற்ப மேன்வரு கோபுர மூன்றெரிக்க
வல்லாய் கமலையின் ஞானப்ர காச வரதவிது
சொல்லாய் கரண மயக்க மன்றோவென் றொழிலல்லவே.

உரை:—புரமூன்றெரிக்க வல்லாய் கமலையின் ஞானப்பிரகாச வரத - முப்புரம் போன்ற மும் மலங்களையும் அழிக்க வல்லவனே !, திருவாரூரில் வதிகின்ற ஞானப்பிரகாச குருவே !, எல்லாம் உனது செயல் என்று அறிந்தும்——, எனது உளத்தில் - என்னுடைய மனதில், பொல்லாத சங்கற்பம் ஏன் வருமோ - தன் முனைப்பாகிய தீய உபதேசம் ஏன் தோன்ற வேண்டும், இது சொல்லாய் - இதற்குக் காரணம் யாதென்று கூறுவாயாக, கரண மயக்கம் அன்றோ - அந்தக் கரணங்களின் தொடர்பினால் ஏற்பட்டதாகுமல்லவா, என் றொழில் அல்லவே - உயிராகிய என் தொழில் அதுவாகாதே, எ - று.

---

# நெற்குன்றவாண முதலியார்

## பாடியது

தம்மிடம் வந்த காளிப்புலவருக்குப் பரிசளித்துக் கூறியது

1. கற்றுங் கவிவல்லை யந்தணர்கோ னம்பி காளிக்கியாம்
விற்கும பரிசன மாகிவிட் டோம்வட வேங்கடமும்
பொற்குன் றமும்புகழ்க் கங்கா நதியும் பொதியமுமபோல்
நெற்குன் றமுநம் மரபுமெந் நாளு நிலைநிற்கவே.

உரை:—கற்கும் கவிவல்ல அந்தணர் கோன் - படிக்கத்தக்க பாடலியற்றுந் திறமையுடைய அந்தணர் தலைவராகிய, காளிக்கு - காளிப்புலவருக்கு, யாம் விற்கும் பரிசனமாகி விட்டோம் நாம் விற்கக்கூடிய அடிமையாகி விட்டோம், (அதனால்) வடவேங்கடமும் - தமிழ்நாட்டு வடவெல்லையாகிய திருவேங்கட மலையும், பொற் குன்றமும் - மேருமலையும், புகழ்க் கங்கா நதியும் - கீர்த்திபெற்ற கங்கையாறும், பொதியமும் - பொதியமலையும்போல, நெற்குன்றமும் நம் மரபும் எந்நாளும் நிலை நிற்கவே - நெற்குன்றமும் நம்மினமும் எக்காலத்திலும் நிலை நிற்பனவாக, எ - று.

---

# வெண்பாப்புலிக் கவிராயர்

## பாடியது

---

### விநாயகர்மேற் பாடிய துதி

1. பாசத் தளையறுத்துப் பாவக் கடல்கலக்கி
நேசத் தளைப்பட்டு நிற்ருமே—வாசநறுங்
காரார் வரைபயின்ற கன்னிப் பிடியளித்த
ஓரானை வந்தென் னுளத்து.

உரை:—வாசநறும் காரார் வரை பயின்ற - நறுமணங் கமழும் மேகங்கள் பொருந்திய இமயமலை யரசன் பெற்ற, கன்னிப் பிடியளித்த ஓரானை - பெண்ணானை வடிவாய் இருந்து பெற்ற ஒப்பற்ற யானைமுகக் கடவுள், என் உள்ளத்து வந்து - என்னெஞ்சத்தி லெழுந்தருளி, பாசத் தளை யறுத்து - மலமாகிய தடையினை அல்லது விலங்கினைத் தறித்து ஒழித்து, பாவக்கடல் கலக்கி - தீவினையாகிய சமுத்திரத்தைக் கலக்கி யொழித்து, நேசத் தளைபட்டு நிற்குமே - அன்பாகிய கட்டினிலகப்பட்டு நிலைபெறுவர், எ - று.

### அம்பலவாணனைப் பாடியது

2. காணத் தொழுத்துதிக் கக்கண் கரங்களுக்கள்
சேணிந் திரன்வாணன் சேடன்போல்—வேணும்
பனகவணை யிற்றுயிலும் பச்சைமா றேடும
னகசபை யான்சிவந்த கால்.

உரை:—பனக அணையில் துயிலும் - பாம்பணையிற் பள்ளிகொள்ளும், பச்சைமால் தேடும் - பச்சைநிறமுடைய பெருமாள் திருவடி தேடப்

பெற்ற, கனக சபையான் சிவந்த கால் - பொன்னம்பலவாணனது செவ்விய பாத தரிசனம், காணக் கண் - காண்பதற்குக் கண்களும், தொழ கரங்கள் - தொழுதற்குக் கரங்களும், துதிக்க நாக்கள் - துதிப்பதற்கு நாக்குகளும், சேண் இந்திரன் வாணன் சேடன்போல் வேணும் - முறையே தேவேந்திரனைப்போல (ஆயிரங் கண்களும்) வாணனைப்போல (இரண்டாயிரம் கைகளும்) ஆதிசேஷனைப்போல (ஆயிரம் நாக்களும்) வேண்டும், எ - று.

---

# வெறிமங்கைபாகக் கவிராயர்

## பாடியது

மருங்காபுரி சமீந்தார்மீது பாடியது

1. துவளவ ளைக்குமிக் கன்பொர மாதுளஞ் சோர்ந்துவரும
துவளவ ளைக்கடைக் கண்பார்த் தருள்சிறி துந்தெவிட்டா
துவளவ ளைக்குமுன் னையர்தம் மில்லந்தொ றுந்திகழ்மு
துவளவ ளைக்கரத் தாய்தென் மருங்கைத் துரைசிங்கமே.

உரை:—சிறிதும் தெவிட்டாது - கொஞ்சமும் தின்று நிறைவுபெறாது, வளவு அளைக்கு - வளமான வெண்ணெயின் பொருட்டு, முன் ஆயர் தொழும் இல்லம் தொறும திகழ - முன்னாளில் அதாவது கிருஷ்ணவதாரத்தில் இடையர்கள் வீடுதோறும் சென்று விளங்கிய, முதுவள வளைத் திரட்டாய் - முதிர்ந்து வளம்பெற்ற பாஞ்ச சன்யத்தைக் கையிலேந்திய வனே, தென் மருங்கைத் துரைச சிங்கமே - அழகிய மருங்காபுரியிலுறையும் சிங்கம் போன்ற எஜமானனே!, துவள வளைக்கும் இக்கண் பொர - நன்றாக வளர்ந்த கரும்பு வில்லையுடைய மன்மதன் சண்டை செய்வதால், மாது உளம் சோர்ந்து வருந்துவள் - பெண்ணானவள் மனந்தளர்ந்து துன்பப்படுகிறாள், அவளைக் கடைக்கண் பார்த்து அருள் - ......, எ - று.

இரகுநாத வுடையான்மேற் பாடியது

2. நாட்டிலே புகழ்படைத்த வாவுடையான்
பெற்றரகு நாதரேகேண்மோ
மாட்டிலே யேறுகின்ற சிவனுரைப்
போய்க்குதிரை மட்டங்கேட்டேன்

வீட்டிலே மூத்தமகன் பெருச்சாளி
யேறுகின்றான் வேலன்புன்செய்க்
காட்டுமயி லேறுகின்றான் வயிரவனைப்
பாரெனக்கண் காட்டினாரே.

உரை :—நாட்டிலே புகழ் படைத்த ஆவுடையான் பெற்ற ரகுநாதா கேண்மோ - தேசத்திற் கீர்த்தி பெற்ற ஆவுடையானென்னும் வள்ளல் பெற்ற இரகுநாத துரையே கேட்பீராக, மாட்டிலே ஏறுகின்ற சிவனாரைப் போய்க் குதிரை மட்டம் கேட்டேன் - காளை வாகனமுடைய சிவபெருமானிடஞ் சென்று மட்டக் குதிரையொன்று வேண்டுமென்றேன், வீட்டிலே மூத்தமகன் பெருசசாளி ஏறுகின்றான் - மூததமகனாகிய பிள்ளையார் வீட்டிலுள்ள பெருச்சாளியை வாகனமாகக் கொண்டார், வேலன் புன் செய்க் காட்டிலே மயில் ஏறுகின்றான் - முருகக் கடவுள் வயற் காட்டிலே உலாவுகின்ற மயிலினை வாகனமாகக்கொண்டார, வயிரவனைப் பார் எனக் காட்டினார் - (மட்டக் குதிரைக்கு) வயிரவமூர்த்தியைப் போய்ப் பார்க்கும்படியாகக் கட்டளை யிட்டார், (அவருடைய நாய் வாகனம் மட்டக் குதிரையைப் போன்ற தென்க.) எ - று.

## விராலிமலை முருகக் கடவுள்மீது பாடியது

3. காவென்றுஞ் சிந்தா மணியென்று நீயென்றன் கையிலள்ளித்
தாவென் றுரைக்கத் தரித்திரம பின்சென்று தள்ளியெனைப்
போவென் றுரைக்கவு நாணமங்கே யென்ன போவதிங்கு
வாவென் றிழுக்கவும வந்தேன் விராலிமலைக் கந்தனே.

உரை :—விராலிமலைக் கந்தனே - விராலிமலையில் வீற்றிருக்கும் முருகப்பெருமானே!, காவென்றும் - செல்வர்களைக் கற்பகச் சோலையென்றும், சிந்தாமணி யென்றும் - சிந்தாமணி போன்றவரே என்றும் புகழ்ந்து, நீ என்றன் கையில் அள்ளித் தா என்று உரைக்க - நீ எனது கையில் பொருளை யள்ளிக் கொடுவென்று வேண்டும்படி, தரித்திரம் பின் சென்று தள்ளி எனைப் போவென்றுரைக்கவும் - என்னுடைய வறுமையானது என்னைப் பின் நின்று தள்ளிச் செல்வரிடம் போகும்படி எனைத் தூண்டவும், நாணம் - என்னுடைய மானமானது, அங்கே என்ன போவது இஙகே வாவென்று இழுக்கவும் - செல்வரிடததில் எதற்குப் போவது இஙகே சுவாமியினிடததில் வாவென்று என்னை இழுப்பதனாலே, வந்தேன் - உன்னிடம் வந்து சேர்ந்தேன், எ - று.

நற்றுயிரங்கல்

4. நன்றே நடாத்து மெம்மங்கை பங்காளர்தந் நாட்டினிலே
அன்றே யிராம னணைகட்டும் போதங் கவன்படைகள்
குன்றேன் சுமந்தவெம் மான்சென்ற பாலைக் குறும்பரவில்
ஒன்றே யிடிலக் கடலூற்றும் வற்ற வுறிஞ்சிடுமே.

உரை :—நன்றே நடாத்தும் எம் மங்கை பங்காளர் தம் நாட்டினிலே - நன்மையையே செய்விக்கின்ற மாதொரு பாகனுடைய தேசத்திலே, அன்றே இராமன் அணைகட்டும்போது - அந்தக்காலத்தில் இராமன் கடலில் அணை கட்டும்போது, அங்கு அவன் படைகள் - அங்கே அவனுடைய குரங்குச சேனைகள், குன்று ஏன் சுமந்த - மலைகளைச சுமக்கவேண்டிய அவசியமென்ன, எம்மான் சென்ற பாலைக் குறும் பரலில்-என் மகள் தலைவனுடன் சென்ற பாலை வனத்திலுள்ள சிறு கற்களில், ஒன்றே இடில் - ஒன்றை யெடுத்துப் போட்டால், அக் கடல் ஊற்றும் வற்ற உறிஞ்சிடுமே - அக் கடலில் ஊறுகின்ற நீருங்கூட வற்றிப்போகும்படி குடித்துவிடும், எ - று.

---

# பால பாரதியார்

## பாடியது

தில்லைவிடங்கன் மாரிமுத்துப் பிள்ளையைப் புகழ்ந்து பாடியது

1. தில்லைவிடங்கன்றனில்வாழுந் தெய்வங்கள்பெருமாடிருப்புதல்வன்
தெளிந்தமனத்தன்முத்தமிழோர் தினமும்புகழுங்குறுமுனிவன்
முல்லைநகையார்மதன்மாரி முத்துப்புலமைத்திறம்போல
முயன்றசுகுணமதுபோல முழுதுந்தெளிந்தமனம்போல
எல்லையிகந்தபாரதலமெழில் வான்றனிலுமேகாண
விதயத்தெண்ணிவிழிதுயிலா திருந்துமதுவேநினைவாகி
ஒல்லையரன்மாலயன்பிச்சைக் குழன்றும்பன்றிவடிவெடுத்து
மோங்கிப்பறக்குமோதிமமா யுயர்ந்துதிரிந்துங்காணாரே.

உரை:—தில்லை விடங்கன் தனில் வாழும் தெய்வங்கப் பெருமாள் திருப்புதல்வன் - தில்லைவிடங்க னென்னும் ஊரில் வசிக்கின்ற தெய்வங்கப் பெருமாள் என்னும் பெரியாரின் அழகிய குமாரரும், தெளிந்த மனத்தன் - தெளிவான வுள்ளமுடையவரும், முத்தமிழோர் தினமும் புகழும் குறுமுனிவன் - முத்தமிழில் வல்ல புலவர்கள் நாள்தோறும் துதிக்கின்ற

அகத்திய முனிவர் போல்பவனும், முல்லை நகையார் மதன் - முல்லை யரும்பைப் போன்ற பல்லையுடைய மாதர்களுக்கு மன்மதன் போன்றவருமாகிய மாரிமுத்துப் புலமைத் திறம்போல - மாரிமுத்துப் பிள்ளையின் கல்வித் தேர்ச்சியின் வல்லமைபோலவும், முயன்ற சுகுணமதுபோல - பொருந்திய நல்ல தன்மைபோலவும், முழுதும் தெளிந்த மனம் போல - முற்றிலும் களங்கமற்ற வுள்ளம்போலவும், எல்லை இகந்த பாரதலம் எழில்வான் தனிலுமே காண - எல்லையற்ற பூமியிலும் அழகிய வானுலகத்திலும் உண்டாவென்று பார்ப்பதற்கு, இதயத்து எண்ணி - மனதிலே ஆலோசித்து, விழி துயிலாது இருந்தும் அதுவே நினைவாகி - கண் மூடாதிருந்து அதுவே கருத்தா யிருந்து, ஒல்லை - விரைவாக, அரன் மால் அயன் - உருத்திரன் விஷ்ணு பிரமா ஆகிய இவர்கள், பிச்சைக் குழன்றும் - முறையே பிச்சையெடுத்துத் திின்றும், பன்றி வடிவெடுத்தும் - வராகவதார மெடுத்தும், ஓங்கிப் பறக்கும் ஓதிமமாய் உயர்ந்து திரிந்தும் - ஓங்கிப் பறக்கும் அன்ன வடிவாய் மேலே திரிந்தும், காணூரே - காண முடியவில்லை, எ - று.

---

# திருவாரூர்ச் சொக்கலிங்கக் கவிராயர்

## பாடியது

---

பன்னிரண்டு மாதப் பெயர்களு மமையப் பாடியது

1. மாதஞ்சித்திரைகடலைவை தனணீயன்பு
   வைகாசினஞ்சிறியாளை யானிபெருக்கும்
போதபன்போராடினனை யாவணியாய்ப்
   புரட்டாதின்கலமவெறுத்தா ளைப்பசியில்லென்றே
சாதனைசெய்தேசினந்தாள் கார்த்திகைக்குங்கொடைவேள்
   தாசகிமார்கழியார் கோதையுமாசிலாமல்
காதலுடன்சேர்வணல்லதிட்ட முன்பங்குனிப்பார்
   கந்தனெனுங்கலியாண சுந்தரமாமுகிலே.

உரை:—கந்தனெனும் கலியாண சுந்தர மாமுகிலே - முருகனென்று சொல்லத்தக்க பெரிய மேகம்போன்ற கலியாண சுந்தர வள்ளலே!, மாது அஞ்சி திரைக் கடலை வைதனள் - காதலியானவள் பயப்பட்டு மன்மதன் (முரசாகிய) கடலைப் பழித்தாள், சினம் சிறியாள் - மிகவும் இளமை யானவள், ஆனி பெருக்கும் - துன்பத்தை மிகச் செய்கின்ற, போது அம்பன் போர் ஆடினன் - மலர்க்கணையுடைய மன்மதன் சண்டையிட்டான், ஐயா - ஐயனே !, பணியா புரட்டா - பாம்புபோலப் புரண்டு, தின்கலம் வெறுத்

தான் - உண்கின்ற பாத்திரத்தை வெறுத்துத் தள்ளினன், ஐப்பசி இல் லென்றே சாதனை செய்தே சினந்தான் - நல்ல பசியுண்டாக வில்லையென்று பிடிவாதமாகக் கோபித்துக் கொண்டான், கார் திகைக்குங் கொடை வேந்தா - மேகந் திகிலடையும்படியான ஈகையுடைய அரசனே !, நீ அன்பு வைகா - நீ அவனிடம் இசைவை வைத்து அவனைக் காப்பாற்றுவாயாக, சகி மார் கழியார் - தோழிமார் உன்னைக் கழித்து விடமாட்டார்கள், கோதையும் மாசிலாமல் காதலுடன் சேருவாய் - பெண்ணும் குற்றமில்லாமல் விருப்பத் தோடு கூடுவாள், நல்ல இட்டம் உன் பங்கு - உன் பாகத்திற்கு நல்ல பாக் கியமே உண்டு, உனிப்பார் - இதை யோசித்துப் பார்ப்பாயாக, எ - று.

---

## ஊனையூர்ப் பாரதியார்

### பாடியது

ஜெயங்கொண்டார் சதகத்தைப் பற்றிய வினு

1. ஓங்குபத்மா சூரனைக்கண் டோடியொளித் தார்விசையன்
வாங்குதனு வாற்பூசை வாங்கினர்—ஈங்கிருக்கு
நன்னியமச் சோளீச ஞர்செயங்கொண் டாரென்ருல்
என்னசெயங் கொண்டா ரிவர்.

உரை:—நல் நியமச் சோளீசஞர் - நல்ல முறைகளை வகுத்த சோளீசப் பெருமான், ஓங்கு பத்மாசூரனைக் கண்டோடி ஒளித்தார் - வரம்பெற்றுத் திகழ்ந்த பத்மாசூரனைப் பார்த்து அவன் தன்னைத் தீண்டாதவண்ணம் ஓடியொளித்தார், விசையன் வாங்கு தனுவால் பூசை வாங்கினர் - அர்ச சுனனது வளைந்த வில்லால் அடிபட்டார், ஈங்கு இருக்கும் செயங் கொண் டார் என்ருல் - அவர் இத் தலத்தி லெழுந்தருளி யிருக்கும் செயங் கொண்டாரென்று சொன்னல், என்ன செயங் கொண்டார் இவர் - என்ன வெற்றி பெற்ருரிவர், எ - று.

---

## முத்தப்ப செட்டியார்

### பாடியது

ஊனையூர்ப் பாரதியார் கவிக்கு விடையாகக் கூறியது

1. என்னசெயங் கொண்டா ரிவரென்ருன் முப்புரத்தைச்
சொன்னமய மாய்ச்சமைத்த சோளீசர்—பின்னுஞ்
சிரித்துச் செயங்கொண்டார் சித்தசனைக் கண்ணல்
எரித்துச் செயங்கொண்டா ரே.

உரை :—சோளீசர் என்ன செயங் கொண்டார் என்ருர் - சோளீசர் என்ன வெற்றி பெற்ருரெனில், முப்புரத்தைச் சொன்ன மயமாய்ச் சமைத்தார் - திரிபுரத்தைப் பொன் மயமாக முதலில் ஆக்கி யளித்தவரவரே, பின்னும் சிரித்து செயங்கொண்டார் - பின்னர்ப் புன்சிரிப்பால் அதனை எரித்து வெற்றி பெற்றவரும் அவரே, சித்தசனைக் கண்ணுல் எரித்துச் செயங்கொண்டாரே - மன்மதனை நெற்றிக்கண்ணு லெரித்து வெற்றி பெற்ருர், எ - று

---

# அரங்கநாதக் கவிராயர்

## பாடியது

---

### வியாசபுரி விநாயக முதலியார்பேரில் பாடியன

1. சீர்மலிவி யாசபுரித் திண்புயவி நாயகனே
ஏர்மலியிம் மங்கையுன திச்சையினுற்—பார்தனிலே
வேனிலுக்கு மாமதிக்கும் வேள்தொடுத்த நீள்கணைக்கு
மாநிசிக்கு மேமயங்கு மால்.

உரை :—சீர்மலி வியாசபுரித் திண்புய விநாயகனே - புகழ் நிறைந்த வியாசபுரியில் வசிக்கும் பலமான தோள்களையுடைய விநாயக வள்ளலே !, ஏர்மலி இம்மங்கை யுனது இசசையினுல் - அழகு மிகுந்த இந்தப் பெண்ணுனவள் உன்மேல் வைத்த காதலினுல், பார்தனிலே - பூமியிலே, வேனிலுக்கும் - வசந்த காலத்திற்கும், மாமதிக்கும் - பெரிய சந்திரனுக்கும், வேள்தொடுத்த நீள் கணைக்கும் - மன்மதன் விட்ட நீண்ட அம்புக்கும், மாநிசிக்கும் - நீண்ட இராத்திரிக்கும், மயங்கும் - அஞ்சுகின்ருள், ஆல் - அசை, எ - று.

2. மானேவி யாசநகர் வாழ்துரைவி நாயகன்பாற்
தேனேதா னென்மயலைச் செப்புமோ—கானுருங்
கோகனகத் தைத்தேடிக் கோலவினத் தைக்கூடிப்
போகுமனத் தைப்போகச் சொல்.

உரை :—மானே - தோழியே !, வியாச நகர்வாழ் துரை விநாயகன் பால் - வியாசநகரில் வாழ்கின்ற எஜமானராகிய விநாயக வள்ளலிடம், தேனே தான் என் மயலை செப்புமோ - வண்டுதான் என்னுடைய மோகத்தைத் தெரிவிக்குமா, கான் ஆரும் கோகனகத்தைத் தேடி - அது வாசனை பொருந்திய தாமரையைத் தேடி, கோலவினத்தைக் கூடி - அழகிய தனது கூட்டத்தைச் சேர்ந்துகொண்டு, போகும் - தேடிக்கொண்டு

செல்லும், (அது தாமதமாகு மாதலின்) அனத்தைப் போகச் சொல் - அன்னத்தைத் தூது போகும்படி ஏவுவாயாக, எ - று.

3. வேத வியாசர் வியன்புரி விநாயகனே
மாதரசி தன்மயலை மாற்றுவாய்—காதல்கொளும்
மொக்குண்முலை யிக்குமொழி முத்தநகை யத்தமலர்
ஒக்குமுகின் மைத்தகுழ லோர்.

உரை :—வேதவியாசர் வியன்புரி விநாயகனே - வேதவியாசர் போரா லமைந்த பெரிய ஊரிலே வதியும் விநாயக வள்ளலே !, காதல் கொளும் மாதரசி தன் மயலை மாற்றுவாய் - உன்பா லிசைசயுடைய பெண்களுக்கு அரசியா யிருக்கும் அவளுடைய மோகத்தை நீ தவிர்ப்பாயாக !, முலை மொக்குள் - அவளுடைய முலைக்காம்பு பூவரும்பு போன்றது, மொழி இக்கு - சொல்லானது கரும்பு போன்றது, முத்தம் நகை - பல்லானது முத்தைப் போன்றது, அத்தம் மலர் - கையானது தாமரைப் பூவைப் போன்றது, மைத்த குழல் முகின் ஒக்கும் - அவளுடைய கரிய கூந்த லானது மேகத்தைப் போன்றிருக்கும், ஓர் - என்பதை அறிக, எ - று.

4. மேதினிசூழ் கங்கைகுல வில்வே ளருச்சுனன்செய்
மாதவவி நாயகமா மன்னவனே—காதன்மிகு
கண்டுமொழி வண்டுவிழி கண்டிளைஞர் தொண்டுபுரி
செண்டுமுலை யண்டுமிவள் சீர்.

உரை :—மேதினி சூழ் கஙகைகுல - உலகத்தாற் போற்றும் கங்கை குலமாகிய வேளாள குலதநிற் பிறந்த, வில் வேள் அருச்சுனன் சேய் - மன்மதனை யொத்த அருசசுண முதலியாரின் புதல்வராகிய, மாதவ விநா யக மா மன்னவனே - பெருந்தவமுடைய விநாயக வேந்தனே!, கண்டு மொழி - கற்கண்டுபோன்ற சொல்லையும், வண்டுவிழி கண்டு - வண்டு போன்ற கண்ணையும் பார்த்து, இளைஞர் தொண்டுபுரி - வாலிபர்கள் பணிவிடை செய்யக்கூடிய, செண்டு முலை - செண்டுபோன்ற தனங்களை யுடைய, இவள் சீர அண்டும - இவள் சிறப்பு உன்னைச் சேர்ந்ததாகும், (ஆதலால்) காதல் மிகு - இவளிடத்தில் ஆசை மிகுதியாக வைப்பாயாக, எ - று.

5. மன்னுவி யாசர்புரி மாலேவி நாயகனே
சொன்னுவ லர்க்கீயுஞ் சுந்தரனே—மின்னுட்குச்
சுட்டிநெற்றிக் கிட்டுவட்டத் துட்டெனப்பொட் டிட்டடுத்
பட்டிடைக்குக் கட்டியிட்டுப் பார். [துப்

உரை :—மன்னு வியாசர்புரி மாலே விநாயகனே - அரசனே ! வியாச புரியில் வசிக்கும் விநாயகப் பெரியோனே!, சொல் நாவலர்க்கு ஈயும் சுந்த

ரனே - புகழுடைய புலவர்களுக்குப் பரிசளிக்கும் அழகனே!, மின்னாட்கு - இப் பெண்ணுக்கு, சுட்டி நெற்றிக்கு இட்டு - சுட்டியாகிய ஆபரணத்தை நெற்றியி லணிவித்து, வட்டத்தட்டு எனப் பொட்டு இட்டு - வட்ட மான தட்டுப்போன்ற திலகமணிவித்து, பட்டு இடைக்குக் கட்டி இட்டு - இடுப்பில் பட்டாடையைக் கட்டி, அடுத்துப் பார் - நெருங்கிப் பார்ப்பாயாக, எ - று.

6. மையல்கொண் டாளுன்மீது வந்தணைவா யிப்போதே
செய்யவள்சேர் திண்புயவி நாயகனே—தொய்யில்
முலைபசந்து குழலவிழ்ந்து மொழிமறந்து விடவயர்ந்து
மலைவுகொண்டு நிலைகலங்கி மான்.

உரை :—செய்யவள் சேர் திண்புய விநாயகனே - இலக்குமி தங்கிய வலிய புயங்களையுடைய விநாயக வள்ளலே!, தொய்யில் முலை பசந்து - சித்திர மெழுதப்பெற்ற தனங்களின்மீது தேமல் படரப்பெற்று, குழல் அவிழ்ந்து - கூந்தல் கலையப்பெற்று, மொழி மறந்து - சொன்னது இன்ன தென்று நினைவில் வையாது, விட அயர்ந்து - ஆசை விடத்தால் தளர்ச்சி யடைந்து, மலைவுகொண்டு - உன்னைப் பெறலாமோ என்று சந்தேகங் கொண்டு, நிலை கலங்கி - மனந் தடுமாறி, மான் - இப்பெண்ணானவள், உன் மீது மையல் கொண்டாள் - ......, இப்போதே வந்து அணையாய், எ - று.

7. பூங்கோதை மாமயிலே போசன்வி நாயகன்பால்
தாங்காம னத்துயரஞ் சாற்றுவரார்—நீங்காத
மோகமிஞ்சி யேதயங்க மோதுதென்ற லோதுமயங்கி
யாகவந்து வீசுகின்ற தால்.

உரை :—பூங்கோதை மா மயிலே - அழகிய மாலை யணிந்த மயில் போன்ற சாயலையுடைய தோழியே!, நீங்காத மோக மிஞ்சியே - தவிர்க்க லாகாத ஆசை யதிகப்பட்டு, தயங்க - வருந்தும்படியாக, மோது தென்றல் ஓதும் அங்கியாக வந்து வீசுகின்றது - அடிக்கின்ற தென்றற் காற்றானது சிறப்பாகப் பேசப்படுகின்ற வடவைத் தீயைப்போல வந்து வீசுகின்றது, போசன் விநாயகன்பால் - போசராசனைப் போன்ற விநாயக வள்ள லிடத்தே, தாங்கா மனத்துயரம் சாற்றுவார் யார் - பொறுக்கமுடியாத என்னுடைய நெஞ்சுத் துயரத்தைச் சொல்லுபவர்கள் யார், எ - று.

8. எத்தனைநாள் காணும லேங்கித்த னித்திருப்பாள்
சித்தசவி நாயகவேள் சீமானே—தத்தைமொழி
மாதுமஞ்சு மீதிருந்து வாடவந்த மாமதன்செய்
வாதுகொஞ்ச மாவிரைந்து வா.

உரை:—சித்தச விநாயகவேள் சீமானே - மன்மதன் போன்ற விநாயக வள்ளலாகிய பெருஞ் செல்வனே!, தத்தை மொழி மாது - கிளிபோன்ற சொல்லையுடைய பெண்ணானவள், மஞ்சமீது இருந்து வாட - கட்டிலின் மேலிருந்து தளரும்படியாக, அந்த மாமதன் செய் வாது கொஞ்சமா - அந்தப் பெரிய காமன் செய்கின்ற சண்டை சிறிய அளவுடையதா, எத்தனை நாள் காணுமல் ஏங்கித் தனித்திருப்பாள், விரைந்து வர - ......, எ - று.

9. வாராய்வி யாசர்புரி மன்னுவி நாயகனே
தாராய்செவ் வாயிதழைத் தான்சுவைக்க—போராடும்
வஞ்சமார னஞ்சியோட மஞ்சமீ திருந்துகூட
நெஞ்சமார வந்துசேர நீ.

உரை:—வாராய் வியாசர்புரி மன்னு விநாயகனே - வியாசர்புரிக்கு அதிபதியாகிய விநாயக வள்ளலே வருவீராக, செவ்வாய் இதழைத்தான் சுவைக்க தாராய் - அதரபானம் பண்ணுதற்கு உன்னுடைய உதட்டைத் தருவாயாக, போராடும வஞ்ச மாரன் - சண்டையிடுகின்ற கபடனாகிய மன்மதன், அஞ்சியோட - பயந்து ஓடும்படியாக, மஞ்சமீது இருந்து கூட - கட்டிலின்மேலிருந்து அணைவதற்கு, நீ நெஞ்சம் ஆர வந்து சேர - நீ மனத் திருப்தியாக வந்து சேர்வாயாக, எ - று.

10. ஆனுவி யாசர்புரிக் காதிபவி நாயகனை
மானே யழைத்துவர மாட்டாயோ—கானுருஞ்
சோலைகண்டு தேனையுண்டு தூதுகொண்டு போனவண்டு
மாலைகண்ட தோமருண்ட தோ.

உரை :—கானுரும் சோலைகண்டு - மணங்கமழும் பொழிலைப் பார்த்து, தூது கொண்டு போன வண்டு - நமக்காகத் தூது சொல்லப் போன வண்டானது, தேனையுண்டு -......, மாலைகண்டதோ - மாலையில் அவரைப் பார்த்ததோ, மருண்டதோ - மயக்கமுற்றதோ தெரியவில்லை, ஆனுவியாசர் புரிக்கு ஆதிப - எப்போதும் வியாசர்புரிக்குத் தலைவனு யிருப்பவனுகிய, விநாயகனே - விநாயக வள்ளலை, மானே அழைத்துவர மாட்டாயோ - தோழியே! நீ இங்கே கூட்டிக்கொண்டு வரமாட்டாயா ?, எ - று.

11. அன்னமே முன்னு ளணைந்து கலவிதந்த
மன்னன்வி நாயகன்மால் வாரானே—லென்னசுகம்
நானொருத்தி யேதனித்து நாதனற்று மேதினிக்குள்
ஏனிருக்கி றேனிதைச்சொ லாய்.

உரை:—அன்னமே - தூதுபோன தோழியே!, முன் நாள் அணைந்து கலவிதந்த மன்னன் விநாயகமால் வாரானேல் - முற்காலத்தில் வந்து

புணர்ந்துவிட்டுப் போன அரசனுகிய விநாயகப் பெரியோன் வராமற் போனல், என்ன சுகம் - என்ன இன்பம் ஏற்படும், (ஒருவிதமான இன்பமுமில்லை) மேதினிக்குள் - உலகத்தில் நாதன் அற்று தனித்து நாளொருத்தி ஏன் இருக்கிறேன் - கைம்பெண்போல நானிருப்பதால் என்ன பயன், சொலாய் - இதற்குப் பதிலுரைப்பாயாக, எ - று.

12. மந்தமாரு தத்திலேறி மங்கைமார் நெருங்கமாரன்
வந்துமாத னத்தில்வாளி வைக்குமுனம்—அந்தமுள
சேடிபோடி தேடிவாடி சீலமார்வி நாயகன்கை
கூடியாடி யேகுலாவ வே.

உரை:—அந்தமுள சேடி - அழகு பொருந்திய தோழியே!, மந்தமாருதத்தில் ஏறி, மெல்லிய தென்றற் காற்றின் இரதத்திலேறி, மங்கைமார் நெருங்க மாரன் - பெண்களாகிய சேனைகள் புடைசூழ வந்து - சேர்ந்து, மா தனத்தில் - பருத்த முலையில், வாளி வைக்குமுனம் - அம்பு செலுத்து முன்னமே, சீலமார் விநாயகன் - சிறந்த வொழுக்கமுடைய விநாயக வள்ளல், கைகூடி யாடியே குலவவே - ஆலிங்கனஞ் செய்து விளையாடிக் கலந்திருக்கும் வண்ணம், தேடி போடி வாடி - அவனைத் தேடிப்போய் அழைத்துக்கொண்டு வா, எ - று.

விநாயக முதலியார் கொடையை வியந்தது

13. பாளைக்கமுகுவயல்சூழ் வியாசர்பதிக்கிறைவன்
வாளைக்கயலைப்பொருவிழி மாதர்மயங்குமதன்
நாளைப்பினையென்றுசொல்லான் றமிழ்வலர்நற்பசியின்
வேளைக்குதவுந்துரையாம் விநாயகவிற்பனனே.

உரை:—பாளைக் கமுகு வயல்சூழ் வியாசர் பதிக்கு இறைவன் - நல்ல மடலுடைய கமுக மரங்கள் சூழ்ந்த வயல்கள் சுற்றியுள்ள வியாசர்புரிக்குத் தலைவன், வாளைக் கயலைப் பொருவிழி மாதர் மயங்கும் மதன் - வாளினையும் கயல்மீனையும் போன்ற கண்களையுடைய பெண்கள் மோகங் கொள்வதற்கு ஏதுவாகிய மன்மதன், தமிழ் வலர் நாளைப் பினையென்று சொல்லான் - தமிழ்ப் புலவர்களுக்கு நாளைக்கு வாருங்கள் அல்லது பிற்பாடு வாருங்களென்று சொல்லாமல் நல்ல பசி நேரத்தில் உணவு முதலியன கொடுத்து உதவக்கூடியவன் விநாயக வள்ளலாகிய கல்விமான் எனவறிக, எ - று.

14. முன்னுளரசர்கண்மேற்கவி வாணர்கண்முத்தமிழைச்
சொன்னுலவர்தரும்வேளையைப் பார்ப்பரித்தொல்லுலகில்
இந்நாள்வியாசர்பதியான் விநாயகவேந்தனிதி
பன்னுளும்பாவலரைத்தேடி யீகுவன்பார்மின்களே.

உரை :—தொல்லுலகில் - பழமையான இந்த வுலகத்தில் முன்னுள் அரசர்கள்மேல் கவிவாணர்கள் முத்தமிழைச் சொன்னுல் - முற்காலத்தில் மன்னர்களைப் புகழ்ந்து முத்தமிழ்ப் புலவர்கள் பாடல் கூறினுல், அவர் தரும் வேளையைப் பார்ப்பர் - அவர் பரிசளிக்கும் சமயத்தை எதிர் பாரத் திருப்பார்கள், இந்நாள் வியாசர் பதியான் விநாயக வேந்தன் - இந்நாளில் வியாசர் பதிக்குத் தலைவனுகிய விநாயக வள்ளல், நிதியன்னுளும் யாவரைத் தேடி யீகுவன் - செல்வத்தை எல்லா நாட்களிலும் புலவர்களைத் தேடி அவர்கள் சமயம் பார்த்துக் கொடுப்பான், பார்மின்களே - அவனுடைய பெருமையை நோக்குங்கள், எ - று

15. முகில்போன் முகங்கறுத் தீகின்ற மூடரைப் பாடியெந்த
னகமே சலித்தது நாவும்புண் ணுச்சுகண் ணுபிரன்கற்
பகமே நிகர்த்த கொடையா யெனைமுகம பார்த்திரங்கித
தகையா யருள்செய் விநாயக பூபதயா நிதியே.

உரை :—கண்ணுயிரன் கற்பகமே நிகர்த்த கொடையாய் - இந்திரனது கற்பகதருபோன்ற ஈகையாளனே !, விநாயக பூப தயாநிதியே - விநாயக மன்னனென்னும் கருணைச் செல்வமே, முகில்போல் முகம் கறுத்து ஈகின்ற மூடரைப் பாடி - முகமானது மேகம்போற் கருமையடைந்து கொடுக்கின்ற அறிவிலாரைப் புகழ்ந்து பாடி, எந்தன் அகமே சலித்தது - என் மனஞ் சலிப்படைந்தது, நாவும் புண்ணுச்சு - என்னுடைய நாக்கும் நோயுற்றது, எனை முகம்பார்த்து இரங்கி தகையாய் அருள் செய் - என்னுடைய முகத்தை நோக்கி என்பேரில் கிருபாகடாட்சம் வைத்துப் பரிசளிப்பாயாக, எ - று.

16. பாராளு மன்னவர் மன்னு நபாபுசபா செனவே
சிரானது பெறுந்தீரா செழித்திடு மர்ச்சுனரு
மாரா சவுந்தரமாரா மயிலைநகர்க் குமரா
வீராவெவர்க்கு முதலாம் விநாயக விற்பனனே.

உரை :—பாராளும் மன்னர்கள் மன்னு - உலகத்தை யாளுகின்ற மன்னர்களுக்கு வேந்தனே !, நபாபு சபாசெனவே சிரானது பெறும் சிரா - மகபதிய மன்னனுகிய நபாபு நன்று என்றுப் புகழப்பட்ட தைரியசாலியே!, செழித்திடும் அருசசுன குமரா - வளம் பொருந்திய அருச்சுன முதலியாரின் புதல்வரே!, சௌந்திர மாரா - அழகிய மன்மதனைப் போன்றவனே!, மயிலை நகர் குமாரா - திரு மயிலாப்பூரில் வீற்றிருக்கும் குமரன்போன்றவரே !, எவர்க்கும் முதலாம் வீரா - எல்லாரிலும் முதன்மை பெற்ற வீரனே !, விநாயக விற்பனனே - விநாயக னென்னும் பெயர் பூண்ட கல்விமானே !, எ - று.

துரிதகவி

# திருமலைக்கொழுந்துக் கவிராயர்

பாடியது

விநாயக முதலியார் சத்திரத்தை வியந்து பாடியது

1. எள்ளுமலர் புரைநாசிகொண் மாதர்க்கெழின்மதனன்
விள்ளுகவியின்பயன்றேர் விநாயகவேள்புரியுந்
தெள்ளுமணிகள்பதித்தோங்குஞ் சத்திரஞ்சேர்குதிரைக்
கொள்ளுச்செலவினுக்கொவ்வா தரசர்கொளுஞ்செல்வமே.

உரை:—எள்ளு மலர் புரைநாசிகொள் மாதர்க்கு எழில் மாரன்- எள்ளு மலரைப்போன்ற நாசியையுடைய (அல்லது) மூக்கினையுடைய அழகிய பெண்களுக்கு மன்மதன் போன்றவன், விள்ளு கவியின் பயன் தேர் விநாயக வேள் - புலவர்கள் சொல்லுகின்ற பாட்டின் நயத்தை யாராய்ந்து அறிகின்ற விநாயக வள்ளல், புரியும்-கட்டிய, தெள்ளுமணிகள் பதித்தோங்கும் - தூய இரத்தினங்க ளிழைக்கப்பெற்று விளங்கும், சத்திரம் சத்திரத்தில், சேர்குதிரைக் கொள்ளுச செலவினுக்கு ஒவ்வாது அரசர்கொளும் செல்வமே - போய்ச சேர்கின்ற குதிரைகளுக்கு வைக்கும் காணச் செலவுக்கு அரசர்கள் பெற்றுள்ள செல்வம் ஈடாகாது, எ - று.

2. தென்னனிகரருச் சுனமால்பெறும்
விநாயகன் புரிசத்திரத்தைப்பார்க்க
இன்னலறப்பரமசிவன் முக்கணுற்றான்
முருகனுங் கண்ணீராறுற்றான்
அன்னமிசைவரு பிரமனெண்கணுற்று
ஆயிரங்கணரி தானுற்றான்
றன்னவனுகிய வாணனீராயிரங்க
ணுற்றான்வரும் நாளே.

உரை :—தென்னன் நிகர் - பாண்டியனைப்போன்ற அருச்சுனப் பெரியோன் புதல்வராகிய - ......, விநாயகன் புதுச சத்திரத்தைப் பார்க்க - ......, இன்னலற - துன்பமில்லாதபடி, பரமசிவன் முக்கணுற்றார் - சிவபெருமான் மூன்று கண்களை யுடையவரானார், முருகனும் கண் ஈராறு உற்றான்-குமாரக்கடவுள் பன்னிரண்டு கண் உடையவரானார், அன்ன

மிசை வரும் பிரமன் எண் கண்ணுற்றான் - அன்ன வாகனத்தையுடைய பிரமன் எட்டுக் கண்களை யுடையவனானான், அரி ஆயிரங் கண்ணுற்றான் - இந்திரன் ஆயிரங் கண்ணுடையவனானான், மன்னவனாகிய பாணன் ஈராயிரம் கண்ணுற்றான் - அரசனாகிய வாணாசுரன் இரண்டாயிரம் கண்ணுடையவனானான், (சத்திரத்தைப் பார்க்க) வரும் அந்நாளே - அந்த நாளே, எ - று.

3. தாட்டிகஞ்சேர் விநாயகமால் சத்திரத்துப்
பந்தரின்முன் சார்பீரங்கி
வேட்டொலிக்குப் பயந்துசிங்கங் காளியைச்
சேர்ந்தது விதியைமேவிற் றன்னம்
காட்டிலுறு மான்சிவன் கைகலந்தது
மாயனையே திண்கலுழன் சேர்ந்தான்
நீட்டிய வேலவரிடஞ் சேர்ந்தன
தகர்மயூரமென நிகழ்த்தலாமே.

உரை :—தாட்டிகஞ் சேர் விநாயக மால் சத்திரத்துப் பந்தரின் - வலிமையுள்ள விநாயகப் பெரியோனது சத்திரத்தின் முன்னுள்ள பந்தரின்கீழ், சார் பீரங்கி வேட்டு ஒலிக்குப் பயந்து - அமைந்திருக்கின்ற பீரங்கி வெடியின் சத்தத்திற்கு அஞ்சி, சிங்கம் காளியைச் சேர்ந்தது - சிங்கமானது காளியம்மனிடம் போய் வாகனமாக அமர்ந்தது, விதியை மேவிற்று அன்னம்-பிரமனைப் போயடைந்தது அன்னமானது, காட்டிலுறு மான் சிவன் கை கலந்தது - காட்டிலிருக்கின்ற மானானது சிவபெருமானுடைய கைத்தலத்திற் போய்ச் சேர்ந்தது, மாயனையே திண் கலுழன் போய்ச் சேர்ந்தான் - திருமாலிடம் வலிமையுள்ள கருடன் போயடைந்தான், நீட்டிய வேலவரிடம் சேர்ந்தன தகர் மயூரம் என நிகழ்த்தலாமே - ஆடும் மயிலும் முருகப்பெருமானிடம் சேர்ந்தன என்று சொல்லலாம், எ - று.

4. காவிமலர்த் தாரழகன் பயிலை
விநாயகனென்னைக் கலந்தான் காமா
கூவியிடுமாங்குயிலைச் சுட்டருந்து
தென்றலையக்குவட்டிற் போக்கு
மேவியிடுபூவையுங்கைக் கருமபையு
மீனையும் விலக்குவிற்றுப்போடு
தூவிவருமழன்பதியை வானகத்தோட்டனியை
மலர்தோட்டத் தோட்டே.

உரை :—காவிமலர்த் தார் அழகன் - குவளைப் பூமாலையைத் தரித்த அழகுடையவனாகிய, மயிலை விநாயகன் என்னைக் கலந்தான் - மயிலையில்

வதியும் விநாயக வள்ளல் என்னோடு சேர்ந்தான், (ஆதலால்) காமா - மன்மதனே!, கூவியிடும் மாங்குயிலே சட்டு எறிந்து - மாமரத்திலிருந்து கூவுகின்ற குயிலைப் புசித்துத் தின்று, தென்றலையைக் குவட்டில் போக்கு- தென்றற் காற்றை அம் மலையில் திரும்பிப் போகச் சொல்லு, மேவி இரு பூவையும் கைக் கரும்பையும் - விரும்பிச் செலுத்துகின்ற பூவாகிய அம்பை யும் கையில்லாகிய கரும்பையும், மீனையும் - மீனக் கொடியையும், விலக்கு விற்றுப்போடு - ......, தூவி வரும் அழல் பதியை வானகத்து ஓட்டு - நெருப்பைச சிதறி வருகின்ற சந்திரனை ஆகாயத்துள்ளே துரத்து, அளியை மலர்த் தோட்டத்து ஓட்டு - வண்டைப் பூஞ்சோலைக்குத் துரத்து வாயாக, எ - று.

5. கள்ளிலகுஞ்சோலை மலிமயிலை
விநாயகமகிபன் கங்கைகோத்ரன்
வள்ளியர்தம்மிற்சிறந்த கொடைகொடுக்கத்
துசங்கட்டி மழைபோற்கையால்
அள்ளியிறைத்ததிற் சிந்தும்பொன்னொடு
வெள்ளியுமிந்த வகிலந்தன்னில்
வெள்ளிமலைபொன்மலை யிங்கிவை யென்னப்
பெயர்மன்னி மிளிர்ந்தவன்றே.

உரை :—கள் இலகும் சோலை மலி மயிலை விநாயகன் மகிபன் - தேன் திகழ்கின்ற பொழில்கள் மிகுந்த திருமயிலைப்பதியில் வாழும் விநாயக வேந்தன், கங்கை குலத்தவன் - கங்கை குலமாகிய வேளாள குலததிற் பிறந்தவன், வள்ளியர் தம்மை சிறந்த கொடை கொடுக்கத் துசம்கட்டி - வள்ளல்களைப் போலச் சிறப்பான கொடை கொடுக்கக் கொடி கட்டி, மழைபோல் கையால் அள்ளி யிறைத்ததிற் - மேகம்போலக் கையினால் வாரிப் பொழிந்ததிற், சிந்தும் பொன்னொடு வெள்ளியும் - சிதறிய பொன் னும் வெள்ளியும், இந்த அகிலந்தன்னில் - இந்தப் பூவுலகத்தில், வெள்ளி மலை பொன்மலை இங்கு இவை என்ன - வெள்ளிமலை பொன்மலை யென்று சொல்லும்படியான, பெயர் மன்னி மிளிர்ந்த அன்றே - பெயர் பெற்று விளங்கியன, எ - று.

6. பனகமதிற்றுயில்வோனும்பங்கயத்தி லிருப்போனும்பரிவுகூர்ந்து
சனகர்முதன்முனிவர்தமக்குபதேசக் குரவனும்மைந்தருவினனும்
மனதுமகிழ்திருமயிலைச்சத்திரத்தை வகுத்தகங்கைமரபோனை
கனகவிநாயகனொருவன்கற்ற கவிநாயகனைக்காத்தாள்வானே.

உரை :—பனகமதில் துயில்வோனும் - பாம்பணையிற் பள்ளிகொள்ளு கின்ற திருமாலும், பங்கயத்தி லிருப்போனும் - தாமரைப் பூவிலிருக்கும்

பிரமனும், பரிவு கூர்ந்து சனகர் முதல் முனிவர் தமக்கு உபதேசக் குரவனும் - கருணைமிகுந்து சனகாதி முனிவர்களுக்கு ஞானோபதேசஞ் செய்த ஆசாரியனாகிய சிவபெருமானும், பைந்தருவினனும் - புதுமையான கற்பக மரத்தினை யுடைய இந்திரனும், மனது மகிழ் திருமயிலைச சத்திரத்தை வகுத்த கங்கை மரபோனை - பார்த்து மனமகிழும்படியாகச் சத்திரங் கட்டி யமைத்த கங்கை குலத்தாராகிய, கனக விநாயகன் - செல்வம் மிகுந்த அல்லது பொன்னிறைந்த விநாயக வள்ளலாகிய ஒப்பற்றவன், கற்றக விநாயகனை காத்தாள்வானே - கல்விப் புலமையுடைய கவிராயரைக் காப்பாற்றி யருளுவான், எ - று.

7. பாத்திரமீதெனவறிந்துதருமயிலை விநாயகமால்பழுதிலாத
சாத்திரத்தாலுறமுடித்தசத்திரத்தின் முன்புவிடுஞ்சரவாணங்கள்
நேத்திரத்தாலறியவொணாத்தூரமபோயந்தரத்துநிறைந்துமாநட்
சேத்திரங்காண்மீனெனவிப் பூவுலகத்தார்புகலச்செறிந்தவன்றே.

உரை:—பாததிரம ஈது என அறிந்து தரு மயிலை விநாயகமால் - இது சற்பாததிரமென்று அறிநது ஈகை செய்கின்ற விநாயகப் பெரியோன், பழுதிலாத சாத்திரத்தால் உறமுடித்த சததிரததின் முன்பு - குற்றமில்லாத சாததிர முறைப்படி பொருததமாகக் கட்டிய சத்திரத்தின் எதிரில், விடும் சரவாணஙகள் - விடுகின்ற சரவாணஙகளாகிய வெடிவகைகள், நேத்திரததால் அறியவொணாத் தூரம்போய அநதரததில் நிறைந்து - கண்ணினால் பாரக்க முடியாத தூரம சென்று ஆகாயததில் நிறைந்து, மாநட்சேத்திரங காண் மீன் என - பெரிய நட்சததிரஙகளாகக் காணப்படுகின்ற விண மீன்கள் இவையென்று சொல்லும்படியாக, செறிந்த அன்றே - நெருங்கி விளங்கின, எ - று

8. எத்திசையும் புகழ்மயிலை விநாயகவேள்
சத்திரத்தி னிசையத்தீற்றும்
முத்தினைநீற் றியசுண்ணக் காந்தியண்ட
முகடுமுட்டி முளரிவேதன்
சத்தியை யூர்தியைப் பரமன்கைலையை
யேற்றினைமால் கைச்சங்கைக்கீழ்
அத்தியையிந் திரன்கரியை யம்புவியைத்
தவளநிற மாக்கிற்றன்றே.

உரை:—எத்திசையும் புகழ் மயிலை விநாயகவேள் சத்திரத்தின் - எல்லாத் திக்குகளிலும் கீர்த்தி பரவப்பெற்ற திருமயிலைப் பதியில் வாழும் விநாயக வள்ளலின் சத்திரத்திலே, இசைத்தீற்றும் - ......; முத்தினை நீற்றிச் சுண்ணக் காந்தி - பொருத்தமாகப் பூசப்பட்ட முத்துச சுண்ணும்பின் ஒளியானது, அண்ட முகடு முட்டி - அண்டத்தின் மேலிடத்திற்

போய்த் தட்டி, முளரி வேதன் சத்தியை - பிரமாவின் தேவியாகிய கலைமக ளாகிய சத்தியையும், ஊர்தியை - அவனுடைய வாகனமாகிய அன்னத்தை யும், பரமன் கைலையை - சிவபெருமானது கைலைமலையையும், ஏற்றினை - காளை வாகனத்தையும், மால் கை சங்கை - திருமால் கையிலுள்ள சங்கை யும், க்ஷீர அத்தியை - பாற்கடலில் தோன்றிய யானையையும், இந்திரன் கரியை - இந்திரனுடைய யானையையும், அம்புலியை - சந்திரனையும், தவளநிற மாக்கிற்றன்றே - வெண்ணிற முடையதாகச் செய்தது, எ - று.

9. எல்லார்க்குங்கன்ன மிருந்திடலிவனைக்
கன்னனென விசையாதோர்ந்து
வில்லாருங்காரியெனின் வடுகனையுஞ்
சனியனையும் விளக்குங்கீர்த்திச்
செல்லாரும்பாரி யெனினில்லா
ளாங்காளத்தீச் சுட்டுக்கொல்லும்
பல்லாரும்புகழ் மயிலைவிநாயகனைத்
தியாகியெனப் பகரலாமே.

உரை:—எல்லார்க்கும் கன்னம் இருந்திட இவனைக் கன்னன் என விசையாது - எல்லார்க்கும் கன்ன மென்கின்ற முகத்தின் பாகமிருப்பதால் இவனைக் கன்னனென்று சொல்வது பொருந்தாது, ஓர்ந்து - ஆராய்ந்து, வில்லாரும் காரி எனின் - வில் வீரன் என்னும் காரியென்னும் வள்ளலின் பெயரை இவனுக்கு வைத்தால், வடுகனையும் சனியனையும் விளக்கும் - அச் சொல் வைரவரையும் சனீ சுரரையும் குறித்தற் கூடும், கீர்த்திச் செல் லாரும் பாரி எனில் - புகழ் பெற்ற பாரி வள்ளலென்று இவனைக் கூறி னால், இல்லாளாங் காளத்தீச் சுட்டுக் கொல்லும் - பாரி யென்பது இல்லா ளுக்குப் பெயரா யமைதலாலும் இல்லாதவளென்று பொருள் படுதலின் வறுமை யென்னும் விஷ நெருப்பானது தகித்து அழிக்கும், பல்லாரும் புகழ் மயிலை விநாயகனைத் தியாகி எனப் பகரலாமே - எல்லாருந் துதிக் கின்ற மயிலைப் பதியிலுள்ள விநாயக வள்ளலைக் கொடையாளன் இவனே என்ற அளவிற் சொல்லுதல் பொருத்தமாகும், எ - று.

10. வெயில்விரி சிந்தாமணிமன் னிருநிதியைந்
தருதேனு விளங்குங்கீர்த்தி
பயிலுறுசீதக் காதிபாரி வெண்ணெய்வாழ்
சடையன் பகருங்காரி
அயிலமைதிண் கரத்தொருமா வெலிகன்னன்
காளத்தி யாதியாரும
மயிலைவிநாயகன் கொடைமுன் மகிழ்நரைக்
காண்புதுவதுலை மாதராரே.

உரை :—வெயில் விரி சிந்தாமணி - ஒளி வீசுகின்ற சிந்தாமணி, மன் இரு நிதி - சங்கநிதி பதுமநிதி என்ற இரண்டு நிதிகளும், ஐந்தரு - தேவ லோகத்திலுள்ள ஐந்து கற்பக மரங்கள், தேனு - காமதேனு, விளங்கு கீர்த்தி பயிலொடு சீதக்காதி - புகழ் திகழ்கின்ற சீதக்காதி வள்ளல், பாரி - பாரி வள்ளல், வெண்ணெய் வாழ் சடையன் - திருவெண்ணெய் நல்லூரில் வாழ்ந்த சடையப்ப வள்ளல், காரி - சிறப்பாகப் பேசப்படும் காரி வள்ளல், அயிலமை திண் கரப்பு ஒரு மாவலி - வேல் பொருந்திய வலிய கையையுடைய ஒப்பற்ற மாவலிச சக்கரவர்த்தி, கன்னன் - கர்னன், காளத்தியாதியாரும் - காளத்தியப்ப வள்ளலெல்லாரும், மயிலை விநாயகன் கொடு - மயிலைப்பதியில் வாழும் விநாயக வள்ளலின் ஈகைக்கு முன்பாக மகிழ்நரைக் காண் புது வதுவை மாதராரே - புதிதாகக் கலியாணஞ் செய்த கணவனைக் கண்ட பெண்டிர்போல நாணமடைவர், எ - று.

11. அரிநிகர்வி நாயகவேள் சத்திரத்தி
னளவுணர வனுமான்வேண்டும
வரிசையுறு படத்தமைதே வரையடிய
வரைப்போற்ற வாணன்வேண்டும்
திரிவறுசித் திரமதனைக் கண்டுமகிழ்ந்
திடுதற்கிந் திரன்றான்வேண்டும்
உரிமைபெறு மதன்பெருமை சொலவநந்தன்
வேண்டுமென வுரைக்கலாமே.

உரை :—அரி நிகர் விநாயகவேள் சத்திரத்தின் அளவு உணர அனுமான் வேண்டும் - திருமாலைப்போன்ற விநாயக வள்ளலின் சத்திரத்தை யளந்து பார்ப்பதற்கு மிக நீண்ட வாலையுடைய அனுமான் தான் வர வேண்டும், வரிசையுறு படததமை தேவரை யடியவரைப் போற்ற வாணன் வேண்டும் - அசசத்திரததில் வரிசையாக வைக்கப்பட்டுள்ள படங்களில் காணப்படும் தேவர்களையும் அடியார்களையும் வணங்குதற்கு இரண்டாயிரங் கையையுடைய வாணாசுரன் தான் வரவேண்டும், திரிவறு சிததிர மதனைக் கண்டு மகிழ்ந்திடுதற்கு இந்திரன்தான் வேண்டும் - மாற்றமில்லாத ஓவியங்களைப் பார்த்து மகிழ்வதற்கு ஆயிரங் கண்ணுடைய இந்திரன்தான் வரவேண்டும், உரிமை பெறும் அதன் பெருமை சொல அநந்தன் வேண்டும் என உரைக்கலாமே - எல்லாருக்கும் உரியதான அச்சத்திரத்தின் பெருமையைச் சொல்வதற்கு ஆயிரம் நாவையுடைய ஆதிசேடன்தான் வரவேண்டும் என்று கூறலாம், எ - று.

12. மதுவசன னெங்கண்முத்து வீரப்பேந்த்ரன்
வளம்பாடிவந்தகவி வாணுபெற்ற
தெதுவென்று ளவன்றன்பா லாடையென்றே
னெனதுமகவினுக் கமுதமிடலாமென்றுள்
பதுமமல ரடிமாதே கலையென்றேன்பின்
பாயாதோ விவ்வனத்திற் பயின்றதென்றுள்
அதுவலவென் றேன்கட்டு வர்க்கமென்றே
னுவென்றுளருந்தவப் பெண்டாவென்றுளே.

உரை :—அருந்தவப்பெண் அரிய தவஞ்செய்த என் மனைவி, மது வசனன் எங்கள் முத்துவீரப் பேந்தரன் வளம்பாடி வந்த கவிவாணு - தேன்போன்ற மொழியையுடைய எங்களுடைய முத்துவீரப் பேந்திரன் செழிப்பைப்பற்றிப் பாடிப் பரிசுபெற்று வந்த பாவலரே!, பெற்றது எது என்றுள் - பெற்ற பரிசு யாதென்று கேட்டாள், அவன் தன்பால் ஆடை என்றேன் - அவனிடத்தி லாடைபெற்று வந்ததாகச் சொன்னேன், எனது மகவினுக்கு அமுதம் இடலாம் என்றுள் - என்னுடைய பிள்ளைகளு அந்தப் பாலாடையை யுணவாகக் கொடுக்கலா மென்றுள், பதும மலரடி மாதே கலை என்றேன் - தாமரைப் பூப்போன்ற பாதத்தை யுடையவளே!, அது ஆடைக்குப் பிரதி பதமாகிய கலையென்று சொன்னேன், பின் பாயாதோ இவ்வனத்தில் பயின்றது என்றுள் - (கலை யென்பதை மானென்று எண்ணிக்கொண்டு) இக்காட்டிற் பழகிய மான் பாயாதோ என்று கேட்டாள், அது அல என்றேன் - நீ எண்ணும் மானல்ல வென்று சொன்னேன், கட்டுவர்க்கம் என்றேன் - அது உடுத்துகின்ற வகையைச் சேர்ந்ததென்று சொன்னேன், ஆ என்றுள் தா என்றுளே - அப்படியா வென்று ஆச்சரியப்பட்டு அதைத் தன்னிடம் கொடுக்கவேண்டுமென்று கேட்டாள், எ - று.

13. வானூரும் விழியிரண்டு முத்திறைப்ப
மதியனலை வாரித்தூற்றத்
தேனூரும விடமபோலக் குயில்கூவ
வன்றியுமென் சிறியாள்வாசம
வேனூரு மானக்கான் மெலியாளோ
மயனேயில் விளங்குங்கொன்றை
நானூரு மலர்மருந்தை யென்றுவயித்
தியநாதர் நல்குவாரே.

உரை: —வான் ஊரும் விழியிரண்டு முத்திறைப்ப - ஒளி வீசுகின்ற கண்களிரண்டும் கண்ணீரைச் சொரிய, மதியனலை வாரித் தூற்ற - சந்

திரன் நெருப்பை வாரிச் சிதறவும், தேள் ஊரும் விடம்போல குயில் கூவ - தேளின் விஷம்போலக் குயிலானது ஒலிப்ப, அன்றியும் என் சிறியாள் வாசம் வேளூரும் ஆனக்கால் - அன்றியும் எனது சிறு பெண்ணின் இருக்கையில் மன்மதன் வந்து தங்கினுல், மயல் நோயில் மெலியாயோ - மோக வியாதியினுல் தளர்வடைய மாட்டாளோ, விளங்கும் கொன்றை நாளூநும் மலர் மருந்தை - பிரகாசமான கொன்றைமரத்தில் நாள்தோறும் பூக்கின்ற பூவாகிய மருந்தினை, வயித்தியநாதர் நல்குவாரே - வயித்தியநாதக் கடவுள் கொடுத்தருள்வாராக, எ - று.

14. வீசுசடை மேலிருதோள் மீதரையி லணிவதெல்லாம்
வாசுகியென் றுரைத்ததல்லால் வாசுகியென் றுரைத்தேனே
நேசமிகுந் தவர்போல நீட்டுரஞ் செய்துபரி
யாசவகை செயவேண்டா மருட்சவுந்த ரேசரே.

உரை :— அருள் சவுந்தரேசுரரே - கருணையுடைய சவுந்தரேசுரக் கடவுளே!, வீசு சடைமேல் இருதோள்மீது அரையில் அணிவது எல்லாம் - அசைகின்ற சடையிலும் இருபுயங்கள் மேலும் அரையிலும் தரிப்பது எல்லாம், வாசுகி என்று உரைத்ததல்லாமல் வாசுகி என்று உரைதேனே - வாசுகியாகிய பாம்பின் இனமென்று சொன்னேனே யல்லாமல் வந்து சுகமா யிருவென்று சொல்லவில்லை, நேச மிகுந்தவர்போல் நிட்டூரஞ் செய்து - காதல் மிகுதியாயுள்ளவர்போலக் கொடுஞ் செயல்கள் செய்து, பரியாச வகை செயவேண்டாம் - கேலி முறைகள் செய்யவேண்டியதில்லை, எ - று.

---

# முத்துராமலிங்க சேதுபதி

## பாடியது

## முருகன் துதி

1. மங்கையர்கொங் கைக்குடத்துள் வாடிச் சுருண்டுதுயில்
வெங்கட்பு ழையெயிற்றின் மேவுநெஞ்சே—நங்கை
யருளு மதிநுமலை யணிசெஞ் சடிலா
குருகுகனை யென்றுங் குறி.

உரை :—மங்கையர் கொங்கைக் குடத்துள் சுருண்டு துயில் - பெண்களுடைய தனங்களாகிய குடத்துள் சுருண்டு தூங்குகின்ற, வெங்கட்புழை எயிற்றின் - (பாம்புபோன்ற) வெம்மையான புழையுள் அமைந்த பல்லை

யுடைய, மேவு நெஞ்சே - பொருந்திய மனமே !, கங்கை அருகுமதி தும்பை அணி - கங்கையும் அருகும் சந்திரனும் தும்பையுமணிந்த, செஞ் சடிலர் - சிவந்த சடையையுடைய சிவபெருமானுக்கு, குரு குகனை என்னும் குறி - குருவாய் உபதேசஞ் செய்த இருதய குகையிலுறையும் முருகப்பெருமானை எப்போதும் நினைத்துக்கொண்டிரு, எ - று.

## இதுவுமது

2. செட்டியெனும் பேர்படைத்த சேவலவ நிற்குரிய
சட்டிகண்டே னெற்குமலர்த் தாடந்தாள்—கட்டிமணிச்
சுட்டிகட்டு மெட்டுளாள் சுரப்பெணுங் குறப்பெணுங்கை
தொட்டுமேவு மிட்டனேயி தோ.

உரை :—செட்டியெனும் பேர்படைத்த சேவலவ - செட்டி யென்ற பெயருடைய சேவற் கொடியை யுடையவனே !, நிற்குரிய சட்டி கண்டேன் - உமக்குப் பிறப்பாக உரியதான சஷ்டி தினத்திலுமைத தரிசித்தேன், கட்டிமணிச சுட்டி கட்டும் - உயர்ந்த விரத்தினங்களாலாகிய நெற்றிச சுட்டியை யணிந்த, மெட்டுளான் - கெம்பீரமுடையவளாகிய, சுரப்பெணும் - தெய்வப் பெண்ணாகிய தேவயானையும், குறப்பெணும் - குறப்பெண்ணாகிய வள்ளியும், கைதொட்டு மேவும் இட்டனே (ஆகிய இருவரையும்) கையினாற்றழுவி விருப்பமா யிருப்பவனே!, இதோ எற்கு மலர்த்தாள் தந்து ஆள் - இப்பொழுதே உன்னுடைய பூப்போன்ற திருவடியைக கொடுத்தருளவேண்டும், எ - று.

## ஊடலை வியத்தல்

3. கூடிச் சிவந்தவிதழ்க் கொவ்வையுண்டு மேவாதிவ்
வூடல் புரிவ துவப்பாமே—கூடற்
சுழிபொருந்தா தாயினுமித் தோகைமயில் செய்ய
விழிபொருந் தாதேயவ் விரா.

உரை :—இத் தோகை மயில் - கலாபத்தை யுடைய மயிலைப்போன்ற சாயலையுடைய இப்பெண்ணாவளோடு, கூடிச சிவந்த இதழ்க் கொவ்வையுண்டு மேவாது சேர்ந்து செந்நிறமுள்ள கொவவைக்கனிபோன்ற உதட்டிலுள்ள நீரைக் குடித்துக் காதலிக்கப் பெறாது, இவ்வூடல் புரிவது உவப்பாமே - இசசிறு சண்டை யல்லது புலவி நிகழ்த்துவது மனத்திற் குவந்ததே, கூடல் சுழிபொருந்தா தாயினும் - சுழிக்கின்ற கோடானது ஒன்று கூடாமற் போனாலும் அல்லது கூடுவதற் கேதுவாகிய விதி ஒத்து வாராவிடினும், அவ்விரா - அவ்விராத்திரியில், செய்ய விழி பொருந்தாதே - அவளுடைய சிவந்த கண்களானவை தூங்கமாட்டா, எ- று.

4. ஆபத்தை மாசை யருத்துமட மாளுர்
தீபத்தை யுற்றபுழுச் சிந்தையே—நீபத்தைப்
பூண்டபணைத் தோளானைப் போர்மயிலை யுற்றானை
வேண்டவினை மாண்டு விடும்.

உரை :—ஆபத்து ஆசை அருத்து மடமாளுர் - அபாயத்தையும் அழுக்கையும் அனுபவிக்கச செய்கிற இளமாதரெனும், தீபத்தை யுற்ற புழுச சிந்தையே - விளக்கில் விழுகின்ற புழுப்போன்ற மனமே !, நீபத்தைப் பூண்ட பணைத்தோளானை - கடப்பமாலை யணிந்த பெரிய புயங்களையுடைய முருகனை, போர் மயிலை யுற்றானை - போர் செய்த மயிலை வாகனமாகக் கொண்டவனை, வேண்ட வினை மாண்டுவிடும் - பிரார்த்தனை செய்தால் தீவினை யொழிந்துபோம், எ - று.

5. மாலையிட்ட நாதர் வரமாட்டோ மெனிலென்னுட
லாலையிட்ட கன்னலினை யாகாதோ—வேலையிட்ட
மாகவணி வாகையனை மாகர்புகழ் வாசகனை
யாகமகிழ் வாக வழை.

உரை :—மாலையிட்ட நாதர் வரமாட்டோம் எனில் - என்னை மாலையிட்டு மணஞ்செய்த கணவன் என்னிடம் வர விசையாவிடில், உடல் ஆலையிட்ட கன்னல் இணையாகாதோ - என்னுடம்பானது ஆலையிலிட்ட கரும்பைப் போல நைந்து அழியாதோ, வேலையிட்ட - வேலாயுதத்தைப் பகைவர்கள் மேல் வீசிவென்ற, மாகவணி வாகையனை - திகெங்கும் பரவிய வெற்றி யுடையவனை, மாகர் புகழ் வாசகனை - தேவர்கள் புகழுகின்ற துதிப்பாடலுடையவனை, ஆகம் மகிழ்வாக அழை - என்னுளம் களிப்படையும் பொருட்டு அழைப்பாயாக, எ - று.

6. காமமெனுங் கள்ளுண்டு காயாது வேலர்திரு
நாமமெனுங் கள்ளுண்ண நாடுவாய்—காம
மலைத்துன்பங் காட்டுமற்றந் நாம நெஞ்சே
மிலைத்தின்பங் காட்டு மிக.

உரை:—நெஞ்சே - மனமே !, காமமெனும் கள்ளுண்டு காயாது - பெண்மயலென்னும் வெறி தரக்கூடியதை யேற்று உலர்ந்து போகாமல், வேலர்திரு நாமமெனும் கள்ளுண்ண நாடுவாய் - வேலாயுதப் பெருமானின் திருப்பெயராகிய தேனை யுண்ணுவதற்கு விருப்பங் கொள்ளுவா யாக, காமம் மலைத் துன்பங் காட்டும் - பெண் மோகமானது மலைபோன்ற துன்பத்தைத் தோற்றுவிக்கும், மற்று அந்நாமம் - அதற்கு வேறாகிய கடவுளுடைய திருப்பெயரின் உச்சரிப்பு, மிலைத்து இன்பம் காட்டும் மிக - அறிவுக்குப் பொருந்திய இன்பத்தை மிகுதியாகக் காண்பிக்கும், எ - று.

7. மாமலைவாழ் கந்தா மதனன் வெகுண்டென்னுடன்
வாமலைவா னென்ன மயங்கியே—தேமலைச்சேர்
சொன்னவட்ட மாமுலையா டூதாக முன்னமுமோ
ரன்னம்விட் டாளன்னம்விட் டாளாள்.

உரை:—மாமலை வாழ் கந்தா - பெரிய மலைக்குத் தலைவனாய் வதியும் குமரப் பெருமானே !, மதனன் வெகுண்டு என்னுடன் மலைவான் வா என்ன மயங்கியே-மன்மதன் கோபித்து என்னோடு சண்டைக்கு வா என்று அறை கூவுவதைக் கேட்டு மலைவடைந்து, தேமலை சேர் சொன்ன வட்டமா முலையாள் - பசலை படர்ந்த பொன்போன்ற பருத்த முலையை யுடையவள், தூதாக முன்னமும் ஓர் அன்னம் விட்டாள் - உன்னிடம் தூதாக முன்னமே ஓர் அன்னத்தை யனுப்பினள், அன்னம் விட்டாள் - சோறுண்பதைத் தவிர்த்தாள், ஆள் - அவளை யாட்கொள்வாயாக !, எ - று.

8. இசையுற்றேன் மாயை யிருளறைக்குட் டுஞ்சு
வசையற்றே னின்னை மறவேன்—திசையுற்ற
தோகைமயி லேறுகுக சூரகுல காலவினை
யேகமுன நீவருவை யே.

உரை:—திசையுற்ற தோகை மயில் ஏறு குக சூர குல கால - திக்கெங்குஞ் செல்லக்கூடிய பெரிய கலாபத்தையுடைய மயிலின்மீது ஏறி வருகின்ற இருதய குகையில் வசிப்பவனே !, சூரனுடைய குடும்பதிற்கு எமன் போன்றவனே !, இசையுற்றேன் - உன்னை நான் மணந்தேன், மாயை இருள் அறைக்குள் துஞ்சு வசையற்றேன் - மாயை யென்னும் இருட்டறைக்குள்ளே புல்லறிவோடு கிடக்கின்ற உணர்ச்சி நீங்கிப் பெற்றேன், நின்னை மறவேன் - உன்னை எப்போதும் நினைத்திருப்பேன், வினை ஏக முனம் நீ வருவையே - என்னுடைய வினை நீங்குவதற்கு முன்பாக நீ வந்து ஆட்கொள்வாயாக !, எ - று.

9. காடுதொறு மோடுவதென் காரணமோ நெஞ்சேநீ
வீடுபெறல் வீடலது வேறிலையே—தேடி நிதம்
வேலணிசெவ் வேளடியர் மெல்லியசெம போதனைய
காலணிதல் சென்னி கடன்.

உரை:—நெஞ்சே - மனமே !, காடுதொறும் ஓடுவதென் காரணமோ - நீ காடுகளெங்கும் போய்த் திரிவதற்குக் காரணமென்ன ? நீ வீடு பெறல் வீடலது வேறிலையே - நீ துன்பத்தினின்று நிவர்த்தி யடைய வேண்டுமென்றால் மோட்சத்தை நாடுவதின்றி வேறு வழியில்லையே, வேல் அணி செவவேள் அடியர் - செவவிய வேலாயுதத்தை யுடைய முருகக் கடவுளின் தொண்டர்களுடைய, செமபோதனைய கால் - சிவந்த தாமரைபோன்ற

திருவடிகளை, நிதம் தேடி சென்னி அணிதல்' கடன் - நாள்தோறும் தேடி சிரமேற் கொள்ளுதல் உன் கடமையாகும், எ - று.

10. திருவே ரகங்கொடுமூர் தென்சீ ரலைவாய்
திருவாவி னன்குடிசெங் கோடு—திருமயிலந்
தென்பரங்குன் றுதிருத் தணிகை சோணகிரி
யன்பரகங் குகன்வீ டாம்.

உரை:—திருவேரகம் கொடுமூர் தென் சீரலைவாய் - சுவாமிமலை, கொடுங்குன்றம், அழகிய திருச்செந்தூர், திருவாவினன்குடி - (பழநிமலை யடிவாரத்திலிருக்கும்) திருவாவினன்குடி, செஙகோடு - திருசசெங்கோடு, திருமயிலம் - அழகிய மயில்மலை, தென்பரஙகுன்று - திருப்பரஙகுன்றம், திருத்தணிகை -......, சோணகிரி - திருவண்ணாமலை, அன்பர் அகம்- அன்பருடைய உள்ளமும், குகன் வீடாம் - குகப்பெருமான் தங்கு மிடஙக ளாம், (தலஙகளாம்), எ - று.

11. செந்தி லுறைந்திலகு செவ்வேட் டுதிக்கின்வினை
வெந்துகெட வியற்றும வேலொன்றே—வந்துழலும்
பந்தனத்தைப் போக்கும பலகலையுந் தேக்குமுற்சொல்
கந்தனத்தை சொந்தமுறுங் காண்.

உரை :—செந்தி லுறைந்து இலகு செவவேள் துதிககின் - செந்திலில் வீற்றிருந்து விளங்குகின்ற முருகப்பெருமானை வாழ்த்தினல், வேலொன்றே வினை வெந்து கெட இயற்றும் - அவனுடைய வேலாயுதமொன்றே கருமங் களை நீறுகும்படி செய்யும், வந்துழலும் பந்தனததைப் போக்கும் - பிறவி யெடுத்துத் திரிவதற்கு எதுவாகிய பாசபநதத்தைத தொலைக்கும் பலகலை யும் தேக்கும் - பல வித்தைகளையும் நிறையும்படிச செயயும், முற்சொல் கந்தன் அத்தை சொந்தம் உறும் - முன் சொல்லப்பட்ட குமரப் பெருமா னின் மாமியாகிய திருமகள் உரிமையாய்ப் பயனளிப்பள், காண் அசை, எ - று.

12. செந்தமிழால் யானுரைக்குந் தேனருந்த நின்செவிக்குச்
சொந்தமிலை யாவதிலுன் சொத்துக்கு—வந்தசெல
வேதுகலப மயிலேறு முருகாவிதனை
யோது விரைவாக வுவந்து.

உரை:—கலபமயில் ஏறு முருகா - தோகை மயிலை வாகனமாகக் கொண்ட குமரப்பெருமானே!, செந்தமிழால் யானுரைக்கும் தேன் அருந்த நின் செவிக்குச சொந்தமிலையா - செவ்விய தமிழில் யானியற்றுகின்ற பாடலாகிய தேனை யுண்பதற்கு உன்னுடைய திருசசெவிக்கு உரிமை யில்லையா ?, அதிலுன் சொத்துக்கு வந்த செலவேது - அப்படிசசெய்வதால்

உன் பொருளுக்கு ஏற்பட்ட செலவு யாது ?, இதனை உவந்து விரைவாக ஓது - இதனைத் தயவுசெய்து விரைவாகச் சொல்வாயாக !, எ - று.

13. வள்ளிமானே யெம்மரபி லுதித்துத் தினைமா
வள்ளிக்கு கற்களித்த வன்னையே—யுள்ளபடி
யெங்கடுயரை யையற்கியா ருரைப்பார் நின்னையன்றி
மங்கையே காப்பாய் மகிழ்ந்து.

உரை:—வள்ளிமானே எம் மரபிலுதித்து - வள்ளி நாயகியே எங்கள் குலத்திற் றோன்றி, தினைமா அள்ளி குகற்கு அளித்த அன்னையே - தினை மாவைக் கையிலெடுத்து முருகப் பெருமானுக்கு வாயிலூட்டிய தாயே !, நின்னையன்றி - உன்னைத்தவிர, உள்ளபடி எஙகள் துயரை ஐயர்க்கு யாா உரைப்பர் - எங்கள் துன்பத்தைப் பெருமானுக்கு உண்மையாக எடுத்துச சொல்கின்றவர்கள் யாா, மஙகையே காப்பாய் மகிழ்ந்து - அன்னையே நீ எங்களைச் சந்தோஷத்துடன் காப்பாற்றி யருளுவாயாக !, எ - று.

---

சதாவதானம்

# சரவணப்பெருமாட் கவிராயர்

பாடியது

---

முத்துராமலிங்க சேதுபதியவர்கள் வினுக்கட்கு
சதாவதானம் சரவணப்பெருமாட் கவிராயா விடைகள்

1. பூவயனுற் பூவிலுண்டாம் புன்மரங்கள் வேறுநிற
மேவாதொன் றுயதென்ன விள்ளுவீர்—தாவசர
மெய்யறிவொன முனமையால் வேறுநிற மின்றுசர
மையறிவாற் பன்னிற மதாம.

உரை:—பூ அயனுல் - பூவிலிருக்கும் பிரமனுல், பூவிலுண்டாம் புல் மரங்கள் - உலகத்திலே இருககின்ற புல் மரஙகள் முதலியவைகள், வேறு நிறம் மேவாது ஒன்றுயது என்ன விள்ளுவீர் - ஒரே பசசை நிறந்தவிர வேறு நிறங்கள் பொருந்தாமைக்குக காரணம் யாதென்று கூறுவீராக ! தாவசர மெய்யறிவொன் றுனமையால்-வளரக்கூடிய நிலைப் பொருளாகிய தாவரம் ஆறறிவில் ஓரறிவுடைய உடம்புடைமையால், வேறு நிறமின்று - ஒரே நிறந்தான் அதற்குண்டு, சரம் ஐயறிவால் பன்னிறமதாம் - இயங்கும் உயிர்கள் ஐந்தறிவுடைமையால் அவற்றின் உடம்புகள் பல நிறமுடையன வாம், எ - று.

2. நஞ்சுடைய கண்டத்து நாதன் முடிமீது
குஞ்சுமதி யணிந்து கொள்வானேன்—னஞ்சாமன்
மூத்தபிள்ளை யன்றுமுறித்த கொம்பைக் கேட்குமென்று
சேர்த்துவைத்துக் கொண்ட திறம்.

உரை:—நஞ்சுடைய கண்டத்து நாதன் முடிமீது - விடத்தைக் கழுத்திலுடைய சிவபெருமான் தமது தலையில், குஞ்சுமதி அணிந்து கொள்வானேன் - இளம் பிறையைத் தரித்துக்கொள்வதற்குக் காரண மென்ன, அஞ்சாமல் மூத்தபிள்ளை அன்று முறித்த கொம்பைக் கேட்கு மென்று - தைரியமாக விநாயகக்கடவுள் பிறையைத் தான் முறித்த தந்த மென்றெண்ணி அதனைக் கேட்கக்கூடுமென்று கருதி, சேர்த்து வைத்துக் கொண்ட திறம் - அதனைச் சடைக்குள் மறைத்து வைத்துக்கொண்ட வகையா மென்க, எ - று.

3. பாரிலின்ப துன்பம் படவிதித் தானே
வாரிசத்தான் யாதுகவி வல்லவா—வோர்தொழுவிற்
பல்லாவுட் கன்றுதன்றாய் பார்த்தணுகல் போர்புவியி
லெல்லாருஞ் செய்வினையா லே.

உரை:—வாரிசத்தான் பாரில் இன்ப துன்பம் படவிதித்தானே - தாமரைப் பூவிலுள்ள அயன் உலகத்தி லின்ப துன்பங்களை யனுபவிக்கும் படி வகுத்திருக்கிறான், யாது கவி வல்லவா - அது எப்படி பாவலனே சொல்வாயாக, ஓர் தொழுவில் - ஓர் மாட்டுமந்தையிலுள்ள, பல்லாவுள் - பல பசுக்களுள், கன்று தன் தாய் பார்த்து அணுகல்போல் - கன்றுக்குட்டி தன் தாயைக் கண்டுபிடித்துச் சேர்வதுபோல, புவியில் எல்லாரும் செய் வினையாலே - உலகத்தில் எல்லாருஞ் செய்கின்ற வினைகள் அவரவரைப் போய்ச் சேர்கின்ற காரணத்தாலே அவற்றிற்குரிய பலனை விதித்தான், எ - று.

4. வரையழுத்துஞ் சேடனொடு மாருதம்போர் செய்தாற்
றரையைச்சுமந் தவர்யார் சாற்றாய்—விரைமலர்த்தா
ரேந்துபுயத் துலகமேந்து நின்போ னின்குலத்து
வேந்தர்சும வாதுவி டார்.

உரை:—வரையழுத்துஞ் சேடனொடு - மலைகள் அழுந்தவும் தாங்கு கின்ற ஆதிசேடனோடு, மாருதம் போர் செய்தால் - வாயுவானது சண்டை யிட்டால், தரையைச் சுமந்தவர் யார் சாற்றாய் - உலகத்தைத் தாங்குபவர் யாரென்று சொல்வாய், விரை மலர்த்தார் ஏந்து புயத்து உலகம் ஏந்து நின்போல் - வாசனை பொருந்திய மலர் மாலையை யணிந்த தோள்களி னாலே உலகத்தைத் தாங்குகின்ற உன்னைப்போல, நின் குலத்து வேந்தர்

சுமவாது விடார் - நின் மரபிலுள்ள அரசர்கள் உலகைத் தாங்காதிருக்க மாட்டார்கள், எ - று.

5. விதுகண்டு கூம்பாத மென்கமல முண்டோ
விதுகண்டு சொல்கவிதைக் கேந்தான்—முதிருமெழின்
மாதர் வதன மதிகண்டு மலர்பருவப்
போதிரண் டுண்டாகம புடைத்து.

உரை :—விதுகண்டு கூம்பாத மென்கமலம் உண்டோ - சந்திரனைக் கண்டு குவியாத மெல்லிய தாமரையுண்டா?, கவிதைக்கு எந்தால் இது கண்டு சொல் - பாவிற்குத தலைவனே! இது இன்னதென்று தெரிந்து கூறுவாயாக!, முதிரும் எழில் மாதர் வதன மதிகண்டு - அழகு மிகுந்த பெண்களுடைய முகமாகிய சந்திரனைக் கண்டு, ஆகம் புடைதது - உடல் பூரிதது, மலர் பருவப்போது இரண்டுண்டு - விரியும் தன்மையுடைய மலர்களாகிய கண்களிரண்டு உள்ளன எ - று.

6. துஞ்சுவரை மூட்டைதுளைக் கச்சுகங் கொடுக்கும
பஞ்சணையை மோதுவதென் பாவலவா—வஞ்சகரைச்
சேர்ந்தவரு மன்னவர்தந் தெண்டனைக்கு ளாவதுபோற்
சார்ந்ததனுல் வந்தவினை தான்.

உரை :—துஞ்சுவரை மூட்டை துளைக்க - தூங்குகின்றவர்களை மூட்டைப் பூச்சியானது கடித்துத துளைககவும், சுகங் கொடுக்கும் பஞ்சணையை மோதுவதென் பாவலவா - சுகந் தருகின்ற பஞ்சு மெத்தையை அடிப்பதற்குக் காரணமென்ன? கவிஞனே!, வஞ்சகரைச் சேர்ந்தவரும் அன்னவர் தம் தண்டனைக்குள் ஆவதுபோல - கபடமுடையவர்களைச சேர்ந்தவர்களும் அவர்களைப்போலத தண்டனைக்குள்ளாவதை யொப்ப, சார்ந்ததனுல் வந்த வினைதான் - மூட்டையைச சார்ந்ததனுல் படுக்கைக்கு வந்த தீவினையாகும், எ - று.

7. வாய்ந்தசிவ ஞானபுரி வாழ்முருகன் சந்நிதியிற்
சேர்ந்தமனங் கண்கை திரும்பாதெ—னய்ந்தநால்
வேதமுங்கா ணுப்பதத்தை விட்டுவரு மோநறுந்தேன்
போதகலு மோவறுகாற் புள்.

உரை :—வாய்ந்த சிவஞான புரிவாழ முருகன் சந்நிதியில் - நலஙகள் பொருந்திய சிவஞானபுரியில் வீற்றிருக்கும் குமரப்பெருமான் சந்நிதானத்தில் சேர்ந்த மனம் கண் கை திரும்பாதென் - போய்த் தரிசித்த மனமும் கண்ணும் கையும் அவ்விடத்தைவிட்டு மீளாமைககுக் காரணம் யாது?, ஆய்ந்த நால்வேதமும் காணுப் பதத்தைவிட்டு வருமோ - ஆராய்ந்த நால் வகை வாக்குகளும் கண்ணுக்குப் புலனுகாத நாதத்துவத்தைவிட்டு

நீங்குமோ, அறுகால் புள் நறுந்தேன் போதகலுமோ - ஆறு காலுடைய வண்டானது தேன் மணங்கமழும் பூவைவிட்டு நீங்குமா? (நீங்காது), எ - று.

8. வாய்சிவந்து மெய்பசந்த வாலைமண வாளனொரு
வேய்பெறவந் தானதென்ன விள்ளுவாய்—தூயரெலா
மன்னைபிதா வில்லாவனாதி யென்பரப் பழிச்சொற்
றன்னைமரு வாதிருக்கத் தான்.

உரை :—வாய் சிவந்து மெய் பசந்த வாலை மணவாளன் - சிவந்த வாயும் பச்சைநிற வுடம்புமுடைய கன்னியாகிய உமையம்மையின் கணவனாகிய சிவபெருமான், ஒரு வேய்பெற வந்தான - ஒரு மூங்கிலிலுதித்தான், அது என்ன விள்ளுவாய் - அதற்குக் காரணம் யாதென்று சொல்லுவாய், தூயரெலாம் - பரிசுத்த மனமுடைய எல்லாரும், அன்னை பிதா இல்லாத அனாதி என்பர் - தாய் தந்தை யில்லாத அனாதி முதல்வனென்று அவனைக் கூறுவார்கள், அப் பழிச்சொல் தன்னை மருவாது இருக்கத்தான் - அந்த இகழ்ச்சிச் சொல்லானது தன்னைப் பொருந்தாதிருக்கத்தான் மூங்கிலிலே உதித்தானென்க, எ - று.

9. பொறியுலவு பாலவிழிப் புத்தே ளொருநாட்
சிறுவனைத்தின் றானதென்ன செப்பீர்—செறியலைவாய்
நஞ்சுண்டு பித்தேறி நாடுமன்னந் தானறியா
தஞ்சதலை யாகிலென் செய்வான்.

உரை :—பொறியுலவு பால விழிப்புத்தேள் - தீப்பொறி பறக்கின்ற நெற்றிக் கண்ணையுடைய கடவுள், ஒரு நாள் சிறுவனைத் தின்றான அது என்ன செப்பீர் - ஒருதினம் பிள்ளைக் கறியைத் தின்றான் அதற்குக் காரணம் யாதென்று சொல்லுக, செறியலைவாய் நஞ்சுண்டு பித்தேறி - நெருங்கிய அலைகளையுடைய பாற்கடலி லெழுந்த விடத்தையுண்டு பைத்தியம் பிடித்து, அன்னம் தானறியாது அஞ்சுதலையாகில் என் செய்வான் - சோறு அறியாது (அன்ன வடிவான பிரமனாற் காணப்படாது) பயம் ஏற்படுமானால் (அஞ்சுதலையை யுடையவனானால்) அவன் என்ன செய்யக்கூடும், எ - று.

10. போதமெவர்க் கும்புகல் ஞானசோதி யென்போன்
மாதுமயல் கொண்டுடலம வாடியதென்—னாதரவாந்
தானசைந்தல் லாலணுவுஞ் சற்றசையா போகமுயி
ரானவைக்கெ லாம்விளைவிப் பான்.

உரை :—போத மெவர்க்கும் புகல் ஞான சோதி என்போன் ஞானத்தை யெல்லார்க்கும் அறிவித்தருளுகின்ற பேரறிவும் ஒளி வடிவு மானவன், மாது மயல்கொண்டு உடலம் வாடியதென் - பெண் மோகங் கொண்டு மேனி தளர்ந்த காரணம் யாது?, ஆதரவாம் தான் அசைந்து அல்

லால் அணுவும் சற்று அசையா - எல்லாவற்றிற்கும் ஆதாரமான தான் அசையாமற் போனால் ஒரு சிறு அணுவும் அசையாது, (ஆதலால்) உயிரானவைக்கெலாம் போகம் விளைவிப்பான் - எல்லா வுயிர்களுக்கும் போகத்தையூட்டுவிப்பதற்காகத் தான் போகியாய் நடிப்பனென்க, எ - று.

11. வீடேற வுன்னுமன்பர் மெய்யில்வள ரீசனொரு
மாடேறு நீதி வழுத்துவீர்—நாடோறென்
கண்மலரைத் தாங்குமிரு கான்மலரைத் தாங்குவனென்
றெண்ணிமால் வேண்டுகையா லே.

உரை :—வீடு ஏற உன்னும் அன்பா மெய்யில் வளா ஈசனொரு மாடு ஏறும் நீதி வழுததுவீா - மோட்சமடைய வெண்ணுகின்ற அன்பர்களுடைய மெய்யுணாச்சியிற் றிகழுகின்ற இறைவன் காளை வாகனத்தி லேறுவதற்குரிய நியாயத்தைச சொல்லுவீராக!, நாடோறு - பல நாட்கள்தோறும், என் கண்மலரைத் தாஙகும் இருகால் மலரைத் தாங்குவன் - என்னுடைய கண்ணை அருச்சனை மலராக ஏற்றுக்கொண்ட இரண்டு திருவடிகளையும் காளையாக நான் தாஙகுவேனென்று, எண்ணி மால் வேண்டுகையிலே - தியானித்துத் திருமாலானவர் பிராாததனை செயத கொண்டபடியினாலே காளைவாகனம் ஏறினாரென்க, எ - று.

12. விண்மதிக்கு மேனிமெலிவு கறைவளர்ச்சி
நண்ணலுடன் பாமபடுத்த நாட்டமெவன்—எண்ணாது
தடாதனசெய் தாரெவரா னாலுமதனாலே
படாதன படாரோ பரிந்து.

உரை :—விண்மதிககு மேனி மெலிவு கறை வளர்சசி நணணலுடன - ஆகாயததிலுள்ள சந்திரனுக்குத தேய்தல் வளர்தல் களஙகம் முதலிய குற்றஙகள அமைந்திருப்பதுடன, பாமபு அடுதத நாட்டம எவன் - பாம்பு அதனை விழுஙகுவதற்காக நெருஙகின நோக்கம் யாது ?, எண்ணாது அடாதன செய்தாா - ஆலோசியாமல் பொருத்த மில்லாத தவறுகளைச செய்தவர்கள், எவரானாலும் - யாராயிருந்தாலும், அதனாலே பரிந்து படாதன படாரோ - அதனாலே வருந்திப் படமுடியாத துயரங்களை யனுபவிக்க மாட்டாரோ ?, எ - று.

13. தேங்கனி தாம்பூலந் தினமபடைப்பார் தெய்வத்திற்
காங்கதனை யுண்டகுறி யாதுசொல்வீ—ரோங்குதெய்வ
மெய்யுருக்கண் டார்துண்ட மென்குறியுங் காண்பதன்றி
வையமதில் யார்காண்ப வர்.

உரை :—தெய்வத்திற்கு தேஙகனி தாம்பூலம் தினம் படைப்பார் - கடவுளுக்குத தேங்காய் பழம் வெற்றிலை பாக்குத தினந்தோறும் நிவே

திப்பார்க்கு, ஆங்கு அதனை உண்ட குறியாது சொல்வீர்-தெய்வம் அவற்றை யேற்றுக்கொண்டதற்கு அடையாளம் யாது சொல்வீர், ஒங்கு தெய்வ மெய் யுருக் கண்டார் - சிறந்த தெய்வத்தின் உண்மையான திருமேனியைக் காணப்பெற்றவர்கள், துண்டமென் குறியும் காண்பதன்றி - ஏற்றுக் கொண்ட தெய்வத்தின் நுட்பமான திருமுகக் குறிப்பை யறிவாரே யன்றி, வையமதில் யார் காண்பவர் - உலகத்தில் பிற யார் அதனைக் காண முடியும், எ - று.

14. வீடடுத்தோர்க் கீயும் விமலனு ரன்றொருநா
ளோடெடுத்துப் பிச்சையெடுத் துண்டதென்னோ—வீடின்
பத்தினிமார் கற்பழித்த பாவமழிந்தோ ருயர்ந்தோ [முனி
ரெத்தகைய ரேனும்விடா தே.

உரை :—வீடு அடுத்தோர்க்கு ஈயும் விமலனார் - தன்னை யடுத்தவர்களுக்கு மோட்சத்தைக் கொடுக்கவல்ல குற்றமற்ற பெருமான், அன்று ஒரு நாள் ஓடு எடுத்துப் பிச்சை எடுத்து உண்டதென்னோ - முன்னொரு நாள் தலையோட்டில் ஐயமேற்றுண்ட காரணமேது?, வீடில் முனி பத்தினிமார் கற்பழித்த பாவம - அழிதலில்லாத தாருகாவனத்து முனிவர்களுடைய மனைவியர்கள் கற்பை யிழக்கும் பொருட்டுச் செய்த குற்றம், இழிந்தோர் உயர்ந்தோர் எத்தகையரேனும் விடாதே - (அப்படிப்பட்ட பாவம) தாழ்ந்தவரா யிருந்தாலும் உயர்ந்தவரா யிருந்தாலும் எப்படிப்பட்டவரையும் பற்றித் தொடராமல் நீங்காது, எ - று.

15. இருசுடரொ ருங்கெதிர்க்கி னெய்துமிரு ளென்னே
மருவுமுறை நிச்சயமா மன்றோ—விரவியுட
றன்னையராத் தீண்டுஞ்சமை யத்திருண்மி குக்கு
மன்னதறி யாருலகில் யார்.

உரை :—இருசுடர் ஒருஙகு எதிர்க்கின் எய்தும் இருள் என்னே மருவும் - சந்திரனும் சூரியனும் ஒருங்கு சேர்ந்து எதிர்த்தால் அவர்களுக்கு முன் இருளானது எங்ஙிலையடியும், உரை நிசசயமாம அன்றோ - இருள் ஒழிந்துபோகுமென்ற வாக்கியமானது உறுதியல்லவா? இரவியுடன் தன்னை அராத் தீண்டும் சமயத்து இருள் மிகுக்கும் - சூரியனைப்போல மதியையும் பாம்பு மறைக்குஞ் சமயத்தில் இருள நிகப்படும், அன்னது அறியார் உலகில் யார் - அதை யுலகத்தில் தெரியாதவர்கள் யாரிருக்கிறாகள், எ - று

16. வரங்களுயிர்க் கீந்தளிக்கு மால்வால் படைத்த
குரங்குதுணைக் கொண்ட குறிப்பென்—னுரங்கொண்ட
வல்லவர்க்குப் புல்லும் வலியபடை யென்பாரச்
சொல்வலி காக்கைக்கு மதித்து.

உரை:—வரங்கள் உயிர்க்கு ஈந்து அளிக்கும் மால் - எல்லா வுயிர்களுக்கும் வரங்களைக் கொடுத்து அருள்செய்கின்ற திருமால், வால் படைத்த குரங்கு துணைக்கொண்ட குறிப்பு என் - வாலுடைய குரங்குகளைத் தனக்குத் துணையாகக் கொண்ட காரணம் யாது ?, உரம் கொண்ட வல்லவர்க்குப் புல்லும் வலிய படை என்பார் திறமையுடைய வல்லவனுக்கு அற்பமான புல்லும் ஓர் ஆயுதமாகும் என்பவருடைய, சொல்வலி காக்கைக்கு மதித்து - சொல்லின் திறத்தைப் பொருட்படுத்திக் காப்பாற்றுதற்காக வென்க, எ - று.

17. ஆரமணி வேணியர ஞர்கிளி யேறு
மாரனைக்கண் ணாலெரித்த வாறென்னே—பாரழலில்
வீழ்ந்தா ருய்வாரோ விளக்கில்விழும் விட்டிலுயிர்
வாழ்ந்ததுண்டோ தேவைமன்ன வா.

உரை:—ஆரம் அணி வேணி அரனார்-முத்துமாலையைத் தரித்த சடைமுடியையுடைய சிவபெருமான், கிளி ஏறு மாரனைக் கண்ணால் எரித்த வாறு என்னே-கிளியை வாகனமாகவுடைய மன்மதனை நெற்றிக் கண்ணால் எரித்த காரணம் யாது ?, தேவை மன்னவா - இராமநாதபுரத்து வேந்தனே !, ஆர் அழலில் வீழ்ந்தார் உய்வரோ - நிறைந்த நெருப்பில் வீழ்ந்தவர்கள் பிழைப்பார்களா ? விளக்கில் விழும் விட்டில் உயிர் வாழ்ந்ததுண்டோ - விளக்கில் விழுகின்ற விட்டில் பிழைத்த துண்டா ?, எ - று.

18. வல்லபெரி யோரும்வனி தையர்தஞ் செவ்விதழி
லில்லையெச்சி லென்பரது வென்புலவீர்—மெல்லதர
பானதனைத் தேனென்று ம பாலென்றுங் கூறுமபி
மானத்தான் மாலான் மதித்து.

உரை:—புலவீர் - புலவரே !, வல்ல பெரியோரும் - பெரியோர்கள் பலரும், வனிதையர் தம் செவ்வ இதழில் இல்லை எச்சில் என்பார் - பெண்களுடைய சிவந்த உதட்டு நீர்க்கு எச்சில் கிடையாதென்பார்கள், என் - அதற்கு என்ன காரணம் ?, மெல் அதர பானத்தை - மென்மையான உதட்டு நீர் பருகுவதை தேனென்றும் பாலென்றும் கூறு மபிமானத்தால்- பாலும் தேனுங் கலந்ததாகக் கூறுகின்ற புகழ்ச்சி காரணமாகவும், மாலால் மதித்து - மயக்கத்தால் நோக்குதல் காரணமாகவும் அவ்வாறுரைப்பர் எ - று.

19. துவரம் பருப்பிதழ்கண் டுயநகை வண்ணங்
கவரம பருப்பதக் கொங்கைம்மான்—புவிசூழ்
கடலைச் சுண்டற்கயில் கொள்கந்தன் புயஞ்சேர்
மடலைக்கொள் கூந்தல்வள்ளி மான்.

உரை:—துவர் இதழ் - பவளம்போன்ற இதழும், அம்பு கண் - அம்பு போன்ற கண்ணும், அருப்பு தூய நகை - அரும்பு போன்ற சுத்தமான பல்லும், வண்ணம் கவர் - நல்ல பொன்னிறத்தைக் கவர்ந்த, அம் பருப்பத கொங்கைமான் - அழகிய மலைபோன்ற தனங்களுமுடைய பெண் (யாரெனில்), புவிசூழ் கடலைச சுண்டற்கு, உலகத்தைச சூழ்ந்த கடலை வற்றச் செய்வதற்கு, அயில் கொள் கந்தன் - வேல் வீசிய குமாரப்பெருமானுடைய, புயம் சேர் - தோள்களைத் தழுவுகின்ற, மடலைக் கொள் கூந்தல்- தாழம்பூத் தரித்த குழலையுடைய, வள்ளிமான் - வள்ளிநாயகி யம்மையாவர், எ - று.

20. தன்றம்பி பெண்டிரண்டைச் சார்ந்திருந்தான் றந்திமுகன்
மன்றலின்னஞ் செய்யாதென் மன்னவா—வென்று
மிருகொம் புடையானை யில்லையென்றார் சொன்ன
ரொருகொமபு கையிலுள து.

உரை:—மன்னவா - வேந்தனே !, தந்திமுகன் தம்பி பெண்டிரண்டைச சார்ந்திருந்தான் யானைமுகக கடவுளின் தம்பியாகிய முருகப்பிரான் இரண்டு பெண்களை மணந்த பின்னும், மன்றல் இன்னஞ் செய்யாதென் - இன்னும் ஆனைமுகக் கடவுள் கலியாணஞ் செய்யாதிருப்பதற்குக் காரண மென்ன ?, என்றும் இரு கொம்புடையானை இலலையென்று யார் சொன்ஞர் - எப்போதும் இரு கொம்புடைய விநாயகரைப் பெண்ணில்லாதவ ரென்று யார் கூற முடியும்?, (கொம்பு என்பது பெணணென்று பொருள் படுதலின்) ஒரு கொம்பு கையிலுளது-ஒரு கொம்புதான் திருமுகத்திலுள்ள தெனில் மற்றொரு கொம்பு அவா திருக்கரததி லிருககின்றது (வல்லபை யென்ற ஒரு பெண் துதிக்கையின் சார்பிலிருக்கிறது), எ - று.

21. கச்சையிட்ட மென்முலையங் கன்னிதுரோ பதையை
மெச்சியிட்டங் கொண்டறுவர் மேவாரோ—நிச்சயமா
மின்னனை யாள்குந்தி வியந்துமுனம பயந்த
கன்னனைநீக் காதிருந்தக் கால்.

உரை:—கசசை யிட்ட மென் முலையங்கன்னி துரோபதையை - வாரணிந்த மெல்லிய தனஙகளையுடைய அழகிய கன்னியாகிய துரோபதையை, மெசசி இட்டங்கொண்டு அறுவர் மேவாரோ-புகழ்ந்து காதலித்து ஆறு பேர் சேர்தலில்லையா?, நிச்சயமாய் உறுதியாக ஆறுபேர் ஆவர், மின்னனையாள் குந்தி வியந்து முனம் பயந்த - மின்னலைப் போன்ற சாயலையுடைய குந்திமாதாணவள் சூரியனைக் கண்டு அதிசயத்தினுற் பெற்ற, கன்னனை நீக்காது இருந்தக்கால்-கர்ணனை விலக்காதிருந்தாலென்க, எ - று.

22. தேனினுந்தித்திப் புளதுதிண் புலியின்மிக் கவலி
யானதுவு மியாதுபுவி யாளரசே—கானமலர்த்
தேனிலதிக மின்னார்செவ் விதழே வெங்கலியே
கானப் புலியி லதிகம்.

உரை:—புவியாள் அரசே - பூமியை யாளுகின்ற வேந்தனே !, தேனி லும் தித்திப்புளதும் - தேனைப் பார்க்கிலும் இனிமையானதும், திண்புலி யின் மிக்க வலியானதுவும் - பெலமுள்ள புலியிலும் அதிக வலிமையுடைய தும், யாது - யாவை என்று கூறுக !, கானமலர்த் தேனிலதிக மின்னார் செவ்விதழே - மணம் பொருந்திய பூவிலுள்ள தேனைப் பார்க்கிலும் பெண் கள் அதரபானமே இனிது, வெங்கலியே கானப்புலியில் அதிகம் - கொடிய வறுமையே காட்டுப் புலியைப் பார்க்கிலும் அதிக வலுமை யுடையது, எ - று.

23. சேணளவுஞ் சிந்தளவுந் தெள்ளியவிண் மீனளவுங்
காணினுங்கா ணாமையென்ன காவலவா—பூணுமனத்
தாசையளத் தற்கரிய தாயினுமவேற் கண்வீசும்
வேசைமனம போலுமல்ல வே.

உரை:—காவலவா - காப்பதில் வல்லவனே ! சேணளவும் - வான் வரையும், சிந்தளவும் - கடலின் எல்லையளவும், தெள்ளிய விண் மீனளவும்- தெளிவான நட்சத்திர மண்டலத்தினளவும் காணினும் காணாமை என்ன - தேடிப் பார்த்தாலும் காணமுடியாதது எது ?, பூணும் மனத்தாசை அளத் தற்கு அரியதாயினும் - மனத்திலுதிக்கும் ஆசையானது அளவிடுதற்கு அரியதாயிருந்தாலும், வேள் கண் வீசும் வேசை மனம்போலும் அல்லவே- வேல்போன்ற கண்ணை வீசுகின்ற விலைமாதராது மனம்போல அது அவ வளவு அளவிடற்கரியதல்ல, எ - று.

24. நஞ்சிற்கொடிது நமனிற் கொடுஞ் செய்கை
மிஞ்சியதும யாதுவிறல வேந்தே—நெஞ்சத்
திடங்கனி விலாதா ரிடுமமுது மிக்க
கொடுங்குணப் பெண்டீருமெனக் கொள்.

உரை:—விறல் வேந்தே - வலிமையுடைய அரசனே !, நஞ்சில் கொடிது - விடத்தைப் பார்க்கிலும் கொடுமையானதும், நமனில் கொடும் செய்கை மிஞ்சியதும் யாது - இயமனைப் பார்க்கிலும் அதிகக்கொடுமையான செயலுடையதும் யாவை, நெஞ்சத்து இடங்கனிவிலாதார் இடும் அமுதும்- மனதில் இரக்கத்திற் கிடமில்லாதவர்கள் படைக்கின்ற சோறும், (நஞ்சிற் கொடியது) மிக்க கொடுங்குணப் பெண்டீரும் எனக்கொள் - மிகுந்த கொடுமையான குணமுடைய பெண்களும் என (முறையே இவ்விரண்டை யும்) கொள்க, எ - று.

25. ஓராழிநீரை முகிலுண்டு பொழியி னல்ல
நீராவ தென்னைநில வேந்தே—சீராய்ந்த
மேலோர் தமைச்சார்ந்த வீணருமே லாவரன்றோ
நூலாய்வல் லோயுளக்க ணோக்கு.

உரை :—நிலவேந்தே - பூமியாளும் அரசனே !, ஓராழி நீரை முகிலுண்டு பொழியின் நல்ல நீராவது என்னை - ஒப்பற்ற கடலின் உப்புநீரை மேகமானது நுகர்ந்து மழையாகப் பெய்தால் அது நல்ல நீராக இருப்பதெப்படி ?, சீராய்ந்த மேலோர்தமைச் சேர்ந்த வீணரும் மேலாவர் அன்றோ - புகழ் பெற்ற உயர்ந்தோர்களைச் சேர்ந்த கீழ்மக்களும் நல்லவர்களாவரல்லவா?, நூலாய் வல்லோய் உளக்கண் நோக்கு - நூலாராய்ச்சி செய்கின்ற கல்வித் திறமையுடையவனே! உன்னுடைய மனக் கண்ணினால் இதனைப் பார், எ - று.

26. ஊடுங்காற் புன்னகையு மோர்மடந்தை கொண்கனொடு
கூடுங்கா னெட்டுயிர்ப்புங் கொண்டதென்னே—யாடவன்
மாற்றாள் பிரிவை மதித்துமன்னாள் பெற்றசுக [றோய்
மாற்றாமை யாலு மவள்.

உரை :—ஓர் மடந்தை கொண்கனொடு - ஒரு பெண்ணானவள் தன் கணவனொடு, ஊடுங்கால் - சிறு சண்டையாகிய புலவி நிகழுமிடத்தில், புன்னகையும் - புன்சிரிப்பும், கூடுங்கால் - புணரும்போது, நெட்டுயிர்ப்புங் கொண்டதென்ன - ....., ஆடவன் தோய் மாற்றாள் பிரிவை மதித்தும் - கணவன் போய்ச் சேருகின்ற தனக்கெதிரியாகிய பெண்ணை அவன் பிரிந்து வந்து விடுவானென்ற புன்சிரிப்பும், அன்னாள் பெற்ற சுகம் ஆற்றாமையாலும் அவள் - முன்னாளிலடைந்த சுகம் போதாமையாலுமென்க, எ - று.

27. தெய்வப்பிடியை மணஞ்செய்த குகன்வேடர் குலத்
தையன்மணஞ் செய்ததென்ன தார்வேந்தே—செய்யதரு
மேவுலகத் தேவரைப்போல் வேண்டெமையுங் காவென்ற
பூவுலகத் தேவர் பொருட்டு.

உரை :—தார் வேந்தே - வெற்றிமாலை யணிந்த மன்னனே!, தெய்வப் பிடியை மணஞ்செய்த குகன் - தெய்வயானையைக் கலியாணஞ் செய்து கொண்ட முருகப்பெருமான், வேடர்குலத் தையல் மணஞ்செய்த தென்ன - வேட சாதியிற் றோன்றிய பெண்ணையும் மணந்துகொண்டதற்குக் காரணமென்ன?, செய்ய தரு மேவுலகத் தேவரைப்போல் - செம்மையான கற்பக மரங்களையுடைய விண்ணுலகத்திலுள்ள தேவர்கள் பிரார்த்தித்ததுபோல, வேண்டு எமையும் காவென்ற பூவுலகத்தேவர் பொருட்டு - பிரார்த்தித்து எங்களையுங் காப்பாற்றுக என்று அப்பெருமானைக் கேட்டுக்கொண்ட பூமி

லுள்ள உயர்ந்தவர்கள் பொருட்டு வள்ளிநாயகியை மணஞ் செய்தாரென்க, எ - று.

28. வாரிமணியுந் திருவுமா யவனுக்கீந் தரற்குக்
காரிகொடுத்த தென்ன காவலவா—வாரணத்தோ
லாடையான் சின்னமதியார் சடையான்வெம் பணியான்
றோடுடையா னென்று மதித்து.

உரை :—காவலவா - காப்பதில் வல்லவனே!, வாரிமணியும் திருவும் மாயவனுக்கு ஈந்து - திருப்பாற் கடலானது தன்னிடத்திலுண்டான இரத தினத்தையும் அல்லது கௌத்துவ மணியையும் இலக்குமியையும் திருமாலுக்குக் கொடுத்துவிட்டு, அரற்கு - சிவபெருமானுக்கு, காரி கொடுத்த தென்ன - கருநிறமுடைய விஷத்தைக் கொடுத்ததென்ன?, வாரணத்தோல் ஆடையான் - யானைத்தோலை யுடையாகத் தரித்துக்கொண்டவ ரென்றும், சின்னமதியார் சடையான் - இளஞ் சந்திரன பொருந்திய சடையையுடையவ ரென்றும், (அற்ப அறிவும் சடையு முடையவரென்றும்) வெம் பணியான் - கொடிய பாம்பை யாபரணமாக வுடையவனென்றும், தோடுடையான என்றும் - தோட்டினை யணிந்தவனென்றும், மதித்து - எண்ணி யவ்வாறு கொடுத்தது என்க, எ - று.

29. மச்சமென்று செம்பருந்து வாரிப்பறந் தோட
விச்சைகொண்டு மண்ணுண் டிருந்தானே—நிச்சயமாய்
மாமியாரமே லேறி மானத் தைக்கைக் கொண்டா
னுமதனைப் பேச னலனு.

உரை :—மச்சமென்று செம்பருந்து வாரிப் பறந்தோட - சிவந்த பருந்துபோன்ற கருடன் மச்சாவதார மெடுத்ததால் மீனென்று திருமாலை யெண்ணித் தூக்கிக்கொண்டு போக, இச்சைகொண்டு மண்ணுண்டு இருந் தானே - அதன்மேலிருப்பதற்குப் பிரியப்பட்டுப் பூவுலகத்தை வயிற்றினகத்தே கொண்டிருந்தான், நிச்சயமாய் - உறுதியாகவே, மாமியார் மேலேறி மானத்தைக் கைக்கொண்டான் - தன்னுடைய மார்பில் பொருந்திய திருமகளைப் புணாந்து தன் பெருமையும் குறைவுபடா திருந்தான், நாம் அதனைப் பேசல் நலனு - நாம் அதனைப் பேசுதல் தக்கதாகுமா?, எ - று.

30. மாதொருத்தி பெற்ற மதலைதனை முனிந்து
போதுயிலென் றுள்புகுமை போர்வேந்தே—மாதமொன்று
வாராக் கணவன்மல ரணையில்வந் திருக்கு
நேரம்பா லென்றழுதா னென்று.

உரை:—போர் வேந்தே - போர் செய்வதில் வல்ல அரசனே !, மாதொருத்தி பெற்ற மதலைதனை முனிந்து - ஒரு பெண்ணானவள் தான் பெற்ற பிள்ளையைக் கோபித்து, போ துயில் என்றாள் புதுமை - நீ போய்த் தூங்கு என்று துரத்தினாள் இது ஆச்சரியமல்லவா ?, மாத மொன்றா வாராக் கணவன் - ஒரு மாதமாகத் தன்னிடத்தில் வராத நாயகன், மலர் அணையில் வந்திருக்கும் நேரம் - பூம்படுக்கையிற் சேர்வதற்கு வந்திருக்குஞ் சமயத்தில், பால் என்று அழுதானென்று - குழந்தை பால் வேண்டுமென்று அழுததற்காக அவவாறு சொன்னாளென்க, எ - று.

---

# முத்துவீரப்பிள்ளை

## பாடியது

---

பொன்னுசாமித் தேவரவர்கள் வினவிய வினாக்களுக்கு விடைகள்

1. உண்டென்று மில்லையென்று மொப்பிலா மெய்ப்பொருளை
விண்டுபழி கொள்ளும விதமெவனோ—மண்டலஞ்சேர்
பொற்போங்கு மற்புயனே பொன்னுச்சா மித்துரையே
தற்போத நீங்காமை தான்.

உரை:—ஒப்பிலா மெயப்பொருளை உணடு என்றும இல்லை என்றும் - இணையற்ற மெயப்பொருளாகிய கடவுளை உண்டெனவும் இல்லையெனவும், விண்டு பழிகொள்ளும் விதம் எவனோ - சொல்லிச சண்டையிட்டு பழியுண் டாக்கிக்.கொள்வதறகுக காரண மென்னோ ?, மண்டலஞ சேர் பொற்பு ஓங்கும் மல் புயனே - பூவுலகத்திற் சிறந்த அழகுடைய வளமான தோள் களை யுடையவனே!, பொன்னுசாமித் துரையே - ......, தற்போதம் நீங காமைதான் - (அதற்குக் காரணம்) தன்னறிவின் முனைப்பாகிய அகஙகாரம் நீங்காததேயாம், எ - று.

2. காட்சியிலி லாதிருக்கக் கர்த்தனுண்டென் றாகித்த
லாட்சியன்றோ மாட்சிமைசேர் சற்குணா—சேட்கிளர்ந்த
தூமத்தால் வன்னியுண்மை சொற்றதுபொய் யோநீண்ட
நாமத்தார் வேலோய் நவில்.

உரை :—மாட்சிமை சேர் சற்குணா மாண்பமைந்த நல்ல குணவானே!, கர்த்தன் காட்சியில் இலாதிருக்க உண்டென்று பாகித்தல் - கடவுள் கண் ணுக்குத் தோன்றாமலிருக்கும்போது, அவரிருக்கின்றாரென்று கருதுதல், தாட்சியன்றோ - பொருந்தாதல்லவோ, நீண்ட நாமத்தார் வேலோய் -

பெருமை பொருந்திய நெடிய வேலையுடையவனே!, சேட்கிளர்ந்த தூமத்தால் வன்னி யுண்மை சொற்றது பொய்யோ, தூமத்தில் தோன்றிக் காணப்படும் புகையைப் பார்த்து தோன்ருத நெருப்பு இருக்கிறதென்று ஊகித்தல் பொய்யாகுமா ?, நவில் - சொல்வாயாக, எ - று.

3. தூமமுள தேனெருப்புத் தோன்றுமென வறிஞர்
நாமறியச் சொற்றதெதை நாட்டிடுவான்—பாமலியும
வண்புகழா யிவ்வுலகம் வைகுதற்கோர் காரணமாம
பண்புறுதே வைத்தெரிப்பான் பார்.

உரை :—பாமலியும் வண்புகழாய் - கீர்த்தி நிறையப்பெற்ற பாடல்களையுடையவனே!, தூம முளதேல் நெருப்புத தோன்றுமென அறிஞர் நாமறியச சொறறது - புகை யுண்டானால் நெருப்புண்டென்று அனுமானப் பிரமாணத்தை அறிஞர்கள் ஏற்படுத்தியது எதை நாட்டுவான் - எதை நிலை நாட்டுவதற் கென்னில், இவவுலகம் வைகுதற்கு ஓர் காரணமாம் - இந்த வுலகம் தோன்றி நடைபெறுவதற்கு ஒப்பற்ற காரணராகிய, பண்புறு தேவைத் தெரிப்பான் - நலமுடைய கடவுளைத் தெரிவிப்பதற்காக வென்று, பார் - அறிக, எ - று.

4. எம்மைப் புரந்தருளு மீசனிற நெருப்பென்
றும்மைப்போல் வாண ருரைப்பதெவன்—கொம்மைக்
குவிமுலையார் வீழ்மதனு கூடிநின்று காட்டுஞ்
சவியுடையோ னுதலினுற் றான்.

உரை:—எம்மைப் புரந்தருளும் ஈசன் நிறம் நெருப்பென்று - நன்மை காப்பாற்றுகின்ற இறைவனது நிறம் தீயின் நிறமென்று, உம்மைப்போல் வாணர் உரைப்பதெவன் - உம்மைப்போன்ற கல்விமான்கள் கூறுவது எதனால், கொம்மைக குவிமுலையார் வீழ் மதனு-இளமையுடைய குவிந்த தனங்களையுடைய பெண்கள் காதலிக்கின் மன்மதனே !, கூடி நின்று காட்டுஞ் சவியுடையோ னுதலினுல்தான் - பொருள்களோடு சேர்ந்து நின்று அவற்றை விளக்கும் ஒளியுடையோன் இறைவனுதலா லென்க, எ - று.

5 எப்பொருட்கு முட்பொருளா யீச னிருக்கமதத்
தப்புப் பலதுவந்த தன்மையெனே—துப்புடையோ
ரந்தக ரானைக் கடையாளங் காட்டியவர்
தந்தமுணர் வாலிழைத்த தால்.

உரை:—எப்பொருட்கும் உட்பொருளாய் ஈசனிருக்க - எல்லாப் பொருளுக்கும் அந்தர்யாமியாய் அல்லது உள்ளாதாரவாய் இறைவன் ஒருவனே இருக்கவும், மதத்தப்புப் பலது வந்த தன்மை எனே - குறைபாடுடைய பல சமயங்கள் தோன்றுவதற்குக் காரணம் யாதோ, துப்புடை,

யோர் அந்தகர் - வலிய குருடர்கள், ஆனைக்கு அடையாளம் காட்டியவர் - ஆனை யெப்படி யிருக்குமென்று சொன்னவர்கள், தந்தம் உணர்வால் இழைத்ததால் - தாம் தாம் அறிந்த அளவில் வெவவேறு அடையாளஙகள் கூறியதுபோல வென்றுணர்க, எ - று.

6. தேவருக்குப் பெண்டிருத்த றீதன்றே தேர்ந்திடுநீ
யாவ திதைவிண் டறைகுவா—யேவருக்குங்
கற்புடைமா தோடு கலந்திருத்த லாற்பழுதின்
றொப்புரவோய் நீயறியா யோ.

உரை:—தேவருக்குப் பெண்டிருத்தல் தீதன்றே - தேவர்களுக்கு மனைவியரிருத்தல் குற்றமாகு மல்லவா ?, தேர்ந்திடு நீயாவது விண்டு அறைகுவாய் - ஆராய்சசியுடைய நீ இதற்குக் காரணம் யாதென்று தெளிவாகக் கூறுவாயாக !, எவருக்கும் கற்புடைய மாதோடு கலந்திருத்தலால் பழுதின்று - யாருக்குமே கற்பொழுக்கமுள்ள பெண்களோடு கூடியிருத்தல் குற்றமாகாதென்று, ஒப்புரவோய் நீ அறியாயோ - உலக நடையை யறிந்தவனே! உனக்கு அது தெரியாதா ?, எ - று.

7. பெண்ணொருத்தி மெய்யிருக்கப்
பேதையொன்றைப் பேணுசடைக்
கண்ணிருக்க வீசன் வைத்த
காரணமென் —னுண்ணிடையை
வேணிமிசைக் கொள்ளானேல்
விண்ணுமண்ணும வெள்ளமுண்டு
கோணிநிலை பேருமெனக்
கொள்.

உரை:—பெண்ணொருத்தி மெய்யிருக்க - உமையம்மையாகிய ஒரு பெண் திருமேனியி லிருக்கவும், பேதை யொன்றைப் பேணு சடைக் கண்ணிருக்க - மற்றொரு பெண்ணைச சடையினிடததி லிருக்கும்படியாக, வைதத காரணமென - வைத்த காரணம யாது ?, நுண்ணிடையை - நுட்பமான இடையையுடைய அந்தப்பெண்ணை, வேணிமிசைக் கொள்ளானேல் - சடையின்மேல் இறைவன் வைக்கவில்லையாயின், விண்ணும் மண்ணும் வெள்ளமுண்டு கோணி நிலை பேருமெனககொள் - ஆகாயததிலும் பூமியிலும் நீர்ப்பெருககு அதிகரிதது நிலைதடுமாறி யழியுமென்று அறிக, எ - று.

8. அங்கையன லாகமதைச் சுட்டிடா தாவிதுவென்
சங்கைசிவன் றூணு சயமபிற்குச்—சங்கரனார்
மேனியனல் கண்ணுமனல் வேகவிட முண்டழியா
மோனிலையென் செய்யு மொழி.

உரை :—சிவன்தானு சயம்பிற்கு - சுயம்பாக நிலைபெற்ற சிவபெருமானுக்கு, அங்கை அனல் ஆகமதை சுட்டிடாதா - உள்ளங்கையி லிருக்கின்ற நெருப்பானது திருமேனியை வேகும்படி செய்யாதா ?, இது என் சங்கை - இது என்ன சந்தேகம், சங்கரனார் மேனி அனல் கண்ணும் அனல் - சிவபெருமானுடைய திருமேனியும் நெருப்பு மயம், நெற்றிக் கண்ணிலும் நெருப்பிருக்கின்றது, வேகவிடம் உண்டு அழியா மோனியை-வெப்பமுடைய விடம் உண்ணப்பட்டும் தகிக்க முடியாத மௌனக் கடவுளை, என் செய்யும் மொழி - நெருப்பு என்ன செய்யக் கூடுமென்று சொல்லு, எ - று.

9. அங்கியிடை வெப்பு மருநீரி டைக்குளிருந்
தங்கியிருந் தற்குவமை தானுளதோ—செங்கதிரோன்
றன்னிடத்துச் சூடுளது சந்திரன்பாற் றட்பமுள
தென்னினி வேண் டும்முவமை யே.

உரை :—அங்கியிடை வெப்பும் - நெருப்பிற் சூடும், அருநீரிடை குளிரும் - அருமையான நீரிற் குளிர்ச்சியும், தங்கியிருத்தற்கு உவமைதான் உளதோ - நிலைபெற்றிருப்பதற் குவமையாகக் கூறுதற்குப் பொருள்களுண்டா?, செங்கதிரோன் தன்னிடத்துச் சூடுளது - சிவந்த சூரியனிடத்தில் வெப்பமிருக்கிறது, சந்திரன்பால் தட்பமுளது - சந்திரனிடத்திற் குளிர்ச்சி யிருக்கிறது, என்ன இனி வேண்டும் உவமை - இவற்றிற்கு மேல் வேறு என்ன உவமானங்கள் வேண்டும், எ - று.

10. வெண்பளிங்கு தண்ணியதா மேவியிருந் துஞ்சுடர்நங்
கண்கரிப்பச் செய்வதென்ன காரணங்கா—ளொண்கழலாய்
தீயருப சாந்தகரைச் சேரினுந்தந் தீயவியல்
பாயதொழில் செய்வா ரறி.

உரை :—வெண்பளிங்கு தண்ணியதா மேவியிருந்தும் - வெண்ணிறமுள்ள படிகம் அல்லது கண்ணாடியானது தன்னியல்பிலே குளிர்ச்சியாயிருந்தாலும், சுடர் நம் கண் கரிப்ப செய்வதென் காரணங்கான் - அதிற் படுஞ் சூரிய வொளியானது நமது கண் காந்தும்படி செய்தது அதற்குக காரணமென்ன, ஒண் கழலாய் - ஒளியுடைய சிலம்பு அணிந்தவனே!, தீயர் உபசாந்தகரை சேரினும் - தீய குணமுடையவர்கள் விருப்பு வெறுப்பற்ற அமைதியுடைய பெரியாரை சார்ந்தாலும், தம் தீய வியல்பாய் தொழில் செய்வார் அறி-தமது கெட்ட தன்மைக்கேற்ற செயல்களையே செய்வாரகளென்று அறிவாயாக, எ - று.

# முத்துச் சுப்பையர்

## பாடியது

—∘∘❦∘∘—

### கலிகால வியல்பைப் பற்றியது

1. மேட்டைத் தணித்துக் கடுந்தாவை விண்வரை மேவவைத்துக்
காட்டைப் புறஞ்செய்து காடாக்கி யூரைக் கருதிமர
மூட்டைப் பிடுங்கித் தலைகீழ்நட்டு முளைக்க வைக்குஞ்
சேட்டைக்கென் றோகலி யேயுன்னை வேதன் சிருட்டித்ததே.

உரை :—மேட்டைத் தணித்து - உயர்ந்த விடத்தைப் பள்ளமாக்கி, கடுந்தாவை விண் வரை மேவ வைதது - பெரிய பள்ளத்தை வானம் வரை யுயரும்படி யுயர்தது, காட்டைப் புறஞ் செயது நாடாககி - காட்டிடத்துள்ள மரங்களைக் களைந்து நாடுபோலச செய்து, ஊரைக் கருதி - ஊரைத் தொலைகக வெண்ணி, மரமூட்டைப் பிடுஙகி தலைகீழ் நட்டு முளைக்க வைக்கும் - மரத்தை வேரோடு பிடுஙகித் தலைகீழாக நட்டு அதனையும் முளைக்கும்படியாகச செயயும், சேட்டைககென்றோ - குறும்பு செய்வதற்காகவோ, கலியே உன்னை வேதன் சிருட்டித்ததே - கலிபுருடனே உன்னைப் பிரமன் படைத்ததுபோலும், எ - று.

2. அண்டின பேரைக் கெடுப்போரு மொன்றுபத் தாய்முடிந்து
குண்டணி சொல்லுங் குடோரிகளுங் கொலையே நிதஞ்செய்
வண்டரைச் சேர்த்தின்ப சல்லாபம பேசு மறையவருஞ்
சண்டிப் பயல்களுமே கலிகாலததிற் றட்டிகரே.

உரை :—அண்டினபேரைக் கெடுப்போரும் - தன்னை யடைந்தவர்களைக் கெடும்படி செய்பவரும், ஒன்று பததாய முடிந்து குண்டுணி சொல்லும் குடோரிகளும் - ஒன்றைப் பததாகப் பெருககிப் பொய் சொல்லி விரோதம் விளைக்கின்ற கோடாரிககாம்பு போன்றவர்களும், கொலையே நிதஞ்செய்வண்டரைச சேர்த்து இன்ப சல்லாபம் பேசு மறையவரும் - தினந்தோறும் கொலை செய்கின்ற துட்டர்களோடு பழகி, அவரோடு அளவளாவுகின்ற பிராமணரும், சண்டிப் பயல்களுமே - குதர்க்கவாதிகளுமே, கலிகாலத்தில் தாட்டிகரே - கலிகாலத்திற் பெலமுள்ளவர்களாயிருப்பவர்கள், எ - று.

3. ஊசிக்கும் நூலுக்கு மாகாமற் செய்தொழி லுள்ளவெகு
தோசிக்குஞ் சாமித் துரோகிகட்குந் தொலையா வழக்காய்ப்
பேசிக்கொள் வோருக்குங் கற்பா லிலங்கிய பேதையரை
யாசிக்கும் பேர்கட்குமே கலிகாலம் யதார்த்த மதே.

உரை :—ஊசிக்கும் நூலுக்கும் ஆகாமல் செய் தொழிலுள்ள வெகு தோசிக்கும் - நூல் ஊசியோடு பொருந்தாமற் செய்வதுபோலப் பொருந்தும் காரியங்களைப் பொருந்தவிடாமற் றடுக்கும் பெரிய பாவிகளுக்கும், சாமி துரோகிக்கும் - எஜமானர்களுக்குத் துரோகஞ் செய்கிறவர்களுக்கும், தொலையா வழக்காய்ப் பேசிக்கொள்வோருக்கும் - தீராத விவகாரம் பேசுகின்றவர்களுக்கும், கற்பால் இலங்கும் பேதையரை - கற்பிற் சிறந்து விளங்கும் பெண்களை, யாசிக்கும் பேர்களுக்கும் - (தங்களைப்) பிச்சையாகக் கொடுக்க வேண்டுமென்பவர்களுக்கும், கலிகாலம் யதார்த்தமதே - கலிகாலம் உண்மையாய்ப் பொருத்தமுடையதாகும், எ - று

4. அள்ளித் திரவிய மீந்தாலும் பொய்யுரையா தவரை
கள்ளரென் றோதுங் கலியுகத்தே கடைந்தே யெடுத்துத்
தெள்ளமு தொக்க நொடிக் காயிரம்பொய் செலுத்துமதி
யுள்ளவரே பெரியோர் புவியோர்க்கு முவந்தவரே.

உரை :—அள்ளித் திரவியம் ஈந்தாலும் பொய்யுரையாதவரை கள்ளரென்று ஓதுங் கலியுகத்தே - பொருளை மிகுதியாக அள்ளிக் கொடுத்தாலும் பொய் சொல்லாதவர்களைத் திருடரென்று சொல்லுகின்ற கலிகாலத்திலே, கடைந்தே எடுத்துத் தெள்ளமுது ஒக்க நொடிக்கு ஆயிரம் பொய் செலுத்தும் - தெளிவான அமுததத்தைக் கடைந்தெடுத்ததுபோல வடித்தெடுத்த உறுதியான பொய்ச சொற்களை விநாடிக்கு ஆயிரம் வீதம் சொல்லிக்கின்ற, மதியுள்ளவரே பெரியோர் - அறிவுள்ளவர்களே உயர்ந்தவர்கள், புவியோர்க்கும் உவந்தவரே - உலகத்தார்கரும் இனிமையானவர்கள் அவர்களே, எ - று.

5. ஊட்டி யினித்தசொல் லுத்தமி யென்றுள் ளொருத்திவரக்
காட்டிக் கணவனைக் கண்ணுறக் காட்டிக் கனத்தமதக்
கோட்டி கொண்டா ரையுமே குடிமாதர்கள் கூடுவதால்
ராட்டுவைத் தார்களின்றே கலியிற்றுசி நங்கையரே.

உரை :—ஊட்டி இனித்த சொல் உத்தமியென்று உள் ஒருத்தி வர - தொண்டையிலேயே இனிய சொல்லையுடைய உத்தமியென்று பேசப்படுகின்ற ஒரு பெண் வீட்டினுள் வரவும், காட்டி - அவளைக் காண்பித்து, கணவனைக் கண்ணுறக் காட்டி - கணவன் அவளைப் புணரும்படியாகக் குறிப்பித்து, கனத்த மத கோட்டி கொண்டாரையுமே - மிகுந்த காமப பித்துக் கொண்ட பரபுருடரையும், குடி மாதர்கள் கூடுவதால் - குடும்பப் பெண்

கள் சேருவதால், கலியில் தாசி நங்கையரே - கலியுகத்தில் வேசிப்பெண்கள், இன்றே நாட்டு வைததார்கள் - இக்காலத்தில் பிழைக்க ஊதியமில்லாமல் இராட்டினத்தை வைத்து நூற்பாராயினர், எ - று.

6. வில்லாய் வளைந்து நிசங்காட்டி வாங்குவர் மீளவந்தே
யல்லும் பகலுங் கடன்கொடுத் தோர்க ளலைந்திடினும்
வல்லங்கம் பேசுவ ரில்லையென் றோதுவர் வா ளுருவிக்
கொல்லவும் பார்ப்பர் கலிகாலத்தே கடன் கொள்ளிகளே.

உரை :—வில்லாய் வளைந்து நிசஙகாட்டி வாஙகுவர் - வில்லுப்போல மரியாதையாய்க குனிந்து உண்மையாய் மீளக கொடுப்பவர்போலத தோற்றுவித்துக் கடன் வாங்குபவர்கள், கடன் கொடுததோர்கள் அல்லும் பகலும் மீள வந்து அலைந்திடினும் - ......, கலிகாலததே கடன் கொள்ளிகள் - கலிகாலத்திற் கடன் வாஙகினவர்கள், வல்லஙகம் பேசுவார் - வல்வழக்குப் பேசுவார்கள், இல்லையென்று ஓதுவார் - வாஙகின தில்லையென்று சொல்வார, வாள் உருவிக கொல்லவும் பார்ப்பார் - கத்தியெடுத்துக் கொலை செய்யவும் முயல்வார்கள், எ - று.

---

# இராமாநுஜ கவிராயர்

## பாடியது

1. தரலாற்றுந் தொட்டிக் கலைத்தமிழ்வேதா சலன்றிகிரி
வரலாற்றிம் மான்முலைக் கேற்றடிபட்ட வரைக்குலங்கள்
உரலாய்த் திரிகைய தாயம்மியாய்ச்சின்ன வுண்டைகளாய்ப்
பரலா யுருதுகளாய்ச் சிறுகாற்றிற் பறக்கின்றதே.

உரை :—தரலாற்றும் தொட்டிககலைத் தமிழ வேதாசலன் - இரவலர்க்கு வேண்டியவைதத தரும் ஆற்றலுடைய தொட்டிக்கலையில் வாழுகின்ற தமிழ் வாணனாகிய வேதாசல வள்ளலது, திகிரி வரலாற்று இம் மான் முலைக்கு - மலையில் வருவதைச செயத இப்பெண்ணின் தனங்களுககு, ஏற்றடிப்பட்டவரைக் குலஙகள் - எதிர்த்துத் தோல்வியடைந்த குனறினஙகள், உரலாய்த் திரிகையதாய் அம்மியதாய் சின்ன உண்டைகளாய் - உரலாயும மா அறைக்கும் இயந்திரமாயும் அம்மியாயும் சிறு உருண்டைக் கற்களாயும் வரவரத் தேய்ந்து, பரலாய் ஒருதுகளாய் - பருக்கைக் கற்களாயும் பொடியாயுமாகி, சிறு காற்றிற் பறக்கின்றதே - இலேசான காற்று அடித்தாற்கூடப் பறந்து போகும் தன்மையுடையன, எ - று.

கிருஷ்ணப்ப நாய்க்கன் குளத்தைப் புகழ்ந்து பாடியது

2. சாரவீடிருந்தோர் படிந்துசார்ந்திடிற் சீர்தருபுகழிலையென்றேவீடு
தூரமாயினரும படிந்துவீ டடையுந் தோற்றமற் றறிந்தத னாலே
வீரவேளலைத்த நுதற்கணான் சென்னி மேயதச் சுரநதியென்றால்
மாரகண் ணப்பநாயகன் குளத்து மகிமையா முரைசெய வற்றே.

உரை :—வீடுசார இருந்தோர் - மோட்சத்தை யடைய விரும்பினவர்கள், படிந்து சார்ந்திடில் - மூழ்கியதனைப் பெற்றால், சீர் தரு புகழிலை என்றே - சிறப்பான கீர்த்தி தனக்கில்லை யென்றறிந்து, வீடுதூர மாயினரும் - மோட்சத்திற்குத தூரத்திலிருப்பவர்களும், படிந்து - குளத்திற் படிந்து, வீட்டையும தோற்றமற்று அறிந்ததனாலே - வீட்டின் காட்சியையும் பெற்றாரென்பது தெரிந்து, அச்சுரநதி - அந்தத் தெய்வ கங்கையானது, வீரவேள் அலைதத நுதற்கணான் சென்னிமேயது - வீரமாய் வந்த மன்மதனை யழித்த நெற்றிக்கண்ணை யுடைய சிவபெருமானது தலையைச் சேர்ந்தது என்றால், மார கண்ணப்ப நாயகன் குளத்து மகிமை உரை செய அற்றே - மன்மதன் போன்ற கணணப்ப நாயகன் குளத்தின் பெருமையை நாம் கூறமுடியுமா?, எ - று.

---

## சந்திரசேகர கவிராச பண்டிதர்

### பாடியது

பொன்னுசாமித் தேவர்மீது பாடியவை

தலைவி கூற்று

1. திருமகட்குத தன்னிறமாஞ் செய்யும புயமும
பொருமகட்குப் பொன்னம் புயமும்—தருபொன்னு
சாமிவள்ளன் மாலைதந்தான் றண்கமல மானேநற்
சாமிவண்ண மாலைதரா தான்.

உரை :—தண் கமல மானே - குளிர்ந்த தாமரைப் பூவிலிருக்கும் திருமகள்போன்ற தோழியே!, நல்சாமி வண்ணமாலை தராதான் - நல்ல நமது எஜமான் நிறமான தாரினைக் கொடாமையால், திருமகட்குத் தன்னிறமாம் செய்யும் புயமும் - இலக்ஷுமிக்குத் தன் மார்பாகிய செங்கமலப் பூவையும், பொருமகட்கு - வீர லட்சுமிக்கு, பொன் அம்புயமும் - பொன் மலைபோன்ற தோள்களையும், தரு பொன்னுசாமி வள்ளல் - கொடுத்த பொன்னுசாமித் தேவரென்னும் கொடையாளி, மாலை தந்தான் - மயல் கொடுத்தான், எ - று.

செவிலி கூற்று

2. இய்யூர் தகரவெடுத்த திருமான் மருகன்
மையூர் குமரன் மலரடிக்கு—மெய்யூர்
மனத்தை யளித்தபொன்னு சாமிக்கு மானே
அனத்தை மறந்தாளென் றறை.

உரை :—மானே - பாங்கியே !, இ ஊர் தகர எடுத்த - தக்ர் என்னும் மெய்யோடு இகரஞ் சேர்வதா லுண்டாகிய திகிரி அதாவது சக்கராயுதத்தைத் திருக்கையி லேந்திய, திருமால் மருகன் - விண்டுவின் மருமகனுகிய, மையூர் குமரன் மலரடிக்கு - ஆட்டு வாகனத்தையுடைய முருகனது திருவடிக மலங்களுக்கு, மெய்யூா மனத்தை யளித்த - உண்மையான வுள்ளன்பைக் கொடுத்த, பொன்னுசாமி வள்ளலுக்கு - ......, அனத்தை மறந்தாளென்று அறை - தலைவி சோறுண்பதை மறந்துவிட்டாளென்று தெரிவிப்பாயாக, எ - று.

வெறி விலக்கல்

3 ஆடிமா தம்பவணி புயத்தா ரன்றியே
ஆடிமாதம் பார்கண் ணீர்மாற்றி—நீடுமயல்
போக்குமோ வன்னய் புலவர்மிடியைக் கொடையான்
நீக்குபொன்னு சாமி நிருபன்.

உரை :—அன்னய் - அன்னையே!, புலவா மிடியைகொடையால் நீககு பொன்னுசாமி நிருபன - கற்ரோா தரிததிரத்தைத தனது வள்ளற்றன்மையா லொழிக்கின்ற பொன்னுசாமி மன்னனுடைய, மாதம்ப புயத்து-பெரிய தூண்போன்ற தோள்களில், ஆடி அணிதா அனறியே - அசைந்து அழகு செய்கின்ற மாலையே அல்லாமல், ஆடு - பலியிடும் ஆடானது, இம் மாது அம்பு ஆா கண்ணீா மயல மாற்றி நீடுமயல் போககுமோ - இந்தப் பெண்ணினுடைய அம்புபோன்ற கண்களில வடிகின்ற கண்ணீரை நிறுத்தி நீண்ட மோகத்தைத தொலைக்குமோ ?, எ - று.

தலைவி கூற்று

4. பொன்னரம் பூணும் புகழ்ப்பொன்னு சாமிவள்ளல்
துன்னுநாள் ராமன் றுபர்புரிவான்—மன்னளிதேன்
நற்கருமபு மற்கரும்பு நற்கரும்புங் கைக்கொளுமவேள்
எற்கரும்புண் ணுய்க்கவெய்வ னே.

உரை :—பொன் ஆரம் பூணும் புகழ்ப் பொன்னுசாமி வள்ளல்-பொன் மாலையணிந்த கீர்த்தியையுடைய பொன்னுசாமித தேவராகிய ஈகையாளன், துன்னு நாள் - நெருங்காத நாட்களில், ராமன் - இரவுக்கு அரசனுகிய சந்

திரன், துயர் புரிவான் - என்னை வருத்துவான் (அது எப்படியெனில்) மன் அளி தேன் நக்கரும்பும் அற்சுரும்பும் நற்கரும்பும் கைக்கொளும் வேள் - நிலைபெற்ற வண்டுகளோடு கூடிய தேன் விளங்கும் பூவரும்புகளையும் நல்ல வண்டு நாணையும் நல்ல கரும்பு வில்லையும் கையிற் கொண்டுள்ள மன்மதன், எறகு அரும்புண் உய்கக எய்வனே - என்மீது குணப்படுத்த முடியாத புண்ணுண்டாகும்படி அம்புகளை விடுப்பான், எ - று.

## தோழி கூற்று

5. அளகைப் பொறித்த கொடியண்ண லடிபோற்றும்
அளகைக்கோனும பொன்னு சாமி—துளிமதுத்தார்
தந்தான் மதனடங்கத் தண்மதியர் தானடுங்க
இந்தாவிந் தாமுகத்தா யிது.

உரை :—அளகைப் பொறித்த கொடி அண்ணல் அடிபோற்றும் - கோழியின் வடிவமெழுதிய கொடியையுடைய குமரப் பெருமானின் பாதங்களைத் துதிக்கின்ற, அளகைக் கோனும் பொன்னுசாமி - குபேரனாகிய பொன்னுசாமி வள்ளல், மதனடங்க - மன்மத னடஙகும்படியாகவும், தண் மதியத் தானடஙக - குளிர்ந்த சந்திரன் நடுங்கும்படியாகவும், மதுத்துளித் தார் தந்தான் - தேன் சொரிகின்ற மாலையைத் தந்தான், இந்து ஆமுகத் தாய் - சந்திரன்போன்ற முகத்தை யுடையவளே !, இந்தா இது - இதோ இம்மாலை யிருக்கிறது பார், எ - று.

## புறங்காட்டல் மாற்று

6. செவ்வே றிகழ்கரன் மாமலர்ச் சேவடி சிந்தைசெய்யும
தெவ்வேறி கல்பொன்னு சாமிபூ பாலனற்சீர்க் கிரிவாய்
வெவ்வே றினமணி மேவ முதக்கட நீர்மறைத்து
உவ்வேறின மதகவ்வினைக் காட்ட லென்றொண் டொடியே.

உரை :—செவவேல் திகழ் கரன் மாமலர்ச சேவடி சிந்தை செயயும் - சிவந்த வேற்படை விளங்குகின்ற திருக்கையையுடைய பெரிய திருவடிக் கமலங்களைத் தியானிக்கும், தெவவேல் இகல் பொன்னுசாமி பூபாலன நற்சீாக் கிரிவாய் - சததுருக்களை வெல்லுகின்ற போர்த்திறமையுடைய பொன்னுசாமி வள்ளலென்பவனது சிறந்த மலையினிடத்தே, ஒண்டொடியே - ஒள்ளிய வளையலணிந்தவளே!, நீ வெவவே றினமணிமேவ அமுதக்கடம் மறைதது - வெவவேறு விதமான இரத்தினஙகள் அணியப்பெற்ற அமுதகுடம் போன்ற தனங்களை நீ மறைத்துக்கொண்டு, உவவேறின மத கவ்வினைக் காட்டல் என் - ம் த் க் என்பவைகளோடு உகரங் கலந்ததா லுண்டாகிய முதுகைக் காட்டியது எதனால் ?, எ - று.

## செவிலி கூற்று

7. கைக்கார் நிதிதரு தேனுசிந் தாமணி கன்னன் கார்த்தி
கைக்கார் நிகரல வாங்கொடை யோன்பொன்னு சாமிகடக்
கைக்கார் வரையிற் பவனிவந் தான்கண்டு மால்கொள்காரி
கைக்கார் துணைபுரிவா திறவாது கருணை செய்தே.

உரை:—கைக்கார் நிதிதரு தேனு-கையிற் பொருந்தும் செல்வத்தைத் தரக்கூடிய காமதேனுவும், சிந்தாமணி கன்னன் கார்த்திகைக்கார் - சிந்தாமணியும் கருணனும் கார்த்திகை மாதத்து மழை மேகமும், நிகரலாம் கொடையோன் பொன்னுசாமி - ஒப்பில்லையென்று சொல்லும்படியான ஈகையுடைய பொன்னுசாமி வள்ளல, கடக் கைக்கார் வரவே பவனி வந்தான் - மதம் பொழியும் துதிக்கையையுடைய கரிய மதம்போன்ற யானை மேல் ஊர் கோலமாய் எழுந்தருளி வந்தான், கண்டு மால்கொள் காரிகைக்கு - பார்தது மோகங்கொண்ட பெண்ணுக்கு, இறவாது கருணை செயதே துணைபுரிவார் யார - அவள் சாகாதபடி கிருபைபுரிந்து உதவி செயபவர் யார் ?, எ - று.

8. என்றுகண்ட விந்துவைப்போ லிவண்முகஞ் சோர்ந்தாளம்மா
என்றுகண்ட னம்பாலு மெனவயிலா ளென்கண்ணே
என்றுகண்டங் கமமவழைத் திடினுமுரை யாக்கிளிக்கே
என்றுகண்டன் னீர்தடுப்பா யெழிற்பொன்னு சாமிமன்னே.

உரை:—என்று கண்ட இந்துவைப்போல் - சூரியன் முன் சந்திரன் ஒளி யிழப்பதுபோல, இவள் முகம் சோர்ந்தாள் - இவள் முகம் வாடினள், அம்மா என்று கண்டு அனம் பாலு என - அம்மா என்று கூப்பிட்டுப் பார்தது பாலும் சோறும் உண்ணென்று கூற, அயிலாள் - உண்ணமாட்டாள், என் கண்ணே என்று கண்டம் கம்ம அழைத்திடினும் - என் கண்ணே என்று உரத்த குரலோடு கூப்பிட்டாலும், உரையார் கிளிக்கே - பதில் கூறா கிளிபோன்ற என் பெணணுக்கு, எழில பொன்னுசாமி மன்னே - அழகிய பொன்னுசாமி வேந்தனே !, என்று கண்டு அந்நீர் தடுப்பாய் - எப்பொழுது பாரதது அந்தத தன்மையை மாற்றுவாய், எ - று.

9. வாராரக் கொங்கைமிசை மருவபொன்னு சாமிவள்ளல்
வாராரா வெல்லாமதி யழலாந்தென் றலன்றில்
வாரார்கலி யொலியும் வருத்த மனநொந்த னள்சொல்
வாரார்நீ யல்லாலம மன்னர் பெருமான் றனக்கே.

உரை:—வார் ஆர் அக்கொஙகை மிசை மருவு பொன்னுசாமி வள்ளல்- கசசுப்பொருந்திய அந்த தனங்களின்மீது தழுவுகின்ற பொன்னுசாமி மன்னன், வாரார் ராவெல்லாம்-வராத இரவு முழுவதிலும், மதியழலாம் - சந்தி

ரன் அக்கினி மயமாகத் தோன்றுகிறது, தென்றல் அன்றில் வாரார் கலி ஒலியும் வருத்த - தென்றலும் அன்றில் பறவையும் பெரிய கடலோசையும் அவளைத் துன்புறுத்த, மனம நொந்தனள் - ......, மன்னர் பெருமான் தனக்கே நீயல்லாமல் சொல்வார் யார் - அரசர் தலைவனுக்கு இதனைத் தோழியாகிய உன்னையன்றி வேறு யார் சொல்லக்கூடும், எ - று.

10. போதம் புடனே மதியளி நற்பூங் குயிறென்
வாதம புரிதுய ரால்வா டுமிவளைப் புரப்பாய்
போதம் புரமெரித் தோர்க்கோ துமவேள் பொற்கமல
பாதம புனைபொன் னுசாமி யெனுமபார்த் திபனே.

உரை:—போதம் புரமெரிததோர்க்குப் போதம் ஓதும் - திரிபுரத்தை யழித்த அரனுக்கு ஞானவுபதேசஞ் செய்யும், வேள் பொற் கமல பாதம் புனை - குமாரப்பெருமானது அழகிய திருவடித்தாமரைகளைச சிரமேற் கொள்ளுகின்ற, பொன்னுசாமி யெனும் பார்த்திபனே - பொன்னுசாமி யெனும் வேந்தனே!, போது அம்புடன் - மலர்க்கணைகளும், மதி - சந்திர னும், அளி - வணடும், நற்பூங குயில் - அழகிய குயிலும், தென்வாதம் - தென்றலுமாகிய இவைகள், புரிதுயரால் வாடும் இவளை - செயகின்ற வருததததால் தளாகின்ற இப்பெணணை, புரப்பாய - பாதுகாப்பாயாக!, எ - று.

11. அச்சுப்போற் புலவோரை மதித்திடு மண்ணலே
பொருமங்கசன் வாளியாம
நச்சுப்போது துறக்கத் துறந்தன ளுணும
பூணுந்துகிலு மிவடனங்
கச்சுப்போனதுங் காணாள் முகவைவாழ் காவலா
வளகேச விவள்கண்டுங்
கைச்சுப்போனக முண்டிலள் கெண்டைநேர் கண்ணியைப்
புரப்பாய்பொன்னு சாமியே.

உரை:—முகவை வாழ் காவலா - இராமநாதபுரத்தில் வாழுகின்ற மன்னனே!, அளகேச - குபேரனைப்போன்ற செல்வமுடையவனே!, புல வோரை அசசுப்போல் மதிததிடும் அண்ணலே - கல்விமான்களை யுயிர் போலக கருதிக காககின்ற வீரனே!, பொன்னுசாமியே - ......, பொரும் அங்கசன் வாளியாம் நசசுப்போது துறக்க - போரிடுகின்ற மன்மதன் அம் பாகிய நஞ்சுத்தன்மை பொருந்திய பூக்களை விடுக்கவே, இவள் நாணும் பூணும் துகிலும் துறந்தனள் - இவள் வெட்கத்தையும் தரித்த ஆடையை யும் நீககினாள், தனம் கசசுப் போனதும் காணாள் - கொஙகைமேலிருந்த ரவிக்கை நழுவினதையும் பார்க்கவில்லை, இவள் கண்டும் கச்சுப் போனகம் உண்டிலள் - இவள் கற்கண்டையும் வெறுத்து உணவும் உட்கொள்ள

வில்லே, கெண்டை நேர்கண்ணியைப் புரப்பாய் - கெண்டைமீன் போன்ற கண்ணுடைய இவளைக் காப்பாற்றுவாயாக, எ - று.

## கிளிவிடு தூது

12. அத்திகத்த வடுத்துக் கராவினை யட்டவாழி
நெடுமான் மருகனற்
சத்திகத்தன் சந்தாசலச் செந்தூர்வாழ் தாருகாரி
வலாரிமக ணகைப்
பத்திமுத் துக்குறத்தி மணாளனைப் பணியும்நம்
பொன்னுசாமி மகிபனைத்
தித்திக்கத் தகுமென் மொழிகூறிநீ சேரச்
செய்திடுவாய்மடக் கிள்ளையே.

உரை :—மடக்கிள்ளையே - இளங் கிளியே!, அத்தி கத்த அடுத்து - யானை ஒலியிட அதனை அணுகி, அக்கராவினை அட்ட ஆழி நெடுமால் - அந்த முதலையைக் கொன்ற சககராயதத்தை யுடைய பெரிய விண்டுவுக்கு, மருகன் - மருமகனும், நற்சத்தி கர்த்தன் - நல்ல திறமையுடைய முதல்வனும், சந்தாசலச செந்தூர் வாழ் - சந்தன மலைபோன்ற செந்திற்பதியில் வாழ்கின்ற, தாரகாரி - தாரகாசுரனைக் கொன்றவனும், வலாரி மகள் - இந்திரன் மகளாகிய தெய்வயானைக்கும், நகைப்பத்தி முத்துக் குறத்தி - முத்துப்போன்ற பல் வரிசையுடைய வள்ளி நாயகிகும், மணாளனை - கணவனு மானவனை, பணியும் நம் பொனனுசாமி மகிபனை - தொழுகின்ற நமது பொன்னுசாமி வேந்தனுக்கு, தித்திக்கத தகும் மென்மொழி கூறிநீ சேரச செய்திடுவாய் - இனிமை பயக்கததகக மெல்லிய சொற்களை நீ சொல்லி அவன்வந்து அணையும்படி நீ செய்வாயாக, எ - று.

13. ஆரம்பூணும் வரைக்குயமீதிலே யனங்கவேட
னலர்க்கணை தூவவே
ஆரமபூணுண் டுகிலுந் துயிலுநன் னம்மனை
கழுங்கும மடக்கிள்ளையும
ஆரம்பூணுந் துறந்துமெய் சோர்ந்தன ளவளைக்காத்
தணைத்தாள்வதுன் பாரமே
ஆரம்பூணுடை நற்குந்தவீரனே யண்ணலே
பொன்னுசாமி குபேரனே.

உரை :—ஆரம் பூணுடை நற்குந்த வீரனே - மாலையும் அணியும் தரித்த அழகிய வேலாயுதததை ஏந்திய வீரனே!, அண்ணலே - சிறந்த ஆண்மகனே!, பொன்னுசாமி குபேரனே - பொன்னுசாமி யென்னும் பெருஞ் செல்வனே!, ஆரம்பூணும் வரைக்குய மீதிலே - முத்துமாலை

தரித்த மலைபோன்ற கொங்கைமேலே, அணங்கவேள் தன் மலர்க்கணை துணவே - மன்மதன் தன்னுடைய மலர்வாளிகளைச் சிதறவே, ஆரம் பூண் நுண் துகிலும் - பூமாலை நகை மெல்லிய ஆடை யென்பவற்றையும், துயிலும் நல்லம்மனை கழங்கும் மடக்கிள்ளையும் - தூக்கத்தையும் அம்மானை விளையாடுதற்குரிய அழகிய கழற்சிக்காய்களையும் இளங் கிளிகளையும், ஆர் அம்பு ஊணும் - உட்கொள்வதற்குரிய தண்ணீரையும் உணவையும், துறந்து மெய் சோர்ந்தனள் கைவிட்டு உடல் வாடினள், அவளைக் காத்து அணைத்து ஆள்வதுன் பாரமே - அவளைப் பாதுகாத்துத் தழுவி யாட்கொள்வது உன் பொறுப்பே ஆகும், எ - று.

## பவனிச் சிறப்பு

14. எங்குந்தம் புகழோங்க வளித்தமூ வேழு
வள்ளல்களு மிவனீகையால்
தங்குந்தங்கு மிவற்கே புகழெனச் சாற்றுஞ்
சற்குணனும் பொன்னு சாமிமா
தங்கமேற்கொடு போந்தனனோர் தினஞ்சாருமம்
வீதியிற்கண்டார் மயல்கொடு
சங்குந் தங்கலையுந் தரியா துளந் தளர்ந்து
நாணமுந்தா மிழந்தார்களே.

உரை :—எங்கும் தம்புகழ் ஓங்க அளித்த மூவேழு வள்ளல்களும் - எவ்விடத்தும் தம் புகழ் நிலைத்து விளங்கும்படியாக ஈகை யியற்றிய முதலேழு இடையேழு கடையேழு சேர்ந்து ஆகிய இருபத்தொரு வள்ளல்களும், இவன் ஈகையால் தங்கும் தங்கும் இவற்கே புகழ் எனச் சாற்றும் - மிகுந்த கொடையினாலே இவனுடைய புகழே நன்றாக நிலைக்க வல்லதென்று கூறக்கூடிய, சற்குணனும் பொன்னுசாமி - நற்குணவானாகிய பொன்னுசாமி வள்ளல், மாதங்கம் மேற்கொடு போந்தனன் ஓர் தினம் - ஒருநாள் யானைமேற் பவனி வந்தான, சாரும் வீதியிற் கண்டார் மயல் கொடு - பவனிபோன தெருவில் அவனைப் பார்த்தவர்கள் மோகத்தினாலே, சங்கும் தங்கலையும் தரியாது உளம் தளர்ந்து - சங்கையும் தாங்கள் அணிந்திருந்த ஆடையையும் நழுவவிட்டு மனம் வாடி, நாணமும் தாமிழந்தார்களே - வெட்கத்தையும் கைவிட்டார்கள், எ - று.

## தார் வேண்டல்

15. மட்டுத்தார்க் கணையான் மதன்மாதினை வருத்தத்
தான்மனநொந்து மயங்கிப்போர்க்
கட்டுத்தார்ப் புரவிக்கொரு வீரநின் கருத்துத்
தானிரங்கிப் புயமேவுபூ

மொட்டுத்தார் தரவாங்கி வரச்சொன்னாள் முத்தத்தார்
நிரையொத்த முறுவலாள்
தட்டுத்தா னுரையாம லருளரிச் சந்த்ரனே
பொன்னுசாமி நரேந்த்ரனே.

உரை:—போர்கட்டுத்தார் புரவிக்கொரு வீர - போரில் கிண்கிணி மாலை கட்டப்பெற்ற குதிரைகளை செலுத்துவதில் இணையற்ற வீரனே!, அரிசசந்தரனே - அரிசசந்திரன் போன்ற மெய்யனே!, பொன்னுசாமி நரேந்திரனே - பொன்னுசாமி மன்னனே!, மட்டுத்தார்கணையான் மதன் - தேன் துளிகரும் பூமாலை யணிந்த அம்பினையுடைய மன்மதன், மாதினை வருத்த - பெண்ணைத் துன்புறுத்தியதால், தான் மனம் நொந்து மயங்கி - ... .., முத்ததார் நிரையொத்த முறுவலாள் - முத்துமாலை போன்ற பல் வரிசையுடைய மாதானவள், நின் கருத்துத தானிரங்கி மேவு பூமொட்டுத் தார் தர வாங்கி வரச சொன்னாள் - நீ நெஞ்சில் இரக்கம் வைத்து உன் தோளில் பொருந்திய முகை மாலையைத தரும்படி கேட்டு வாங்கி வரும் படி சொன்னாள், தட்டுத்தான் உரையாமல் அருள் - தடை கூறாமல் அதை யளித்தருள்வாயாக, எ - று.

தோழி கூற்று

16. பாலனத்தை விடுத்துநின் கண்ணிவள்
பாலனத்தைவிடுத்தனள் வேணுகோ
பாலனத்தை யுடையோன் மருகன்கோ
பாலனத்தையல் பாகனருள்பரன்
பாலனத்தை யணிநாசி வள்ளிகோபாத
பத்மபணி பொன்னுசாமிநீ
பாலனத்தைப் புரிசிலை மாரனம்பால்
வருததப்படாம லிப்பாவையே.

உரை:—நத்தை யுடையோன் வேணுகோபாலன் மருகன் - சஙகைத் தரிததவனாகிய வேணுகோபாலனது மருமகனும், கோபாலன் அத்தையல் பாகன் பரன் அருள் பாலன்-நெற்றிக்கண்ணை யுடையவனாகிய உமையொரு பாகனாகிய மேலோன் பெற்ற புதல்வனும், நத்தையணி நாசி வள்ளி கோ-நதநென்ற மூக்கணியை மூககிற் றரித்த வள்ளியம்மை தலைவனுமாகிய முருகப் பெருமானது, பாதபத்மம் பணி பொன்னுசாமி - திருவடித தாமரைகளைப் பணிகின்ற பொன்னுசாமி வள்ளலே!, பாலனத்தை விடுத்து நின்கண் இவள் பாலனததை விடுத்தனள் இவள் உன்னிடத்தில் பாலுண்ணும் அன்னத்தை அதாக விடுத்துத் தான் பாற் சோறுண் பதைத் தவிர்த்தாள், இப்பாவை சிலை மாரன் அம்பால் வருத்தப்படாமல்

பாலனத்தைப் புரி - இந்தப் பெண்ணானவள் வில்லையுடைய மன்மதன் கணையால் துயரப்படாதபடி பாதுகாத்தலை நீ செய்வாயாக, எ - று.

தலைவி கூற்று

17. மானேசரந் தொடுத்த மதனங்கம
விழித் தெரிததோன் மான் மலர்க்கோன்
மானேசாதவர் பரவும் பரனன்பன்
சேதுபதி மன்னன் வாயில்
மானேசராம் பொன்னுசாமிவள்ள
லென்னையவர்மருவ நல்ல
மானேசராகும்வகைநீ புரிந்தா
லிவ்வுலகில் வாழுவேனே.

உரை:—மானே - தோழியே !, சரம் தொடுத்த மதன் அங்கம் விழித்து எரிததோன் - தன்மேல் அம்பு விடுத்த மன்மதனுடலை நெற்றிக் கண்ணால் பார்த்து எரித்தவனும், மான் மலர்க் கோமான் நேசர் ஆதவர் பரவும் பரன் - திருமாலும் மலரோனாகிய பிரமனும் நேசத்தில் சூரிய னென்று சொல்லத்தககவர்களும் வழிபடுகின்ற மேலான கடவுளுமாகிய சிவபெருமானுக்கு, அன்பின் சேதுபதி மன்னன் - அன்பனாகிய சேதுபதி யரசனின், வாயில் மானேசராம பொன்னுசாமி வள்ளல - அரண்மனை மானேசராகிய பொன்னுசாமி வள்ளலென்பவர், என்னை அவா மருவ நல்லமா நேசராகும் வரை - என்னை யவர் வந்து தழுவத்தக்க நல்ல காதல ராகும்படி, நீ புரிந்தால் - நீ செயதால் இவ்வுலகில் வாழுவேலோ- ... ., எ - று.

18. சுரர்க்கோர் சுவையமுதைத் தூநெடுமா லீந்தனன்பூ
சுரர்க்கோ ரறுசுவைசேர் தூவமுதை யீந்தனைநீ
மண்டலத்தின் மூன்றடிமண் மாவிரந்தான் றீனர்கள்க
மண்டலத்தி னல்குரவு மாறநிதி சொரிந்தனைநீ
எனவாங்கு.
சக்கரத்தா னிருதர்களைத் தான்றுணித்தா னரணனஞ்
சக்கரத்தா னுட்பகையைத் தான்றுணித்தாய் நீசபையில்
எல்லார் வணக்காடை யீந்தரிமா னங்காத்தான்
எல்லார்க்கு நீயாடை யீந்தபி மானங்காத்தாய்
நல்லா ரணிகவர்ந்தா னாரயண னறிந்த
நல்லா ரணியவணி நல்கினைநீ நானிலத்தில்
வான்றரு வெனவே வழங்கு கொடையோய்
மீன்றரு கண்ணினள் விழைவெனு நறவை

உண்டு களித்தே யொளிவளை சோரக்
கண்டுபா லனமுங் கொண்டில ளணைமேற்
கண்டுபி லாது தொண்டைவாய் துடிப்பக்
காவிநீர் வார வோவியம் போன்றனள்
கருப்புக் கழையைக் குழைத்துத் தேற்றுளி
அருப்புக் கணையை விடுத்தன னனங்கவேள்
வெம்புலி யேறென விண்மிசை யூர்தரும்
அம்புலி யோவிவ ளாவிமேற் றூவின
தோவறு தென்றலுங் காவுறு குயிலும்
தண்ணுறுஞ் சிந்தும் பெண்ணைவா ழன்றிலும்
சந்தத முடற்றும் வெந்துயர் தணிப்பாய்
நன்னய விராம நாதபுரம் வாழ்
பொன்னு சாமியெனும் பூபதியே.

உரை :—சுரர்க்கோர் சுவை யமுதைத் தூ நெடுமால் ஈந்தனன் - பரிசுத்தமான பெரிய திருமால் தேவர்களுக்கு ஒரு சுவையுடைய அமுதத்தை யளித்தான், பூசுரர்க்கோர் அறுசுவை சோறு அமுதை ஈந்தனை நீ - நீ உலகத்தில் வாழும் தேவர்களுக்குப் பரிசுத்தமான அறுசுவை யுண்டி யளித்தாய், மண்டலத்தில் மூன்றடி மண் மாவிரந்தான் - உலகத்தில் மூன்றடி மண் வேண்டுமென்று விஷ்ணு மாவலிச் சக்கரவர்த்தியிடம் பிச்சை கேட்டனர், நீ நினர்கள் கமண்டலத்தில் நல்குரவு மாறநிதி சொரிந்தனை - வறியவர்கள் கைப் பாத்திரத்தில் அவர்களுடைய வறுமை நீங்கும்படியாக நீ செல்வத்தை வழங்கினாய், நாரணன் சக்கரத்தான் நிருதர்களைத் தான் துணித்தான் - நாராயணன் சக்கராயுதத்தால் அரக்கர்களைக்கொன்று அழித்தான், நீ அஞ்சக்கரத்தான் உட்பகையைத் தான் துணித்தாய் - நீ பஞ்சாட்சர செபத்தால் காமக் குரோத முதலிய மனப் பகையை ஒழித்தாய், சபையில் எல்லார் வளைக்கு ஆடை ஈந்து அரி மானங் காத்தான் - துரியோதனன் சபையில் ஒளி பொருந்திய வளையலணிந்த துரோபதைக்கு உடை வளரும் படி செய்து திருமால் அவளுடைய மானத்தைக் காப்பாற்றினார், எல்லார்க்கும் நீ ஆடை ஈந்து அபிமானங் காத்தாய்-எல்லார்க்கும் நீ உடைகொடுத்து உன்னன்பைப் பேணினை, ஞாலத்தில் - இவ் வுலகத்தில், நாராயணன் நல்லார் அணி கவர்ந்தான் - கண்ணன் பெண்களுடைய ஆபரணங்களைக் கவர்ந்து விளையாடினான், அறிந்த நல்லார் அணியை நீ அணி நல்கினை - அறிஞர்களாகிய நல்லவர்கள் அணியும்பொருட்டு நீ ஆபரணங்களைக் கொடுத்தாய், வான்தருவெனவே வழங்கு கொடையோய் - கற்பக மரம்போலக் கொடுக்கின்ற வள்ளற் றன்மையை யுடையவனே !, நன்னய இராமநாத புரம் வாழ் பொன்னுசாமி யென்னும் பூபதியே - நலங்கள் பொருந்திய

இராமநாதபுரத்தில் வசிக்கின்ற பொன்னுசாமி வேந்தனே!, மீன் தரு கண்ணினள் விழைவெனும் நறவை உண்டு களித்தே - மீன்போன்ற கண்ணையுடைய பெண்ணானவள் விருப்பமென்னும் தேனை யுண்டு மகிழ்ந்து, ஒளி வளை சோர - ஒளி பொருந்திய தன் வளையல்கள் நழுவப்பெற்று, கண்டு பாலனமும் கொண்டிலள் - கற்கண்டும் பாற்சோறும் உண்ணவில்லை, அணைமேல் கண் துயிலாது - படுக்கைமேற் றூங்கமாட்டாமல், தொண்டை வாய் துடிப்ப - தொண்டைக் கனிபோன்ற சிவந்த இதழ் துடிக்கவும், காவி நீர் வார - குவளை போன்ற கண்களி லிருந்து கண்ணீர் சொரியவும், ஓவியம் போன்றனள் - சித்திரப் பதுமைபோல அசைவற்றிருந்தாள், அநங்க வேள் - உருவில்லாத மன்மதன், கருப்புக் குழையைக் குழைதது - கருப்பு நிறமுள்ள கரும்பு வில்லை வளைதது, தேன் துளி அருப்புக் கணையை விடுததனன் - தேனை சிந்துகின்ற அரும்பாகிய அம்புகளை செலுத்தினான், வெம்புலி ஏறென - கொடிய வேங்கைபோல, விண்மிசை யூர்தரும் அம்புலியோ இவளாவிமேல் தாவினது - ஆகாயத்திற் செல்லுகின்ற சந்திரன் இவள் உயிர்மேல் பாய்ந்தான், ஓவறு தென்றலும் காவுறு குயிலும் - ஓயாத தென்றற் காற்றும் சோலையிலிருந்து கூவும் குயிலும், தண்ணுறுஞ சிந்தும் - குளிர்ச்சி பொருந்திய கடலும், பெண்ணைவாழ் அன்றிலும் - பனை மடலிலிருக்கும் அன்றிற் பறவையும், சந்ததமுடற்றும் - எப்போதும் துன்பஞ்செயயும், வெந்துயர் தணிப்பாய் - இவற்றாலாகிய கொடிய துன்பததைத தீர்ப்பாயாக!, எ - று.

---

# வேதநாயகம் பிள்ளை

## பாடியது

உத்தியோகத்திலிருந்து ஆறுதலைப்பற்றிப் பாடியது

1. தறைநீங் கினவுத்தி யோகத்தைக் கைவிட்ட தன்மையினாற்
   சிறைநீங் கினமபல தீயர்க்குள் ளாகிச் சிறுமையுறுங்
   குறைநீங் கினந்துட்டர் கூட்டமு நீங்கினங் கூடுந்துன்பப்
   பொறைநீங் கினநங் கறைநீங் கினமகிழ் பூனெஞ்சமே.

உரை:—நெஞ்சமே - மனமே!, தறை நீஙகின உத்தியோகத்தைக் கைவிட்ட தன்மையினால் - தறையிட்டாற்போல் ஓரிடத்தி லொட்டிக் கொண்டிருப்பதாகிய உத்தியோகத்தைவிட்டு நீங்கினமையால், சிறை நீஙகினம் - கட்டுப்பாட்டை விட்டு நீஙகினோம், பல தீயர்க்குள்ளாகிச சிறுமையுறும் குறை நீஙகினம் - பொல்லாதவர் பலர்க்குக் கீழ்ப்பட்டிருந்து இழிவடையும் நிலைமையை நீங்கினோம், துட்டர் கூட்டமும் நீங்கினம் - குறும்பா

களுடைய சாவகாசமுந் தொலைந்தது, கூடுந் துன்பப் பொறை நீங்கினம் - வந்து சேரும் துன்பங்களின் சுமையும் ஒழிந்தது, நம் கறை நீங்கினம் - நம்முடைய குற்றமும் நீங்கப்பெற்றோம், மகிழ்பூண் - (ஆதலால்) களிப் படைவாயாக, எ - று.

2. தண்டுகொண் டோட்டினும் போகாம னம்மைத் தரிசிக்கவே
பண்டுவந்தோ ரின்றுதாம பூலமவைத்துப் பரிந்தழைத்துந்
திண்டுமிண்டுஞ் சொல்லி வாரா திருந்தனர் செய்கையெல்லாம்
கண்டுகொண்டோமினித்தொண்டுகொண்டோநங் கடவுளுக்கே.

உரை :—தண்டுகொண்டு ஓட்டினும் போகாமல் - கோலெடுத்துத் துரத்தினலும் நம்மைவிட்டுப் போகாமல், நம்மைத் தரிசிக்கவே பண்டு வந்தோர் - நம்மைப் பார்க்கவேண்டுமென்று உத்தியோகமுள்ள போழ்து வந்தவர்கள், இன்று தாம்பூலம் வைத்தும் பரிந்து அழைத்தும் - இப்போது வெற்றிலைபாக்கு வைத்துப் பிரியமாயக் கூப்பிட்டாலும், திண்டு மிண்டுஞ் சொல்லி வாராதிருந்தனர் - சாக்குப் போக்குச் சொல்லி வாராமலிருந்தார்கள், செய்கை எல்லாம் கண்டு கொண்டோம் - அவர்கள் இயற்கையான செய்கைகளை முற்றும் அனுபவித்துப் பார்த்தோம், இனி நம் கடவுளுக்கே தொண்டு கொண்டோம் - இனிமேல் நம்முடைய தெய்வத்திற்கே நாம அடியவராயினேம், எ - று.

3. வீடு நிலங்கள் பொருளை விற்பாரிந்த மேதினியில்
நீடு மெண்சாண் மெய்யை யோர்சாணுதர நிமித்தமவிற்று
நாடு மரசர்க் கடிமையென் றேமுன்பு நாங்கொடுத்த
ஏடு கிழிபட்ட தன்றோ வுத்யோக மிழந்ததுவே.

உரை :—மேதினியில் வீடு நிலங்கள் பொருளை விற்பார் - இந்த வுலகத்தில் தாவரச் சொத்தான வீடு நில முதலியவைகளையும் சங்கமச் சொத்தாகிய மற்றப் பொருள்களையும் மனிதர்கள் விற்பனை செய்வார்கள், நீடும் எண்சாண் மெய்யை ஓர் சாண் உதர நிமித்தம் விற்று - ஒரு சாணளவுள்ள வயிற்றின் பொருட்டு எட்டுச் சாணுள்ள உடம்பினை விற்பனைசெய்து, நாடும் அரசர்க்கு அடிமையென்றே - நாம் உத்தியோகத்தின் பொருட்டு நாடிய அரசர்க்கு நா அடிமை யென்பதாகக் குறிப்பிட்டு, முன்பு நாம் கொடுத்த ஏடு கிழிபட்டதன்றோ - உத்தியோகம் ஏற்பட்டபொழுது நாம் ஏற்படுத்திய அடிமைச் சீட்டு கிழிக்கப்பட்ட தென்பதல்லவா உத்தியோகம் போனது, எ - று.

4 ஈனத்தி லேபிறந் தோனிறை யாய்வரி னென்றுமது
பானத்தி லேபரி தானத்தி லேகை பழகியவ
மானத்தி லேமிகுத் தோர்க்கதி காரம் வழங்கிடுவன்
ஞானத்தி லேசிறந் தோரையெல் லாந்தள்ளி நைவிப்பனே.

உரை :—ஈனத்திலே பிறந்தோன் - மிகத் தாழ்வான நிலையிற் பிறந்தவன், இறையாய் வரின் - தலைமை யதிகாரியாய் வந்தால், என்றும் - எக்காலத்திலும், மதுபானத்திலே பரிதானத்திலே கைபழகி - கட்குடியிலும் லஞ்சம் வாங்குவதிலும் தேர்ச்சிபெற்று, அவமானத்திலே மிகுத்தோர்க்கு - மானக்கேடு பெறுவதிலே சிறந்தவர்களுக்கு, அதிகாரம் வழங்கிடுவன் - உத்தியோக அதிகாரம் கொடுத்திடுவான், ஞானத்திலே சிறந்தோரை எல்லாம் தள்ளி நைவிப்பனே - அறிவிலே சிறந்தவர்களை யெல்லாம் வேலையை விட்டு நீக்கித் துன்புறச செய்வான், எ - று.

5. ஒருநாளு மேயுனைப் பாராதி ரோமுனை யுற்றிடுநாள்
திருநாள்மற் றியாவும் வெறுநா ளெனமுன்பு செப்பியவர்
அருநாள் பலசென்றும் பாரா திருந்தன ரண்டிநம்பால்
வருநா ளவர்க்குக் கருநாளென் றுயதென் மாயநெஞ்சே.

உரை :—மாய நெஞ்சே - கபடமான மனமே!, ஒரு நாளுமே உனைப் பாராது இரோம் - ஒரு நாள்கூட உன்னைப் பாராமல் நாங்களிருக்க மாட்டோம், உனை உற்றிடுநாள் திருநாள் - உன்னை நெருங்கிப் பார்த்த நாளே சுபதினம், மற்று யாவும் வெறுநாள் எனச செப்பியவர் - உன்னைப் பாராத நாளெல்லாம் பயனற்ற நாள் என்று பொய்யாய்ப் புகழ்ந்து பேசியவர்கள், அருநாள் பல சென்றும் பாராது இருந்தனர் - அருமையான நாட்கள் பல கழிந்தும் நம்மை வந்துப் பாராமலிருந்தார்கள், அண்டி நம்பால் வருநாள் அவர்க்குக் கருநாள் என்று ஆயதென் - நெருங்கி நம்மிடம் வரக்கூடிய நாள் அவருக்கு அமங்கலமான நாளானதற்குக் காரணமென்ன ?, எ - று.

6. நீருள்ள மட்டுங் குளநாடும் பக்கி நிதிமடவார்
சீருள்ள மட்டுந் தொடர்வாருத் யோக சிலாக்கியமாம்
பேருள்ள மட்டு முறவாடிப் பின்பு பிரிந்திடுவார்
பாருள்ள மட்டும பழிச்சுமை தாங்கிய பாதகரே.

உரை :—நீருள்ள மட்டுங் குளநாடும் பக்கி - குளத்தில் தண்ணீரிருக்குமவரை பறவைகள் அந்தக் குளத்திற்கு விரும்பிச் செல்லும், மடவார் நிதி சீருள்ளமட்டும் தொடர்வார் - பெண்கள் செல்வச் சிறப்புள்ளவரை யொருவனைப் பின்பற்றுவார்கள், பாருள்ள மட்டும் பழிசசுமை தாங்கிய பாதகரே - உலகமுள்ளவரை யிகழ்சசிச் சொல்லைத் தாங்கக்கூடிய கீழோர், உத்தியோக சிலாக்கியமாம் பேருள்ளமட்டும் உறவாடிப் பின்பு பிரிந்திடுவார் - உத்தியோக மேன்மையுடையவர் என்ற சொல் நிலைக்கும் வரை யன்பு காட்டி உத்தியோகம் நீங்கியபின் தாங்களும் நீங்கிவிடுவார்கள், எ - று.

7. தோமிருந்த தொழிலொன்றே தொலைந்ததன்றி
யறிவொழுக்கஞ் சுகங்களோடு
நாமிருந் தோமுரை யாடநாவு மிருந்தது
பழைய நட்பிேனுருந்
தாமிருந் தாரவர் நடக்கத் தாளுமிருந்தன
விதழுந்தடை யொன்றின்றித்
தேமிருந்த நம்வீடு திறந்திருந்து மவர்
வாராச்செய்கை யென்னே.

உரை :—தோமிருந்த தொழில் ஒன்றே தொலைந்ததன்றி - குற்றங் கலந்த உத்தியோக மொன்றே போனதல்லாமல், அறி வொழுக்கம் சுகங்க ளோடு நாமிருந்தோம் - ஞானம் ஒழுக்கம் நல்லதன்மை யென்பவற்றோடு நாமிருந்தோம், உரையாட நாவுமிருந்தது - பேசுவதற்கு நாக்குமிருந்தது, பழைய நட்பினோரும் தாமிருந்தார் - .., அவர் நடக்கத் தாளு மிருந்தது- அவர்கள் நடந்து நம் வீட்டிற்கு வருவதற்கு அவர்களுக்குப் பாதங்களும் இருந்தன, ஏதும் தடையொன்றின்றி தேமிருந்த நம்வீடு திறந்திருந்தது - நம்முடைய இனிய வீட்டிற்குள் வருவதற்கு வீட்டு வாசல் திறந்துதா னிருந்தது, அவர் வாராச செய்கை என்னே - அந்தச சினேகிதர் வராம லிருந்ததற்குக் காரணம் யாதோ?, எ - று

8. அருங்கால் பதரை யகற்றல்போர் பாரில்
ஒருங்கா வதிகார மோய—நெருங்கிவருந்
துட்டரெலா நமமைவிட்டுத் தூரவகன் றூர்நமபால்
சிட்டரெலாம் வந்தார் தெரிந்து.

உரை :—பாரில் அருஙகால் பதரை அகற்றல்போல் - உலகத்தில் அருமையான காற்றானது பதர்களை யடித்துககொண்டு போவதுபோல, ஒருங்கா அதிகாரம் ஓய - பொருந்தாத உத்தியோகம் ஒழியவே, நெருஙகி வரும் துட்டரெலாம் நம்மை விட்டுத் தூர அகன்றார் - ..., நம்பால் தெரிந்து சிட்டரெலாம் வந்தார் - நாம் அதிகாரத்திலிருந்து அகன்றிருப்பதைத் தெரிந்து நல்லொழுக்கமுடைய எல்லாரும் நம்மிடம் வந்தார்கள், எ - று.

9. ஆதியையர் சுப்பைய ரப்பய்ய ரென்றுபய
வாதியைய ராகவரு வோர்பே—ரோதிய
பன்னாள் கழிதேன் பரனேயுன் னுமமினி
எந்நாளும் பேசவர மீ.

உரை: —ஆதியையர் சுப்பையர் அப்பய்யரென்று-ஆதியையர் முதலிய பேர்களோடு வருகின்ற, உபயவாதி ஐயராக வருவோர் - இருகட்சி யையன் மாரும் நியாய மன்றத்திற்கு வருஙகால், பேரோதியே பன்னாள் கழித்

தேன் - அவர்கள் பெயர்களைச் சொல்லியே பலநாள் செலவழித்தேன், பரனே உன்னுமம் இனி எந்நாளும் பேச வரம் ஈ - கடவுளே உன்னுடைய பெயரை எப்போதும் சொல்லும்படியான வரத்தைக் கொடுத்தருள்வீராக !, எ - று.

## திருவாவடுதுரைச் சுப்பிரமணிய தேசிகர்மீது பாடியவை

10. விதியிருந்த பதியெனுஞ்சுப் பிரமணிய
தேசிகமெய்ஞ் ஞானக்குன்றே
துதியிருந்த நின்புலவன் சொல்வழியே
பல்வழியுந் தோன்றுநீயென்
மதியிருந்தாய் பிரிந்திடவு மனமபொருந்தா
யெனவிருந்தேன் வான்கோமுத்திப்
பதியிருந்தா யெனவந்த மாபுலவன்
பொய்சொலவும் படித்தான்மாதோ.

உரை:—விதி இரும் தபதியெனும் சுப்பிரமணிய தேசிக - பிரமன் போன்ற பெரும் தவததினனென்று சொல்லததகக சுப்பிரமணிய குருவே !, மெய்ஞ்ஞானக் குன்றே - உண்மை யறிவென்னும் மலையே, துதி இருந்த நின் புலவன் சொல்வழியே - புகழோடு கூடிய உனது வித்துவான் சொன்ன சொல்லின் கருத்தினை யாய்ந்து பார்க்கின், பல் வழியும் தோன்றும் - பல முறைகளும் மனதிற் புலனுகின்றன, நீ என்மதி இருந்தாய - என்னறி விடமாகத் தங்கினை, பிரிந்திடவும் மனம் பொருநதாய் என இருந்தேன் - அஙகே யிருந்து பிரிந்துபோகவும் நீ ஒருப்படமாட்டாயென்று எண்ணி யிருந்தேன், வான்கோ முத்திப் பதியிருந்தாயென - நீ திருவாவடு துறைத்தலத்தி விருந்தாயென்று, பொய் சொலவும் - ......, வந்த மா புலவன் படித்தான் - வந்த பெரிய வித்துவான் கற்றுக்கொண்டான் ; மாதோ - அசை, எ - று.

11. இல்வாழ்வை நீத்தறமேற் கொண்டநீ பிறரில்விடத்துச்
செல்வாழ்வு சற்றும்விரும்பா யென்பா ரிதுசித்திரமே
புல்வாழ்வுடையவன் வீடெங்குநீ பரிபூரணனுய்
நல்வாழ்வுற் றுய்சுப்பிர மணியானந்த நற்றவனே.

உரை :—சுப்பிரமணியானந்த நற்றவனே - சுப்பிரமணியப் பேருடைய பேரின்பத்திற் கேதுவாகிய நல்ல தவமுடையவனே !, புல் வாழ்வுடை என்றன் வீடெங்கும் - சிறிய வாழ்க்கையை யுடைய எனது இல்லத்தில் எவ்விடத்திலும், நீ பரிபூரணனுய நல வாழ்வுற்றுய் நீ முழுமுதற் கடவுள் போல நன்ருக நிறைந்திருக்கின்ருய், இல்வாழ்வை நீத்து அறமேற் கொண்ட நீ - இல்லற வாழ்க்கையைத துறந்து துறவறத்திற் புகுந்த நீ

பிறர் இல்லிடத்துச செல் வாழ்வு சற்றும் விரும்பாய் என்பார் - மற்றோர்களுடைய வீட்டுக்குப் போகின்ற வாழ்க்கையைக் கொஞ்சமும் இச்சிக்கமாட்டாயென்று உலகினர் கூறுகின்றார்கள், இது சித்திரமே - இது அதிசயமே, எ - று.

12. குருவுங் கிரகணமுங் கூடலாற் கங்குன்
மிகுவென் றுளமே வெருவல்—நகுதுறையைச்
செப்பரிய மாச்சுப் பிரமணிய தேசிகனும
அப்பரிதி யீங்குதித்த தால்.

உரை:—குருவுங் கிரகணமும் கூடினால் - அமாவாசையும் கிரகணமும் ஒன்றாக ஏற்பட்டால் கங்குல் மிகுமென்று - இருள் மிகுதிப்படுமென்று, உளமே வெருவல் - நெஞ்சமே பயப்படாதே, நகுதுறையைச செப்பரிய மா சுப்பிரமணிய தேசிகனும் - விளக்கமுடைய திருவாவடுதுறையில் வாழும் பேசுதற்கரிய மேன்மையுடைய சுப்பிரமணிய தேசிகராகிய, அப் பரிதி ஈங்கு உதித்ததால் - அந்தக் கதிரவன் இவவிடத்தில் உதயம் செய்வதால், என்க, எ - று.

13. மாதவச்சுப் பிரமணிய தேசிக மேலோ
யுவர்ப்புவாரி மூழ்குமு
ஆதவன் கீழ்த்திசை யுதிக்குஞ் சுடுமணுகு
மதியழிக்கு மத்தமிக்கும
சாதகமேற் றிசையுதிப்பாய் நிழலளிப்பாய்
மதியளிப்பாய் தரணிமீது
போதகுணக் கடல்படிவா யத்தமியா யுனைக்
கதிரோன் பொருவானன்றே.

உரை:—மாதவச சுப்பிரமணிய தேசிக மேலோய் - பெருந் தவமுடையவரே, சுப்பிரமணிய தேசிகரே! உயர்ந்தவரே !, ஆதவன் உவர்ப்பு வாரி மூழ்கும்-சூரியன் உவர்க்கடலில் மூழ்குவான், கீழ்த்திசை யுதிக்கும் - கீழ்த் திக்கில் உதயமாகும, சுடும் - வெப்பஞ் செய்யும், அணுகும் மதி யழிக்கும் - நெருங்குகின்ற சந்திரனுடைய ஒளியைக் கெடுப்பான், அத்தமிக்கும் - மாலையில் மறையும், சாதக மேற்றிசை யுதிப்பாய் - உயர்வான மேலைததிசையிற் றோன்றுவீர் !, நிழல் அளிப்பாய் - நிழலைக கொடுப்பீர், மதியளிப்பாய் - அறிவு தருவீர், தவறாமல் நாளும் - தவறாமல் நாளதோறும், போத குணக் கடல் படிவாய் - ஞானத் தன்மையாகிய கடலில் மூழ்குவீர், அத்தமியாய் - மறையமாட்டீர், உனைக் கதிரோன் பொருவான் அன்றே - (ஆதலால்) உமக்குச சூரியன் ஒப்பாக மாட்டான், எ - று.

14. சுருதியோ ருருக்கொண் டன்னசுப் பிரமணிய மேலோய்
கருதி யின்னொருகா லுன்னைக் காணலா மெனுமவாவாற்
பொருதி யென்மனம பின்னீர்க்கப் பொறையுறும்பண்டிபூட்டு
மெருதுகள் முன்னே யீர்க்க வென்பதி யடைந்தேனே.

உரை:—சுருதியோருருக் கொண்டன்ன சுப்பிரமணிய மேலோய் - ஞான நூல்களே ஓர் வடிவெடுத்தாற்போல வந்த பெரியோய் !, கருதி இன்னொருகால் உன்னைக் காணலாம் எனும் அவாவால் - உன்னைப் பார்த்த பின்னும் மற்றொருமுறை பார்க்க வேண்டு மென்னும் விருப்பத்தாலே அங்ஙனஞ்செய்ய வெண்ணி, பொருது என் மனம் பின்னீர்க்க - என்னெஞ்ச மானது சண்டையிட்டுக் கொண்டு பின்னிழுக்கவும், பொறையுறும் பண்டி பூட்டும் எருதுகள் முன்னே ஈர்க்க - சுமை கொண்ட வண்டியிற் பூட்டின காளைகள் முன்னே இழுக்கவும், என் பதி யடைந்தேன் - என்னிருப்பிடத்தைப் போய்ச் சேர்ந்தேன், எ - று.

15. சூர்வந்து வணங்குமேன் மைச்சுப்பிர மணியதேவே
நேர்வந்து நின்னைக்கண்டு நேற்றிராதிரியே மீண்டேன்
ஊர்வந்து சேர்ந்தேனென்ற னுளமவந்து சேரக்காணேன்
ஆர்வந்து சொலினுங்கேளே னதனையிங் கனுப்புவாயே.

உரை:—சூர்வந்து வணங்கு மேன்மைச் சுப்பிரமணிய தேவே - சூரன முதலிய அசுரர்கள் வந்து தொழுகின்ற உயர்வுடைய சுப்பிரமணியக் கடவுள் போன்றவனே !, நேர்வந்து நின்னைக் கண்டு நேற்று இராதிரியே மீண்டு என் ஊர் வந்து சேர்ந்தேன் -......, என்றன் உளம் வந்து சேரக் காணேன் - என்னுடைய மனமானது உன்னிடம் தங்கிவிட்டபடியால் அது இங்கே வந்து சேரவில்லை, ஆர் வந்து சொலினும் கேளேன்-அது இங்கே வந்து இருப்பதாக யார் சொன்னாலும் ஒப்புக்கொள்ள மாட்டேன், அதனை இங்கு அனுப்புவாயே- ......, எ - று.

16. வானாடு மண்ணாடு மலிபுகழ் சுப்பிரமணிய வள்ளலேநின்
பானாடு மாவீர பத்திரவே ளெனக்கினியன் பாலர்க்காசான் [றந்
தானாடுந்தொழிலுறுவான்சூரியமூர்த்திச்செல்வன்றனக்கோர்மாற்
தேனாடுன்றிருவாக்காற்செப்பின்மனோபீட்டமெலாஞ்சித்தியாமே.

உரை:—வானாடும் மண்ணாடும் மலிபுகழ் சுப்பிரமணிய வள்ளலே - வானுலகத்திலும் பூவுலகத்திலும் நிறைந்த கீர்த்தியையுடைய சுப்பிரமணிய தேசிகராகிய சிறந்த கொடையாளியே, நின்பால் நாடு மா வீரபத்திரவேள் எனக்கு இனியன் - நின்னிடத்தில் விருப்பத்தோடு வருகின்ற வீரபத்திர பிள்ளை எனக்கு நண்பன், பாலர்க்கு ஆசான் - குழந்தைகளுக்குப் போதகாசிரியன், தான் ஆடு தொழில் உறுவான் - தான் நாட்டியத் தொழிலிற்

பயின்றவன், சூரிய மூர்த்திச செல்வன் - சூரிய மூர்த்தியின் மகன், தனக்கோர் மாற்றம் - அவனுக்கு அனுகூலமான ஒரு சொல்லை, தேனுடும் உன் திரு வாக்கால் செப்பின் - தேனின் இனிமை கலந்த உன்னுடைய திரு வாக்கினுற் கூறினுல், மனேபீட்டம் எல்லாம் சிததியாமே-அவன் மனததில் விரும்பியதெல்லாம் நிறைவேறும், எ - று.

17. வாரெனன் றுதவவருஞ் சுப்ரமண்ய வரோதயனே
தானென்று வெண்ணைரன் பாடையிந்நாட்டிற் றலையெடுக்க
வேனென்று கேட்பவரில் லாத்தமிழை யினிதளிக்க
நானென்றுகங் கணங்கட்டிக் கொண்டாயிந்த நானிலத்தே.

உரை :—இந்த நானிலததே - இந்தப் பூமியின்மேல், வாரெனன்று உதவவரும் சுபபிரமணிய வரோதயனே - மழைபோல உதவிசெயய வருகின்ற சுப்பிரமணிய தேசிகராகிய வரததாற் பிறந்தவரே !, தானென்று வெண்ணைரன் பாடை இந்நாட்டில் தலை எடுக்க - வெள்ளை மனிதனுடைய மொழியானது தானே உயர்ந்ததென்று சொல்லும்படியாக இந்த நாட்டில் மேன்மை பெறவும், ஏனென்று கேட்பவரில்லாத தமிழை - ஆதரிப்பாரில்லாத தமிழ் மொழியை, இனிது அளிக்க நானென்று கஙகணங கட்டிக் கொண்டாய் - நன்ருகப் பேணுவதற்கு நானிருக்கிறேனென்று விரதம் பூண்டீர், எ - று.

வாந்திபேதி காலத்திற் பாடியது

18 இலக்கணமெய்க் கரைமாத்தி ரையாமிவ் வளவுமின்றி
மலக்கண்விளை பிணியாற்பலர் மாய்ந்தனர் மண்டுமிந்நோய்
விலக்கவருள் புரிமும்மல நோய்கெட வித்தகனய்
நிலக்கணமர் சுப்பிரமணி யானந்த நின்மலனே.

உரை :—மும்மல நோய்கெட வித்தகனய் - ஆணவம் கன்மம் மாயையாகிய மூவகைப் பாசஙகளாகிய வியாதியைத தொலைப்பதறகு, நிலக்கணமா சுப்பிரமணியானந்த நின்மலனே - நிலவுலகத்திற் றஙகியிருக்கின்றப் பேரின்ப வாணராகிய சுப்பிரமணிய தேசிகரே !, இலக்கணம் மெயக்கு அரை மாத்திரையாம் - இலக்கண நூலிற் கூறிய மெயயெழுத்திறகு மாத்திரை அரையே அதாவது இந்த விடத்தில் உடம்புக்கு வேண்டியது அரை மாத்திரையே, இவ்வளவும் இன்றி - அந்த அளவுககூடக கிடையாமல், மலக் கண் விளை பிணியில் பலர் மாய்ந்தனா - மிகுதியாக மலங கழிகின்ற பேதி நோயினுல் மனிதர் பலரிறந்தார்கள், மண்டும் இந்நோய் விலக்க அருள்புரி - நெருஙகுகின்ற இந்த வியாதியானது ஒழியும்படியாக அருள் செய்க, எ - று.

பஞ்சகாலத்தில் சுப்பிரமணிய தேசிகர்மேற் பாடியது

19. எரியொத்த பஞ்சமி டங் கரையொத்த திடங்கர்பற்றுங்
கரியொத்தன பல்லுயிர்க ளப்பஞ்சக் கராமடிக்க
வரியொத்தனன் சுப்பிரமணி யையனரிச் சக்கரஞ்
சரியொத்தன வனீந்திடும் பொன்வெளிச் சக்கரமே.

உரை :—எரியொத்த பஞ்சம் இடங்கரை யொத்தது - தீப்போலப் பரவின பஞ்சமானது முதலையைப் போன்றது, பல்லுயிர்கள் இடங்கர் பற்றும் கரியொத்தன - பஞ்சத்தி லகப்பட்ட பல மனிதர்களும் முதலை பிடித்த யானையைப் போன்றனர், பஞ்சக்கராமடிக்க அரியொத்தனன் சுப்பிரமணி ஐயன் - பஞ்சமாகிய முதலையைக் கொலவதற்குத் திருமாலைப் போன்றவர் சுப்பிரமணிய தேசிகர் ஆவர், அவன் ஈந்திடும் பொன் வெள்ளிச் சக்கரமே அரிச் சக்கரஞ் சரியொத்தன - அவன் அளித்திடும் பொற் காசுகளும் வெள்ளிக் காசுகளும் திருமாலின் சக்கராயுதத்திற்குச் சமமாவன, எ - று.

20. கேரொன்றுமில் சுப்பிரமணி யாதிபநின் னைப்பல்லோர்
காரென்றுசொல் வரக்காருமவஞ் சித்தவிக் காலத்திலே
ஊரொன்றும் வாழவறு சுவையுண்டி யுதவியுன்றன்
பேரொன்று நிற்கச்செய் தாயுனைக்கா ரெனல்பேதைமையே

உரை :—நேரொன்றும் இல் சுப்பிரமணியாதிப - ஒருவரும் ஒப்பாக எப்போதும் சொல்லக்கூடாத சுப்பிரமணிய தேசிக முதல்வனே, நின்னைப் பல்லோர் கார் என்று சொல்வர் - உன்னைப் பலர் மேகமென்றவ னென்பார்கள், அக்காரும் வஞ்சித்த இக்காலத்திலே - மேகமும் மழை பெய்யாது பொய்த்த இந்தக் காலத்திலே, ஊரொன்றும் வாழ அறுசுவை உண்டி உதவி உன்றன் பேரொன்று நிற்கச் செய்தாய் - ஊரார் எப்போதும் பிழைக்கும்படியாக அறுசுவையோடு கூடிய உணவை யளித்து உன் பெயரை எக்காலத்திலும் நிலைநிறுத்தினாய், உனைக் கார் எனல் பேதைமையே - உன்னை மேகத்திற்கு ஒப்பானவ னென்பது அறியாமையாகும் (நீ மேகத்தினுஞ் சிறந்தவனென்பது கருத்து), எ - று.

21. பாவிற் பெரியவன் மீனாட்சிசுந்தரப் பாவலனே
தாவிற் பெரியனவன் சேய்நினக்கதைத் தானுரைக்க
நாவிற் பெரியவனு னென்சொற்கேட்டு நலமபுரியப்
பூவிற் பெரியவனீ சுப்ரமண்ய புரவலனே.

உரை :—பாவில் பெரியவன் மீனாட்சி சுந்தரப் பாவலனே - பாட்டுப் பாடுவதில் உயர்ந்த வித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையாவர், தாவிற் பெரியவன் அவன் சேய் - இப்பொழுது படுகிற துன்பத்தில் மிகுந்திருப்ப

வன் அவரது குமாரன், நினக்கு அதைத் தானுரைக்க நாவிற் பெரியவன் நான் - அவன் வருத்தத்தை யெடுத்தச சொல்ல மிகவும் ஆசைப்பட்டவன் நான், சுப்பிரமணியப் புரவலனே - சுப்பிரமணிய தேசிகரொனும் பாதுகாப் பாளரே !, என் சொற்கேட்டு நலம் புரிய - என்னுடைய சொல்லைக் கேட்டு நன்மை செய்வதற்கு, பூவிற் பெரியவன் நீ - இவவுலகத்தில் பெருந் தகுதி யுடையவர் நீரே, எ - று.

22. கோவைமறைப் பொருளையெலா முரைத்திடு சுப்பிரமணிய
குருவே வண்டு
பூவைமறப் பினும்வறியர் பொன்னைமறப் பினுந்தமிழ்நூற்
புலவ ரெல்லாம
பாவைமறப் பினுங்கமலம் பகலைமறப் பினும்நேசம
பழுத்த தொண்டர்
தேவைமறப் பினுநினது சேவைமறப் பறியாதென்
சிந்தை தானே.

உரை :—கோவை மறைப்பொருளையெலாம் உணர்த்திடு சுப்பிரமணிய குருவே - தொகுதியாயுள்ள நுட்பமான நூல்களின கருததை யெல்லாம் போதிக்கின்ற சுப்பிரமணிய தேசிகரே !, வண்டு பூவை மறப்பினும - வண்டானது மலரை மறநதாலும், வறியா பொனனை மறப்பினும - தரித்திரா கள் பொருளை மறநதாலும, தமிழநூற் புலவரெல்லாம் பாவை மறப்பினும் - தமிழ்ப் புலவாகளெல்லாம தமிழப் பாடலகளை மறந்தாலும், கமலம் பகலை மறப்பினும் - தாமரைப்பூ சூரியனை மறந்தாலும், நேசம் பழுதத தொணடர் தேவை மறநதாலும் - அன்புடைய அடியார்கள் கடவுளை மறநதாலும், நினது சேவை மறப்பறியாது என் சிநதைதானே - உன்னுடைய வழிபாட்டை என்னுடைய மனமானது மறப்பதற்கு அறிய மாட்டாது, எ - று.

கூடா வொழுக்கத்தாரைப் பழித்தல்

23. மேகங்கள் யாவுமுயர் விண்ணீங்கி வேசையர்தந்
தேகங்க ளில்வாசஞ் செய்கையான்—மாகமிசை
ஆசைக்குங் கார்காணே மவ்வேசை யர்சொடுப்பர்
காசைக் கொடுப்பவர்க்குக் காண்.

உரை :—மேகங்கள் யாவுமுயர் விண் நீங்கி வேசையர்தம் தேகங்களில் வாசஞ் செய்கையால் - மேகஙகளெல்லாம் உயர்ந்த ஆகாயத்திலிருந்து வில இப்போய் விலை மாதருடைய உடம்புகளில் கோயாய்த தஙகிவிட்டபடியால், மாக மிசை ஆசைக்கும் கார் காணோம் - வானததின்மீது ஆசையாய்ப் பார்ப் பதற்குக்கூட ஒரு மேகமுமில்லை, அவவேசையர் கொடுப்பா காசைக்

கொடுப்பவர்க்குக் காண் - அந்த விலைமாதர் தங்களுக்குக் காசு கொடுப்பவர்களுக்குக் காசுக்குப் பதிலாக மேகரோகத்தைக் கொடுப்பார்கள், எ - று.

## சவுளி விற்பவரைப் பற்றியது

24. கட்டியகந்தல்புதிதென்று விற்பர்கணக்கிற்றொகை
யொட்டியெழுதுவர்கைமேல் விலையையுடன்றரினும்
வட்டியிலாபங்களொன்றுக்கு நூறெனவாங்குமந்தச்
செட்டிகட்கஞ்சியலவோ நம்மீசன்றிகம்பரனே.

உரை:—கட்டிய கந்தல் புதிதென்று விற்பர் - உடுத்திக் களைந்த கந்தல் துணியைப் புதிய துணியென்று விற்பார்கள், கணக்கில் தொகையொட்டி எழுதுவர் - கடனாக வாங்கினால் கணக்குப் புத்தகத்தில் விலைத் தொகையைச் சேர்த்து மிகுதியாக எழுதுவார்கள், கைமேல் விலையை உடன் தரினும் வட்டி இலாபங்கள் ஒன்றுக்கு நூறென வாங்கும் - வாங்கும் ஆடைக்கு உடனே விலை கொடுத்தாலும் அவ்விலையிலுங்கூட ஒன்றுக்கு நூறாக வட்டியும் இலாபமுஞ் சேர்த்து வாங்குகின்ற, அந்தச் செட்டிகளுக்கு அஞ்சியலவோ நம் ஈசன் திகம்பரனே - அந்தச் செட்டிகளுக்குப் பயப்பட்டல்லவா நம்முடைய பரமசிவன் திக்கையே ஆடையாக உடுத்திக்கொண்டான், எ - று.

## துறவோர் சடையைப் பழித்தல்

25. பெண்ணைச்சடையில் வைத்தவன்போற்
பெண்கள்பலரை யொளிப்பதற்கோ
பிறர்கண்டாலு மாண்பெண்ணும
பேதந்தெரியா திருப்பதற்கோ
பண்ணைப்பழிக்கு மொழியரொடு
பாய்போல்விரித்துப் படுப்பதற்கோ
பாசக்கயிறுபோற் பிறரைப்
பற்றியிழுத்துப் பறிப்பதற்கோ
மண்ணைத்தழுவ நடக்குமின்னார்
மலர்க்காற்றூசி தட்டுதற்கோ
மாயத்துறவு பூண்டதன்றி
மயிருந்துறவோ மென்றுகொலோ
விண்ணைத்தழுவப் பழிச்சுமைபோல்
மிகவேசடையை நீர்வளர்க்கும்
விதமென்சொல்வீர் பண்டார
வேடம்பூண்ட மேலோரே.

**உரை:—பண்டார வேடம் பூண்ட மேலோரே** - சந்நியாசி வேடம் பூண்ட பெரியோர்களே!, **பெண்ணைச் சடையில் வைத்தவன்போல் பெண்கள் பலரை யொளிப்பதற்கோ** - கங்கையைச் சடையில் வைத்த கடவுள் போலச் சடையில் பெண்ணை வைத்து மறைப்பதற்கோ, **பிறர் கண்டாலும் ஆண் பெண் எனும் பேதம் தெரியாதிருப்பதற்கோ** - மற்றவர்கள் பார்த்தாலும் ஆண் பெண்ணென்னும் வேறுபாடு தெரியாதிருப்பதற்கோ, **பண்ணைப் பழிக்கும் மொழியாரொடு பாய்போல் விரித்துப் படுப்பதற்கோ** - இசையை வென்ற சொல்லுடைய பெண்களோடு சடையைப் பாய்போல் விரித்துப் படுப்பதற்கோ, **பாசக் கயிறுபோல் பிறரைப்பற்றி இழுத்துப் பறிப்பதற்கோ** - இயமனது பாசம்போலப் பிறரைச் சுற்றி யிழுத்து அவரிடத்துள்ள பொருளைக் கொள்ளை கொள்வதற்கோ, **மண்ணைத் தழுவ நடக்கு மின்னார் மலர்க்கால் தூசி தட்டுதற்கோ** பூமியிலே தோன்றும் மின்னலைப் போன்ற பெண்களுடைய பூப்போன்ற பாதங்களின் புழுதியைத் தட்டித் துடைப்பதற்கோ **மாயத்துறவு பூண்டதன்றி மயிருந் துறவோம் என்று கொலோ** - பொய்யாகச் சன்னியாசங் கொண்டதல்லாமல் உண்மையாகச் சன்னியாசம் பூணுததால் மயிரை விட்டுவிடமாட்டோமென்று காட்டுவதற்கோ, **விண்ணைத் தழுவப் பழிசுசுமைபோல் மிகவே சடையை நீர் வளர்க்கும் விதம் என் சொல்வீர்**-ஆகாயத்தை யளாவும்படியாகப் பழிக்குஞ் சுமையைத் தலையில் தாங்கிக்கொள்வதைப்போலச் சடாபாரத்தை வளர்க்கின்ற காரணம் என்னென்று கூறுவீர், எ - று.

## மது ஊனுண்ணும் அந்தணரைக் குறித்துப்பாடியது

26\. ஆரண வாயினர் மாடாடு கலையடித் தவித்துப்
பாரணஞ் செய்யப் பழகிக் கொண்டார்மது பானத்திலும்
பூரண ராயின ரின்னவர்க் கிந்தத்துற் புத்திதந்த
காரணங்கண் டயற்கோர் சிரங்கொய்தனன் கண்ணுதலே.

**உரை:—ஆரணர் வாயினா மாடு ஆடுகளை அடித்து அவித்துப் பாரணஞ் செய்யப் பழகிக் கொண்டார்** - வேத மோதுகின்ற வாயையுடையவர்கள் ஆடு மாடு என்பனவற்றின் ஊனை வெந்து உண்ணுகின்ற பழக்கத்தை மேற்கொண்டனர், **மதுபானத்திலும் பூரணர் ஆயினர்** - கட்குடிப்பதிலும் முழுப் பழக்க முடையவராயினர், **இன்னவர்க்கு இந்தத் துற்புத்தி தந்த காரணங் கண்டு** - இவர்களுக்கு இந்தக் கெட்ட புத்தியைக் கொடுத்த காரணத்தினாலே, **அயற்கு ஓர் சிரம் கொய்தனன் கண்ணுதலே**-பிரமனுக்கு ஓர் தலையை நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான் கிள்ளிவிட்டார், எ - று.

27. தேனோடு மூனுண்ணு மந்தணர்க் கஞ்சிச் சிவன்கரத்தில்
மானோடிப் புக்கதசங் கோழிபுக்கன் மைந்தனிட
மீனோடிப் புக்கன விண்ணினுஞ் சிந்திநும் வெவ்விலங்கும்
வானோடி யேபல்வி ராசிக ளாயுயிர் வாழ்ந்தனவே.

உரை:—தேனோடும் ஊன் உண்ணும் மானிடர்க்கு அஞ்சி - கள்ளும் புலாலும் புசிக்கின்ற மனிதர்களுக்குப் பயப்பட்டு, சிவன் கரத்தில் மான் ஓடிப் புக்கது-சிவனுடைய திருக்கையில் மான் ஓடிப் புகுந்து கொண்டது, அசங்கோழி புக்கன மைந்தனிடம் ஆடும் கோழியும் சிவன் மகனாகிய குமரக் கடவுளிடம் ஓடிப் போயின, மீன் விண்ணிலும் சிந்திலும் ஓடிப் புக்கன-மீன்கள் வானத்தில் நட்சத்திரங்களாகவும் கடல் நடுவிலும் போய் ஒளித்தன, வெவ்விலங்கு - கொடிய மிருகங்களும், வானோடி - வானத்திற் சேர்ந்து, பலராசிகளாய் உயிர வாழ்ந்தனவே - ....., எ - று.

## மது மாமிசத்தைப் பழித்தல்

28. கூனுக்கிய கடலாறு குளங்களைக் கூட்டிமது
தானுக்கித் தமமையு மீனுக்கி மற்றச் சராசரத்தை
யூனுக்கித் தாமுண்ணவே னுக்கிலனென் றுருக்கிநிதந்
தேனுக்கி னாந்தவா னுக்கினன்றனைச் சீறுவரே.

உரை:—கூனுக்கிய கடல் ஆறு குளங்களைக் கூட்டி மது தானுக்கி - விளைந்த கடல்கள் ஆறுகள் குளங்கள் எனபவைகளெல்லாம் ஒரு சேரக் கள்ளு மயமாகப் படைத்து, தம்மையும் மீனுக்கி தங்களையும் மீன்களாக்கி, மற்ற சராசரத்தை யூனுக்கி - மற்ற நிற்பன நடப்பனவற்வற யெல்லாம் மாமிசமாக்கி, தாமுண்ண ஏனுக்கிலன் என்று - தாங்களுண்ணும்படி ஏன் படைக்கவில்லை யென்று, நிதம் தேன் நாகினுல்-தினந்தோறும் கள்ளை ருசி பார்க்கும் நாக்கை யுடையவர்கள், உருகி - பரிதாபமுற்று, அந்த வான் நாக்கினன் தனைச சீறுவரே - அந்தப் பெரிய நாவுடைய பிரமனைக் கோபிப்பார்கள், எ - று.

## மாமிச முண்ணும் பிராமணர்களைப் பழித்தல்

29. ஊன்றாக்கி யுண்ணும் பிராமணர்க் கஞ்சியுமா பதியு
மான்றாக்கி னன்கையில் வேலவன் றாக்கினன் வாரணத்தை
மீன்றாக்கினன் கொடியாக வுருவிலி மேடமது
தான்றாக்க வேயதி லேறிக்கொண் டானந்தச் சண்முகனே.

உரை:—ஊன் தூக்கி யுண்ணும் பிராமணர்க் கஞ்சி - ஊனை யெடுத்துச சாப்பிடுகின்ற பிராமணர்களுககுப் பயந்து, உமாபதியும் மான் தூககினன் கையில்-பார்ப்பதி கணவனுகிய சிவபெருமான் திருக்கரத்தில் மானை யெடுத்துக் கொண்டார், வேலவன் தூக்கினன் வாரணத்தை - முருகக்

கடவுள் கோழியைக் கொடியாக மேற்கொண்டார், மீன் தூக்கினன் கொடியாக உருவிலி - மன்மதன் மீனைக் கொடியாகக் கொண்டான், மேடமது தான் தூக்கவே - ஆடானது தன் தலையைத் தூக்கி நிற்க, அதில் ஏறிக் கொண்டான் அந்தச சண்முகனே - அழகிய ஆறுமுகக் கடவுள் அதன்மேலேறிக் கொண்டார (வாகனமாகக் கொண்டார்), எ - று.

முகஸ்துதியைக் கண்டித்தது

30. அருங்கிரியே கற்பகமே காளையே
யனந்தனே யரியேயென்ன
வொருங்குநமை யேபுகழ்ந்து பொருள்கேட்ட
வொருவனையா முற்றுநோக்கி
யிருங்கல்லே மரமேமாடே பாமபே மிருகமே
யென்றேங் காய்ந்தான்
மருங்கவன் வார்த்தையைத திருப்பிநாஞ் சொன்
லவனுக்கேன் வருத்தமம்மா.

உரை :—அருஙகிரியே - அருமையான மலைபோன்றவனே!, கற்பகமே - கற்பகத் தருபோன்ற கொடையாளியே!, காளையே - காளை போன்ற வலிமை யுடையவனே!, அனந்தனே - ஆதிசேடன் போன்ற அறிவுடையவனே!, என்ன ஒருஙகு நமையே புகழ்ந்து பொருள் கேட்ட ஒருவனை நாம உற்று நோககி - என்று முழுவதும் நம்மையே புகழ்ந்து பணம் வேண்டுமென்று கேட்ட ஒரு புலவனைப் பாாதது, இரும கல்லே மரமே மாடே பாமபே மிருகமே என்றேம - ...... .., காயநதான - அவன் கோபிததுக கொணடான, மருஙகு அவன வாாததையைத திருப்பி நாம் சொன்னல் அவனுககேன் வருததம - அவன சொன்ன வாாததையை அவன் பக்கமே சாரும்படி கூறினல் அவனுககு வருததம் வருவதற்குக் காரணம் யாது ?, அம்மா - வியப்புச சொல், எ - று.

குறிப்பு:—முகஸ்துதியாகக் கூறும்போது உயர்வுபற்றி மரியாதையாகப் பேசப்படும் சொற்களை உயர்வு குறிக்கும் அடைமொழிகளை யெடுத்துவிட்டால், அவை இழிவை யுணாத்துமென்பது குறிப்பிததவாறு.

முகஸ்துதிக்குப் பொருள் வேறுபாடு கொள்ளுதல்

31. இந்திரனீ சந்திரனீ யென்னல் பிறன்மனையைத
தந்திரமாக் கூடுஞ் சழக்கினீ—வந்தகுரு
பத்தினியைச் சேர்ந்தபடு பாவிநீ யென்பதாந்
துத்தியமோ நிந்தையோ சொல்.

உரை :—இந்திரன் நீ சந்திரன் நீ என்னல் - (ஒருவனை) நீ இந்திரன் போன்றவன்; நீ சந்திரன் போன்றவன் என்று சொல்லுதல், பிறன் மனையைத் தந்திரமாகக் கூடுஞ் சழக்கன் நீ - கௌதமர் மனைவியாகிய அகலிகையை இந்திரன் தந்திரமாகப் போய்ச சேர்ந்ததுபோலப் பிறா தாரத்தைச் சேருகின்ற நீதிகேடன் நீ யென்றும், வந்த குரு பத்தினியைச சேர்ந்த படுபாவி நீ - சந்திரனைப்போலக் குரு பத்தினியைச் சேர்ந்தவன் நீ யென்றும், என்பதாம் - பொருள்படும் என்று கொண்டால், துத்தியமோ நிந்தையோ சொல் - அது புகழுவதாகுமோ இகழ்வதாகுமோ நீ சொல்வாயாக, எ - று.

குறிப்பு :—இந்திரனைப்போலச செல்வன் நீ, சநதிரனைப்போலத தண்ணொளியுடையவன் நீ என்று கொணடால் புகழ்சசியும், பாட்டில் கண்டவாறு கொண்டால் இகழசசியுமாதல் காண்க.

32. கன்னபொன் னவெழிற் காமாவென் றேகவி கட்டியென்முன்
னுன்னு திரக்குங் கவிப்புலவீ ருமக்கொன் றுங்கொடேன்
முன்னாநும பாடலெனக் கலக்கன்னன் முதலியர்க்கே
யன்னரி டஞ்சென் றரங்கேற்றிக் கொண்மி னருநிதியே.

உரை :—கன்ன பொன்ன எழில் காமா என்றே கவி கட்டி-கர்னனே! பொன்னனே! காமனே என்று புகழ்நது பாட்டியற்றி, என் முன் உன்னு திரக்கும் கவிப் புலவீர் - ஆலோசனையில்லாது எனனெதிரில வந்து யாசிக்கின்ற பாவலரே!, உமககு ஒன்றும கொடேன - உமக்கு யாதும் ஈயமாட்டேன், முன் நாம் நும் பாடல் எனக்கல - முன்னே இருக்கின்ற உம்முடைய பாடல் என்னைக குறித்தனவல்ல, கன்னன முதலியாக்கே - கன்னன் பொன்னன் காமன் முதலியவர்ககே அந்தப் பாடல்கள் உரியன, அன்னரிடஞ்சென்று அரஙகேற்றிக கொணமின் அருநிதியே - அவர்களிடமபோய ஒப்புவித்து அருமையான பொருளைப் பெற்றுககொள்வீராக!, எ - று.

33. பூவென்றுமா வென்றகண்ணார்
பொன்னெனறிச்சை பூண்டறப்பரைக்
காவென்று கோவென்றுதாவென்று
பாடுங்கவிப் புலவீர்
தூவென்றுமே யொன்றுமாநன்று
தானென்று தோன்றுமொன்றைத்
தேவென்றுகோவென்று காவென்று
பாவென்றுஞ் செப்புமினே.

உரை :—பூ என்று - நிலம் வேண்டுமென்றும், மா வென்ற கண்ணார் - மானை வென்ற கண்ணையுடைய பெண்கள் வேண்டுமென்றும், பொன்

என்று இசசை பூண்டு - பொன் வேண்டுமென்றும் ஆசைப்பட்டு அற்பரைக் கா என்று கோ என்று தா என்று பாடுங் கவிப் புலவீர் கீழ்மக்களைக் கற்பகத் தருவென்றும் அரசனென்று புகழ்ந்து பரிசு கொடுமென்று பாடும் புலவர்களே !, தூ என்றுமே ஒன்றும் - எப்பொழுதும் பரிசுத்தமே பொருந்திய, மா நன்று தானென்று தோன்றும் - மேலான நன்மை தானே வந்ததென்று தோன்றுகின்ற, ஒன்றை - ஒரு மெய்ப்பொருளை, தே என்று கோ என்று - தெய்வமே என்றும் அரசனே என்றும் புகழ்ந்து, கா என்று - காப்பாற்றி யருளுவாயென்று, பா என்றும் செப்புமினே - எப்போதும் கவி இயற்றுவீர்களாக எ - று.

மழை காலத்துப் பாடியன

34. காரேயுன் னீரையெல்லாங் கள்ளன் கவர்ந்தானோ
நீரே யுதவாய் நெறியாமோ—நேரேதான்
வாரியுண்டு வாரிமொண்டு வாரியுண்டு வானிருண்டு
பேரிகொண்டு நீதிரண்டு பெய்.

உரை :—காரே - மேகமே !, உன் நீரை யெல்லாம் கள்ளன் கவர்ந் தானோ - உன்னிடத்திலுள்ள தண்ணீரை யெல்லாம் திருடன் கொண்டு போய் விட்டானோ, நீரே உதவாய் நெறியாமோ - தண்ணீரைக் கொடுக் காத வழக்கம் தகுந்தாகுமா ?, நேரேதான் வாரியுண்டு - உனக்கு நேரே தான் கடலிருக்கிறது, வாரி மொண்டு - கடலிலே முகந்து, வாரி யுண்டு - அள்ளிக் குடித்து, வானிருண்டு - வானத்திலே சென்று கரு முகிலாகத் தோன்றி, பேரிகொண்டு - இடி முழக்கஞ்செய்து, நீ திரண்டு பெய் - நீ தொகுதியாக ஒன்று சேர்ந்து மழையைப் பொழிவாயாக, எ - று.

35. செய்வே னெனச்சொல்லிச் செய்யாவு லோபரைப்போற்
பெய்வே னெனக்காட்டிப் பேர்முகிலே—மைவானி
லோடுவாய் நிற்பா யுருமுவாய் மின்னுவாய்
நீடுவாய் பின்பெய்யாய் நீ.

உரை :—பேர் முகிலே - பெரிய மேகமே !, செய்வேன் எனச் சொல் லிச் செய்யா உலோபரைப்போல் - கொடுப்பேனென்று சொல்லிக் கொடாத லோபிகள்போல, பெய்வேன் எனக் காட்டி - மழை பெய்வதைப்போலத் தோற்றஞ்செய்து, மைவானில் ஓடுவாய் நிற்பாய் உருமுவாய் மின்னுவாய் - இருண்ட ஆகாயத்தில் செல்லுவாய் நிற்பாய் இடிமுழக்கஞ் செய்வாய் மின் னல் வீசுவாய், நீடுவாய் பின் பெய்யாய் நீ - நெடுநேரம் வானிலிருப்பாய் கடைசியாக மழை பெய்யாதிருப்பாய், எ - று.

36. வேண்டுங்கால் நீபெய்யாய் வேண்டாத போதுபெய்வாய்
தாண்டுநீ செய்வதெல்லாந் தப்புகளே—நீண்டுலவும
வட்டமுகி லேயுனக்கு மாசெனப்பேர் தந்தோர்க்குப்
பட்டமது கட்டுவேன் பார்.

உரை:—நீண்டுலவும் வட்ட முகிலே - நெடுந்தூரம் உலாவுகின்ற வட்ட வடிவான மேகமே!, தாண்டும் நீ - வானிலே தாவிச செல்லுகின்ற நீ, வேண்டுங்கால் பெய்யா - வேண்டுங காலத்திலே பெய்யமாட்டாய், வேண்டாதபோது பெய்வாய் - வேண்டாத காலத்திலே பெய்வாய், செய்வதெல்லாம் தப்புகளே - ......, உனக்கு மாசு எனப்பேர் தந்தோர்க்குப் பட்டமது கட்டுவேன் பார் - உனக்கு மாசு எனப் பெயர் தந்தவர்களுக்கு முடி சூட்டுவேன் பார்ப்பாயாக, எ - று.

37. உண்ணீரி லாமையினு லுண்ணீரும் வற்றியழக்
கண்ணீரும வற்றியது கந்தரமே—தண்ணீரின்
பஞ்சமுனக்கு முண்டோபா ரோர்க்கிரங்காத
நெஞ்சமுனக் கிரும்பு நேர்.

உரை :—கந்தரமே - மேகமே!, உண்ணீரிலாமையினுல் - குடிப்பதற்கு நீரில்லாமையினுல், உள் நீரும் வற்றி-உடம்பிலுள்ள நீரும் உலாந்து போய, அழக் கண்ணீரும் வறறியது - அழுவதற்குக கண்ணிலுளகூட நீரில்லாமற போயிற்று, தண்ணீரின் பஞ்ச முனககுணடோ - தண்ணீா அற்றுப்போதல் உனக்கு ஏற்படுமோ, பாரோாககு இரஙகாத நெஞ்சம் உனககு - உலகத்தார் மீது தயவு வையாத உன்னுடைய மனது, இரும்பு நேர் - இரும்புககு ஒப்பாகும், எ - று.

38. மினறொழில்சூரியன்றன் றொழிருங்குதன்மிக்கபுவி
யின்றொழிறீகருச்சுடுந் தொழிற்காற்றுக்கியங்குந்தொழி
லுன்றொழில்பெய்தன்மழையே யுனையுண்டுயிருய்குவ
தென்றொழிலுன்றொழினீ மறந்தாற்புவிக்கென்றொழிலே.

உரை :—மின் தொழில் சூரியன் தன் தொழில் - பிரகாசமாக ஒளி வீசுகிற தொழில் சூரியனுடைய தொழிலாகும், தாஙகுதல் மிக்க புவியின் தொழில் - பொருட்களைத தாஙகுதல் சிறந்த பூமியின் தொழிலாகும், தீக்குச சுடும் தொழில் - நெருப்புக்குத் தொழில் சுடுவது, காறறுககு இயங்கும் தொழில் - வாயவுக்கு அசைதல் தொழிலாகும், மழையே உன் தொழில் பெயதல - மேகமே உன்னுடைய தொழில் நீரைப் பொழிவதாகும், உனை உண்டு உயிர் உயவது என் தொழில் - அந்த நீரையுண்டு பிழைப்பது என்னுடைய வேலையாகும், உன் தொழில் நீ மறந்தால் புவிக்கு என் தொழிலே- உனது தொழிலை நீ செய்ய மறந்தால் பூமியிலுள்ளவர்களுக்கு என்ன வேலை யிருக்கிறது, எ - று.

## வேனிற்கால வெப்பமிகுதியைப் பற்றியது

39. சூரியா நின்பரிகள் சோம்பன்மேற் கொண்டனவோ
ஆரியத்தே ரச்சாணி யற்றதோ—ஓரிமையிற்
செல்லென்றாற் செல்லாமற் றீமாரி பெய்துநின்றாய்
நில்லென்றார் சொன்னார் நினை.

உரை:—சூரியா - கதிரவனே!, உன் பரிகள் - உன்னுடைய குதிரைகள், சோம்பல் மேற்கொண்டனவோ - ...., ஆரியத் தேர் அச்சாணி அற்றதோ - உம்முடைய உயர்ந்த தேரின் அசசாணி முறிந்துபோய் விட்டதோ, ஓர் இமையில் செல்லென்றால் செல்லாமல் தீமாரி பெய்து நின்றாய் - ஓரிமைப் பொழுதிற் போய்விடென்றால் போகாமல் அக்கினி மழையைச சொரிந்தாய், நில்லென்று ஆர் சொன்னார் நினை - உன்னை நிற்கும்படி யார் சொன்னார்கள் யோசித்துப் பார், எ - று.

40. வேலைக்குண் மூழ்கினு மேகத்துட் சேரினும் விண்ணின் மண்ணின்
மூலைக்கு மூலையொளி யினுங்கா ரிருண் மொய்க்குங் குளிர்ச்[ன்
சோலைக்குண் மேவினுங் கோடைப்பரிதி தொடர்ந்து சுடு
மாலைக்கனங்கன் சுடுமென்று பொய்சொல்வர் வம்பர்களே.

உரை:—வேலைக்குள் மூழ்கினும் - கடலில் மூழ்கிக் கிடந்தாலும், மேகத்துள் சேரினும் - மேக மண்டலத்திற் போயிருந்தாலும், விண்ணின் மண்ணின் மூலைக்கு மூலை யொளியினும் - ஆகாயத்திலோ பூமியிலோ மூலைக்கு மூலையாகப் போய் மறைந்திருந்தாலும், கார் இருள் மொய்க்குங் குளிர் சோலைகுள் மேவினும் - கரிய இருள் நிறைந்த குளிர்ந்த சோலைக் குள் போய்ச சேர்ந்தாலும், கோடைப் பரிதி - வேனிற்காலததுச் சூரியன், தொடர்ந்து சுடும் - பின்பற்றி வந்து வெப்பந்தரும், மாலைக்கு அனங்கன் சுடுமென்று பொய் சொல்வர் வம்பர்களே - மாலைக் காலத்தில் மன்மதன் வெப்பமுண்டாக்குவன் என்று வம்பர்கள் பொய் சொல்வர், எ - று.

## காரைக்கால் தனக்கோடி முதலியாருக்கு எழுதிய நிருபம்

41. வாடும்பயிர்க்குநன்மாரி யென்கோபல்வறுமையுற்றுத்
தேடுமவர்க்குநற்செல்வ மென்கோபெருந்தீவினையைச்
சாடுமவர்பெற்றசித்தி யென்கோவித்தரணியெங்கு
நீடும்புகழ்த்தனக்கோடிமன் விட்டநிருபத்தையே.

உரை :—இத்தரணி யெங்கும் நீடும் புகழ்த் தனக்கோடிமன் - இந்த வுலகமெங்கும் பரவிய புகழையுடைய தனக்கோடி முதலியார், விட்ட நிருபத்தையே - அனுப்பிய திருமுகத்தை, வாடும் பயிர்க்கு நன்மாரி யென்கோ - வாடுகின்ற நெற்பயிருக்குப் பெய்த நல்ல மழையென்று நான்

சொல்லவா?, பல் வறுமையுற்றுத் தேடுமவர்க்கு நற் செல்வ மென்கோ-பலவகையாகத் தரித்திரப்பட்டவர்கள் பெற நாடுகின்ற நல்ல ஐசுவரிய மென்று சொல்லவா?, பெரும் தீவினையைச் சாடு மவர்பெற்ற சித்தி யென்கோ - பெரிய கருமங்களைத் தொலைத்தற்குரிய தவஞ் செய்பவர்கள் அடைந்த நற்பயனென்று சொல்லவா?, எ - று.

மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்கள் பாடிய
சீர்க்காழிக்கோவையைச் சிறப்பித்தது

42. இன்பாவிற் கோவைசொன்ன மீனாட்சி
சுந்தரப் பேரிறைவயானு
முன்பாவிற் கவிசொல்வே னென்கவிபார்ப்போ
ரதைமீண்டோ ராதான்றோர்
முன்பாச்சொன் னூல்களையே துதிப்பருன்பா
வுணர்வோர்கண் முன்னோர் நூலைப்
பின்பாகச் சொலிவெறுப்பர் நல்லவனா
னோநீயோ பேசுவாயே.

உரை:—இன்பாவிற் கோவை சொன்ன மீனாட்சி சுந்தரப் பேர் இறைவ - இனிய பாடல்களினால் சீர்காழிக்கோவை யியற்றிய மீனாட்சி சுந்தரம் பிள்ளை யென்னும் பெயருடைய கவித் தலைவனே! யானும் உன் பாவிற் கவி சொல்வேன் - யானும் உன் பாட்டைப் போன்ற கவியை யியற்றுவேன், என் கவி பார்ப்போர் அதை மீண்டு ஓராது-என் பாட்டைப் படிப்போர் அதனை மறுபடியும் ஆராயசிசெய்யாமல், ஆன்றோர் முன்பாச சொன்ன நூல்களையே துதிப்பர் - பெரியோர் முற்காலத்திற் சொன்ன பாடல்களைப்போற்றுவர், உன்பா உணர்வோர்கள்-உன்னுடைய பாட்டைக் கற்கின்றவர்கள், முன்னோர் நூலைப் பின்பாகச சொலி வெறுப்பர் - முன்னோர்களுடைய இலககியஙகளை உன்னுடைய நூலுக்குப் பிற்பட்ட சிறப்புடையன வென்று கருதி யொதுக்குவர், நல்லவன் நானோ நீயோ பேசுவாயே - முனனோர்கள் நூல்களைப் பேணுமபடி செய்கின்ற நான் நல்லவனோ அவற்றை வெறுக்கும்படியாகச செய்கின்ற நீ நல்லவனோ சொல்லுவாயாக!, எ - று.

43. தண்டமிழ்முன் னீர்பெருகி மீனாட்சிசுந்தரப்
பேர்த்தருமக் கொண்டல்
தொண்டர்கள்சூழ் சிரபுரத்திற் பொழிகோவை
யெனுமமுத தூயவாரி

மண்டலமும் விண்டலமுங் கரைபுரண்டு
திரைசுருண்டு வருதனோக்கி
அண்டர்தொழும் புகலியிறை தோணியுற்றா
னஃதின்றே லமிழுவானே.

உரை :—தண்டமிழ் முந்நீர் பருகி - குளிர்ந்த தமிழாகிய கடலிலே நீரைக் குடித்து,' மீனாட்சி சுந்தரப்பேர்த் தருமக் கொண்டல் - மீனாட்சி சுந்தரனென்னும் அற வடிவான மேகமானது, தொண்டர்கள் சூழ் சிரபுரத்திற் பொழி கோவையெனும் அமுதவாரி - அடியார்கள் நிறைந்த சீர்காழியில் பெய்த கோவையாகிய அமுதத்தின் வெள்ளமானது, மண்டலமும் விண்டலமும் கரை புரண்டு திரை சுருண்டு வருதல் நோக்கி - பூமியிலும் வானத்திலும் பெருக்கெடுத்துக் கரைகளைத் தாக்கி யலைவீசி வருவதைப் பார்த்து, அண்டர் தொழும் புகல் இறை - தேவர்கள் வணங்குகின்ற சீர்காழிப் பெருமான், தோணி யுற்றான் - தோணியின்மேல் வீற்றிருந்தான், அஃதின்றேல் அமிழுவானே - தோணியில்லாமற் போனால் அவன் அந்த அமுதவெள்ளத்தில் மூழ்கி விடுவான், எ - று.

## சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள்மீது பாடியது

44. உயர்வாந்தாமோதரபூபாவுன்னைச் சசியொவ்வானவன்றான்
சுயமாஞ்சோதியிலன்ஞானச் சோதியுடையாய்நீயன்னான்
கயரோகத்தாற்கலைதேய்வன் கலையுமதியும்வளர்வாய்நீ
யயர்வாமவனேகளங்கமுற்றா னகளங்கன்றானீதானே.

உரை :—உயர்வாம் தாமோதர பூபா - மேன்மையான தாமோதர மன்னனே!, உன்னைச் சசி ஒவ்வான் - உனக்குச் சந்திரன் ஒப்பாக மாட்டான், அவன் தான் சுயமாஞ் சோதி இலன் - அவன் தனக்குச் சொந்தமான ஒளி யில்லாதவன், நீ ஞானச் சோதி யுடையாய் - நீ சொந்தமான அறிவு ஒளியினையுடையாய், அன்னான் கயரோகத்தால் கலை தேய்வன் - அவன் கயரோகத்தினாலே கலைகள் குறையப் பெறுகின்றவன், நீ கலைமதியும் வளர்வாய் - நீ கல்வியும் அறிவும் வளரப்பெற்றவன், அயர்வாம் அவனே களங்கமுற்றான் - தளர்கின்ற அவன் களங்க முடையவன், அகளங்கன்றான் நீ தானே - களங்க மற்றவன் நீதானே, எ - று.

45. நள்ளுநர்க்கினியதாமோதர நராதிபன்றானுநாளும
தெள்ளுதண்டமிழாற்செய்யுந்தீங் கவியமுதந்தன்னைக்
கொள்ளுவோர்செவிதித்திக்குங் கூறுவோர்வாய்தித்திக்கும்
உள்ளுவோர்மனந்தித்திக்கும் மென்னில்யாமுரைப்பதென்னே.

உரை :—நள்ளுநர்க்கினிய தாமோதர நராதிபன்றான் - நண்பர்களுக்கு இனியவனான தாமோதர மன்னன் என்பவன், நாளும் தெள்ளு தண் தமி

மூல் செய்யும் தீங்கவி அமுதந்தன்னை - நாள்தோறும் தெளிவான குளிர்ந்த தமிழ் மொழியிலே இயற்றும் இனிய பாடல்களாகிய அமுதத்தை, கொள்ளுவோர் செவி தித்திக்கும் - கேட்கின்றவர்களுடைய செவிக்கு அது இனிக்கும், கூறுவோர் வாய் தித்திக்கும்,- சொல்லுகின்றவர்களுடைய வாயானது இனிமை புடையதாகும், உள்ளுவோர் மனம் தித்திக்கும் என்னில் - நினைப்பவர்களுடைய உள்ளம் இனிமை புடையதாகு மென்றால், யாம் உரைப்பது என்னே - நாம் அதற்குமேற் கூறக் கூடியது யாது ?, எ - று.

மனைவி தேகவியோக மடைந்தபோது பாடியது

46. என்னொடுவாழ் சாகாதே யென்றுபல முறைநா
னுன்னொடுதான் சொன்னவுரை கடந்து—மின்னொடுசேர்
பொன்னே யிறந்தாய் புருடன்மொழி யைக்கடந்த
தென்னே மின்னேநீ யியம்பு.

உரை:—மின்னொடு சேர் பொன்னே - மின்னுகின்ற ஆபரணங்களோடு கூடிய இலக்குமி போன்றவளே !, என்னோடு வாழ் சாகாது என்று பல முறை நான் உன்னொடு சொன்ன வுரை கடந்து - என்னோடு கூடி யிரு இறவாதே என்று பலதரம் உன்னோடு நான் கூறிய வார்த்தையை மீறி, இறந்தாய் - நீ மரண மடைந்தாய், புருடன் மொழியைக் கடந்ததென்னே - நீ கணவன் சொல்லைத் தட்டிய தெப்படி, மின்னே நீ இயம்பு - பெண்ணே நீ சொல்வாயாக!, எ - று.

47. ஆகும் பிரசவத்துக் கப்பனூர்க் கென்னைவிட்டுப்
போகும் படியிசையாப் பூவையே—யேகமாய்
மூக்காலமு முணர்ந்த மூலனு மப்பனூர்க்
கிக்காலநீ போன தென்.

உரை :—ஆகும் பிரசவத்துக்கு அப்பனூர்க்கு என்னை விட்டுப்போகும் படி இசையாப் பூவையே - பிள்ளை பெறுவதற்கு உன்னுடைய தந்தை யூருக்குப் போக மனம் ஒவ்வாத பெண்ணே !, ஏகமாய் முக்காலமும் உணர்ந்த மூலனும் அப்பனூர்க்கு இக்காலம் நீ போனதென் - ஒரே பொருளாய் மூன்று காலத்தையும் அறிந்த, எவற்றிற்கும் மூலகாரணனாகிய பரம பிதாவினுலகத்திற்கு இந்தக் காலத்தில் நீ போனதற்குக் காரணம் யாது !, எ - று.

48. மாதரின்றி வாழின் மதன்பகையா நாமணஞ்செய்
சாதலியர் மீதுபகை காலனும்—பூதலத்திற்
கள்ளமின் னுரைக்கூடிற் கர்த்தன்பெரும் பகையா
முள்ளமே வேறேன் செய்வோம்.

உரை :—மாதரின்றி வாழின் மதன் பகையாம் - பெண்களோடு கூடாமல் வாழ்ந்தால் மன்மதனுடைய விரோதம் ஏற்படுகின்றது, நாம் மணஞ்செய் காதலியர் மீது பகை காலனாம் - நாம் கலியாணஞ் செய்து கொண்ட மனைவிமீது எமன் விரோதங் கொள்கின்றான், பூதலத்தில் கள்ள மின்னாரைக் கூடில் கத்தன் பெரும் பகையாம் - உலகத்திற் பரத்தையரைக் கூடினால் கடவுளுடைய பெரிய வெறுப்பு ஏற்படும், உள்ளமே வேறு என் செய்வோம் - மனமே வேறு யாது செய்வோம், எ - று.

49. ஆனமணை யின்றிச்சும மாவிருப்போ மென்றாலோ
ஈனவுட னோயுற்றென வருத்து—மானனைய
மாதர்தமை யேகொண்டான் மண்ணிலவ ரிரார்
நாதனே யென்செய்வே னான்.

உரை :—ஆன மணையின்றிச சும்மா இருப்போ மென்றாலோ - பொருத்தமான கலியாண மில்லாமல் சும்மா இருக்கலாமென்றால், ஈன உடல் நோயுற்று எனை வருத்தும் - குறையுடைய இந்த உடம்பானது எனைத் துன்பப்படுத்தும், மான் அனைய மாதா தமையே கொண்டால் - மான் போன்ற பெண்களை மணஞ் செய்து கொண்டால், மண்ணில் அவர் இரார் - உலகத்தில் அவர்கள் தரிப்பதில்லை, நாதனே என் செய்வேன் நான் - ......, எ - று.

50. நீயாவி நானுடல நீபோனாய் நானிருந்தேன்
மாயாமல் வெற்றுடம்பு வாழுமோ—தூயாளே
நானோநா னல்லவோ நாட்டினன் வேறொருவனா
னானேவி தென்னநவஞ் சாற்று.

உரை:—தூயாளே - பரிசுத்த முடையவளே !, நீ ஆவி நான் உடலம் - நீ உயிர் நான் உடம்பு, நீ போனாய் நான் இருந்தேன் - நீ இறந்து போனாய் நான் உயிரோடு இருக்கின்றேன், மாயாமல் வெற்றுடம்பு வாழுமோ - உயிரில்லாத உடம்பு அழியாமல் பிழைத்திருக்குமா ?, நானோ நானல்லவோ - ......, நாட்டில் நான் வேறொருவன் தானோ - உலகத்தில் நான் மற்றொருவனோ, இது என்ன நவம் - இது என்ன புதுமை, சாற்று - சொல்வாயாக, எ - று.

மகாவித்துவான்

# மீனாட்சிசுந்தரம் பிள்ளை

பாடியது



திருவாவடுதுறை மகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்மீது பாடியவை

1. உரவுபொலிமறை முடிவாஞ் சிவக்கொழுந்தைப்
பரானந் தத்துவாவைநாளுங்
கரவுதவிரன்ப ளருத்தகலாம
லமுதூற்றுங் கருணைவாழ்வைப்
புரவுமலிமெய்ஞ்ஞான வாரிதியைத்
துறவரசைப் பொருவிலாத
பரவுபுகழ்த்துறைசையிற் சுப்பிரமணிய
குருமணியைப் பரவிவாழ்வாம.

உரை:—உரவு பொலி மறை முடிவாஞ் சிவக்கொழுந்தை - அறிவு மிகுந்த நுட்ப நூல்களின் முடிந்த பொருளாக விளங்குகின்ற சிவச சோதியை, பரானந்தத்து உவாவை - மேலான இன்பத்தைக் கொடுக்கும் முழுமதியை, நாளும் கரவு தவிர் அன்பா உளத்து அகலாமல் அமுதூற் றும் கருணை வாழ்வை - கபடமில்லாத அடியாருடைய நெஞ்சத்து விலகாம லிருந்து நாள்தோறும் அமுததததைச சொரிகின்ற தயவாகிய ஐசுவரி யத்தை, புரவுமலி மெய்ஞ்ஞான வாரிதியை - பாதுகாப்பு மிகுந்த உண்மை யறிவுக் கடலை, துறவு அரசை - துறவிகளுக்கு வேந்தனை, பொருவிலாத - ஒப்பற்ற, பரவு புகழ்த் துறைசையில் சுப்பிரமணிய குருமணியை - எங்கும் பரவிய கீர்த்தியையுடைய திருவாவடுதுறையில் வீற்றிருக்கின்ற சுப்பிர மணிய தேசிக ரத்தினத்தை, பரவி வாழ்வாம் - வணங்கி வாழ்வோமாக !, எ - று.

2. திருமணியை நிறத்தமைத்த நீன்மணிமெய்ம
மால்பிரமன் றேடிக்காணு
வருமணியென் னையும்பொரு ளாவாண்ட
சிந்தாமணியன்ப ரகத்தேமேய

வொருமணியம் பலவாண சிரோமணிகண்
மணியடிமை யுவந்தார்கண் ணுட்
கருமணிவண் டுறைசையிற் சுப்பிரமணிய
குருமணியைக் கருத்துள்வைப்பாம்.

உரை:—திருமணியை நிறத்தமைத்த நீல் மணி மெய்ம்மால் - இலக்ஷுமியாகிய இரத்தினத்தை மார்பில் வைத்துக்கொண்ட நீலமணிபோன்ற உடம்பினையுடைய விஷ்ணுவும், பிரமன் - அயனும், தேடிக்காணு அரு மணி - தேடி அடியும் முடியுங் காணமுடியாத அரிய இரத்தினமும், என்னையும் பொருளாய் ஆண்ட சிந்தாமணி - அடியேனையும் மதித்து ஆட்கொண்ட சிந்தாமணி போல்பவனும், அன்பர் அகத்தே மேய ஒரு மணி - அடியார்கள் உள்ளத்தே தங்கிய ஒப்பற்ற இரத்தினமும், அம்பலவாண சிரோன்மணி கண்மணி - அம்பலவாண தேசிகராகிய தலைமணி போன்றவருக்குக் கண்மணிபோல் உதவினவரும், அடிமை யுவந்தார் கண்ணுள் கருமணி - தனக்கு அடியவராக விருக்க விரும்பினவர்களுடைய கண்ணினுள் விளங்கும் கருமணிபோல்வாருமாகிய, வண்துறைசையில் சுப்பிரமணிய குருமணி - வளமான திருவாவடுதுறையில் வீற்றிருக்கும் சுப்பிரமணிய தேசிக இரத்தினத்தை, கருத்துள் வைப்பாம் - சிந்தையுள் வைத்துப் போற்றுவோம், எ - று.

3. செல்லார்க்கும பெருமுழக்க மணமுழக்கமென
மேற்போய்த் திகழ்மாடத்தாற்
சொல்லார்குங் கழனிகளாற் றொலையாத
வளங்காட்டுந் துறைசைமேவிக்
கல்லார்க்கு நல்லார்க்கும் வல்லார்க்கு
மல்லார்க்குங் கணக்கிலாமற்
றெல்லார்க்கு மொப்பில்வைப் பாஞ்சுப்பிர
மண்ணியகுரவ னிருதாள்போற்றி.

உரை:—செல்லார்க்கும் பெருமுழக்க மணமுழக்கமென - மேகம் ஒலிக்கும் பேரோசையானது கலியாண முழக்கம்போல, மேற் போய் திகழ் மாடத்தால் - மேலோங்கி விளங்கும் உப்பரிகையில் கேட்கத்தக்கதாக வுயர்ந்த மாடங்களாலும், சொல்லார்க்கும் கழனிகளால் - நெற்கதிர்களின் ஓசையானது கேட்கும் வயல்களாலும், தொலையாத வளங்காட்டும் துறைசை மேவி - நிலைபெற்ற நலத்தைக் காட்டும் திருவாவடுதுறையை யடைந்து, கல்லார்க்கும் அல்லார்க்கும் - படித்தவர்களுக்கும் படியாதவர்களுக்கும், வல்லார்க்கும் அல்லார்க்கும் - திறமை யுடையவர்களுக்கும் திறமையில்லாதவர்களுக்கும், கணக்கிலா மற்று எல்லார்க்கும் - அளவற்ற வேறுவகை மனிதருக்கும், ஒப்பில் வைப்பாம் - இணையற்ற செல்வமாக

விளங்கும், சுப்பிரமணிய குரவன் இருதாள் போற்றி - சுப்பிரமணிய தேசிகரது இரு பாதங்களும் நம்மைக் காப்பனவாக !, எ - று.

4. ஒப்புயர் வில்லவன் சிவன்மூன்றும் முடைமை
யாலிரண்டு மொன்றுமேற்றோர்
தப்பறத் தாழ்ந்தவ ரென்றோர்ந்தனந் திருவா
வடுதுறைநற்றவத் துளார்தம
வைப்பனைய சுப்பிரமணியக் குரவன்றன்
பெயரைவகித் துளாரை
யெப்படியும விலக்கலின் மற்றிவன்மூன்று
மிலனென்றே யியம்புவோமே.

உரை:—ஒப்பு உயாவு இல்லவன் சிவன் மூன்றும் உடைமையால் - படைத்தல் காத்தல் அழித்தலாகிய மூன்றுக்கும் சிவன் ஒருவனே அதிகாரியாதலால் அவன் தனக்கு ஒப்பானவரும் உயர்ந்தவரு மில்லாதவன், இரண்டு ஒன்றும் ஏற்றோர் தப்பறத் தாழ்ந்தவர் - இரண்டு தொழிலுடைய மாலும் ஒரு தொழிலுடைய பிரமனும் சரியானபடி அவனுக்குத் தாழ்ந்தவர்களே, என்று ஓர்ந்தனம் - என்று நாம் ஆராய்ந்து தெரிந்தோம், திருவாவடுதுறை நற்றவத்துளார் தம் வைப்பனைய சுப்பிரமணிய குரவன் - திருவாவடுதுறையிலிருக்கின்ற நல்ல தவமுடைய சேமநிதிபோன்ற சுப்பிரமணிய தேசிகர், தன் பெயரை வகித்துளாரை எப்படியும் விலக்கின் - தன் திருநாமத்தை மனத்திற் றியானிப்பவரை எவவுலகிலும் பிறவாதபடி நீக்குதலின், இவன மூன்றும் இலன் என்று இயம்புவோமே - இந்த தேசிகன் முததொழி லுட்படாதவனென்றே நாம் கூறுவோம், எ - று.

5. தேடுகயிலா யபரமபரைத் துறைநசை
மேயநமச்சிவா யன்றன்னைக்
கூடுதன்மு னுள்ளபதிஞல் வருமுற்
றோன்றலெனக் கொண்டாரவ்வா
றாடுதவிர் தரக்கொண் டுயபிற்றோன்ற
லெனவுங்கொண்டு வக்குங்கோமா
னீடுபெரும் புகழுமை சுப்பிரமணிய
குருமணியை நினைந்துவாழ்வாம்.

உரை:—தேடு கயிலாய பரம்பரைத் துறைநசை நமசிவாயன் தன்னை - தேடிப்போய் அடைதற்குரிய கைலாய பரம்பரையில் வந்த திருவாவடுதுறை யாதீனத்தை ஸ்தாபித்த நமசிவாய குருமூர்த்தியை, கூடுதல் முன்-தான் சேர்வதற்கு இடையில், உள்ள பதிஞல்வரும் முன்றோன்றலெனக்

கொண்டார் - பட்டத்தி லிருந்த பதினொன்கு தேசிகரும் தங்களுக்கு முன்னே தோன்றிய பரமாச்சாரியரென அவரைக் கருதினார்கள், அவ்வாறு ஊடுதவிர்தரகொண்டும் - அப்பதினொன்கு தேசிகரும் அப்படி ஆதிமூர்த்திக்கும் தமக்கு மிடையிலிருந்தும், பின்றோன்றலெனவுங் கொண்டு உவக்குங் கோமான் - பின்னும் தமக்குத் தோன்றி யருள்புரியும் முதல்வனெனக் கருதி மகிழும் தலைவராகிய, நீடு பெரும் புகழுமை - நீண்ட பெரிய கீர்த்தியைப் பொருந்திய, சுப்பிரமணிய குருமணியை - சுப்பிரமணிய தேசிக விரத்தினத்தை, நினைந்து வாழ்வாம் - தியானித்து உய்வோமாக, எ - று.

6. மாமேவுபுகழ்த் திருவா வடுதுறைச்
சுப்பிரமணிய வள்ளலாய
தூமேவு குரவன்பேர் சொற்றபொழு
தென்பிறப்புத் தொலைந்ததம்மா
பாமேவு மிதுகண்டும் பிறப்பொழிப்பா
னிவனென்று பலருஞ்சொல்வார்
தேமேவு நலந்தெரி யென்வாயினையே
புகழாத செய்கையென்னே.

உரை :—மாமேவு புகழ்த் திருவாவடுதுறைச் சுப்பிரமணிய வள்ளலாய - பெருமை பொருந்திய புகழ் மிக்க திருவாவடுதுறையில் வீற்றிருக்கும் சுப்பிரமணிய அருளாளராகிய, தூமேவு குரவன்பேர் சொற்றபொழுது என் பிறப்புத் தொலைந்தது அம்மா - பரிசுத்தம் பொருந்திய தேசிகருடைய திருநாமத்தைச் சொன்னபொழுதே வியக்கத்தக்க விதமாய் என் பிறவியொழிந்து போயிற்று, பாமேவும் இதுகண்டும் பிறப்பு ஒழிப்பான் இவனென்று பலரும் சொல்வார் - உலகத்திற் பரவிய இச் செய்தியை எல்லாருந் தெரிந்திருந்தும் பிறப்பொழிக்கின்றவர் இத தேசிகரென்று சொல்லுகின்றார்கள், தேமேவு நலந்தெரியென் வாயினையே புகழாத செய்கை யென்னே - அவரது தெய்வத்தன்மை பொருந்திய பெயரை யறிந்து சொல்லிய என் வாய்தான் பிறப்பை யொழித்ததென்று அதனைப் புகழாத காரணம் யாதோ?, எ - று.

7. கண்ணான் மதனைக் கடிந்ததற்கேற் பப்பரப்பாற்
பெண்ணாளு ருச்சுப் பிரமணிய—வண்ணா
திருவா வடுதுறையாய் சிற்றடியேற் கின்ப
மருவா வடுமா றவை.

உரை :—கண்ணால் மதனைக் கடிந்ததற்கேற்ப - நெற்றிக் கண்ணால் மன்மதனை யழித்த செயலுக்கு ஒத்தபடி, பரப்பால் - எவருக்கும் தெரிந்தபடியே, பெண்ணாள் உருச் சுப்பிரமணிய அண்ணா - பெண்ணாட்டியைப்

பொருந்தாத சுப்பிரமணிய தேசிக மேலோனே !, திருவாவடுதுறையாய் - திருவாவடுதுறையில் வீற்றிருப்பவனே !, சிற்றடியேற்கு - சிறிய தன்மையுடைய அடியேனுக்கு, இன்பம் மருவா வடு - பேரின்பத்தைப் பொருந்தாத குற்றத்தை, மாறவை - நீங்கி வைப்பாயாக !, எ - று.

## ஆதீன சம்பிரதாயத்தைக் குறித்துப் பாடியது

8. பேசுபுகழ் சுப்பிர மணியதே சிகன்பொன்
வீசு கழற்கடியேன் விண்ணப்பம்—நேசம்
வருதிரு மாளிகைத்தே வன்பூசை யாயே
கருதுபந்தி யாதல் வழக்கம்.

உரை :—பேசுபுகழ்ச் சுப்பிரமணிய தேசிகன் பொன் வீசு கழற்கு - பலரும் பேசுகின்ற கீர்த்தியையுடைய சுப்பிரமணிய தேசிகரின் பொன்னொளி வீசும் திருவடிகளுக்கு, அடியேன் விண்ணப்பம் - ........., நேசம் வரு திருமாளிகைத் தேவன் பூசையாயே - இறைவர்க்கு அன்பராகிய திருமாளிகைத் தேவரின் வழிபாடு முடிந்தே, கருது பந்தியாதல் வழக்கம் - குறித்த மகேசுவர பூசைக்குப் பந்தி வைப்பது ஆதீன வழக்கம்

9 முருகார்பூந் தடஞ்சுலவு வாவடுதண்
டுறைத்தலத்து முதல்வதெய்வத்
திருநாவுக் கரசர்முதன் மூவர்தமிழ்த்
தேனுண்டு தெவிட்டிநிற்குத்
தருநாவுக் கினிமையிஃ தெனக்கொடிமுந்
திரிக்கனியான் றருதலன்பி
னொருவேடன் றருதசையு மமிழ்தினுஞ்சீர்த்
தெனவுண்ட வுறுதிகொண்டே.

உரை :—முருகார் பூம் தடம் சுலவு - வாசனை பொருந்திய பூம்பொழில்கள் சூழ்ந்த, தண் ஆவடுதுறை தலத்து முதல்வ - குளிர்ந்த திருவாவடுதுறைப் பதியில் வீற்றிருக்குந் தலைவரே !, தெய்வத் திருநாவுக்கரசர் முதல் மூவர் தமிழ்த் தேனுண்டு தெவிட்டும் நிற்கு - தெய்வத்தன்மை பொருந்திய திருநாவுக்கரசர் முதலிய தேவார முதல்வரின் மூவருடைய தமிழ்ப்பாடல்களாகிய தேனையுண்டு திருப்தியடையு முமக்கு, இஃது நாவுக்கு இனிமை தரும் எனக் கொடி முந்திரிக் கனி யான் தருதல் - இது உம்முடைய நாவுக்கு இன்சுவை யளிக்குமென்று கொடி முந்திரிப்பழத்தை யான் கொடுத்தல், அன்பின் ஒரு வேடன் தரு தசையும் - அன்பினால் ஒப்பற்ற வேடர் குலத்தவராகிய கண்ணப்பர் கொடுத்த ஊனையும், அமிழ்தினுஞ் சீர்த்தென உண்ட உறுதிகொண்டே - அமிர்தத்தினும் சிறந்ததாகக் கருதி ஏற்றுக் கொண்ட நிச்சயத்தை வைத்தேயென்க, எ - று.

10\. தெள்ளியசெந்தமிழ்க் கடலைக்குறுமுனிவற்
கெதிராகச் செவியாலுண்ட
வெள்ளவிலாமுனிவர் குழாமலிதுறைசைப்
பதியதனிலெவரும் போற்றும்
வள்ளலெனத் திருவுருவாயெளியன்மனத்
தருவாகிவதியும பிள்ளை
வெள்ளைமதிகரந்தருள் சுப்பிரமணிய
பிரானடியை வேண்டுவேனே.

உரை:—குறு முனிவர்க்கு எதிராக - உவர்க்கடலைக் குடித்த அகத்திய முனிவருக்கீடாக, தெள்ளிய செந்தமிழ்க் கடலைச் செவியால் உண்ட - தெளிவான செந்தமிழிலக்கியமாகிய சமுத்திரத்தைக் காதினால் கேட்டுப் பருகிய, வெள்ளவிலாமுனிவர்குழாம் மலிதுறைசைப்பதியதனில்-இகழ்ச்சி யில்லாத துறவிகள் கூட்டம் நிறைந்த திருவாவடுதுறைத் தலத்தில், எவரும் போற்றும் வள்ளலெனும் திருவுருவாய் - எல்லாரும் துதிக்கின்ற அருளாள னாகத் திருவுருவங்கொண்டு, எளியன் மனதது அருவாகி வதியும் - அடியே னது நெஞ்சத்தில் அருவமாகத் தங்கும், பிள்ளை வெள்ளை மதி கரந்தருள் சுப்பிரமணியபிரான் - வெள்ளிய இளஞ் சந்திரனை மறைத்துச் சுப்பிரமணிய தேசிகராக வீற்றிருக்குஞ் சிவபெருமானே!, அடியை வேண்டுவனே - உம்முடைய திருவடித் தாமரையைப் பெற விரும்புகின்றேன், எ - று.

11\. அற்புதக்கடலே கற்பகக்கனியே
யடியவ ராருயிர்க்குயிரே
நற்பரம்பொருளே முப்புரமபொருத
நாதனே கடற்பெறுவமுதே
பொற்புறுமுனதுதிரு வடிக்கமலம
போற்றினேன் பிறவிமாற்றுவைநீ
சொற்பொருளறிந்தகைப் பணிகரந்த
சுப்பிரமணிய சற்குருவே.

உரை :—அற்புதக் கடலே - அதிசயமான நன்மை நிறைந்த சமுத் திரமே!, கற்பகக் கனியே - கற்பக மரத்தின் பழம் போன்றவனே!, அடி யவர் ஆருயிர்க்கு உயிரே - ......, நற்பரம் பொருளே - ......, முப்புரம் பொருத நாதனே - திரிபுர மெரித்த கடவுள் வடிவானரே!, கடற்பெறு அமுதே - திருப்பாற் கடலிற் றோன்றாது தனியே அமைந்த அமுதமே!, பொற்புறும் உனது திருவடிக் கமலம போற்றினேன் - அழகிய உனது பாத தாமரையை வழி பட்டேன், சொற்பொருள் அறிந்த கைப்பணி கரந்த சுப்பிரமணிய சற்குருவே - திருக்கையிலணிந்த சொல்லும் பொருளுந்

தெரிந்த ஆதிசேடனையாகிய பாம்பு அணியை மறைத்துச சுப்பிரமணிய நற்றேசிகராய் வந்த சிவபெருமானே!, நீ பிறவி மாற்றுவை - நீ என் பிறவியை யொழிப்பாயாக!, எ - று.

12. மின்னியமதியு மன்னியநதியு
மிளிர்மலைப் பதியையுங் கரந்த
முன்னவவேண்டு மொருவரம்யாரு
மொழியுநின் றிருப்புகழ்கேட்க
வென்னிருசெவிகள் போதுமோபோதா
வின்னநூ றுயிரகோடி
துன்னவேயருளி லொருவிதமமையுஞ்
சுப்பிரமணிய சற்குருவே.

உரை :—சுப்பிரமணிய சற்குருவே - சுப்பிரமணிய நற்றேசிகனே!, மின்னிய மதியும் மன்னிய நதியும் மிளிர மலைப்பதியும் கரந்த - ஒளி வீசும் சந்திரனையும் நிலைபெற்ற கங்கையையும் பிரகாசிக்கின்ற கைலைமலை தலத்தையும் மறைத்து இங்கெழுந்தருளிய முதல்வனே!, ஒரு வரம் வேண்டும் - நான் உன்னிடம் ஒரு வரம் கேட்கின்றேன், யாரும் மொழியுநின் திருப் புகழ் கேட்க - எல்லாரும் பேசுகின்ற உன்னுடைய சிறந்த கீர்த்தியைப் பற்றிக் கேட்பதற்கு, என்னிரு செவிகள் போதுமோ போதா - என்னிரண்டு செவிகளும் காணமாட்டா, (ஆதலால்) இன்னம் நூறுயிர கோடி துன்னவே அருளி - இன்னும் இலட்சகோடி காதுகள் பொருந்தும்படியாக அருள் செய்வாயானால், ஒருவிதம் அமையும் - அவை யொருவிதம் போதியனவாகும், எ - று.

13. உன்பதகமல மலரைநாயடியே
னுளமெனுங் குளத்திடையூறு
மன்புநீர்பெருகி யிருந்ததாலதனு
ளலர்ந்திடத் திருவருள்புரிவாய்
மன்பதையுலகிற் றரித்திரநோயின்
வருந்திடா திருநிதியமுதந்
துன்புறாதளிக்குந் துறைசைவாழ்பரனே
சுப்பிரமணிய சற்குருவே.

உரை :—மன்பதை யுலகில் தரித்திர நோயின் வருந்திடாது - உலகத்திலுள்ள சனங்கள் வறுமையென்னும் வியாதியால் துன்புறாதவண்ணம், இருநிதி யமுதம் துன்புறாது அளிக்கும் துறைசைவாழ் பரனே - மிகுந்த செல்வத்தையும் உணவையும் மனவருத்தப்படாமற் கொடுக்கின்ற திருவாவடுதுறையில் வாழ்கின்ற மேலானவனே!, சுப்பிரமணிய சற்குருவே - சுப்பிரமணிய நற்றேசிகனே!, உன் பதகமல மலரை - உன்னுடைய பாத

மாகிய தாமரைப் பூவை, நாயடியேன் உளமெனும் குளத்திடையூறும் அன்புநீர பெருகி இருந்ததால் - நாய் போன்ற அடியேனுடைய நெஞ்ச மாகிய பொய்கையில் ஊற்றெடுத் தூண்டாகின்ற அன்பாகிய நீர் நிறைந் திருப்பதால், அதனுள் அலர்ந்திட - அக் குளத்திற் பூத்து விளங்கும்படி யாக, திருவருள் புரிவாய் - ... , எ - று.

14. சந்தமிகுங்கயிலை யெனுந்துறைசையினி
லருள்வடிவாய்ச் சடைகரந்து
வந்தருள்சுப்பிரமணிய குருபரனைத்
தரிசிக்க மதுரவாய்ச்சொற்
சுந்தரன்பேருதவி செய்தானெளியவெனக்
குங்கந்த சுவாமியென்னு
முந்துகவிஞனு மதனலருள்பெற்
றிருவினையின் முதலற்றேனே.

உரை :—சந்த மிகுங் கயிலையெனும் துறைசையினில் - அழகு மிகுந்த கயிலாய மென்று சொல்லக்கூடிய திருவாவடுதுறையில், அருள் வடிவாய - அருள் திருமேனி கொண்டு, சடை கரந்து - சடையை மறைத்து, வந்தருள் சுப்பிரமணிய குருபரனை - எழுந்தருளி வந்த சுப்பிரமணிய தேசிகனாகிய மேலோனை, தரிசிக்க - பார்த்து வணங்கும்படியாக, எளிய எனக்கும் - அடியேனுக்கும், கந்த சுவாமியெனும் முந்து கவிஞனுக்கும - எனக்கு முற் பட்ட புலவராகிய கந்தசாமிப் பாவலருக்கும், மதுரவாயச சொல் சுந்தரன் பேருதவி செய்தான் - இனிய மொழி பேசும் சுந்தரன் பெரிய உதவி செய்தார், அதனல் அருள்பெற்று இருவினையின் முதலற்றேனே - அத னுல் அக் குருவின் திருவருளைப்பெற்று நல்வினை தீவினை யென்னும் இரண்டும் வேரறப் பெறறேன், எ - று.

சுப்பிரமணிய தேசிகரிடம் விடைபெருமல் வந்ததற்காக உத்தரங் கூறியது

15. பன்னகச்செஞ்சடைகரந்துவந்தருள் சுப்பிரமணியபரமனேநீ
யென்னகத்துளகலாமலிருந்ததனுற் றுறைசையுறு திங்குவந்தே
னன்னதறியாதுசிலர்குற்றமெனப் பலதரமுமறைந்திட்டாலு
முன்னுடையதிருவுளத்திலுணராத தொன்றேனுமுளதோ
[மன்னே.

உரை :—பன்னகச் செஞ்சடை கரந்து வந்தருள் சுப்பிரமணிய பரமனே - பாம்பு தங்கும் சிவந்த சடையினை மறைத்து எழுந்தருளி விளங் கும் சுப்பிரமணிய தேசிகனென்னும் பெரியோனே !, நீ என் அகத்துள் அகலாமல் இருந்ததனுல் துறைசையுறு இங்கு வந்தேன் - நீ என்னுடைய

நெஞ்சத்தில் நீங்காமலிருந்தமையால் திருவாவடுதுறைக்குச் செல்லாமல் இவ்விடத்திற்கு வந்தேன், அன்னது அறியாது சிலர் குற்றமெனப் பலதரமும் அறைந்திட்டாலும் - அதனைத் தெரியாமல் நான் செய்தது தவறென்று சிலர் பல தடவை வற்புறுத்திக் கூறினாலும், உன்னுடைய திருவுளத்தில் உணராதது ஒன்றேனும் உளதோ - , மன்னோ - அசை, எ - று.

16. குருமணியா யெழுந்தருள்சுப் பிரமணிய
பரநாதகுணக் குன்றேயான்
மருமலியென் னூர்க்கேக விடையளிப்பா
யெனக்கேட்க வருவேனுகில்
திருமலியெம் விடைவேலைக் கனுப்பிவிட்டோ
மில்லையினஞ் சிலநாட்சென்று
தருகுவமென் பாயதனு னின்னையுரு
தூர்க்குவந்தேன் றருமமூர்த்தி.

உரை :—குருமணியாய் எழுந்தருள் சுப்பிரமணிய பரநாத குணக் குன்றே - தேசிக விரததினமாய வீற்றிருக்கின்ற சுப்பிரமணியப் பெருடைய மேலான நாததத்துவத்தி லுறையும நற்குண மலைபோன்றவனே !, யான் மருமலி என்னூர்க்கு ஏக விடையளிப்பாய எனக் கேட்க வருவேனு கில் - மணம் பொருந்திய என்னுடைய ஊருக்குப் போவதற்கு விடை கொடுப்பா யென்று உன்னிடம் கேட்க வந்தால், திருமலி யெம் விடை வேலைக்கு அனுப்பி விட்டோம - எமது காளையாகிய இலக்குமியோடு கூடிய திருமாலைப் பாற்கடலுக்கு அனுப்பி விட்டோம், இல்லை-இப்போது இங்கே இல்லை, இனம சிலநாள சென்று தருகுவம் என்பாய் - இன்னும் சிலநாள் கழிதது விடை கொடுப்போமென்று கூறுவாய, தரும மூர்தி - அறவடிவானவனே !, அதனால நின்னை யுரறு ஊர்ககு வநதேன - ஆதலால் உன்னிடம் வராமல் என்னூாககு வந்து விட்டேன, எ - று.

17. பதுமமல ரடிபரவி யேகவிடை
யளிப்பையெனப் பகர்வேனுகி
லிதுவரையும் யாவருக்கு முரையாத
விலையெனுஞ்சொ லெனக்குச்சொல்வா
யதுநினது கொடைதன்மைக் காகாதென்
றுரையாம லகன்றேன்யானீ
யெதனுலென் மேற்சினங்கொண் டாயருள்
சுப்பிரமணிய வினியதேவே.

உரை :—சுப்பிரமணிய இனிய தேவே - சுப்பிரமணிய தேசிகரென்னும் இன்பமளிக்குங் கடவுளே !, பதும மலரடி பரவி ஏக விடையளிப்பை

யெனப் பகர்வேனுகில் - உனது தாமரைத் தாள்களைப் பணிந்து என் னூர்க்குப் போவதற்கு விடைகொடுக்க வேண்டுமென்று கேட்டால், இதுவரையும் யாவருக்கும் உரையாத இலையெனுஞ் சொல் எனக்குச சொல்வாய் - இதுவரை யொருவருக்குஞ் சொல்லாத இல்லை யென்னுஞ் சொல்லை எனக்கு நீ சொல்லுவாய், அது நினது கொடைத் தன்மைக் காகா தென்று - அப்படிச சொல்வது உன்னுடைய வள்ளற் றன்மைக்குப் பொருந்தாதென்று, உரையாமல் அகன்றேன் யான் - உன்னிடம் சொல் லாமல் நான் போயினேன், நீ எதனுல் என்மேற் சினங் கொண்டாய் அருள் - நீ என் என்மீது கோபித்துக் கொண்டாயென்று கூறி யருள் வாயாக!, எ - று.

18, நின்சுமுகத் தினைப்பார்க்க நின்னமுத மொழிகேட்க
நின்பாற் பேச
வென்னிருகண்ணிருசெவிவாய்க் கெப்பொழுதுங்கிடைக்கவிலை
யிவைகண் மூன்றும்
மன்னுபெரும பாதகங்கள் புரிந்திருக்க லாமெனது
மன மெப்போது
முன்னையக லாதிருத்திக் கொள்ளவென்ன தவம்புரிந்த
துரைப்பாய் மன்னே.

உரை:—நின் சுமுகத்தினைப் பார்க்க நின்னமுத மொழி கேட்க நின்பாற் பேச - உன்னுடைய நல்ல திருமுகத்தைப் பாாககவும அமுதம் போன்ற நின்னுடைய திருவாக்கைக் கேட்கவும் உன்னிடத்தி லுரையாட வும், என்னிரு கண் இரு செவி வாய்க்கு எப்பொழுதும் கிடைககவிலை - முறையே என்னுடைய இரு கண்களுக்கும் இரு காதுகளுக்கும் வாய்க்கும் எப்பொழுதும் அமையவில்லை, இவைகள் மூன்றும் மன்னுபெரும் பாதகங கள் புரிந்திருக்கலாம் - கண் காது வா யென்ற இவை மூன்று நிலைதத பெரிய குற்றஙகளைச செய்திருக்கலாம், எனது மனம் எப்போதும் உன்னை அகலாதிருத்திக் கொள்ள என்ன தவம் புரிந்தது - ......, உரைப்பாய்- நீ கூறுவாயாக !, மன்னே - அசை, எ - று.

சின்னப்பட்டத்திலிருந்த நமச்சிவாய தேசிக
சுவாமிகள்மீது பாடியவை

19. வாய்ந்தவளம் பொலிதிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாயாநின்பே
ராய்ந்ததிரு வைந்தெழுத்துஞ் சிலையெழுத்தா
வடியேனு ளெழுத்தலாற்பூத்

தோய்ந்தவிதி முயன்றெழுது தலையெழுத்து
நீரெழுத்தால் தொலைந்ததென்றா
லேய்ந்தநின் பேரினைப் புகழ்கோவெனைப்
புகழ்கோநினைப் புகழுமியல்பொன்றுண்டே.

உரை:—வாய்ந்த வளம் பொலி திருவாவடுதுறை வாழ் குரு நமசிவாயா - பொருத்தமான வளங்கள் மிகுந்த திருவாவடுதுறைத் தலத்தில் வாழ்கின்ற நமசிவாய தேசிகரே!, நின்பேர் ஆய்ந்த திரு ஐந்தெழுததும்- உமது பேராகிய ஆராயப்பட்ட மகாமந்திரமாகிய பஞ்சாட்சரமானது, சிலை எழுத்தா அடியேன் உள் அழுத்தலால் - கல்லில் வரைந்த எழுத்துப் போல அடியேனுடைய நெஞ்சத்தில் பதிவித்தலால், பூத்தோயந்த விதி முயன்று எழுது தலை எழுத்து - பூவிற்றங்கிய பிரமன் வினைக்குத் தகக படி கண்டு அதன் பயனாக என் தலையில் எழுதிய எழுத்தானது, நீர எழுத தால் தொலைந்தது என்றால் - தண்ணீரிலெழுதிய வெழுத்துப்போல நிலை யாது ஒழிந்ததென்றால், எய்ந்த நின் பேரினைப் புகழ் கோ எனைப் புகழ் கோ - பொருத்தமான உன்னுடைய திருப்பெயராகிய பஞ்சாட்சரததைப் புகழவா அல்லது அதை நெஞ்சததிற் கொண்ட என்னைப் புகழவா நினைப் புகழும் இயல்பு என்று உண்டே - உன்னைப் புகழும் இயற்கை எப்போதும் உள்ளதே, எ-று.

20. சீர்பூத்த கயிலாய பரம்பரையி
லுமாபதி தேசிகப்பிரான்ற
னேர்பூத்த கண்மணியிற் சிவப்பிரகாசப்
பெரியோ னென்பாற்குற்ற
பார்பூத்த கண்மணியிற் றுறைசையிற்
சுப்பிரமணிய பரமற்குற்ற
வார்பூத்த கண்மணியாங் குருநமச்சி
வாயனிணை மலர்த்தாள்போற்றி.

உரை:—சீர்பூத்த கயிலாய பரம்பரையில் - சிறப்புப் பொருந்திய திருக்கைலாய குரு பரம்பரையில், உமாபதி தேசிகப் பிரான்றன் - உமாபதி சிவாசசாரிய சுவாமிகளின், ஏர் பூத்த கண்மணியில் - அழகு பொருந்திய கண்மணியாக, சிவப்பிரகாசப் பெரியோன் என்பானுற்ற சிவப்பிரகாச தேசிகரென்னும் பெரியவர் அமைந்ததுபோல, பார் பூத்த கண்மணியிற் துறைசையிற் சுப்பிரமணிய பரமற்கு உற்ற - உலகத்திற்குக் கண்மணிபோன்ற திருவாவடுதுறைச சுப்பிரமணிய தேசிகர்க்குச சின்னபட்டமா யமைந்த, வார்பூத்த கண்மணியாம் குரு நமசிவாயன் - நீட்சி பொருந்திய கண்ணின் மணிபோன்ற நமச்சிவாய தேசிகரின், இணை

மலர்த்தாள் போற்றி - இரண்டு திருவடித் தாமரைகளும் நம்மைக் காப்பன வாகும், எ - று.

21. தந்தைபெய ரெடுப்பானிம் மைந்தனென
வொருவரைமண் சாற்றல்பொய்யே
நிந்தையில்லாத் தந்தைபெயர் தோற்றும்போ
தேயெடுத்தோ னீயேநீயே
அந்தையிலா நினைப்போல்வார் நினைப்பணியு
மெனைப்போல்வா ரகிலத்தியாரே
சிந்தைகளிப் புறத்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாயதேவே.

உரை :—சிந்தை களிப்புறத திருவாவடுதுறைவாழ் குரு நமசிவாய தேவே - எல்லார் மனமும் மகிழும்படியாகத் திருவாவடுதுறையில் வீற்றிருக்கின்ற நமசிவாய தேசிக சுவாமியே !, தந்தை பெயர் எடுப்பான் இம் மைந்தனென ஒருவரை மண் சாற்றல் பொயயே - ஒருவரை இந்த மகன தனது தந்தையின் பெயர் எடுப்பானென்று எதிாகாலததால் உலகத்தாா கூறுதல் எப்போதும் உண்மையில்லை, நிந்தையில்லாத தந்தை பெயா - இகழ்சசியற்ற ஞான பிதாவாகிய நமசிவாய தேசிகரின் திருப்பெயரை, தோற்றுமபோதே எடுத்தோன் நீயே நீயே - பிறக்கும்போதே மேற கொண்டவன் நீதானே ஆகும், அந்தையிலா நினைப்போல்வார் - சோம்பலில்லாத உன்னைப்போல் உயாந்தவர்களும், நினைப்பணியும் எனைப்போல் வார் - உன்னை வணங்குகின்ற என்னைப்போல் தாழ்ந்தவாகளும், அகிலத தில் யாரே - உலகத்தில் யாரிருக்கின்றார்கள். (உலகத்தில வேறில்லை என்பது கருத்து.) எ - று.

## வேதநாயகம் பிள்ளைமீது பாடியது

22. கனியிற்பொலி பொழில்சூழ்குளத் தூரன்கரி சறுத்த
வனியிற்பொலி யுமபுகழ்வே தநாயக வள்ளனட்பு
நுனியிற்கரும் புதினல்போ லினிக்குநுவ லரிய
பனியிற்பொலி பிறைபோல் வளராநிற்கும் பான்மதியே.

உரை:—கனியில் பொலிபொழில் சூழ்குளத்தூரன் - பழஙகள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த குளத்தூரில் வாழ்கின்றவரும், கரிசறுதத அவனியிற் பொலியும் புகழ் வேதநாயக வள்ளல் - குற்றததை யொழிததுப் பூமியில் சிறந்து விளஙகுகின்ற வேதநாயகம்பிள்ளை யென்னும் அருளாளன், நட்பு - சிநேகமானது, நுனியில் கரும்பு தினல்போல் இனிக்கும் - கரும்பை அடியிலிருந்து தின்றுகொண்டு போனால் எவவாறு இனிமை மிகுமோ அவவாறு இனிமைபெறற் கேதுவாகும், நுவலரிய பனியிற் பொலி பிறைபோல் வளரா நிற்கும் பால் மதியே - சொல்லுதற்குக் கூடாத குளிர்சசியையுடைய

பிறைச் சந்திரனைத் வளர்வதுபோலப் பால்போன்ற தூய்மையான அறிவானது அதிகப்படுதற் கேதுவாகும், எ - று.

23\. நாட்டுக்கு நல்ல குளத்தூர்வேத
நாயகநன் னுமமாலே
வீட்டுக்கு வாயிலெனுங் காளிக்கோர்
கோவையெனை விளம்பச்செய்தே
யேட்டுக்கு மடங்காத துதிகவிபல்
சொற்றனைநின் னியற்பாட்டுள்ளோர்
பாட்டுக்கு நான்செய்த தொன்றேபல்
செய்தாலும் பற்றாதன்றே.

உரை :—நாட்டுக்கு நல்ல குளத்தூர் வேதநாயக நன்னுமமாலே - தேசத்தில் சிறந்த நன்மையையுடைய குளத்தூரில் வாழும் வேதநாயக மென்ற நல்ல திருப்பெயருடைய பெரியோனே !, வீட்டுக்கு வாயிலெனும் காழிக்கோர் கோவையெனை விளம்பச் செய்தே - மோட்சத்திற்கு வாச லென்று சொல்லக்கூடிய சீர்காழிப்பதியின்மீது ஒரு கோவை நூற் பாடும்படி என்னைத் தூண்டி, ஏட்டுக்கும் அடங்காத துதி கவிபல் சொற்றனை - நூலிலடங்காத பெருமையையுடைய பல புகழ்ப் பாடல்களைப் பாடினீர், நின் இயல் பாட்டுள் ஓர் பாட்டுக்கு - பாவிலக்கணம் நன்றாக அமைந்த உன் பாடல்களில் ஒரு கவிக்கு, நான் செய்தது ஒன்றே பல் செய்தாலும் பற்றாது - நான பாடிய ஒரு பாட்டோ ஈடாகும் பல பாடல்கள் நான் சொன்னாலும் அவை ஈடாவன வல்ல, எ - று.

---

திருவாவடுதுறை யாதீன வித்துவான்

# தாண்டவராய சுவாமிகள்

பாடியது

திருவாவடுதுறை மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்மீது பாடியது

1\. தாண்டவமேல் வருராயன் சற்குருமா
மணிதனக்குச் சாற்றுமாறிங்
காண்டவனீ யடியேனியா னுண்டவன்பா
லடிமையுற லழகேயாமல்

எண்டவஞ்சே ராண்டவன்றன் னடிமைதனைப்
பன்முறையு மீர்த்துமெய்தா
வீண்டவஞ்சேர் வினையேற்குன் மெய்யருள்வந்
தெவ்வண்ண மேவுமாறே.

உரை:—தாண்டவன்மேல் வருராயன் - தாண்டவராய னென்னும் பெயருடையவன், சற்குருமா மணிதனுக்குச சாற்றுமாறு - நல்ல தேசிக மூர்த்தியாகிய பெரிய விரத்தினம்போல்வாருககு விண்ணப்பஞ் செய்வ தாவது, ஆண்டவன் நீ அடியேன் யான் - ......, ஆண்டவன்பால் அடிமை யுறல் அழகே ஆமா - ஆண்டவனிடத்தில் அடியான் போய்ச சேர்தல் முறையான செயலே ஆகும், எண் தவம் சேர் ஆண்டவன் - வலிமையான தவத்தையுடைய முதல்வன், தன் அடிமைதனைப் பன்முறையும் ஈர்த்தும் - தன்னடியவனைப் பல தடவைத் தன்பா லிழுததபோதிலும், எய்தா வீண் தவம் சேர்வினையேற்கு - வந்து சேராத அவநெறியில் நிற்கும் தீவினை யுடைய எனக்கு, உன் மெய்யருள் வந்து எவவண்ணம் மேவுமாறே - உன் னுடைய உண்மையான கிருபை எவவாறு வந்து பொருந்தும், எ - று.

2. தருநாணுட் கொளவருஞ்சற் குருமா
மணியேயென் றாயேயுன்றன்
மருநாண்மட் டலர்கமல மலரடிகள்
வந்திக்க வருநன்னாளே
திருநாள்வந் திக்கவராச் சிறுநாளே
கரிநாளென் செய்கேனந்தோ
ஒருநாளு நினைமறவேன் விரைவினில்வந்
துன்சேவை யுளங்கொள்வேனே.

உரை:—தரு நான் உட்கொளவரும் சற்குரு மாமணியே - கற்பகத் தருவு வெட்க மடையும்படியாக வள்ளற்றன்மையோடு தோன்றிய நல்ல தேசிக மகா ரத்தினமே !, என் தாயே - ......, உன்றன் மருநாள் மட்டு அலர் கமல மலரடிகள் - வாசனையும் தேனுமுடைய புதுப் பூந்தாமரை போன்ற உன்னுடைய திருவடிகளை-வந்திக்கவரும் நன்னாளே திருநாள் - வணங்கக் கிடைக்கும் நல்ல நாளே சுபதினமாகும், வந்திக்கவராச் சிறு நாளே கரிநாள் - வணங்கக் கிடையாத அற்ப நாளே அமங்கல நாளாகும், என் செய்கேன் அந்தோ - உன் தரிசன மில்லாவிட்டால் நான் என் செய் வேன், ஒரு நாளும் நினை மறவேன் - ......, விரைவினில் வந்து உன் சேவை உளங்கொள்வேனே - சீக்கிரம் வந்துசேர்ந்து உன்னுடைய வழி பாட்டை நெஞ்சத்திற் பதித்துக்கொள்வேன், எ - று.

3. திருவா வடுதுறையிற் சேர்வோரை முத்தித்
திருவா வடுதுறையிற் சேர்கென் — றருளுங்
குருசுப் பிரமணிய கோமான்ற ணெஞ்சே
குருசுப் பிரமணியாக் கொள்.

உரை :—திருவாவடுதுறையில் சேர்வோரை - திருவாவடு துறையில் தன்னை வந்து வழிபடுபவரை, முத்தித்திரு ஆ - வீடாகிய செல்வம் உண்டாவதாக, அடுதுறையில் சேர்க - பாசத்தைத் தொலைக்கும் ஞான மார்க்கத்தை யடைக, என்று அருளும் குரு சுப்பிரமணிய கோமான்தாள் - என்று உபதேசித்தருளுகின்ற சுப்பிரமணிய தேசிகத் தலைவரின் திருவடியை, நெஞ்சமே - உள்ளமே !, குரு - உயர்வான, சுப்பிர-சுத்தமான, மணியெனக்கொள் - இரத்தினமாகக் கருதுவாயாக !, எ - று.

---

## இராமநாதபுரம்
# முத்துராமலிங்க சேதுபதி
## பாடியது

1. எந்தவுலகினுஞ் சைவப் பயிர்கதிப்ப வருண்மழைபெய்
தெம்மனோர் போல்
வந்தருள்சுப் பிரமணிய தேசிகதே சமைந்தகலை
வலத்தாற் றீட்டித்
தந்ததிரு முகச்செய்யுட் டனித்தனியா ராயமகிழ்
தந்த துள்ளன்
புந்தவெழு மானந்தப் பெரும்புணரிக் கெல்லையெடுத்
துரைக்கொ ணாதால்.

உரை :—எந்த வுலகினும் சைவப்பயிர் கதிப்ப - எந்த விடத்திலும் சைவ சமயமாகிய பயிர் வளர்ந்தோங்கும்படி, அருள் மழை பெய்து - அருளாகிய நீரைப்பொழிந்து, எம்மனோபோல வந்தருள் சுப்பிரமணிய தேசிக - மனித வடிவமெடுத்துத் தோன்றிய சுப்பிரமணிய தேசிகரே!, தேசு அமைந்த கலைவலத்தால் தீட்டி - ஒளிபொருந்திய கல்வித் திறமையால் எழுதி, தந்த திருமுகச்செய்யுள் - விடுத்த ஓலைச் சுருளிலுள்ள பாட்டுக்கள், தனித்தனி ஆராய மகிழ்தந்தது - ஒவ்வொன்றையும் ஆய்ந்து பார்த்தபோழ்து அது நிறைந்த மகிழ்ச்சியளித்தது, உள்ளன்பு உந்த எழும் ஆனந்தப்பெரும் புணரிக்கு - அதனால் மனத்திலுண்டான அன்பு காரண

மாக ஏற்பட்ட பேரானந்தக்கடலுக்கு, எல்லை எடுத்துரைக்க ஒண்ணாதே - கரை யிதுதானென்று சுட்டிக் கூற முடியாது எ - று.

2. குருந்துறையுஞ் சிவக்கொழுந்தைத் தவக்கொழுந்தா
 மினையன்பாற் குறுகிக் காண்பான்
பெருந்துறைசார்ந் திடநினைத்த துண்மைசில
 லௌகிகப் பெருக்கமாங்கு
வருந்துறையைத் தட்பவிவன் வல்லைவந்தான்
 றிககூடல்வாய்நிற் காண்பான்
இருந்துளகா தலைத்தழைதற் கேதுவுமற்
 றதுவாக விருந்த தாமால்.

உரை :—குருந்துறையும் சிவக்கொழுந்தை - குருந்த மரத்தடியில் வீற்றிருக்கும் சிவமூர்த்தியையும், தவக்கொழுந்தாம் நினை - தவத் தலைவரா யுள்ள உம்மையும், அன்பால் குறுகிக் காண்பான் - அன்போடு போய்த் தரிசிப்பதற்கு, பெருந்துறை சார்ந்திட நினைத்தது உண்மை - திருப்பெருந் துறைக்குவர எண்ணியது மெய்யே, சில லௌகிகப் பெருக்கம் ஆங்குவரும் தட்ப - சில உலக காரிய மிகுதி அங்கே வரும் வழியைத் தடைசெய்ய, இவன் வல்லைவந்து - இங்கு கட்டாயமாக வந்து சேர்ந்து, அங்கே - அதுவு மல்லாமல், இக்கூடல்வாய் நிற்காண்பான் - இந்த மதுரை நகரத்திலே உன்னைத் தரிசிக்கும்படி, இருந்துள காதலைத் தழைதற்கு - உள்ளத்தி லிருந்த விருப்பத்தை வளர்ப்பதற்கு ஏதுவும் மற்ற அதுவாக இருந்த தாமால் - காரணமும் அங்கே வராமையே யாம் என்க, எ - று.

3. தருக்குற்று லங்கதனைத் தணிப்பாரின்
 முனிமுகிலைச் சைவமாக்குந்
திருக்குற்று லப்புகுவான் கருத்துளதந்
 நாள்வலித்திற் றேறடிநின்பால்
நெருக்குற்று லங்காணும பயிரிற்கண்
 டகமகிழ்வ னேயர்சன்மக்
கருக்குற்று லமபரித்த களத்தனென
 வரத்திலுயர் கருணைவள்ளால்.

உரை:—தருக்குற்றால் அங்கு அதனைத் தணிப்பாரில் - ஒருவனுக்குச் செருக்கேற்பட்டால் அதனை அவ்விடத்திலேயே அடக்குவார்கள்போல, முனி - அகத்திய முனிவர், முகிலை - முகில்போன்ற நிறத்தையுடைய திருமாலை, சைவமாக்கும் - சிவ வடிவினராகச் செய்யும், திருக் குற்றாலம் புகுவான் கருத்துளது - திருக்குற்றாலம்போகின்ற வெண்ணமிருக்கின்றது, நேயர் சென்ம கருக்குற்றாலம் பரித்த - அன்பர்களுடைய பிறவியாகிய

கரிய குறுகிய விடத்தைத் தொலைத்து விடந் தாங்கிய, களத்தன் என-கண்டத்தை யுடையவனென்று, வரத்தில் உயர் கருணை வள்ளால் - என்று சொல்வதற் கேதுவாகிய வரதத்திலுயர்ந்த அருளாளரே!, அன்னுள் - திருக் குற்றாலம் வருகிற அந்த நாளில், வலிதிற் றேடி நின்பால் நெருக்குற்று-வலிய நாடிவந்து உம்மை யணுகி, ஆலயகாணும் பயிர்ககண்டு அகமகிழ்வன்-மழைகண்ட பயிர்போல மனமகிழ்ச்சி யடைவேன், எ - று.

4. குருந்துறைசை வக்கொழுந்தின் றிருப்பணிகைக்
கொடுவழுதி குலத்தோ டாண்டு
பெருந்துறைசை யோகமுறப் பெற்றவரில்
யாஞ்செய் தவப்பேற்றால் வெண்பொன்
றிருந்துறைசை யத்தினின்று சிவஞானத்
திருவுருவாய்ச் சேர்ந்தோர்க் கன்பு
தருந்துறைசை வந்தருள்சுப் பிரமணிய
குருமணியாஞ் சாற்றக் கேண்மோ.

உரை:—குருந்துறை சைவக் கொழுந்தின் - குருந்த மரத்தடியில் வீற் றிருக்கும் சிவபெருமானின், திருப்பணி கைக்கொண் - திருப்பணி மேற் கொண்டு, வழுதி குலத்தோடு ஆண்டு - பாண்டியன் குலத்தோடு தாம் ஆளப்பெற்று, பெருந்துறை சையோகம் உறப் பெற்றவரில் - பெரிய வழி யாகிய வீட்டு வழியிற் பொருந்தப் பெற்ற மாணிககவாசக சுவாமிகளைப் போல, யாம் செய் தவப் பேற்றால் - நாஙகளும் செய்த தவத்தின் பயனால், வெண் பொன் திருந்துறை சையதனில் நின்று - வெள்ளியும் பொன்னும் சிறப்பாகப் பொருந்திய கைலாய மேருமலையிலிருந்து, சிவஞானத் திருவுரு வாய் - .., சேர்ந்தோர்கரு அன்பு தரு துறைசை வந்தருள் - தன்னை யடைந்தவர்க்குப் பத்தியை விளைக்கின்ற திருவாவடுதுறையில எழுநதருளி வந்த, சுப்பிரமணிய குருமணி - சுப்பிரமணிய தேசிக ரத்தினமே!, யாம் சாற்றக் கேணமோ - நாஙகள் விண்ணப்பிததலைக் கேட்டருள்க, எ - று.

5. திருமுகங்கொண் டணைந்தவற்கெச் சிறப்புமருள்
கோதைநல்குந் தேவே தன்பா
லொருமுகங்கொண் டணையிலவ னுதவியவோ
வடிகள்புகுந் துளதோ வின்ன
விருமுகனி லிறும்பூதிங் கெஃதென்பே
யஃதுநிற்க வெம்பா லன்பு
தருமுகமன் விரிகடிதத் தனிப்பாக்க
ளினிப்பாகத் தலைழத்தமாதோ.

உரை :—திருமுகங் கொண்டவர்க்கு எச்சிறப்பும் அருள் கோதை நல்கும் தேவே - ஓலைச் சுருள் கொண்டுபோய்ச சமர்ப்பித்தவனுக்கு எல்லா வகையான சிறப்புந் தரத்தக்க மாலையை அளித்த சுவாமியே!, தன்பாலொருமுகம் கொண்டணையில் - தன்னிடத்தில் இயற்கையாயுள்ள ஒரு முகத்தோடு வந்து சேர்ந்தால், அவன் உதவியவோ அடிகள் புகுந்துளதோ - அவன் கொடுத்த ஓலைச சிறப்போ சந்நிதானத்தினால் அவனுக்கு ஏற்பட்ட சிறப்போ, இன்ன இரு முகனில் - இந்த இரண்டு காரணங்களிலும், இரும்பூது இங்கு எஃது என்பேன் - ஆச்சரியப்படத்தக்க இங்கு எதுவென்று நாம் சொல்லக் கூடும், அது நிற்க - அது ஒரு புறமிருக்க, என்பால் அன்புதரும் முகமன் - எம்மிடத்தில் வைத்த அன்பினால் கூறிய உபசார வார்த்தைகள், விரிகடித தனிப்பாக்கள் - விரிவாக அடங்கிய கடிதத்திலுள்ள சிறந்த பாடல்கள், இனிப்பாகத் தழைத்த - இனிமையாக விளங்கின, மாதோ - அசை, எ - று.

6. இமையாத கனற்கண் மறைத்திமைக்கும
விழிபடைத் துலகத் திறைஞ்சுந்தொண்டர்
தமையாதல் புரிந்துசைவப் பயிர்வளர்த்தின்
னருள்விளைவு தருமுன் னுள்ளத்
தமையாத தமையாதவ் வமைதிவசத்
தொழுகலன்றோ வரசர் செய்யுங்
கமையாத லாதலினின் கருத்தின்வண
மியற்றுகவுட் களித்து மாதோ.

உரை :—இமையாத கனற்கண் மறைத்து - மூடப்படாத நெற்றிக கண்ணை யொளித்து, இமைக்கும் விழி படைத்து - இமைத்தல் செய்யக கூடிய கண்களையுடைய மனித வுடம்பெடுத்து, உலகத்து இறைஞ்சும தொண்டர் தமையாதல புரிந்து - உலகத்திலே தன்னை வழிபடுகின்ற அடியார்கட்கு ஆக்கம்செய்து, சைவப் பயிர் வளர்த்து - சைவசமயமாகிய பயிரை விருத்தி செய்து, இன்னருள் விளைவு தரும் உன் உள்ளத்து - இனிமை யாகிய திருவருள் என்னும் பயனை அளிக்கின்ற உன்னுடைய நெஞ்சத்தில், அமையாதது அமையாது - பொருந்தாத காரியங்கள் பொருந்த மாட்டா, அவ் வமைதி வசத்து ஒழுகல் அன்றோ - திருவுள்ளத்தில் பொருந்தியபடி நடப்பதல்லவா, அரசர் செய்யும் கடமையாதல் - மன்னர்கள் செய்ய வேண்டிய கடமையாகும், ஆதலின் நின் கருத்தின் வணம் இயற்றுக உள் களித்து - ஆதலால் மனமகிழ்ந்து உன் நோக்கத்திற்கு இசைந்தவாறே செய்தருள்க, மாதோ - அசை, எ - று.

7. ஐயன்றிரு நாமமைந் தெழுத்துள்ளார்ந் தவன்றாண்
மெய்யன்பர் சொல்லருந்து மென்குழைக்கு—ணெய்யவென்
ஒவ்வாறு மாமுகன்பே றுற்றகுரு மாமணியே [சொல்
எவ்வாறுட் போந்த விசை.

உரை :—ஒவ்வாறு மாமுகன பேறுற்ற குருமாமணியே - ஒன்றோ டொன்றொத்த ஆறு திருமுகங்களை யுடைய கடவுளின் திருப் பெயரைப் பெற்ற தேசிக மகாரத்தினமே!, ஐயன் திருநாமம் ஐந்து எழுத்து உள் ஆர்ந்து - முதல்வனுடைய திருப்பெயராகிய பஞ்சாட்சரம் உள்ளத்திற் பொருந்தப்பெற்று, அவன் தாள் மெய்யன்பர் - அவனுடைய திருப் பாதத் தில் உண்மையான அன்புடையவர்களுடைய, சொல்லருந்தும் மென்குழைக் குள் - மொழியைக் கேட்டு அனுபவிக்கின்ற மென்மையான குண்டலமணிந்த உன் திருச் செவிக்குள்ளே, நொய்ய என் சொல் - சிறுமை பொருந்திய எனது வார்த்தைகள், எவ்வாறு உட்போந்த - எப்படி உள்ளே புகுந்தன, இசை - கூறியருள்க, எ - று.

## அருணாசலம் பிள்ளை

### பாடியது

1. சுந்தர வேடந் தாங்கிச் சுருதிநூற் புராண மியாவுஞ்
சொந்தமா யுளத்திற் கொண்ட தோன்றலே சுகுணக் குன்றே
தந்தையுந் தாயு மாகித் தமியனை யாண்டு கொண்ட
செந்தளிர்க் கழல்க ளன்றி மற்றொன்றுஞ் சிந்திக் கேனே.

உரை :—சுந்தர வேடம் தாங்கி - சுந்தர வேடமென்னும் சிவசின்னங் களைக் காதிலணிந்து, சுருதி நூல் புராணம் யாவும் சொந்தமாய் உளத்திற் கொண்ட தோன்றலே - மறைகள் ஆகமங்கள் புராணங்கள் முதலிய எவ் வகை இலக்கியங்களையும் தமக்குரியனவாகச் சிந்தையிலே பதிப்பித்துக் கொண்ட வீரரே!, சுகுணக் குன்றே - நல்ல பண்பின் வடிவாகிய மலையே!, தந்தையும் தாயுமாகி - எனக்குப் பெற்றோர்கள் நிலையில் நின்று, தமியனை யாண்டுகொண்ட செந்தளிர்க் கழல்கள் அன்றி - தனியனான என்னை யாட் கொண்டருளிய சிவந்த தளிர்போன்ற பாதங்களேயல்லாமல், மற்றொன்றுஞ் சிந்திக்கேனே - வேறு யாதொன்றும் நான் எண்ணுவதில்லை, எ - று.

2. செந்தா மரையடி ஒருவெண்டாமரை சேர்ந்தது போல்
அந்தா மரைத்தடம் வாழனங் காளன்று செய்தவத்தால்
எந்தாயு மீசனு மாகின்ற கோமுத்தி யோர்க்குருபால்
வந்தோது வீரங்ஙன் யான்விடு தூசினை வாழ்த்துதற்கே.

உரை:—செந்தாமரையடி ஒரு வெண்டாமரை சேர்ந்ததுபோல் - செந்தாமரைப் பூவினடியில் வெண்டாமரை போய்ச சேர்ந்ததுபோல, அத தாமரைத்தடம் வாழ் அன்னஙகாள் - அழகிய தாமரையின் அடியில் தங்குகின்ற அன்னஙகளே !, அன்று செயதவததால் - முன் பிறப்பிலியற்றிய புண்ணியத்தால், எந்தாயும் ஈசனுமாகின்ற கோமுத்தி யோர்க்குருபால் - எனக்கு அன்னையாயும் கடவுளாயு மிருக்கின்ற அழகிய திருவாடு துறைத் தேசிகரிடம், யான விடுதூசினை வாழ்த்துதற்கே - நான் அனுப்பிய உடையினை ஆசி அல்லது வாழ்ததித் தரும்படி, அஙஙன் வந்து ஓதுவீர் - அவ விடத்திற் சென்று அவர்க்கு உரைப்பீராக !, எ - று.

3. அஞ்சக் கரத்தி னருள்வடிவாம் வெண்ணீற்றைக்
கஞ்சக் கரத்தளிரார் கற்பிக்க—மிஞ்சுபுகழ்
கொண்டோங்கி வாழ்கின்ற கோமுத்தித் தேசிகற்குத்
தொண்டாமிவ் வட்டகைதான் றோய்ந்து.

உரை:—மிஞ்சு புகழ் கொண்டோங்கி வாழ்கின்ற கோமுத்தி தேசிகற்கு - மிகுந்த கீர்த்தியோடு தழைத்து வீற்றிருக்கின்ற திருவாவடுதுறைக் குருமூர்த்திக்கு, அஞ்சக்கரத்தின் அருள்வடிவாம் வெண்ணீற்றை - பஞ்சாட்சரத்தின் அருள் வடிவாக விளங்குகின்ற வெள்ளிய திருநீற்றினை, கஞ்சககரத்தளிரால் கற்பிக்க - கமலம்போன்ற மெல்லிய கைகளால் எடுத்து வழஙகுவதற்கு, இவ வட்டகைதான் தோய்ந்து தொண்டாம் - கிண்ண வடிவான இசசம்புடம் அமைந்து பயன்படுவதாக, எ - று.

---

## சதாவதானியாகிய சுப்பிரமணிய ஐயர்

### பாடியது

---

1. மூவுலகுந் தொழுதுறைசை வாழ்குருசுப்
பிரமணிய மூர்த்திதஞ்சீர்
பாவுபுக ழெனுமவெள்ளந் தோன்றவயன்
வெருவுற்றுப் பகர்மாலுந்திப்

பூவுளுறப் புகலவனு மரனுடலிற்
புகவவனும் புக்கதோர்ந்து
மேவுமுதற் காரணனு மவனுள்ளக்
குகைநுழைந்து விளங்குற்றனே.

உரை:—மூவுலகுந் தொழுதுறைசை வாழ் குரு சுப்பிரமணிய மூர்த்தியின் - மூன்றுலகமும் வழிபடுகின்ற திருவாவடுதுறையில் வீற்றிருக்கின்ற சுப்பிரமணிய தேசிக மூர்த்தியினுடைய, சீர்பாவு புகழெனும் வெள்ளந் தோன்ற - சிறப்புப்பரவிய கீர்த்தியெனும் வெள்ளமானது பெருக்கெடுக்க, அயன் வெருவுற்றுப் பகர்மாலுந்திப் பூவுளுற - பிரமதேவர் பயந்து சிறப்பாகப் பேசப்படும் விஷ்ணுவின் உந்திக் கமலத்திற் சென்று தங்க, புகலவனும் அரன் உடலில் புக - சொல்லப்பட்ட அத் திருமாலும் ருத்திர மூர்த்தியின் திருமேனியிற் பாகங்கொள்ள !, அவனும் புகழ்ந்து ஓர்ந்து - திருமால் புகுந்ததை யறிந்து!, மேவு முதற்காரணனும் அவனுள்ளக் குகை நுழைந்து விளங்குற்றனே - அவன் மூவர் தோன்றுதற்கும் காரணனை முழுமுதற் கடவுளின் இருதயத்திற்குள் புகுந்து திகழ்வதானன், எ - று.

---

# புலிக்குட்டி இராமலிங்கத் தம்பிரான்

## பாடியது

---

1. மதுரம்பழுத்துத் தேன்றுளிக்கும் வளச்செம்பாகக் கவிபுகலும்
வலிமையடியேன் பெற்றதுநின் மலர்ந்த கருணையாலன்றோ
இதுவன்றியுமப் பாடலைபின் னிசையோ டெவருஞ் சிரமசைக்க
விசைக்குமவலிமை பெற்றதுநின் னினிய கருணையாலன்றோ
சதுர்தங்கியவிப் புவியடியேஞ் சாமிவருக வென்றுகரந்
தலைமேற்குவிக்கப் பெற்றதுநின் சாலுங்கருணை யாலன்றோ
கதுவுமிந்தநன் றியினைக் கடையேன் மறப்பனோ துறைசைக்
கண்வாழ் குருசுப் பிரமணிய கருணாநிதியே கற்பகமே.

உரை :—துறைசைக் கண்வாழ் குரு சுப்பிரமணி கருணாநிதியே கற்பகமே - திருவாவடுதுறையில் வீற்றிருக்கும் சுப்பிரமணிய தேசிக மூர்த்தியே! கற்பகத்தரு போன்ற வள்ளலே!, மதுரம் பழுத்துத் தேன் துளிக்கும் - இனிமை நிறைந்து தேனை சிந்துகின்ற, வளச்செம்பாகக் கவிபுகலும் வலிமை - சொல்வளம் பொருள் வளமமைந்து யாவருக்கும் விளங்கக்கூடிய செவ்விய நடையில் பாட்டியற்றக்கூடிய திறமை, அடியேன் பெற்றதும்

நின் மலர்ந்த கருணையாலன்றோ - அடியேனுக்குக் கிடைத்தது உன்னுடைய விளக்கமான தயவினாலல்லவா ?, இதுவன்றியும் அப்பாடலை இன்னிசையோடு எவரும் சிரமசைக்க இசைக்கும் வலிமை - இவ் வகையாகப் பாட்டியற்றுவது மல்லாமல் அப்பாட்டைக் கேட்டு எல்லோரும் தலை யசைக்கும் படியாக அதனைச் சொல்லும் திறமையும், பெற்றதும் நின் இனிய கருணையாலன்றோ - எனக்குக் கிடைத்தது உன்னுடைய இனிமையான தயவினாலல்லவா?, சதுர் தங்கிய இப்புவிய - திறமையுடைய இவ்வுலகத்தார், அடியேஞ் சாமி வருக என்று கரம் தலைமேற் குவிக்கப்பெற்றதும் - என்னைப் பார்த்துத் தலைமேற் கை கூப்பி அடியேங்கள்பால் சாமி வருக என்று உபசரிக்கும்படி எனக்கேற்பட்டது, நின்சாலும் கருணையாலன்றோ - உனது மிகுந்த தயவினாலல்லவா?, கதுவும் இந்த நன்றியினைக் கடையேன் மறப்பனோ - நான் பொருந்தி யனுபவிக்கும் இந்த உபகாரத்தை யெப்பொழுதும் நினையா திருப்பேனோ?, (எக்காலமும் மறக்க மாட்டேன் என்பது கருத்து), எ - று.

2\. வாசமலர்வாய் திறந்தென்னை வாவென்றழைத்துப் படித்தோர்கள்
மல்குஞ்சபையி னடுவிருத்தி மா நாவலர்கா ளிவன்காளி
தாசனனையான் கற்பனைப்பாச் சாற்றும்வலிமை யானென்று
தமியேன்புகன்ற கவிமுழுதுஞ் சாற்றக்கேட்டப் பெருஞ்சபை
நேசவந்தப் பாவலர்போ னீயுமவியக்கும் பெரும்பேறு [யில்
நீசனேன்பெற் றுய்யாம னெடுந்தூரத்தி லிருப்பதுவே
ஈசபெருந்தண் டனையன்றோ விதன்மேலுந்தண் டனையுண்டோ
இசைப்பாய்குருசுப் பிரமணிய வெந்தாயருட்சிந் தாமணியே.

உரை:—குரு சுப்பிரமணிய எந்தாய் அருட் சிந்தாமணியே - சுப்பிரமணிய தேசிகராகிய ஞானபிதாவே! கிருபை யளிப்பதிற் சிந்தாமணியைப் போன்றவரே !, வாசமலர் வாய் திறந்து என்னை வாவென்று அழைத்துப் படித்தோர்கள் மல்குஞ் சபையின் நடுவிருத்தி-மணம் பொருந்திய தாமரைப் பூப்போன்ற திருவாய் மலர்ந்து என்னை வரும்படி கூப்பிட்டுக் கற்றவர்கள் கூடிய சபை நடுவில் என்னை இருக்கச்செய்து, மா நாவலர்காள் - (அங்குள்ள கற்றவர்களைப்பார்த்து) பெரிய புலவர்களே !, இவன் கற்பனைப் பாச்சாற்றும் வலிமையால் காளிதாசன் அனையானென்று - கற்பனைகள் அமைந்த பாடல்கள் பாடுவதில் இவன் காளிதாசனைப் போன்றவனென்று சொல்லி, தமியேன் புகன்ற கவி முழுதும் சாற்றக்கேட்ட பெருஞ் சபையில் - அடியேன் பாடிய பாடல்களெல்லாவற்றையுங் கேட்டுக்கொண்டிருந்த மகா சபையில், நேசவந்தப் பாவலர்போல் நீயும் வியக்கும் பெரும் பேறு - பிரியமாய் அந்தப் புலவர்கள் என்னைப் புகழ்வதுபோல நீயும் புகழ்ந்து பேசுகின்ற பெரும் பாக்கியத்தை, நீசனேன் பெற்றுய்யாமல் நெடுந்தூரத்தில் இருப்பதுவே - பாவியேன் பெற்று வாழாமல் மிகவும்

ஆரமான வீட்டில் நானிருப்பதே, ஈச பெருந்தண்டனையன்றோ - தலைவனே எனக்குப் பெரிய தண்டனை யாகுமல்லவா? இதன்மேலும் தண்டனை யுண்டோ இசைப்பாய் - இதைப்பார்க்கிலும் கடுமையான தண்டனை இருக்கிறதா கூறி யருள்வாயாக !, எ - று.

3. செந்தமிழ்பா டும்வாய் திருவாய்மற் றெவ்வாயும்
நிந்தை மலஞ்சொரிவாய் நீர்சொரிவாய்—முந்தவே
நாறும்வா யாரு நகைக்கும்வாய் மூடனே
தேறுவா யிச்சங்கதி.

உரை:—மூடனே அறிவில்லாதவனே !, செந்தமிழ் பாடும் வாய் திருவாய் - செவ்விய தமிழ்ப் பாடல்களைப் பாடுகின்ற வாயே மங்கலமான வாயாகும், மற்றெவ்வாயும் நிந்தை மலஞ் சொரிவாய் - மற்றெவ்வகையான வாயும் நிந்திக்கத்தக்க அழுக்கை உமிழுகின்ற வாயாகும், நீர் சொரிவாய் - அத்தகைய நீரையும் கக்குகின்ற வாயாகும், முந்தவே நாறும் வாய்-அருகே வருகின்றதற்கு முன்னமேயே நாற்றம் வீசும் வாயாகும், யாரும் நகைக்கும் வாய் - எவரும் இகழ்கின்ற வாயாகும், தேறுவாய இச்சங்கதி - இந்த உண்மையைத் தெளிவா யறிவாயாக !, எ - று.

---

மதுரைச்

# சம்பந்த சுவாமி மடத்துத் தம்பிரான்

பாடியது



மதுரைச் சம்பந்த சுவாமிமடத்துத் தம்பிரான்
இராமநாதபுரம் பொன்னுசாமித் தேவர்மீது பாடியது

1. பரிதியினமண விருளைநீக் கியசம்பந்த
தேசிகற்குநற் பாலின்
இருதிறஞானங் குழைத்தருள்கயற்க ணைமபெரு
மாட்டிசே ரிறைவன்
கருதருமெண் ணெண்டிருவிளை யாடல்புரிதரு
கருணையங் கடல்சீர்ச்
சுருதிசொன் மதுரைப் பதிவளர்சோம
சுந்தரக்கடவுளின் னருளால்.

உரை :—பருதியின் அமணை இருளை நீக்கிய சம்பந்த தேசிகர்க்கு - சூரியன்போல சமண மத விருளை யொழித்த திருஞானசம்பந்த குரு மூர்த்திக்கு, நற்பாலின் இருதிற ஞானம் குழைத்து அருள் - நல்ல திரு முலைப் பாலில் பரஞானம் அபர ஞானமென்னும் இருவகை ஞானத்தையுங் கலந்து கொடுத்த, கயற்கண எம்பிராட்டி சேர் இறைவன் - மீனாட்சியம்மையைப் பாகத்திலுடைய பெருமான், கருதரும் எண்ணெண் திருவிளையாடல் புரிதரு - நினைத்தற்கரிய அறுபத்து நான்கு திருவிளையாடல்களைச் செய்தருளிய, கருணையங் கடல் - அழகிய கிருபைக் கடலானவன், சீர் சுருதி சொல் - சிறந்த வேதத்திற்குப் பொருள் கூறிய, மதுரைப் பதிவளர் சோமசுந்தரக் கடவுளின் அருளால் - மதுரைத் தலத்தில் வீற்றிருக்கின்ற சோமசுந்தரக் கடவுளின் கிருபையால், எ - று.

2. மதிதவழ் புரிசைப் புதுவைவாழ் பொன்னுச்
சாமிமா மகி பதிக்கென்றுந்
துதியொடு பகைவெல் சூழ்ச்சியு மாட்சி
துலங்கர சாட்சியுமலராள்
வதிதரு திருவும புகழுநா மயமாம்
வச்சிர யாக்கையு மகவும்
புதியபோ கமுநீ டூழிவாழ் நாளும
பொலிவொடு மலிகுகமாதோ.

உரை :—மதி தவழ் புரிசைப் புதுவை வாழ் பொன்னுசசாமி மாமகிபதிககு - சந்திரன் தவழ்கின்ற மதில்களையுடைய இராமநாதபுரத்தில் வாழ்கின்ற பொன்னுசாமி மன்னனுக்கு, என்றும் - எப்பொழுதும், துதியொடு பகைவெல் சூட்சியும் - புகழும் பகைவரை வெலலுகின்ற தந்திரமும், மாட்சி துலஙக அரசாட்சியும் - பெருமை விளஙகுகின்ற அரசாளுந திறமும், மலராள் வதி தரு திருவும் - இலக்குமி கடாட்சததோடு கூடிய செல்வமும், புகழ் அநாமயமாம் வசசிர யாக்கையும் - நிலைபெற்ற புகழோடு கூடிய வயிரம் போன்ற உறுதியான உடம்பும், மகவும் - பிள்ளைப்பேறும், புதிய போகமும் - நவநவமான இன்ப அனுபோகங்களும், நீடூழி வாழ் நாளும் பொலிவொடு மலிகுக - நீண்ட காலம்வரை ஆயுளும் சிறப்பொடு பெருகுவனவாகுக, மாதோ - அசை, எ - று.

3. காரார் முகிலை மயிலின நோக்கிநுங் காதலித்தே
ஏரார் சகோரமதி யினைநாடி டுமேய முல்லைத்
தாரார் புயப்பொன்னுச் சாமி மகிபதின் சால்பிலகு
சீரார் வசனச்சுவை நோக்கிடுமென் சிரவணமே.

உரை :—ஏய முல்லைத் தார் ஆர் புயப் பொன்னுசாமி மகிப - அழகிய முல்லைமாலை பொருந்திய புயங்களை யுடைய பொன்னுசாமி மன்னனே !,

கார் ஆர் முகிலை மயிலினம் நோக்கிடும் - கருமை பொருந்திய மழை மேகத்தை மயிற் கூட்டங்கள் விருப்பத்தோடு எதிர்பார்த்திருக்கும், காதலித்தே எர் ஆர் சகோரம் மதியினை நாடிடும் - அழகு பொருந்திய சக்கரவாகப்புள் நிலவொளியை விருப்பத்தோடு கருதியிருக்கும், என் சிரவணம் - எனது காதுகள், நின் சால்பு இலகு சீர் ஆர் வசனச சுவை நோக்கிட - மேன்மை விளங்கும் சிறந்த உன்னுடைய மொழியின் இனிமையை எதிர் பார்த்திருக்கும், எ - று.

4. குறிகொள்சவ் வாய்விசய ரகுநாத மகராச
மெய்க்கங்கோ பாலப்பேர்
நெறிகொள் புரவலன் கொடுத்தல் வல்லோ
னென்றெல்லோரு நிகழ்த்தல்செய்வார்
செறிகொள்பகை யுற்றோர்க்கும் பின்கொடான்
நட்படைந்து சேர்வா ளுற்ற
வெறிகொள்குழற் பரமாதர் தமக்குமுன்
கொடானெனில்யாம் விளம்பலென்னே.

உரை:—குறிகொள் சவ்வாய் விசய ரகுநாத மகாராச மெய்க்கு - நன்மையே ஆயகின்ற நோக்கத்தையுடைய விசய ரகுநாத சேதுபதியின் திருமேனிக்கு, அம் கோபாலப் பேர் நெறி கொள் புரவலன - அழகிய பாது காப்பாள னென்னும் பெயா கொண்ட ஒழுக்கமுடைய பொன்னுசாமி மன்னன், கொடுத்தல் வல்லோன் என்று எல்லோரும் நிகழ்த்தல் செய்வார் - ஈகையிற் சிறந்தவனென்று எல்லோரும் சொல்லுவார்கள், செறி கொள் பகை யுற்றார்க்குப் பின் கொடான் - நெருங்கிய விரோத முடையவருக்குங் கூட வரிசையாகப் பரிசளிப்பதன்றிக் காலந்தாழ்த்துக் கொடுப்பதில்லை நட்படைந்து சேர்வானுற்ற வெறி கொள் குழற் பரமாதர் தமக்கு முன் கொடான் எனில் - சிநேகஞ் செய்துள்ள வாசனை வீசும் கூந்தலையுடைய, பரத்தையர்க்கு முறைக்குமாறாக முற்பட்டுக் கொடை கொடுப்பதுமில்லை, யாம் விளம்பல் என்னே - அவனுடைய நீதி முறையைப்பற்றி நான் அதிகமாகச் சொல்ல வேண்டியதில்லை, எ - று.

# திருவாவடுதுறைச் சாமிநாத கவிராயர்

## பாடியது



### நூலுக்கு நீருக்குஞ் சிலேடை

1. *வெள்ளைநிறத் தாற்செயற்கை மேவியே வேறுநிறங்*
*கொள்ளலாற் றோய்க்குங் குறியினால்—வள்ளலென*
*வாழ்சந்திர சேகரக் கவிஞன்மால் வரையில்*
*ஆழ்நீரு நூலுநிக ராம்.*

உரை :—*வெள்ளை நிறத்தால் - (தண்ணீரும் நூலும் இயற்கையாக) வெண்ணிற முடைமையாலும், செயற்கை மேவிய வேறு நிறங் கொள ளுதலால் - செயற்கை காரணமாகவே மற்ற நிறங்களை ஏற்பதாலும், தோய்க்கும் குறியினால் - தோய்ப்பதற்கு உரிய தன்மையை யுடைமையினாலும், வள்ளல் என வாழ் சந்திரக் கவிஞன்மால் வரையில் - ஈகையாளனாக வாழ்கின்ற சந்திரசேகரப் பாவலரது உயர்ந்த குன்றின்மீது, ஆழ் நீரும் நூலும் நிகராம் - ஆழமான தண்ணீரும் நூலும் தம்முள் ஒப்பனவாகும், எ - று.*



# போற்றி முத்துப்பிள்ளை

## பாடியது



### பொன்னுசாமித் தேவர்மீதியற்றியன

1. *கன்னனுமக் கென்னசெய்தா னதுபோகட்டுங்*
*கருணைமிகு குமணனுமக் கென்ன செய்தான்*
*றென்னனுமக் கென்ன செய்தா னளனென்செய்தான்*
*சிசுபால னென்னசெய்தான் யாதொன்றுமிலையே*
*யன்னவர்கள் பெற்றபுகழ்ச் சேயர்நாண*
*வடுத்தவர்கள் கலிகளைநீ கெடுத்தேபோட்டாய்*
*பொன்னுசுவா மித்துரையே புதுவைவாழும்*
*புரந்தரநீ செய்ததும் நீதிதானே.*

உரை :—பொன்னுசாமித் துரையே புதுவை வாழும் புரந்தர - பொன்னுசாமித் தேவரே !,* இராமநாதபுரததில் வாழ்கின்ற இந்திரன் போன்ற செல்வரே !, கன்னன் உமக்கென்ன செய்தான் - கருணன் உமக் கென்ன கெடுதி செய்தான், அதுபோகட்டும் - அது கிடக்க, கருணைமிகு குமணன், தென்னன், நளன், சிசுபாலன் என்ன செய்தான் - தயவு மிகுந்த குமண வள்ளல், பாண்டியன், நளசக்கிரவர்த்தி, சிசுபால மன்னன் என்னும் வள்ளல்கள் எல்லாரும் உமக்கென்ன கெடுதி செயதார்கள், யாதொன்று மிலையே - ஒரு கெடுதியும் அவர்கள் செய்யவில்லையே, (அப்படி யிருக்கவும்) அன்னவர்கள் பெற்றப் புகழ்சசேயர் நாண - அவர்கள் பெற்ற கீர்த்திகளாகிய பிள்ளைகள் வெட்கப்படும்படி, அடுத்தவர்கள் கலிகளை நீ கெடுத்தே போட்டாய் - அண்டினவர்கள் வறுமையை முற்றிலும் நீ தொலைத்து விட்டாய், நீ செய்தது அநீதிதானே - ........, எ - று.

2. இப்புவியி லென்கவலை யெப்பொழுதுதீருமினி
யேதுமொரு வழியுமறியே
னீசனார்தம்மிடம பேசுவோமென்னினு
மிரந்தவனு மலைகிறேனே
மற்புயன்றிருமா லிடத்தினிற்செல்லவோ
மண்ணுண்ண டுறங்கினனே
மலரயனுமனமெடுத் தலைகிறேனேபுதுவை
வளர்பொன்னு சாமிசமூக
மிப்பொழுதுசேரலா மொப்பிலாமுத்தமிழி
லெதிலும்வல் லவனுச்சுதே
யென்கவிடவன்செவிக் கன்பாயிருக்குமோ
விருமிதிய முதவுவானோ
செப்புநீபுகலிடம ஞானநெறியடையவோ
சித்தமொரு நிலையில்லையே
தினமெனுளமவேண்டவரு கருணைமழைசார்ந்துபொழி
திருவருள்செய் காந்திமதியே.

உரை:—தினம் என் உளம் வேண்ட வருகருணை மழைசார்ந்து பொழி திருவருள் செய் காந்திமதியே - நாடோறும் என்னுடைய நெஞ்சம் உன் னைப் பிரார்த்தனை செய்யக் கருணை யென்னும் மேகததின் வாயிலாகத் திருவருளென்னும் நீரைப் பொழிகின்ற காந்திமதி யம்மையே !, இப்புவி யில் என் கவலை எப்பொழுது தீரும் - இந்த உலகத்தில் என்னுடைய கவலையானது எப்போது நீங்கும், இனி எப்போது ஒரு வழியும் அறி யேன் - ......, ஈசனார் தம்மிடம் பேசுவோ, மென்னினும் இரந்து அவ னும் அலைகின்றனே - சிவபெருமானிடத்திற் போய் ஒன்றைக் கேட்போ

மென்றால் அவரும் பிச்சை யெடுத்துத் திரிகிறாரே, மல்புயன் திருமாலி டத்தில் செல்லவோ மண்ணுண்டு உறங்குகிறானே - வளமிக்க தோளை யுடைய பெருமாளிடத்திற் போவோமெனில் அவர் பூவுலகத்தை விழுங்கி விட்டுத் தூங்குகிறார், மலரயனும் அனமெடுத்து அலைகின்றானே - தாம ரைப் பூவிலுள்ள பிரமனும் அன்னத்தின் மேலேறித் திரிகின்றாரே, புது வைவளர் பொன்னுசாமி சமூகம் இப்பொழுது சேரலாம் - இராமநாதபுரத் தில் வாழ்கின்ற பொன்னுசாமி மன்னனுடைய சந்நிதானத்திற்கு இப் பொழுது போகலாமென்னில, ஒப்பிலா முத்தமிழ் எதிலும் வல்லனுசகதே- இணையற்ற முத்தமிழிலக்கிய மெதிலும் அவன் தேர்ச்சி யுடையவனாயிற்றே, என் கவி அவன் செவிக்கு அன்பாய் இருக்குமோ - என்னுடைய பாட்டு அவனுடைய காதுக்கு உவப்பானதா யிருக்குமா? இரு நிதியம் உதவு வானோ - பெரிய செல்வத்தை யவன் கொடுப்பானே அல்லது கல்விச செல் வத்தையும் பொருட் செல்வத்தையும் அவன் அளிப்பானே, செப்பீ புக விடம் - நான் அடைக்கலஞ் சேரக்கூடிய விடத்தை நீ அறிவிப்பாயாக, ஞான நெறி யுடையவோ சித்தமொரு நிலை இல்லையே - ..., எ - று

3. பூமாதுவீற்றிருக்குமிடமதனிற் கலைமாதுபோகாளென்றே
காமாதிகோரமற்றசமணர்சொன்ன நாலடியிற்கண்டதுபொய் [ப்
போமாவென்றேமெய்யாவெண்ணினேனவ்வெண்ணம்பொய்யதாக
பாமாலைபுனைபொன்னுச்சாமியுன்பா லிருவரையுமபார்த்திட்டேனே.

உரை:—பாமாலை புனை பொன்னுசாமி - பாடல்களாகிய பூக்களை மாலை போலத் தொடுக்கின்ற ஆற்றலுடைய பொன்னுசாமித் தேவரே!, பூமாது வீற்றிருக்கும் இடமதனில கலைமாது போகாளென்றே - திருமகள் தங்கு மிடத்திறகு நாமகள் செலலமாட்டாளென்று, காமாதி கோரமற்ற சமணர் சொன்ன நாலடியாற் கண்டது - காமம் முதலிய உட்பகைகளை யொழித்த நாலடியாா பாடிய சமண முனிவர்கள் கூறியது, பொய் போமா என்றே மெய்யா எண்ணினேன் - பொய்யாய்ப் போகுமா என்று நினைத்தேன், அவ் வெண்ணம் பொய்யதாக உன்பால இருவரையும் பார்த்திட்டேனே - அந்த எண்ணம் பொய்யாகப் போகும்படி உனனிடத்தில் திருமகளையும் கலைமகளையும் ஒருங்கே இருக்கக்கண்டேன், எ - று.

---

# முத்தைய உபாத்தியாயர்

## பாடியது



### சிவஞான தேவர்கள்மீது பாடியது
### நாணிக்கண் புதைத்தல்

1. தேன்படி யாத்தரு முல்லையந் தாரணி திண்புயமோ
மான்படி காக்குஞ் சிவஞானசாமி மணிவரைமேல்
மீன்பிடி கைவலை வீசிக் களிற்றினை விட்டுக்கெண்டை
தான்பிடித் தாயதை நான்பிடிப் பேனடி தார்குழலே

உரை:—தேன்படியாத்தரு - வண்டு தங்காத கற்பக மரம்போன்ற, முல்லையந் தாரணி - அழகிய முல்லை மாலையையணிந்த, திண்புயக் கோமான் படிகாக்கும் - வலிமையான தோள்களையுடைய அரசனது பூமியைக் காக்கின்ற, சிவஞானசாமி மணிவரைமேல் - சிவஞான தேவரது அழகிய மலையின்மீது, மீன்பிடி கைவலை வீசி - மீனைப் பிடிக்கின்ற கையாகிய வலையை வீசி, களிற்றினை விட்டு - யானைபோன்ற தனங்களைத் தொடாமல், கெண்டைதான் பிடித்தாய் - கெண்டை மீனபோன்ற கண்ணைப்பற்றி மூடிக்கொண்டாய், அடிதார் குழலே - மாலையணிந்த கூந்தலையுடைய பெண்ணே !, அதை நான் பிடிதேன் - அந்த யானையை நான் பற்றிக்கொள்வேன், எ - று.



# தண்டபாணி சுவாமிகளென்னும்
# முருகதாச சுவாமிகள்

## பாடியது



1. தட்டா ரிடத்தினிற் றங்கப் பணிகள் சமைப்பதுவும்
வட்டாடு வாரைத் திருத்திநன் மார்க்கத்தில் வைப்பதுவும்
பட்டாங்கி லுள்ளதைக் காகிதத் தச்சிற் பதிப்பதுவும்
தொட்டார் மனத்தைப் பலவாறு நாளுந் துயர்செய்யுமே.

உரை:—தட்டாரிடத்தினிற் றங்கப் பணிகள் சமைப்பதும் - தட்டாரிடத்தில் தங்க நகைகளைச செய்வித்துக் கொள்வதும், வட்டாடுவாரைத்

திருத்தி நன்மார்க்கத்தில் வைப்பதுவும் - வட்டாடுகின்ற குழந்தைகளைச் சீர்திருத்தஞ்செய்து நல்ல வழியிற் றிருப்புவதும், பட்டாங்கி லுள்ளதைக் காகிதத் தச்சிற் பதிப்பதுவும் - ஓலைச் சுவடிகளிலுள்ள நூல்களைத் தாள்களில் அச்சியற்றி வைப்பதும், தொட்டார் மனத்தைப் பலவாறு நாளுந் துயர் செய்யுமே - இவவேலையைத் தொடங்கி நடத்துவார்களுடைய உள்ளத்தைப் பல நாட்கள் துன்புறுத்தக் கூடியன, எ - று.

---

## சங்கரமூர்த்திக் கவிராயர்

### பாடியது

---

சிவப்பிரகாச வள்ளலைப் புகழ்ந்தது

1. ஒருகையிலே யன்ன மொருகையிலே சொன்னம்
வருகையிலே சன்மான வார்த்தை—பெருகுபுகழ்ச்
சீமானு மெங்கள் சிவப்பிரகா சத்திருவக்
கோமானுக் குள்ள குணம.

உரை :—ஒரு கையிலே அன்னம் - ஒரு பக்கத்திலே நல்ல உணவு, ஒரு கையிலே சொன்னம் - மற்றொரு பக்கத்திலே வளமான பொன் பரிசு, வருகையிலே சன்மான வார்தகை - மீளும்போது நல்ல மதிப்பான உபசார மொழிகள் என்பவற்றை வழக்கமாகப் புலவர்க்கு அளிப்பது, பெருகுபுகழ்ச சீமானும் எஙகள் சிவப்பிரகாசத திரு அக்கோமானுக்குள்ள குணம - வளர்கின்ற கீர்த்தியையுடைய செல்வராகிய எஙகள் சிவப்பிரகாச மன்னனுக்குள்ள அழகிய மங்கள குணமாகும், எ - று.

தேவதான உற்சவ காலத்திற் பாடியது

2. பாகசாத னர்போற்று மலைக்கொழுந்தைத்
தன்பிராண பத்தா வென்னும
ஏகநா தனைச்சேறை வீதியிலே
யொருபூத மெடுத்துக் கொண்டு
போகவே மனஞ்சகியாள் பெற்றநா
யகிசூலப் போர்வே லேந்தி
வாகைசூ டியவீர சிங்கவா
கனமேறி வருகின்றாளே.

உரை :—பாகசாதனர் போற்று மலைக்கொழுந்தை - இந்திரர்கள் வழிபடுகின்ற மலையின் மீதிருக்குஞ் சிவபெருமானை, தன் பிராண பத்தா என்

னும் ஏகநாதனை - தன்னுடைய பிராண நாயகனாகிய ஒரு தனிக்கடவுளை, சேறை வீதியிலே ஒரு பூதம் எடுத்துக்கொண்டு போகவே - சேற்றூர் வீதியிலே அவர் ஒரு பூதவாகனத்தின்மேல் எழுந்தருளிப்போக, மனஞ் சகியாள் பெற்ற நாயகி - தன் கணவனைப் பூத மெடுத்துக்கொண்டு போவதைக் கண்டு மனம் பொறாத தாய்போன்ற அம்பாள், சூலப் போர் வேல் ஏந்தி - சூலமாகிய போராயுதத்தைக் கையி லெடுத்துக்கொண்டு, வாகை சூடிய வீர சிங்கவாகனம் ஏறி வருகின்றாளே - வெற்றிமாலை சூடிய வீரம் பொருந்திய சிங்கவாகனத்தின்மே லெழுந்தருளி வருகின்றாளே, எ - று.

---

## நமசிவாயக் கவிராயர்

### பாடியது

பாபநாசத்து உலகம்மைமீது பாடியது

1. தாட்டா மறைதந் தருளுலகே பட்ட சஞ்சலங்கள்
கேட்டாரு ருகுவர்கெட்டே னினியென் கிலேசமெலாம்
பாட்டா வுரைசெயப் பட்டோலை கோடிபற் றாதுகற்றோ
ரேட்டா யிரம்வரி நீட்டவல் லார்சற் றெழுதுவரே.

உரை :—உலகே - உலகம்மையே !, பட்ட சஞ்சலங்கள் - நான் அனுபவித்த துன்பங்களை, கேட்டால் உருகுவர் - கேட்டவர்கள் மனமிளகுவார்கள், கெட்டேன் இனி என் கிலேசமெல்லாம் - பாவியேனுடைய கவலைகளை யெல்லாம் இனிமேல், பாட்டா உரைசெய பட்டோலை கோடி பத்தாது - கவியாகக் கூறவேண்டுமென்றால் ஏட்டோலைகள் கோடியிருந்தாலும் அவற்றை யெழுதப் போதமாட்டா, கற்றோர் எட்டாயிரம் வரி நீட்ட வல்லார் - படித்தவர்கள் ஒரு ஏட்டில் ஆயிரம் வரிகள் எழுத வல்லவர்கள், சற்று எழுதுவரே - கொஞ்ச மெழுதுவார்கள், (ஆதலால்) தான் தாமரை தந்து அருள் - உன்னுடைய திருவடிக் கமலத்தை யெனக்குக் கொடுத்தருள்வாயாக !, எ - று.

2. பண்டிருந்தா ரின்றிருந்தா ரநுபவியாத்
துன்பமனு பவித்தே னின்ப
முண்டிருந்தா யறிந்திலைநீ யுண்ணாதார்
பசிவருத்த முண்டார்க் குண்டோ
வண்டிருந்து வயிரமறத் துளைத்தமர
மானேனென் வாட்டங் கண்ணுற்
கண்டிருந்தா ருயிர்விடுவர் காணார்கேட்
டுளங்கரைவர் கயிலை வாழ்வே.

உரை :—கயிலை வாழ்வே - கைலையில் வீற்றிருக்கும் அம்மையே !, பண்டிருந்தார் இன்றிருந்தார் அநுபவியாத் துன்பம் அனுபவித்தேன் - முற்காலத்தி லிருந்தவர்களும இக்காலத்தி லிருந்தவர்களும் அநுபவியாத துயரங்களை நான் அனுபவித்து வருந்தினேன், இன்பம் உண்டிருந்தாய் அறிந்திலை - இன்பத்தை யனுபவித்துக் கொண்டிருக்கும் உனக்கு என் துயரம் தெரியாது, நீ உண்ணுதார் பசி வருத்தம் உண்டார்க்கும் உண்டோ - சாப்பிடாதவர்களுடைய வருத்தத்தை நன்றாகச சாப்பிட்டவாக ளறிவாாகளா ?, வண்டு இருந்து வயிரம் அறத் துளைத்த மரம் ஆனேன் - வணடு தங்கி உறுதியான பாகஙகள் அழியும்படி துவாரமிட்ட மரம்போல வலியிழந்தவன் ஆனேன், என் வாட்டம் கண்ணுர் கண்டிருந்தார் உயிர்விடுவர் - என் துயரத்தைக் கண்டவர்கள் உயிர் துறப்பா, காணுர் கேட்டு உளம் கரைவர் - அதனை நேரிலே பாராதவாகள் கேள்வியாலறிந்து மன முருகுவார்கள், எ - று.

---

## வெ. ப. சுப்பிரமணிய முதலியார்

### பாடியது

---

திருவாவடுதுறைப் பண்டார சந்நிதியைப் பற்றிப் பாடியது

1. நின்னருளின் வெள்ள நிமிர்ந்து பரந்துனது
பொன்னடியார் தமமைப் பொதிந்ததனை—யின்னுந்
தெரியாரே நின்னன்பர் செமமேனி வெண்மை
பரவியது நீற்றுனென் பார்.

உரை :—நின் அருளின் வெள்ளம் நிமிாந்து பரந்து - உன்னுடைய கிருபையின் பெருக்கானது உயாநது பரவி, உனது பொன்னடியார் தமைப் பொதிந்தனை - பொனமேனியுடைய உனனுடைய அடியார்களை முற்றிலும் மூடிக்கொணடதை, நின அன்பா இனனும் தெரியாரே - உனனுடைய தொண்டாகள் இன்னும் அறியவில்லை, செம்மேனி வெணமை பரவியது - தங்களது செவவிய உடம்பில வெண்ணிறம் பரவியிருப்பதற்குக் காரணம், (நின்னருள் வெள்ள மென்று சொல்லாது) நீறுன் எனபார்- திருநீற்றுலெனறு சொல்வார்களா, எ - று.

2. உள்ள முதலிழெடு மூதியஞ்சேர்ப் பான்புக்கு
விள்ளு முதலிழந்தோன விழவே—வள்ளலே
உன்னை யடைந்திடுவா னுன்பா லடைந்தவியா
னென்னையிழந் தேனிஃதென் னே.

உரை:—வள்ளலே-அருளாளரே !, உள்ளம் முதலினொடும் ஊதியம் சேர்ப்பான் புக்கு - உள்ளமாகிய முதற் சொததோடு லாபத்தையும் அடைவதற்காகப் போய், விள்ளு முதலிழந்தேன் - பேசப்படுகின்ற முதலையே இழந்துவிட்டேன், வீழவே உன்னை அடைந்திடுவான் - உன்னைச சேருவதற்கு விரும்பிய வுடனே, உன்பால் அடைந்த யான் - உன் பக்கம் வந்து சேர்ந்த நான், என்னை இழந்தேன் - தற்போதத்தை யிழந்துவிட்டேன், இஃதென்னை - இது என்ன வியப்பா யிருக்கிறது, எ - று.

3. அம்பல வாணு வளக்கப் படாதபொரு
ளிமபரிரண் டேயவைதா மேவையெனி—னம்ப
வொருபொரு ணின்னருண்மற் றோர்பொருளோ நாயே
னரிய பவமாகு மால்.

உரை:—அம்பலவாணு - அம்பலவாண தேசிகரே !, அளக்கப்படாத பொருள் இம்பர் இரண்டே - அளக்க முடியாத பொருள்கள் இவவுலகத்தில் இரணடு உளளன, அவைதான் எவை எனில் - அவையெவை என்றால, நமப ஒரு பொருள நின்னருள் - நம்பத்தகக ஒப்பற்ற பொருள் தன்னுடைய திருவருளாகும், மற்றோா பொருளோ - இரணடாவது பொருளாவது, நாயேன் அரிய பவமாகுமால் - நாய போன்ற அடியேனுடைய கடத்தற்கு அரிய பிறப்புக் கடலாகும், ஆல் - அசை, எ - று.

---

கொட்டாம்பட்டிக்

# கருப்பையாப் பாவலர்

## பாடியது

---

குன்றுக்குடிக் குமரன்மீது பாடியது

1. குன்றுக் குடியாய் குமரா குகாவென்னைக்
குன்றுக் குடியாயாட் கொண்டருள்வா—யன்றுவந்து
மனறுடி னற்கு வருகுருவே யானுநின்பான்
மன்றுடி னேனைகைவிடா மல்.

உரை :—குன்றுக்குடியாய் - குன்றுக குடியென்னும் திருப்பதியில் வீற்றிருப்பவனே !, குமரா குகா - முருகக்கடவுளே !, இருதயக் குகையிலிருப்பவனே !, என்னைக குனறுக் குடியாய் ஆட்கொண்டு அருள்வாய் - குறைவிலாத குடும்ப வாழ்க்கை யுடையவனுக என்னை யாககி யருள்வாய், அன்று உவந்து மன்று ஆடினர்க்கு வருகுருவே - அக்காலததில் விருப்பத்

தோடு அவையில் நடனஞ்செய்த சிவபெருமானுக்குப் பிரணவ உபதேசஞ் செய்ய வந்த ஆசாரியனே!, கை விடாமல் யானும் நின்பால் மன்று ஆடினேன் - என்னை நீ கை விடாமல் காப்பாற்றும்பொருட்டு உன்னை நான் வேண்டிக்கொண்டேன், எ - று.

## திருவாலங்காட்டு நடேசர்மீது பாடியது

2. கண்டந் திருவாலங் காட்டினாய் நின்னையன்பாக்
கண்டந் திருவாலங் காட்டிலே—யண்டமுற்றுங்
காக்கையரன் காணரிய கண்ணுதலே யெம்பவத்தைப்
போக்கையா ஞானம புரி.

உரை:—கண்டம் திருவாலங் காட்டினாய் - கழுத்தில் அழகிய விடத்தை யடையாளமாகத் தோற்றுவித்தாய், திருவாலங் காட்டிலே நின்னை அன்பாற் கண்டம் - திருவாலங்காட்டு ஸ்தலத்திலே உன்னை அன்போடு தரிசனஞ் செய்தோம் அண்டமுற்றுங் காக்கையின் காணரிய கண்ணுதலே - உலக முழுதிலும் காக்கின்ற திருமால் தேடிக் காண முடியாத நெற்றிக்கண்ணை யுடைய பெருமானே!, என் பவத்தைப்போக்கு - என்னுடைய பிறவியை யொழிப்பாயாக !, ஐயா ஞானம்புரி - ஐயனே ஞானத்தை விரும்பிக் கொடுத்தருள்வாயாக !, எ - று.

## பன்னிரண்டு ஊர்வரப் பாடியது

3. திருமயிலை வான்மியூர் முகிலையன சாயற்
றிகழ்கோதைத் திருவல்லிக் கேணிலைமை யுற்ற
ஒருமுல்லை வாயினகை யாலங்காட் டுவிழி
யொற்றியூர் வதவசமோ வெனநொந்துன் மயலால்
வருமணிமே கலைக்காஞ்சித் துகில்வளைக ணழுவ
மலைத்தண்ண மலைமுலையின் வார்கிழிய வந்தாள்
தருமதுரை யேசெந்தில் வேலரசே யன்ன
டனைப்புலியூ ருக்கனுப்பிற் சார்பாக்க முனதே.

உரை:—திருமயிலை அனசாயல் - அழகிய மயிலைப்போன்ற சாயலும், வான்மியூர முகிலையன திகழ்கோதை - வானத்தின்மேலே யூர்ந்து செல்லுகின்ற கரிய மேகம்போல் விளங்குகின்ற கூந்தலும், திருவல் என்-அழகிய சொக்கட்டான் காயைப்போன்ற வலிய முலையும், இகரு நிலைமை - கரும்பு போன்ற உடம்பும், உற்ற ஒரு முல்லைவாயில் நகை-ஒப்பற்ற முல்லைபோன்ற வாயிற் பற்களும், ஆலங்காட்டு விழி-விடத்தன்மை காட்டக்கூடிய கண்ணுமுடைய பெண், ஒற்றியூர்வது அவசமோ என நொந்து-அணைந்து சேர்வது தன் வசப் படாததோ என்று வருந்தி, உன் மயலால் - உன்பாலுள்ள மோகத்தால், வருமணி மேகலை காஞ்சித் துகில் - எண் கோவை மணிகள்

கலந்த ஆடையும், வளைகள் - வளையல்களும், நழுவ - கழலும்படியாக, மலைத்து-வருத்தத்தால் மெலிந்து, அண்ணுமலை முலையின் வார்கிழிய வந்தாள் - உயர்ந்த மலைபோன்ற முலையானது விம்மப்பெற்று கச்சு அறும்படியாக உன்பால் வந்து சேர்ந்தாள், தரும துரையே - அறவாளுன முதலாளியே, செந்தில் வேல் அரசே - செந்தில் வேலென்னும் பெயருடைய மன்னனே!, அன்னுள்தனைப் புலி - அவளைத் தழுவி, ஊருககு அனுப்பில் - உன்னுடைய ஊருக்கு அனுப்பினுல் சார்பு ஆக்கம் உனதே - சேரக்கூடிய பாக்கியம் உன்னைச சார்ந்ததாகும், எ - று.

## பன்னிரண்டு பலகாரப் பெயர்கள் வரப் பாடியது

4. தேங்குழலப் பந்தோசை யித்தியமா வுடலிற்
றிகழ்வடையப் பழம்பணியா ரங்களெலா நீத்தே
ஓங்கியழு தலட்டுபல காரமுள வனைமார்க்
கொடுங்கிப்பா யசநிகர்த்த வுற்றூர்க்கு மஞ்சி
வீங்கிபக்கோ டாமுலையிற் பூந்தினவு கொண்டுன்
விரகத்தி லதிரசமுற் றன்பிட்டு வந்தாள்
தாங்குதனின் கடன்செந்தில் வேலரசே யவணின்
றன்பாலா யடைதலெழி றருமுறுக்குத் தானே.

உரை:—தேன் குழல் - வாசனை வீசும் கூந்தலும், அப்பந்து - அழகிய பந்துபோன்ற, தோசைத்தியம் - இரண்டு திரண்ட முலைகள், மாவுடலில் திகழ்வடைய - மானிற முடைய உடம்பில் விளங்கவும், பழம் பணியாரங்களெல்லாம் நீத்தே - பழய ஆபரணங்கள் முத்துமாலைகளெல்லாவற்றையுமொழித்து, ஓங்கி யழுதல் அட்டு - ஓங்கி அழுவதைத் தவிர்ந்து, பலகாரமுள அனைமார்க்கு ஒடிங்கி-பல வகையான அசசமுள்ள மனத்தோடுகூடிய தாய்மார்க்கு அடஙகி, பாய் அசம் நிகர்த்த உற்றூர்க்கும் அஞ்சி - பாய்கின்ற ஆட்டைப்போன்ற உறவினர்களுக்கும் பயப்பட்டு, வீங்கு இபக்கோடு ஆம் முலையில் பூந்தினவுகொண்டு - விம்முகின்ற யானைக் கொம்புபோன்ற தனங்களின்மீது அழகிய தேமல் படரப்பெற்று, உன் விரகத்தில் அதிரசமுற்று - உன்னுடைய மோகததில் அதிக வின்பததை யுடையவளாய், அன்பிட்டு வந்தாள் - அன்புடையவளாய் வந்து சேர்ந்தாள், செந்தில்வேல் அரசே - செந்தில் வேலென்னும் பெயருடைய மன்னனே!, தாங்குதல் நின் கடன் - அவளை ஆதரித்தல் உன்னுடைய கடனுகும், அவள் நினறன்பாலா யடைதல் - அவளுன் பக்கமாய்ச சேர்தல், எழில் தரு முறுக்குத்தானே - அழகும் கெம்பீரமும் தருவதாகும், எ - று.

## ஏழுமரப் பெயர்கள் வரப் பாடியது

5. செந்தில்வேல் வள்ளாநின் றிண்புயத்தார் பற்றநித்தம்
வந்தில்வேண் டுஞ்சீர் வனப்புடைய—வந்தமின்வேல்
ஆலமரங் கண்ணரசா மல்குலத்திக் கோங்குமுலை
பாலைவேம் பென்றுண்ணாள் பார்.

உரை :—செந்தில்வேல் வள்ளால் - செந்தில் வேலனாகிய வள்ளலே! நின் திண்புயத்தார்பற்ற - உன்னுடைய வலிமையான தோளின்மேலுள்ள மாலையைக் கைக்கொள்வதற்காக, நித்தம் இல் வந்து வேண்டும் - நாள் தோறும் வீட்டுக்குவந்து பிரார்த்தனை செய்கின்ற, சீர் வனப்புடைய - சிறந்த அழகுடைய, அந்தமின்வேல ஆலமரம் கண் - அழகிய ஒளியுடைய வேலும் விடமும் அரமும்போன்ற கண்ணையும், அரசாம் அல்குல் - அரசிலை போன்ற கடிதடமும், அத்திக் கோஙகுமுலை - யானைபோன்ற தனமும் கோங்கினரும்புபோன்ற முலைக்காம்புமுடைய பெண், பாலை வேம்பு என்று உண்ணாள் - பாலை வேப்பிலைபோன்ற கசப்புடையதென்று அருந்தமாட்டாள், பார் - கவனிப்பாயாக, எ - று.

## பழனிக்குமாரப் பிள்ளைமீது பாடியது

6. கல்லாதமூடர்கள்பாற்கவியுரைக்கிற் கற்பனைசொற்கனிவின்சாரம்
எல்லாநன் கறிவரா வறியாதார்க் குரைத்தல்கமரினிலே பாலை
இல்லாமற்கவிழ்த்ததொக்குமென் பதுநீயறியாயாவின்பாச்சொல்ல
வல்லாருன் பாலன்றி யெவர்க்குரைப்பார் பழனிக்கு மாரவேளே.

உரை:—பழனிக்குமார வேளே - பழனிக்குமார மன்னனே!, கல்லாத மூடர்கள்பால் கவி யுரைக்கில் - படியாத அறிவிலிகளிடம் பாட்டுப் பாடினால், கற்பனை சொல் கனிவின் சாரம் எல்லாம் நன்கு அறிவரா - பாட்டின் அணிகள் சொன்னயங்கள் உணர்ச்சி நயங்க ளென்பவற்றை யவர்கள் அறியக்கூடுமோ?, அறியாதார்க்கு உரைத்தல் கமரினிலே பாலை இல்லாமல் கவிழ்த்தது ஒக்குமென்பது நீ அறியாயா - நயந் தெரியாதவர்களிடம் பாட்டியம்புதல் நிலவெடிப்பிலே நிலமுறிஞ்சும்படி பாலைக் கொட்டுவது போலாகுமென்பது உனக்குத் தெரியாததா?, இன்பாச் சொல்ல வல்லார் உன்பாலன்றி எவர்க்கு உரைப்பார் - இனிய பாட்டுப் பாடவல்லவர்கள் உன்னிடத்தில் தங்கள் பாட்டைச சொல்லாமல் வேறு யாரிடஞ் சொல்வார்கள், எ - று.

சிவகங்கை விசையச்சாமித் தேவர்பால் உரைத்தது

7. மாது வதன மதிதா மரைமலையே
மாது வதன மதித்தணைவாய்—ஓதுதமிழ்ப்
பாவிசையச் சாமிதரும் பண்புடையாய் நண்புடையாய்
மாவிசையச் சாமிபூ மா.

உரை :—ஓது தமிழ்ப்பா இசைய சாமிதரும் பண்புடையாய் - சொல்லு கின்ற தமிழ்ப் பாட்டுக்குப் பொருத்தமாகப் பொன்னை யளிக்கும் நற்குண முடையவரே !, நண்புடையாய் - சிநேகிதரே !, மாவிசையச் சாமி - பெரிய விசையச்சாமி முதல்வரே !, பூமா - உலக பாலகரே !, மாது வதனம் மதிதாமரை - மாதினுடைய முகம் சந்திரனையும் தாமரையையும் ஒக்கும், மாதுவதனம் மலையே - பெரிய விரண்டு தனங்களும் மலைபோன்றன, மதித்து அணைவாய் - அவளைப் பொருளாகக் கருதித் தழுவுவீராக !, எ-று.

---

# அழகிய சொக்கநாத பிள்ளை

## பாடியது

சரஸ்வதி தோத்திரம்

1. மேவினிய பேரமுதின் மிக்கான வாக்குநல்கும்
பூவினர சாட்சி பொருந்தநல்கு—நாவினிடத்
தாள்கமலத் தாளபயத் தாள்வரதத் தாளெகினத்
தாள்வெண்ணிறத் தாள்கனகத் தாள்.

உரை :—நாவினிடத்தாள் - நாவில் வீற்றிருப்பவள், கமலத்தாள் - வெண்டாமரைப் பூவில் வீற்றிருப்பவள் அபயத்தாள் வாதத்தாள் - அபயம் வரதமென்ற திருக்கை அடையாள முடையவள், எகினத்தாள் - அன்னத்தின்மீது எழுந்தருள்பவள், வெண்ணிறத்தாள் - வெள்ளை நிறமுடையவள், கனகத்தாள் - பொனமுடி தரித்தவள், (அத்தகைய சரஸ்வதி) மேவு இனிய பேரமுதின மிககான வாககு நலகும் - பெறுதற்கு இனிமையான பெரிய தேவாமிர்தத்தைப் பாரகிலுஞ் சிறந்த சொல்வன்மையை அளிப்பாள், பூவின் அரசாட்சி பொருந்த நல்கும - பூவுலகத்தில் அரசு செய்யும் அதிகாரத்தைப் பொருந்தும்படி அருள் செய்வாள், எ - று.

## முத்துசாமிப் பிள்ளைபேரிற் பாடிய சிலேடைகள்
## சிவனுக்கும் மகாவிஷ்ணுவுக்கும்

2. ஆனைமுகங் காணுதலா லஞ்சக்கரங் கொளலான்
மேனியுமை சேர்வணத்தால் வெண்கோட்டா—னனிலத்தின்
மங்காத கீர்த்திபெற்ற வள்ளன்முத்து சாமிமன்னு
கங்காதரன் றிருமால் காண்.

உரை :—நானிலத்தில் மங்காத கீர்த்தி பெற்ற வள்ளல் முத்துசாமி மன்னு - உலகத்தில் அழியாத புகழ்படைத்த வள்ளலாகிய முத்துசாமி வேந்தனே !, ஆனை முகங் காணுதலால் - ஆனை முகக் கடவுள் தோன்று வதற்குக் காரணமா யிருப்பதாலும், அஞ்சக் கரங் கொளலால் - பஞ்சாட் சரத்தை மந்திரமாக வுடைமையாலும், மேனி உமைசேர் வணத்தால் - திரு மேனியில் உமையம்மை ஒரு பாகத்திற் சேர்ந்திருக்கின்றபடியினாலும், வெண்கோட்டால் - வெள்ளிய திருநீற்றுக் கோட்டினை யுடைமையாலும், கங்காதரன் - கங்கையைத் தரித்த சிவபெருமானும்,

ஆனைமுகங் காணுதலால் - கஜேந்திரனுக்குத் தரிசனங் கொடுத்தா லும், அம்சக்கரங் கொளலால் - அழகிய சக்கரத்தைக் கையில் கொள்ளுத லாலும், மேனியு மைசேர் வணத்தால் - உடம்பானது மேகம்போன்ற நிற முடைமையாலும், வெண்கோட்டால் - வெள்ளைப் பன்றியின் கொம்பை யுடைமையாலும், திருமால் காண் - திருமாலும சமமாவார்கள், எ - று.

## சிவனுக்கும் தேங்காய்க்கும்

3. கல்லா லடியுறலாற் கண்மூன் றிருப்பதனுல்
எல்லோரும் பூசைக் கெடுத்திடலால்—வல்லோடு
கொள்ளுகையாற் கங்கா குலமுத்து சாமிமன்னு
கன்னிதழி யானிகர்தேங் காய்.

உரை :—கங்காகுல முத்துசாமி மன்னு - கங்கை குலமாகிய வேளாள குலத்திற் பிறந்த முத்துசாமி வேந்தனே!, கல்லால் அடியுறலால் - கல்லால மாத்தினடியில் தெக்ஷிணமூர்த்தியாய் எழுந்தருளியிருப்பதனுலும், கண் மூன்றிருப்பதனுல் - முக்கண்ணுடைமையாலும், எல்லோரும் பூசைக்கு எடுத்திடலால் - எல்லாரும் வழிபாட்டிற்குச் சிவலிங்கத்தைச் சிறப்பாக வெடுத்துக்கொள்வதாலும், வல்லோடு கொள் கையால் - வலிய தலையோட் டைப் பிச்சைக்காகக் கையிற் கொண்டமையினுலும், கன் இதழி யான் - தேன் சொரியும் கொன்றைமாலையுடைய சிவபெருமானும்,

கல்லால் அடியுறலால் - தேங்காயானது கல்லிலடித் துடைக்கப்படு லாலும், கண் மூன்றிருப்பதனுல் - அதற்கு மூன்று கணக விருப்பதனுலும, எல்லோரும் பூசைக்கு எடுத்திடலால் - எல்லோரும் பூசையிற் சுவாமிக்கு

நிவேதிப்பதற் கெடுத்துக்கொள்ளுதலாலும், வல்லோடு கொள்ளு கையால் - பெலமான சிரட்டை யுடைமையாலும், தேங்காய் சிவபெருமானுக் கொப் பாகும், எ - று.

### சிவனுக்கும் வாழைப்பழத்திற்கும்

4. நஞ்சுதின் னப்பெறலா னற்றோ லு ரித்திடலான்
மிஞ்சுங் கனிதலைமேற் கொளலால்—விஞ்ச
வுரமருவுஞ் சிப்பணியா லோங்குமுத்து சாமீ
பரமசிவன் வாழைப் பழம்.

உரை :—ஓங்கு முத்துசாமி - சிறப்புற்றோங்கும் முத்துசாமி மன்னவனே !, பரமசிவன் - சிவபெருமான், நஞ்சு தின்னப் பெறலால் - பாற்கடலிலெழுந்த விஷமுண்ணப் பெறுதலானும், நல் தோல் உரித்திடலால் - நல்ல யானைத்தோலை யுரித்திடுதலாலும், மிஞ்சும் கனி தலைமேல் கொளலால் - வெள்ளமாகப் பெருக்கெடுத்து வந்த கங்கைக் கன்னியைத் தனது சிரமேற்கொள்ளுதலாலும், விஞ்ச உர மருவும் சிப்பணியால் - மார்பிலே பொருந்திய மிகச் சிறகின்ற பாமபை யுடைமையால்,

நஞ்சு தின்னப் பெறலால் - நையப்பெற்றபின் அருந்தப் படுதலானும், நல் தோல் உரித்திடலால் - நன்றாகத் தோலுரிக்கப்படுதலாலும், மிஞ்சும் கனிதலை மேற்கொளலால் - மிகுதியாகக் கனிந்து பழமாகின்ற தன்மை யாதலாலும், விஞ்ச உரமருவும் சிப்பணியால் - நல்ல வளம் பொருந்திய சிப்பாக அலங்கார முறுவதாலும், வாழைப்பழம் சிவபெருமானுக் கொப் பாகும், எ - று.

### விஷ்ணுவுக்கும் கைக்கெடியாரத்துக்கும்

5. சக்கரத்தி னலரவந் தாங்குதலி னோடுமுள்ளெட்
டக்கரத்தி னல்வேலை யாரவதினன்—மிக்கவன்பர்
முக்கியமாய்க் கைக்கொளலான் முத்துசுவா மித்துரையே
கைக்கெடியா ரந்திருமால் காண்.

உரை :—முத்துசுவாமி துரையே - முத்துசாமி எசமானே !, திருமால் - மகாவிஷ்ணு, சக்கரததினல் - சக்கராயுததததை யுடைமையாலும், அரவம் தாங்குதலின் - ஆதிசேஷனுகிய பாம்புமேல் தாங்கப்படுதலினேடும், உள் எட்டு அக்கரத்தினல் - தியானிக்கப்படுகின்ற அட்டாட்சர மென்கிற மந்திரத்தினலும், வேலை யார்வதினல் - திருப்பாற்கடலில் தககுவதினலும், மிக்க அன்பர் முக்கியமாய்க கைககொளலால் - மிகுந்த அன்பர் முக்கியமாய்க் கைகூப்புவதினலும்,

சக்கரத்தினல் - சக்கரமாகிய கருவியை யுடைமையாலும், அரவந் தாங்குதலினேடும் - ஓசை கொண்டுள்ளமையாலும், முள் எட்டு அக்கரத்தி

ளுல் - முன் தொடுகின்ற எழுத்துக்களை யுடைமையாலும், வேலை யார்வதி ளுல் வேலைப் பாடுடைமையாலும், மிக்க அன்பா முக்கியமாய்க் கைக் கொளலால் - பல அன்பர்கள் முக்கியமாக உபயோகத்திற்குக் கையில் வைத்துக்கொள்வதிளுலும், கைக்கடியாரம் திருமாலுக்குச் சமமாகும், எ-று.

## மன்மதனுக்கும் நெருப்புக்கும்

6. கருமபுகையி ளுலெரியுங் காட்சியினல் யாரும்
விருப்புதலான் மையல் விளக்க—வருமபொலிவா
லெத்திசைக்குங் கீர்த்திபெற்ற வெங்கண்முத்து சாமிமன்ளு
சித்தசனை யொப்பாகுந் தீ.

உரை:—எத்திசைக்கும் கீர்த்தி பெற்ற எங்கள் முத்துசாமி மன்ளு - எந்தத் திககிலும் புகழ் பரவப்பெற்ற எஙகளுடைய முத்துசாமி வேந் தனே!, கரும்பு கையிளுல் - கரும்பினை வில்லாகக் கையிலுடைமையிளுலும், எரியும் காட்சியிளுல் - சிவபெருமான் நெற்றிக்கண்ணுல் எரிந்த தோற் றத்தையுடைமையாலும், யாரும் விரும்புதலால் - யாரும் விரும்பத்தக்க வடிவத்தை யுடைமையாலும், மையல் விளக்கவரும் பொலிவால் - மோகத் தைக் காட்டுவதற்கு வருகின்ற பொருத்த முடைமையாலும், சித்தசன் - மன்மதனும்,

கரும்புகையிளுல் - கரிய நிறமுடைய புகையிளுலும், எரியுங் காட்சி யால் - எரிகின்ற தோற்றத்தை யுடைமையாலும், யாரும் விரும்புதலால் - ஒளியின் பொருட்டு யாரும விரும்புவதாலும், மை அல் விளகக வரும் பொலிவால் - மைபோனற இருட்டில பொருளைக காட்டுதற்கு வருகினற விளக்கதனதை யுடைமையாலும், தீ ஒப்பாகும - நெருப்பும் சமமாகும், எ-று.

## வேசைக்கும் சவுளிக்கடைக்கும்

7. ஆர்வந்தாலுஞ் சேலையைத் தூக்கிக் காட்டுதலாற்
பார்வையி ளுலேபணங்கைப் பற்றிடலாற்—சேரு
மவிநயத்தாற் றேடுதலி ளுன்முத்து சாமி
சவுளிக்கடை நிகர்வே சை.

உரை: —முத்துசாமி - ......, வேசை - விலை மகளிர், ஆர்வந்தாலும் சேலையைத்தூககிக் காட்டுதலால் - ......, பார்வையிளுலே பணங்கைப் பற்றிடலால் - பார்த்த அளவிலேயே தனக்குரிய பணத்தைப்பற்றிக் கொள்ளுதலாலும், சேரும அவிநயத்தால் தேடுதலிளுல் - தங்களிடத்திற் பொருந்திய அவிநயஙகளைக் காட்டி ஆடவரைத் தேடுதலிளுலும்,

ஆர் வந்தாலும் சேலையைத் தூக்கிக் காட்டுதலால் - யார் வந்தாலும் யார்க்கும் புடவைகளை யெடுத்துக் காட்டுதலாலும், பார்வையிளுலே பணங

கைப் பற்றிடலால் - துணிகளைக் கட்டுவதற்கு முன் பார்த்து வாங்கு மனைவி லேயே அதற்குரிய விலையை வாங்கிக்கொள்வதாலும், சேரும் அவியத்தால் தேடுதலினால் - சூரிய வெளிச்சத்திலே தேடி அடையப் பெறுதலாலும் அல்லது வினயத்தினாலே வாங்குகின்றவர்களைத் தேடுதலினாலும், சவுளிக் கடை நிகர் - சவுளிக்கடை விலை மகளிர்க்கு ஒப்பாகும், எ - று.

## வேசைக்கும் நாய்க்கும்

8. ஆட்டுக்கா வற்படலா லாரிடத்தி லுநயப்புக்
காட்டிச்சுணங் கிக்கடித் திடலா—னாட்டிலெங்கும்
போமியல்பாற் றம்மினமேற் போராட லான்முத்து
சாமிமன்னா நாய்க்கிணைவே சை.

உரை :—முத்துசாமி மன்னா - முத்துசாமி வேந்தனே !, ஆட்டுக்கு ஆவல் படலால் - நடனஞ் செய்வதற்கு விரும்புவதாலும், ஆரிடத்திலும் நயப்புக் காட்டிச் சுணங்கிக் கடித்திடலால் - ஆருக்கும் இனிமை காட்டிச் சரசஞ்செய்து கவ்வுதலாலும், நாட்டிலெங்கும் போம் இயல்பால் - தேசத்தில் எவ்விடத்திற்கு செல்லும் தன்மை யுடைமையாலும், தம்மினமேல் போராடலால் - தன் சாதியாரோடு சண்டையிடுதலாலும், வேசை - விலை மகளிரும்,

ஆட்டுக்கு ஆவல் படலால் - ஆட்டு ஊனுக்கு விரும்புவதாகிலும், ஆரிடத்திலும நயப்புக்காட்டிச் சுணங்கிக் கடித்திடலால் - ஆரிடத்திலும் வாலைக குழைத்துப் படிவதுபோற் காட்டி நெருங்கிக் கடிப்பதனாலும், நாட்டில் எஙகும்போம் இயல்பால் - ஊரிலே எஙகும திரிவதாலும், தம் இன மேல் போராடலால் - மற்ற நாய்களோடு சண்டை யிடுவதாலும் நாய் - நாயானது, இணை - வேசைககுச சமமாகும், எ - று.

## வேசைக்கும் பேய்க்கும்

9. ஆட்டுவிக்க வாடுதலா லாரையும்பற் றிப்பிடித்துச் [ற்
சேட்டைசெய்யலான்மயக்கஞ்சேர்த்திடலாற்—கூட்டமதா
ருய்க்கிணையாய் வாணர்தமைத் தாங்குமுத்து சாமிமன்னா
பேய்க்கிணையாய் வேசைகளைப் பேசு.

உரை :—தாய்க்கிணையாய் வாணர்தமைத் தாஙகு முத்துசாமி மன்னா - தமிழ் கற்றவர்களை அன்னைபோல ஆதரிக்கும் முத்துசாமி வேந்தனே !, ஆட்டுவிக்க ஆடுதலால் - நட்டுவன் நடனஞ் செய்விக்க நாட்டிய மாடுதலானும், ஆரையும்பற்றிப் பிடிததுச் சேட்டை செய்யலான் - எவரையும் கைப்பற்றி விளையாடச் செய்வதாலும், கூட்டமதால் மயக்கம் சேர்த்திடலால் - தழுவுதலால் மயல் (மோகம்) விளைவித்திடுதலாலும், வேசைகளை - விலை மகளிர்களையும்,

ஆட்டுவிக்க ஆடுதலால் - மந்திரவாதி யாட்டுவித்தால் ஆடுதலாலும், ஆரையும்பற்றிப் பிடித்துச் சேட்டை செய்யலால் - யாரையும் பிடித்துக் கொண்டு குறும்புகள் செய்வதாலும், கூட்டமதால் மயக்கம் சேர்த்திடலால் - தான் பிடித்த உயிரோடு கலந்து அறிவு மயக்கத்தை புண்டு பண்ணுவதாலும், பேய்க்கு - பைசாசக்கு, இணையாய்ப் பேசு - விலைமகளிரை யொப்பாகக் கூறு, எ - று.

சந்திரனுக்கும் தாம்பர வன்னிக்கும்

20. மீனைப் பொருந்திடலான் மிக்ககலை தோய்ந்திடலாற்
றனக்க மண்டலமே சார்ந்திடலான்—மானத்தா
லம்புவிக்கோ ராபரண மானமுத்து சாமிமன்னா
செம்புநதி நேர்சந்தி ரன்.

உரை:—மானத்தால் அம்புவிக்கோர் ஆபரணமான முத்துசாமி மன்னா - பெருமையால் அழகிய பூமிக்கு ஓர் அணியாய் விளங்குகின்ற முத்துசாமி வேந்தனே!, மீனைப் பொருந்திடலால் - விண் மீனுகிய நட்சத்திரத்தைக் கூடுவதாலும், மிக்க கலை தோய்ந்திடலால் - கலைகள் வளரப் பெறுவதாலும், தான் நக்க மண்டலமே சார்ந்திடலால் - தான் ஒளி வட்டத்தை யடைந்திருப்பதாலும், சந்திரன் - சந்திரனுக்கு,

மீனைப் பொருந்திடலால் - நீரில் வாழும் மீன்களைப் பொருந்தி யிருப்பதனாலும், மிக்க கலை தோய்ந்திடலால் - மிகுதியான ஆடைகள் துவைக்கப்படுதலாலும், தானக் கமண்டலமே சார்ந்திடலால் - தான பாத்திரமாகிய கமண்டலத்தில் நிறைக்கப் படுதலாலும், செம்பு நதி - தாம்பர வர்ணியாறு, நேர் - (சந்திரனுக்கு) ஒப்பாகும், எ - று.

திருடனுக்கும் செருப்புக்கும்

11. அங்கங் களவா லதுகண்டு தைப்புறலா
லெங்கு மிதியடியென் றேசொலலால்—வெங்கற்
கரடுமுட் கஞ்சாததி னுற்காமர் முத்துசாமி
திருடனையொப் பாகுஞ்செ ருப்பு.

உரை:—காமர் முத்துசாமி - அழகிய முத்துசாமி வள்ளலே!, அங்கங் களவால் - களவு அடையாள முடைமையாலும், அது கண்டு உதைப்பு உறலால் - அந்த அடையாளத்தினுல் உதை வாங்குதலாலும், எங்கும் மிதியடி என்றே சொலலால் - எங்கும் மிதிக்க வேண்டும் அடிக்க வேண்டுமென்ற சொல்லுக்கிலக்கா யிருப்பதனாலும், வெங்கல் கரடு முட்கு அஞ்சாததினுல் - கொடிய பாறை கடினமான வழி முள்ளு என்பவற்றிற்குப் பயப்படாது ஓடுவதாலும், திருடனை - கள்ளனை,

அங்கங்கு அளவால் - காலின் ஒவ்வோர் உறுப்புக்கும் தக்கபடி அளவான பகுதியை யுடைமையாலும், அதுகண்டு தைப்புறலால் - அளவுகண்டு அதற்குத் தக்கபடி தைக்கப்படுதலாலும், எங்கும் மிதியடி என்றே சொல்லால் - எவ்விடத்திலும் மிதியடி யென்ற பெயரை யுடையமையாலும், வெம் கல் காடு முட்கு அஞ்சாததினால் - கடுமையான கல்லு முள்ளுகாடானவழி யென்பவற்றை யஞ்சாது மிதிக்கப் பயன் படுவதாலும்! செருப்பு ஒப்பாகும் - செருப்பு (திருடனுக்கு) ஒப்பாகும், எ - று.

மயிலுக்கும் கரும்புக்கும்

12. மேனியெல்லாங் கண்ணுறலால் வேள்விரும்புந் தன்மையினா
லானபசுந் தோகையினா லாடலினான்—மீனவனோர்
மானபரா நெல்லைநகர் வாழுமுத்து சாமிமன்னா
கானமயி லொப்பாங் கரும்பு.

உரை:—மீனவனோர் மானபரா - பாண்டியனை யொத்த மேலான பெருமை யுடையவனே !, நெல்லை நகர் வாழ் முத்துசாமி மன்னா -......, மேனியெல்லாம் கண்ணுறலால் - உடம்பு முழுதும் கண்போன்ற பகுதிகளிருப்பதாலும், வேள விரும்பும் தனமையினால் - முருகவேள் வாகனமாக விரும்பிக்கொள்ளும் இயல்பினாலும், ஆன பசுந்தோகையினால் - பச்சை நிறமுடைய கலாப முடைமையாலும், ஆடலினால் - நிருத்தனஞ் செய்வதினாலும், கானமயில் - காட்டில் வசிக்கின்ற மயிலுக்கு,

மேனி யெல்லாம் கண்ணுறலால் - எல்லாப் பாகத்திலும் கணுக்களிருப்பதாலும், வேள் விரும்புமதன்மையினால் - மன்மத வேள் வில்லாக விரும்பு மியற்கையாலும், ஆன பசுந்தோகையினால் - அழகான பசிய இலைசருகை யுடைமையாலும் ஆடலினான் - ஆலையிலாட்டப் படுதலாலும், கரும்பு ஒப்பாம் - கரும்பானது (மயிலுக்குச்) சமமாகும், எ - று.

ஒட்டுத் திண்ணைக்கும் கண்டச் சரத்துக்கும்

13. செங்கற் பதித்திடலாற் சீராய் மெழுகிடலா
லிங்கிதமாய்க் கோலமிடுதலாற்—றங்கவிலை
நண்ணுதலால் வாணர்கட்கு நல்குமுத்து சாமிமன்னா
திண்ணைநிகர் கண்டசரஞ் செப்பு.

உரை:—வாணர்கட்கு நல்கும் முத்துசாமி மன்னா - கவிவாணருக்குப் பரிசளிக்கும் முத்துசாமி வேந்தனே!, செஙகல்பதிததிடலால் - செங்கல்கள் பதித்துக் கட்டப் படுவதினாலும், சீராய் மெழுகிடலால் - நன்றாக மெழுகப் படுதலாலும், இஙகிதமாய்க் கோலம் இடுதலால் - இனிமையாகக் கோலமிடப் படுவதினாலும், தங்க இலை நண்ணுதலால் - வந்தவர்கள் தங்கும்படியாக இல்லமாகிய வீட்டை யொட்டியிருப்பதாலும், திண்ணை - ஒட்டுத்திண்ணைக்கு,

செங்கற்பதித்திடலால் - சிவந்த இரத்தினங்கள் பதிக்கப் பெறுத லாலும், சீராய் மெழுகிடலால் - அளவாய் மெழுகு சேர்க்கப்படுதலாலும், இங்கிதமாய்க் கோலம் இடுதலால் - இனிமையான அலங்காரத்திற்காக அணியப்படுதலாலும், தங்க விலை கண்ணுதலால் - பொன்னிலையோடு சேர்க்கப் பெறுதலாலும் அல்லது தங்கத்தின் விலை பெறுதலாலும், நிகர் கண்ட சரம் செப்பு - கண்ட சரம் (ஒட்டுத் திண்ணைக்கு) ஒப்பாகும் எனச் சொல், எ - று.

## மரத்திற்கும் பீற்றற் குடைக்கும்

14. பிஞ்சு கிடக்கும பெருமழைக்குத் தாங்காது
மிஞ்ச வதனுள் வெயிலொழுகும்—தஞ்சமென்றோர்
வேட்டதருண் முத்துசுவா மித்துரைரா ஜேந்த்ராகேள்
கோட்டுமரம் பீற்றற் குடை.

உரை :—தஞ்சமென்றோர் வேட்டது அருள் முத்து சுவாமித் துரை ராசேந்திரா கேள் - அடைக்கலம் புகுந்தவர்க்கு விரும்பியதைக் கொடுக் கின்ற முத்துசாமிப் பெருஞ் செல்வ முதலாளியே கேட்பாயாக !, கோட்டு மரம் - கிளையையுடைய மரம், பிஞ்சு கிடக்கும் - பிஞ்சுக் காய்களுடைய தாயிருக்கும், பெரு மழைக்குத் தாங்காது - பெருமழைக்கு மரத்தினடியில் ஒதுங்க முடியாது, மிஞ்ச வதனுள் வெயிலொழுகும் - அதன் வழியாக வெயிற் கதிர்கள் பாய்ந்து செல்லும்,

பீற்றற்குடை - பீற்றற் குடையானது, பிஞ்சுகிடக்கும் - கிழிந்திருக் கும், பெருமழைக்குத் தாங்காது - பெருமழையைத் தடுக்காது, மிஞ்ச அத னுள் வெயில் ஒழுகும் - வெயில் அதிகப்பட்டவுடன் அதன் வழியாக உட் செல்லும், (ஆதலால் பீற்றற்குடை மரத்துக் கொப்பாகும்), எ - று.

## காயென்றெடுத்து இலை என்று முடித்தது

15. காய்சின மில்லாதான் கருணைமுத்து சாமிவள்ளல்
வாய்மையுளான் பாடிவரு வோர்க்குத்—தாய்நிகர்வான்
எல்லையில்லா மாண்பொருளை யீவா னிவனிடத்தி
லில்லையென்ற சொல்லே யிலை.

உரை :—காய்சின மில்லாதான் கருணை முத்துசாமி வள்ளல் - கொதிக் கின்ற கோபமில்லாத கருணை மிக்க முத்துசாமி யென்னும் கொடையாளன் வாய்மையுளான் - சத்தியவாழ் விருப்பவன், பாடி வருவோர்க்குத் தாய் நிகர்வான் - பாட்டியற்றி வருகின்ற புலவர்களுக்கு அன்னைபோலவான், எல்லை இல்லா மாண்பொருளை ஈவான் - அளவற்ற சிறந்த செல்வத்தைக் கொடுப்பான், இவனிடத்தில் இல்லையென்ற சொல்லே இல்லை - ......, எ - று.

படித்துறை யென்றெடுத்துக் குளக்கரையென்று முடித்தது

16. *படித்துறையும் வாணரைக்காப் பாற்றிடவும் பொல்லா*
*மிடித்துயரா லேழையரை மேன்மேற்—றுடித்துநித*
*நையவிடா தாண்டிடவு நாட்டின்முத்து சாமியெனு*
*மையவுன்போல் யார்க்குளக் கரை.*

**உரை :—***படித்து உறையும் வாணரைக் காப்பாற்றிடவும்-கல்வி கற்று விட்டு ஊதியமில்லா திருக்கும் தமிழ்வாணரைப் பேணுவதற்கும், பொல்லா மிடித்துயரால் ஏழையரை மேன்மேல் துடித்து நிதம் நையவிடாது ஆண்டிடவும் - கெட்ட வறுமையின் துன்பமானது ஏழைகளைத் தினந்தோறும் துடிக்கும்படியாக வருத்தாதிருக்கும்படி அவர்களைப் பாதுகாத்து ஆட்கொள்ளவும், நாட்டில் - தேசத்தில், முத்துசாமி யெனும் ஐய - முத்துசாமி யெனும் ஐயனே !, உன்போல் யார்க்கு உள் அக்கரை - உன்னைப்போல் உள்ளத்தில் யார்க்குக் கவலை அல்லது ஆதரிமிருக்கிறது, எ - று.*

கைதேறாத ஒருவன் மத்தளம் அடித்ததைப் பார்த்துச் சொல்லியது

17. *எங்கண்முத்து சாமிமன்ன விங்கே யொருவன்மிரு*
*தங்கமதை யோயாமற் றட்டின—னங்கங்கே*
*கூடிநின்ற பெண்களெருக் கொள்வதற்குக் கூடையெடுத்*
*தோடிவந்தார் நீ பார்த்தா யோ.*

உரை :—*எங்கள் முத்துசாமி மன்ன - எங்களுக்குச சொந்தமான முத்துசாமி வேந்தனே !, இங்கே ஒருவன் மிருதங்கமதை ஓயாமல் தட்டினன் - ......, அங்கங்கே கூடிநின்ற பெண்கள் எருக்கொள்வதற்குக் கூடையெடுத்து ஓடி வந்தார் - மிருதங்கத்தின் ஓசையைக் கேட்டுப் பக்கத்திற் கூட்டமாய் நின்ற பெண்கள் (அது சாணி தட்டுகிற சத்தம் போலிருந்ததனல்) எரு வாங்குவதற்குக் கூடைகளைத் தூக்கிக்கொண்டு ஓடி வந்தார்கள், நீ பார்த்தாயா - நீ அதைக் கவனித்தாயா ?, எ - று.*

18. *முன்னெழுத்தில் லாக்கமலை மொய்ம்பா முழுக்கமலை*
*மன்னும்வத னநடு மேவாக்கமலை—தன்னின்மிகு*
*முத்துசுவா மித்துரையே முற்றுங்கவியி லின்பம்*
*வைத்துங் கமலை மகிழ்.*

**உரை :—***முன்னெழுத்தில்லா கமலைமொய்ம்பாம் - (கமலை யென்பதில் ககரம் போனல் உளதாம்) மலைபோன்ற தோளையுடைய, முழுக்கமலை மன்னும் வதனும் - கமலையாகிய திருமகள் நிலையாகத் தங்கும் முகத்தவனே, நடுமேவாக் கமலைதன்னில் மிகு முத்துசாமித் துரையே - கலைகளில் வல்ல முத்துசாமி யென்னும் பெயருடைய எஜமானே !, முற்றும் கவியில் இன்*

பம் வை - முழுவதும் பாட்டில் பிரியம் வை, தங்கமலை மகிழ் - அதன் சிறந்த வளத்தை யனுபவித்து மகிழ்வாயாக !, எ - று.

ஒரு பெண் முத்துசாமி வள்ளலைப் பார்த்துக் கூறியது

19. கோமகனே யிங்குன்கொடைக் கென்கொடை யதிகம்
வாமமுத்து சாமிமகி பாலா—நீமுன்
ஒருகைதனங் கொடுத்தா லுண்மைவைத் திப்போதே
இருகைதனங் கொடுப்பேன் யான்.

உரை :—வாம முத்துசாமி மகிபாலா - அழகிய முத்துசாமி பூபதியே!, கோமானே இங்கு உன் கொடைக்கு என் கொடை யதிகம் - அரசனே, இவ்வுலகத்தில் உன் கொடையைப் பார்க்கிலும் என் கொடை யதிகமாகும்! நீ முன் ஒருகை தனங் கொடுத்தால் - நீ முன்பாக ஒரு கையினாலே செல்வத்தை யெனக்கு அளிப்பாயானால், உண்மை வைத்து இப்போதே யான் இருகை தனம் கொடுப்பேன - சத்தியமாய் இப்போதே உன்னிருகைகளும் பற்றுதற்குரிய தனங்களைத் தருவேன், எ - று.

20. போதணைவாய் வாதுரையே பூமணம்போ லேயெனையிப்
போதணைவாய் வாதுரையேன் பூசலேன்—மாதயைசே
ரஞ்சொன்முத்து சாமிமன்னா வைஞ்சரத்தை மீதுமென்மேல்
வெஞ்சினத்தி லேவி னன்மா வேள்.

உரை:—மாதயைசேர் அம் சொல் முத்துசாமி மன்னா - மிகுந்த தயையுடைய அழகிய மொழி பேசும் முத்துசாமி வேந்தனே!, போதணைவாய் வாதுரையே - பூப்போன்ற படுக்கையின்மீது எஜமானே வருக !, பூமணம் போல எனை இப்போது அணைவாய் - பூ மணத்தினோடு சேர்ந்திருப்பது போல இப்போது என்னை நீ சேருவாயாக!, வாது உரையேல் - விவகாரம் பேச வேண்டாம், பூசல் என் - சண்டை யெதற்கு, மா வேள் - பெரிய மன்மதன், வெம் சினத்திலே - கொடிய கோபத்தோடு, மென்மேல் மீது - மெல்லிய உடம்பின்மேல், ஐஞ்சரத்தை - ஐந்து பூங்கணைகளை, ஏவினன் - விடுத்தான், எ - று.

தோழி கூற்று

21. விரும்ப வனிதையர்சூழ் வேண்முத்து சாமீ
வரும்பவனி தையல்கண்டுன் மாலே—பொருந்திநிதந்
தாகமிகுந் தாள்வளையுந் தானிழந் தாள்கரையுந்
தேகமறந் தாள்சொலவந் தேன்.

உரை :—விரும்ப வனிதையர் சூழ் வேள் முத்துசாமீ - காதலிப்பதற்குப் பெண்கள் சூழ்ந்து நிற்கும் முத்துசாமி வள்ளலே !, வரும் பவனி

தையல் கண்டு - நீ பவனி வருவதை யென் பெண்ணானவள் பார்த்து, உன் மாலே பொருந்தி நிதம் தாகம் மிகுந்தாள் - உன்பால் மோகத்தை யடைந்து தினந்தோறும் வேட்கை யதிகரிக்கப்பெற்றாள், வளையும் தானே இழந்தாள் - கட்டிய உடை நழுவப் பெற்றாள், கலையும் தேகம் மறந்தாள் - மெலிகின்ற தன் மெய் மறந்தாள், சொல வந்தேன் - இதை யுனக்குத் தெரிவிக்க வந்தேன், எ - று.

22. இந்திரவில் வாணுதலா ளெப்பொழுது மையல்கொண்டே
யிந்திரவில் வந்தழலை யீந்ததனாற்—சந்ததமும்
வாடிமுத்து சாமிமகீ பதியைநீ யழைத்து
வாடியென்றாள் சேரவரு வாய்.

உரை :—இந்திரவில் வாள் நுதலாள் - வானவில் போன்ற ஒளியை யுடைய நெற்றியை யுடையவள், எப்பொழுதும் மையல் கொண்டே - எப்போதும் மோகங்கொண்டு, இந்து இரவில் வந்து அழலை ஈந்ததனால் - சந்திரன் இராத்திரி வந்து நெருப்பை வீசியதால், சந்ததமும் வாடி - நிரந்தரமாய் வாட்டமடைந்து. முத்துசாமி மகீபதியை நீ யழைத்து வாடி என்றாள் - முத்துசாமி வேந்தனை நீ அழைததுவா எனறு கட்டளையிட்டாள், சேர வருவாய் - அவளை அணைவதற்கு வருவாயாக!, எ - று.

23. சுந்தரஞ்சேர் முத்துசுவாமி மால்கைத் தலமு
மந்தரஞ்சேர் மங்குலுமொப் பானதுவே—சந்ததமு
நன்றுபத முண்டாக்கி நாட்டிற்கலி யகல
வன்றுகன கம்பெய்ய லால்.

உரை :—சுந்தரஞ்சேர் முததுசாமிமால் - அழகிய முத்துசாமிப் பெரியோனுடைய, கைததலமும் - கையும், அந்தரம சேர மஙகுலும் - ஆகாயத்தி லுள்ள மழை மேகமும், ஒப்பானதுவே - சமமானவை, சந்ததமும் - எப்போதும், நன்று பதமுண்டாக்கி நாட்டிற் கலியகல - நல்ல சோற்றுக்குரிய பயிரை விளைவித்து நாட்டில் வறுமை நீஙகும்படியாக, அன்று கனகம் பெய்யலால் - மழை மிகுந்த நீரைப் பெய்தலாலும் முத்துசாமி வள்ளல் நல்ல உணவைக் கொடுத்துப் பொன்னையும் பரிசாக அளித்தலாலுமென்க, எ - று.

24. பலசரக்குப் பையெடுத்தான் வேள்ராய புரியாள்
பயந்தேனென் றுளரிசி வசம்போவென் றழுதாண்
மலர்சூடன் சாம்பிராணி யானேனென் றுணீ
வரக்காண மென்றழுதி துவலரையெதிர் பார்த்தா

ளலைகடலை லைகின்ற ளென்னமா யக்கா
யான்பிழைப்பே னென்றாள்பேச் சுக்குமதி மதுரா
கலமுத்து சாமிசீ ரகமிளகன் பாக்கு
கடுகவா விதில்வெகு சகாயமுண்டு குணமே.

உரை:—வேள் பல சரக்குப்பை யெடுத்தான் - மன்மதன் பல அம்புக் குவியலை யெடுத்து விடுத்தான், ராய புரியாள் - இராயபுரியென்னும் பதியிலுள்ள பெண், பயந்தேனென்றாள் அஞ்சினேனென்று சொன்னாள், அரிசிவ சம்போ என்று அழுதாள் - .., மலா சூடன் - பூச்சூடமாட்டேன், சாம்பிராணி யானேனென்றாள் - இறக்கின்ற பிராணியாக வாகிவிட்டேனென்றாள், நீ வரக்காணம் என்று அழுது இதுவரை எதிர் பார்த்தாள் - நீ வரவில்லை என்று அழுது துன்பப்பட்டு இந்நேரம் வரைத்துன்பப்பட்டு எதிர் பார்த்திருந்தாள், அலைகடலை லைகின்றாள் - அலையுடைய கடலை யேசுகின்றாள், என்னமாய் அக்கா நான் பிழைப்பேனென்றாள் - எப்படி அக்காளே நான் உயிர்வாழ முடியுமென்றாள், பேச்சுக்கு அதிமதுர - பேச்சுக்கும் அதிக இனிமையான, அகல முத்துசாமி - (அழகிய) மார்பினையுடைய முத்துசாமி வள்ளல், சீா அகம் - சிறந்த உள்ளமானது, இளகி அன்பு ஆக்கு - இளகி யெனக்கு அன்பாயிருக்கும்படி செய் என்றாள் ஆதலால், கடுகவா - விரைவாக வந்துசேர், இதில் வெகு சகாயம் உண்டு - அதில் மிகுந்த சகாயம் உண்டு, குணமே - நன்மையே, எ - று.

25. அன்னமுமவேம்பாகுமவெறுத்தழுதுகமுகுரலா
யங்கல்லததியிலேறுங் கரும்பனைக்கண்டுடையுஞ்
சின்னமாதென்னைவிட்டாள் பொய்யிலவமபலவே
செல்வாகையிலுப்பைவைததுச் சொல்வேன்சத்தியமாய்
வன்னமலர்கொய்யாது ஞவலுற்றாள்புலிபோல்
வருமவாதமடக்கியந்தக் கருவேலமின்னைப்
புன்னையாதகததியம் வாமுததுசுவாமியெனும
பூவரசேராஜவல்லி புரத்தரசேயிரங்கே.

உரை:—முத்துசாமி யெனும் பூவரசே - முத்துசாமி பூபதியே !, ராஜவல்லிப் புரததரசே - இராஜவல்லி புரததிற்றோன்றிய மன்னனே !, சின்னமாது - சிறு பெண்ணானவள், அன்னமும் வேமபாகும் - என் கன்னிககுச் சோறும வேப்பிலைபோலக் கசப்பாகும வெறுதது அழுது - ... .., கமுகுரலால்-கமழுகின்ற ஒலி யுடையவளாய, அம - அழகு, அல் அத்தி - இருளாகிய யானையின்மீது, ஏறும கரும்பனைக் கணடு உடையும் - ஏறி வருகின்ற மனமதனைப் பாரதது உடைகின்றாள், என்னை விட்டாள் - என்னை புன்பால தூதாக விடுத்தாள, பொயயில - இது பொயயல்ல, வம்பு அலவே - வீணான காரியமும் அல்ல, செல்வா - செல்வனே!,

கையில் உப்பை வைத்துச் சொல்வேன் சத்தியமாய் - ......, வன்னமலர் கொய்யாது உன் ஆவல் உற்றாள் - பல நிறமான பூக்களைக் கொய்யாமல் உன்மீது மோக மடைந்தாள், புலிபோல் வரும் வாதமடக்கி - புலிபோல் வருகின்ற தென்றலை யடக்கி, கருவேல மின்னைபுல் - கருவூலம்போன்ற அந்தப் பெண்ணைத் தழுவுவாயாக, நையாது அகத்தியம் வா - அவள் வருந்தாதபடி நீ கட்டாயம் வருவாயாக !, இரங்கே - இரக்கம் வைப்பா யாக !, எ - று.

அம்மான் மகன் மருமகன் என்று பாடியது

26 சூன்சொலக் கூடாத சொரூபா தனக்கீடு
தான்சொலக் கூடாத முத்துசாமிமன்னா—நான்சொலக்கேள்
செமமான் மழுவேந்துஞ் செங்கைச் சிவனுருக்
கம்மான் மகன்மரு மகன்.

உரை:—சூன் சொலக்கூடாத சொரூபா - குற்றங் கூறமுடியாத வடிவ முடையவனே !, தனக்கீடுதான் சொலக்கூடாத முத்துசாமி மன்னா- தனக்கு ஒப்பாக யாவரையுஞ் சொல்லமுடியாத முத்துசாமி மன்னனே !, நான் சொலக்கேள் - ......, செம்மான் மழுவேந்தும் செங்கைச் சிவனு ருக்கு - செம்மையான மானையும் மழுவையும் தனது திருக்கரத்தில் வைத் திருக்கிற சிவபெருமானுக்கு, அம்மான் மகன் மருமகன் - அந்தத் திருமாலி னுடைய மகனாகிய மன்மதன் அல்லது பிரமன் (மைத்துனர் மகனாதலின) மருமகனுவான, எ - று.

அடைமொழிகளின்றிப் பாடியது

27. சக்கரவா கங்கிளியாந் தைநாரை யன்னங்க
ரிக்குருவி கௌதாரி காடையன்றில்—கொக்கு
குயில்கருடன் காக்கைபுறு கோழியிரா சாளி
மயில்கழுகு கோட்டானவெள வால்.

உரை :—இதற்குப் பொருள் வெளிப்படை, எ - று.

---

# பொய்கை யாழ்வார்

## பாடியது



அரனையும் அரியையும் ஒன்றுபடுத்திப் பாடியது

1. *அரனா ரணநாம மாவிடைபுள் ளூர்தி
உரைநூன் மறையுறையுங் கோயில்—வரைநீர்
கருமமழிப்பளிப்புக் கைமழுவே நேமி
உருவமெரி கார்மேனி யொன்று.*

உரை :—அரன் நாரணன் நாமம் - அரன் நாராயண னென்பது பெயர்களாம், மா விடை புள் ஊர்தி - பெரிய காளையும் கருடனும் வாகனங்கள், உரை நூனமறை - திருவாக்கு ஆகமமும் வேதமுமாகும், உறையும் கோயில் வரை நீர் - தங்குமிடம் கைலையும் பாற்கடலுமாகும், கருமம் அழிப்பு அளிப்பு - தொழில் அழித்தலும் காத்தலுமாகும், கை மழுவே நேமி - கையிலுள்ள ஆயுதங்கள் மழுவும் சக்கரமுமாகும், உருவம் எரி கார் மேனி யொன்று - வடிவம் நெருப்பு நிறமும் கருப்பு நிறமுங் கூடிய ஒன்று, எ - று.

2. *பொன்றிகழு மேனிப் புரிசடையெம் புண்ணியனும்
நின்றுலகந் தாய நெடுமாலும்—என்னும்
இருவரங்கத் தாற்றிரிவரேனு மொருவன்
ஒருவரங்கத் தென்று முளன்.*

உரை :—பொன் திகழும் மேனி புரிசடையன் புண்ணியனும் - பொன் போல விளங்கும் உடம்பையும் பின்னிய சடையையுமுடைய எமது புண்ணிய மூர்த்தியாகிய சிவனும், நின்று உலகம் தாய நெடுமாலும் - உலகத்தைப் பெருவடிவாய் நின்று கடந்த நெடிய மேனியுடைய திருமாலும், என்னும் இருவர் அங்கத்தால் பிரிவரேனும் - ஆய இருவரும் உடம்பினாலே வேறுபட்டிருந்தாலும், ஒருவன் ஒருவர் அங்கத்து என்று முளன் - ஒருவர் மற்றொருவருடைய திருமேனியில் எப்பொழுது மிருக்கிறார், எ - று.



# பூதத்தாழ்வார்

## பாடியது

1. அவன்கண்டாய் நன்னெஞ்சே யாரருளுங் கேடும
அவன்கண்டா யைம்புலனாய் நின்றான்—அவன்கண்டாய்
காற்றுநீர் வானங் கருவரைமண் காரோதம
சீற்றத்தீ யாவானுஞ் சென்று.

உரை :—நல் நெஞ்சே - நல்ல மனமே!, அவன் கண்டாய் ஆர் அருளும் கேடும் - நிறைந்த அருளாகிய நன்மையும் தீங்கும் ஆகிய இரண்டுக்கும் அவனே காரண னென்றறி, அவன் கண்டாய் ஐம்புலனாய் நின்றான் - ஐம்பொறி யறிவோடு கலந்து நிற்பவனும் அவனே என்றறிக, சென்று - வியாபகமாய், காற்று நீர வானம் கருவரைமண் காரோதம் சீற்றதீ - காற்றும் நீரும் வானமும் கரிய மலை நில முதலியனவுங் கருங்கடலும் கோபித் தெரிகின்ற தீயும், ஆவானும் அவன் கண்டாய் - ஆனவனும் அவனே என்று அறிக, எ - று.

---

# பேயாழ்வார்

## பாடியது

1. தாழ்சடையுநீ ண்முடியு மொண்மழுவுஞ் சக்கரமுஞ்
சூழரவும் பொன்னாணுந் தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பாயுந் திருமலைமே லெந்தைக்
கிரண்டுருவு மொன்றா யிசைந்து.

உரை :—சூழும் திரண்டருவி பாயும் திருமலைமேல் - சுற்றியுள்ள திரட்சியான அருவிகள் குதிததோடும் திருப்பதி மலைமேலே வீற்றிருக்கும், எந்தைக்கு - எனது தநதையாகிய திருமாலுககு இரண்டுருவம் ஒன்றா யிசைந்து - இரணடு வடிவமும் ஒன்றாயச சேர்ந்து, தாழ் சடையும் நீள் முடியும் - தாழ்ந்த சடையும நீண்ட முடியும், பொன் மழுவும் சக்கரமும் - ஒளியுள்ள மழுவாயுதமும் சக்காராயுதமும், சூழ் அரவும பொன்னாணும் - இடுப்பைச் சுற்றியுள்ள பாம்பும் பொன்னாலாகிய அரைஞாணும், தோன்றும் - விளங்கும், ஆல் - அசை, எ - று.

---

# திருமழிசையாழ்வார்

## பாடியது

1. தேவராய் நிற்குமத் தேவுமத் தேவரின்
மூவரா நிற்கு முதுபுணர்ப்பும்—யாவராய்
நிற்கின்ற வெல்லா நெடுமாலென் றோராதார்
கற்கின்ற வெல்லாங் கடை.

உரை :—தேவராய் நிற்கும் அத்தேவும் - பல தேவர்களாய் நிற்கின்ற ஒரு பெரிய தெய்வமும், அத்தேவரின் மூவராய் நிற்கும் முது புணர்ப்பும் - அப்படிப்பட்ட பல தேவர்களுள் தலைமையான மும்மூர்த்திகளாய் நிற்கும் சம்பந்தமுடைய ஆதிகடவுளும், யாவராய் நிற்கின்ற எல்லாம் - பிற எவராயும் நிலவுகின்ற எல்லாப் பொருளும், நெடுமால என்று ஓராதார் - பெரிய திருமாலென்று அறியாதவர்கள், கற்கின்ற எல்லாம் கடை - படிக்கின்ற எல்லா படிப்பும் கடைப்பட்டதாகும், எ - று.

---

# ஔவையார்

## பாடியது

அதிகமான் அருமையாய்க் கொடுத்த நெல்லிக்கனிக்காகக் கூறியது

1. பூங்கமல வாவிசூழ் புல்வேளூர்ப் பூதனையும
ஆங்குவரு பாற்பெண்ணை யாற்றினையு—மீங்கே
மறப்பித்தாய் வாழதிகா வன்கூற்றி னாவை
யறுப்பித்தா யாமலகந் தந்து.

உரை :—வாழ் அதிகா - நன்றாக வாழ்கின்ற அதிகமானே!, பூங்கமல வாவி சூழ் புள்வேளூர் பூதனையும் - அழகிய தாமரைகள் பூத்த பொய்கைகள் சூழ்ந்த புள்வேளூரிலுள்ள பூதனென்னும் வள்ளலையும், ஆங்கு வருபால் பெண்ணையாற்றினையும்-அதற்கு அருகிலே வந்த பாலோடுகூடிய பெண்ணையாற்றையும், ஆமலகம் தந்து - நெல்லிக்கனியைக் கொடுத்து, ஈங்கே மறப்பித்தாய் - இந்தவிடத்திலே மறக்கசெய்தாய், வன் கூற்றின் நாவை அறுப்பிததாய் - வலிய எமனுடைய நாவை யறுக்கும்படி செய்தாய் (என் மீது எமன் தூதரை யேவாமலிருக்கும்படிச செய்தாய், எ - று.

திருக்குடந்தையில் ஈகையுடையவனைப் புகழ்ந்தும்
உலோபமுடையவனை யிகழ்ந்தும் பாடியது

2. திருத்தங்கி தன்வாழை தேம்பழுத்து நிற்கும்
மருத்தன் றிருக்குடந்தை வாழை—குருத்தும்
இலையுமிலை பூவுமிலை காயுமிலை யென்றும
உலகில் வரும்விருந்தோ டுண்டு.

உரை :—திருக்குடந்தை - கும்பகோணத் திருப்பதியில், திருத்தங்கி தன் வாழை - திருத்தஙகி யென்பவனுடைய வாழை, என்றும் உலகில் வரும் இனத்தோடு உண்டு - எப்போதும் உலகத்தில் அவன் வீட்டுக்கு வருகின்ற விருந்தாளிகளுடனே உணவு கொணடு, தேம்பழுத்து நிற்கும்- இனிமையாகக கனிந்து நிற்கும், மருததன் வாழை - உலோபியாகிய மருத்தனுடைய வாழைக்கு, குருத்தும் இலையும் இல - இளந் தளிரும் பெரிய இலையும் இல்லை, பூவும் இல காயும் இல - வாழைப்பூவும் இல்லை காயும் இல்லை, எ - று.

ஏழிற் கோமீது பாடிய வங்கதம்

3. இருடீர் மணிவிளக்கத் தேழிலார் கோவே
குருடேயு மன்றுநின் குற்றம்—பொருடேறும்
பாட்டு முரையும் பயிலா தனவிரண்
டோட்டைச் செவியு முள.

உரை :—இருள் தீர மணி விளக்கத்து எழிலார் கோவே - இருளை நீக்குகின்ற விரததினங்களின் ஒலியுடைய எழில் ஊருக்குத் தலைவனே !, குருடு எயும் அன்று நின் குற்றம் - உன்னுடைய குற்றம குருடாய் இருப் பது மாததிரமல்ல, பொருள் தேறும் பாட்டும் உரையும் பயிலாதன - பொருளை யாராயந்தறியககூடிய பாட்டும் வசனமும கேட்டுத் தங்கப் பெறுதனவாகிய, இரண்டு ஓட்டைச செவியும் உள - இரண்டு பயனற்ற காதுகளையும் நீ உடையாய், எ - று.

தத்துவங் கூறியது

4. ஒன்றுகக் காண்பதே காட்சி புலனைந்தும்
வென்றான் றன் வீரமே வீரமற்—றொன்றுனும
சாகாமற் கற்பதே வித்தை தனைப்பிறர்
ஏவாம லுண்பதே யூண்.

உரை :—ஒன்றாகக் காண்பதே காட்சி - ஒரு பொருளாகிய கடவுளை யெங்கும கலந்திருபபதாகப் பார்ப்பதே அறிவாகும, புலனைந்தும் வென்றான் தன் வீரமே வீரம - ஐம்பொறி யறிவையும் அடக்கி வென்றவனுடைய

ஆண்மையே ஆண்மையாகும், மற்றொன்றானும் சாகாமற் கற்பதே வித்தை- ஒரு பொருளாலும் மரண மேற்படாதபடி கற்கின்ற கல்வியே சிறந்த கல்வியாகும், தனைப் பிறா ஏவாமல் உணபதே ஊண் - தன்னைப் பிறர் ஏவாதபடி (சுயாதீனமாக) வாழ்ந்து உண்ணும் உணவே சிறந்ததாகும், எ - று.

உழவுக்குறிய நன்மைகளை யுரைத்தது

5. எருமிரண்டுளதா யில்லத்தே வித்துளதாய்
நீரருகே சேர்ந்த நிலமுமாய்—ஊருக்குச்
சென்றுவர வண்மையதாய்ச் செய்வாருஞ் சொற்கேட்டால்
என்று முழவே யினிது.

உரை:— எரும் இரண்டு உளதாய்-கலப்பை ஒன்று போனல் மற்றொன்று பயன்படுமபடியாக இரண்டிருக்க வேண்டும், இல்லததே வித்துளதாய் - விதைத்தற்குரிய நெல் வீட்டிலே இருத்தலவேண்டும், நீர அருகே சேர்ந்த நிலமுமாய் - தண்ணீருககுப் பக்கததிலே வயலிருக்க வேண்டும், ஊருக்குச சென்றுவர அணமையதாய் - வசிககும் ஊருககு அருகில் எளிதாய்ப் போய் வரக் கூடியதாக நிலமிருக்க வேணடும, செயவாரும் சொல் கேட்டால் - வேலையாட்களும் நமது சொல்லினபடி கீழ்ப்படிந்து நடக்கவேண்டும், என்றும் உழவே இனிது - (அப்படி இருநதால) எந்நாளும் உழவுத் தொழிலே நன்மையாகும, எ - று.

---

# பொய்யாமொழிப் புலவர்

## பாடியது

பாண்டியன் நீரே உயர்ந்த புலவர் என்றபோது பாடியது

1. அறமுரைத் தானும் புலவன்முப் பாலின்
றிறமுரைத் தானும புலவன்—குறுமுனி
தானும புலவன் றரணி பொறுக்குமோ
யானும புலவ னெனில்.

உரை:— அறம் உரைத்தானும் புலவன் - தருமங்களை வகுத்துரைத்த பிரமன் புலவனாவான், முப்பாலின் திறமுரைததானும் புலவன் - அறம் பொருள் இன்பமென்னும் மூன்று உறுதிப்பொருளின் தன்மையை யுரைதத திருவள்ளுவர் புலவராவர், குறு முனிவன் தானும் புலவன் -

அகத்தியரும் புலவர், யானும் புலவன் எனில் தரணி பொறுக்குமோ - (அவ்வளவு பெரியவர்கள் புலவர்கள் ஆனால்) என்னையும் புலவன் என்று கூறினால் பூமிதேவி பொறுப்பாளா ?, எ - று.

---

# கம்பர்

## பாடியது

### காவிரி எச்சினீரெனப் பாடியது

1. மெய்கழுவி வந்து விருந்துண்டு மீளுமவர்
கைகழுவு நீர்போலுங் காவிரியே—பொய்கழுவும்
போர்வேள் சடையன் புதுவையான் றன்புகழை
யார்போற்ற வல்லா ரறிந்து.

உரை:—மெய் கழுவிவந்து விருந்துண்டு மீளுவர் - (சடையப்ப வள்ளல் வீட்டில்) விருந்தாக வந்து புகிய உணவையுண்டு திரும்புகின்றவர்கள் தங்கள் எசசிற் கையைக் கழுவியது காவிரி நீரைப்போலப் பெருகியது, பொய் கழுவும் போர்வேள் - பொய்மை யொழித்தது சண்டை செய்யும் மன்மதன்போன்ற, புதுவையின் சடையன் தன் புகழை - புதுவையில் வசிக்கும் சடையப்ப வள்ளலின் கீர்த்தியை, அறிந்து யார் போற்ற வல்லார் - அருமை யறிந்து முற்றினும் புகழ்ந்து கூற வல்லவர்கள் யார?, எ - று.

### திருவொற்றியூரிற் கண்ட தாசியை வியந்து கூறியது

2. இல்லென்பார் தாமவரை யாமவர்தம் பேரறியோம
பல்லென்று செவ்வாமபன் முல்லையும் பாரிதது
கொல்லென்று காமனையுங் கண்காட்டிக் கோபுரக்கீழ்
நில்லென்று போனரென் னெஞ்சைவிட்டுப் போகாரே.

உரை:—இல்லென்பார் தாமரை - வீட்டுக்குப் போய் வருவதாகச் சொல்லிப் போன மாதரை, யாம் அவர் தம் பேர் அறியோம் - அவர் இன்ன பெயருடையவரென்று நாமறிய மாட்டோம், பல்லென்று செல்வாம் பல்முல்லையும் பாரித்து - செவ்வல்லி மலரோடு சேர்ந்த முல்லைப் பூவின் வரிசைபோல உதட்டினிடையே தோன்றும் பல்லையும் திறந்து நகைத்துக் காட்டி, கொல்லென்று காமனையும் கண் காட்டி - கொன்றாற் போல வருத்தும்படியாக மன்மதனுக்கும் கண்ணினால் சாடைகாட்டி, கோபுரக்கீழ் நில்லென்று போனார் - கோபுரத்தின் கீழே என்னை நிற்கும்

படியாகச்சொல்லி விட்டுப் போன அம்மாதர், என் நெஞ்சை விட்டுப் போகாரே - என் மனத்தைவிட்டு அகல்வதில்லை, எ - று.

விரகத்திறைல் கூடிய தாசியின் பொருத்த
மின்மையைக் குறிப்பித்தது

3 சொல்லியைச் சொல்லினமுதான செல்வியைச் சொற்கரும்பின்
வில்லியை மோக விடாய்தவிர்ப் பாளை விழியம்பினற்
கொல்லியைக் கொல்லியம் பாவையொப்பாளைக் குளிரொற்றியூர்
வல்லியைப் புல்லிய கைக்கோவிவர்வந்து வாய்ப்பதுவே.

உரை :—சொல்லியை - பேசசில் வல்லவளை, சொல்லினமுதான செல்வியை - சொல்லிலமுதம்போன்ற தன்மையுடைய பொருளாட்டியை, சொற் கரும்பின் வில்லியை மோகவிடாய் தவிர்ப்பாளை - புகழப்படுகின்ற, கரும்பு வில்லையுடைய மன்மதனது வேட்கைத் தாகத்தைத் தணிக்க வல்லவளை, விழியம்பினல் கொல்லியை - கண்ணுகிய அம்பினல் வருத்து கின்றவளை, கொல்லியம்பாவை யொப்பாளை - கொல்லி மலையிலுள்ள தெய்வப் பாவை போன்ற அழகுடையவளை, குளிர் ஒற்றியூர் வல்லியைப் புல்லிய கைக்கோ - ஒற்றியூரிலுறையும் குளிர்ந்த கொடி போன்றவளாகிய மாதைத் தழுவிய என் கைகளுககோ, இவர் வந்து வாய்ப்பதுவே - இந்த மோசமான உடம்புடைய பெண்ணைவள் வந்து பொருந்த நேர்ந்தது, எ - று.

இராமாயணம் எழுதியபோது பந்தம் பிடிக்கப் பாடியது

4. ஒற்றியூர் காக்க வுறைகின்ற காளியே
வெற்றியூர்க் காகுததன மெய்ச்சரிதை—பற்றியே
நந்தா தெழுதற்கு நல்லிரவின் மாணுக்கர்
பிந்தாமற் பந்தம் பிடி.

உரை :—ஒற்றியூர் காக்க உறைகின்ற காளியே - திருவொற்றியூருக் குப் பாதுகாப்பாகவுள்ள கிராம தேவதையே !, வெற்றியூர் காகுத்தன் - ஜெயத்தை மேற் கொண்ட காகுத்தன் வமிசததில் வந்த இராமனது, மெய்சசரிதை பற்றியே நந்தாது எழுதுதற்கு - உண்மையான வரலாற்றைத் தொடாந்து செவவையாக ஏட்டில் எழுதுவதற்கு, நல்லிரவில் - நடுராத் திரியில், மாணுககர் பிநதாமல் பந்தம் பிடி - ஏடெழுதும் சீடர்கள் ஒளிக குறைவுபற்றிப் பின் வாஙகாதபடி தீப்பந்தத்தை வாய்ப்பாகப் பிடிப்பா யாக, எ - று.

தானிறக்கும்போது கூறியது

5. ஆன்பாலுந் தேனு மரம்பைமுதன் முக்கனியும்
தேம்பாய வுண்டு தெவிட்டுமனந்—தீம்பாய்
மறக்குமா வெண்ணெய் வருசடையா கம்பன்
இறக்கும போதாயு மினி.

உரை :—வெண்ணெய் வரு சடையா - திருவெண்ணெய் நல்லூரில் வந்து தங்கிய சடையப்ப வள்ளலே!, ஆன்பாலும் தேனும் - பசுவின பாலையும் தேனையும், அரம்பை முதல முககனியும் - வாழைப்பழம் முதலிய மூன்றுவகைக் கனிகளையும், தேம்பாய உணடு தெவிட்டு மனம் - இனிமை தரும்படியாக அருந்தி அதனல மிகுந்த திருப்தியடைந்த மனமானது, கமபன இறக்குமபோதாயும இனி - கம்பனாது மரணததருவாயிலுஙகூட, தீமபாய் மறககுமா - தவறாக அதனை மறத்தல் கூடுமா, எ - று.

---

# அந்தகக்கவி வீரராகவ முதலியார்

## பாடியது

ஈழநாட்டரசனைக் காணப் போனபோது அவன் திரையிட்டிருந்ததைப் பற்றிக் கூறியது

1. நரைக்கோட் டிளங்கன்று நல்வளநாடு நயந்தளிப்பன்
விரையூட்டு தார்புயன் வெற்பீழமன்னனென் றேவிரும்பிக்
கரையோட்டமீதின் மரக்கலம போட்டுன்னைக் காணவந்தால்
திரைபோட்டு நீயிருந்தாய் சிங்கபூப சிரோமணியே.

உரை :—சிங்க பூப சிரோமணியே - சிங்கம் போன்ற அரசர தலைமணியா யுள்ளவனே!, விரை யூட்டு தார் புயல் வெற்பு ஈழமன்னன - வாசனை கலந்த மாலைதரிதத தோளகளாகிய மலைகளையுடைய ஈழ மண்டலதது வேந்தன, நரைகோட்டு இளஙகன்றும் நல்வளநாடும் - வெணமையான கொமபையுடைய இளைய பசுஙகனறுகளையும் செழிப்பான நல்ல ஊரையும், நயாதளிப்பன என்றே விரும்பி - விரும்பித தருவானென்று ஆசைப்பட்டு, கரையோட்டமீதில் - கரைககுச செலுததககூடிய கடல் வழியிலே, மரககலம் போட்டு உனனைக காண வந்தால - கப்பலேறி யுனனைப் பார்ப்பதற்கு வந்தால், திரைபோட்டு நீ இருந்தாய் - திரையிட்டு உன்னை மறைததுககொணடு நீயேனிருந்தாய், எ - று.

## ஒரு தலைவியின் அழகை வியந்தது

2. வண்டோ விழிநுதல் வான்பிறையோவல்குன் மான்குளம்போ
செண்டோ முலைநித் திலமோநகையிடை சேர்துடிகற்
கண்டோ மொழிகுழல் காரோமுகங்கம லம்பவளத் [கே.
துண்டோ விதழ்கன்னித் தண்டோதொடையிந்தத் தோகையற்

உரை :—இந்தத் தோகையற்கே - இந்தப் பெண்ணுக்கு, விழி வண்டோ - கண்ணானது வண்டென்று சொல்லும்படியாக விருக்கின்றது, நுதல்வான் பிறையோ-நெற்றியானது ஆகாயத்திலுள்ள இளஞ் சந்திரனோ எனவும், அல்குல் மான் குளம்போ-அரை முன்பக்கமானது மான்குளம்போ எனவும், முலை செண்டோ - தனங்கள் செண்டுகள் போலவும், நகை நித்திலமோ - பல்லானது முத்துப்போலவும், இடை சேர்துடியோ - இடையானது பொருத்தமான உடுக்குப்போலவும், கண்டோ மொழி - வார்த்தையானது கற்கண்டு போலவும், குழல் காரோ - கூந்தல் மேகம்போலவும், முகம் கமலம் - முகம் தாமரைப்பூ போலவும், இதழ் பவளத் துண்டோ- இதழ்கள் பவளத் துணுக்குப் போலவும் உள்ளன, எ - று.

## ஒருத்தி கண்ணை வியந்தது

3. ஆலங்குடியர்சங் கஞ்செறியகதரஞ் சக்கரர்பொன்
மேலம்பரத்தினர் நாகமெடுத்தவர் மேவிடையர்
சூலக்கண் மெய்யினர் பார்வதிகோன்மதி தோய்சடையர் [கே.
பாலன்கைக் கோற்படைக் கூர்மைக்கண்ணுமிந்தப் பைந்தொடிக்

உரை :—இந்தப் பைந்தொடிக்கு - புதிய வளையலணிந்த இப் பெண்ணுக்கு, ஆலங் குடியர் - விடத்தைப் பானஞ் செய்தவரும், சங்கஞ் செறியத்தர் - இடப்பாகத்தில் சங்கை வளையலணிந்த கையை யுடையவரும், அஞ்சகரர் - ஐந்தெழுத்தை மந்திரமாகவுடையவரும், பொன் மேலம்பரத்தினர் - அழகிய உயர்ந்த சிற்சபையில் நடித்தவரும், நாகம் எடுத்தவர் - பாம்பை யணிந்தவரும், மேவிடையார் - காளை வாகனத்தை யுடையவரும், சூலக் கண் மெய்யினர் - சூலமும் நெற்றிக்கண்ணுமுடைய திருமேனியை யுடையவரும், பார்வதிகோன் - உமாபதியும், மதி தோய் சடையர் - சந்திரனைத் தரித்த சடையை யுடையவருமாகிய சிவபெருமானுடைய, பாலன் - மகனாகிய முருகக் கடவுளின், கைக்கோர் படை - திருக்கரத்திலுள்ள வேலாயுதம்போலக், கூர்மைக் கண்ணும் - கண்ணானது கூர்மை யுடையதாகும், எ - று.

## முருகனை வேண்டல்

4. ஆமாவிகழ்ந்திட லாமாவெனையுனை யன்றிவினை
போமாவுனைவிட்டுப் போமாவெனக்கிந்தப் புன்மைவர
லாமாபராமுக மாமாபுயத்தி லணிகடப்பந்
தாமாகுகனெனு நாமாவயிற்கரச் சண்முகனே.

உரை:—புயத்தில் அணிகடப்பந் தாமா - தோளி லணிந்த கடப்ப மாலையை யுடையவனே !, குகனெனும் நாமா - இருதய குகையிலுள்ள குகன் என்னும் திருப்பெயரை யுடையவனே !, அயில் கரச சண்முகனே - வேலைக் கையிலேந்திய ஆறுமுகப் பெருமானே !, எனை இகழ்ந்திடலாமா ஆமா - அடியேனை இழிவாக நினைத்தல் உன் பெருமைக்கு ஏற்றதா ! ஏற்றதா !!, வினை யுனையன்றிப் போமா - தீவினைப் பயனானது உன்னுடைய அருளில்லாமல் நீங்குமா ?, உனை விட்டுப் போமா - உன்னை நீங்கி நான் போதல் கூடுமோ ?, எனக்கு இந்தப் புன்மை வரலாமா - எனக்கிந்தத் தாழ்வு வருதல் கூடுமா ?, பராமுகம் ஆமா - நீ என்னைக் கவனியாதிருத்தல் தக்கதா, எ - று.

## வறுமைக்குரியவரைப் பற்றிக் கூறியது

5. கவிகற்றவர்க்குங் கணிகற்றவர்க்குங் கம்மாளருக்கும்
ஒவிகற்றவர்க்கு முபாத்திகளுக்கு முயர்ந்தமட்டும்
குவிவைக்கு மொட்டர்க்குங் கூத்தாடிகட்குங் குருக்களுக்கும
இவரெட்டுப் பேர்கட்கு நீங்காத தரித்திர மென்றைக்குமே.

உரை:—கவி கற்றவர்க்கும் - பாட்டு பாடத் தெரிந்தவர்களுக்கும்' கணி கற்றவர்க்கும் - சோதிடம் கணிக்கத் தெரிந்தவர்களுக்கும், கம்மாளருக்கும் - தட்டார் வேலை செய்பவர்களுக்கும், ஒவி கற்றவர்கும் - ஓவியம் எழுதத் தெரிந்தவர்களுக்கும், உபாத்திகளுக்கும் - போதகாகளுக்கும், உயர்ந்த மட்டும் குவிவைகும் ஒட்டருக்கும் - உயரமான அளவு சுவர் வைக்கின்ற தொழிலையுடைய ஒட்டசசாதியினருக்கும், கூத்தாடிகட்கும் - ......, குருக்களுக்கும் - ஆசாரியர் தொழில் செய்கின்றவர்களுக்கும், இவரெட்டுப் பேர்கட்கும் - ஆகிய இந்த எட்டு வகையார்க்கும், நீஙகா தரித்திரம் என்றைக்குமே - வறுமை எப்போதும் ஒழியாது, எ - று.

## ஸ்ரீராமர் துதி

6. தனங்கடந் தானைகள் யாவையும் வெல்லுஞ் சரநயன
அனங்கடந் தானை நடைசொல் லிடைமுலை யாளுடனே
வனங்கடந் தானைநல் லாழ்வார்கள் பன்னிரு வர்க்குமிகக்
கனங்கடந் தானைத் துதிநெஞ்ச மேநற் கதிபெறவே.

உரை:—தனங்கள் தானைகள் யாவரையும் வெல்லும் சர நயன - பொருள்கள் படைகள் ஆகிய எல்லாவற்றையுஞ் செயிக்கின்ற அம்பு போன்ற கண்ணையும், அன்னம் நடை - அன்னம்போன்ற நடையையும், கள் சொல் - தேன்போன்ற மொழியையும் தந்து இடை - நூலிழை போன்ற இடையையும், ஆனை முலையாளுடனே - ஆனைபோன்ற தனங்களையுமுடைய சீதாபிராட்டியுடனே, வனம் கடந்தானை - காட்டைக் கடந்து சென்ற இராமபிரானை, நல் ஆழ்வார்கள் பன்னிருவர்க்கும் மிகக் கனங்கள் தந்தானை - சிறந்த பன்னிரண்டு ஆழ்வார்களுக்கும் மிகுந்த பெருமைகளை யளித்தவனை, நற்கதி பெறவே - நல்ல நிலைமை யடைதற்கு, நெஞ்சமே துதி - மனமே வாழ்த்துவாயாக !, எ - று.

ஸ்ரீ வில்லிபுத்தூரை இகழ்ந் துரைத்தது

7. வேசையரே மல்குமூர் வீதியிலார் வந்தாலும்
பேசிவலைவீசிப் பிடிக்குமூர்—ஆசைமயல்
பூட்டுமூர் கையிற் பொருள்பறித்தே யோடுகொடுத்
தோட்டுமூர் சீவிலிபுத் தூர்.

உரை:—வேசையரே மல்கும் ஊர் - விலைமகளே மிகுதியான வூரும், வீதியிலார் வந்தாலும் பேசி வலை வீசிப் பிடிக்கும் ஊர் - தெருவில யார் போனாலும் அவர்களிடம் வார்த்தையாடி விலை மகளிர் வலைவீசிப் பிடிப்பதுபோல அவர்களைப் பிடிக்கின்ற வூரும், ஆசை மயல் பூட்டும் ஊர் - வேட்கையாகிய மயக்கத்தை யுண்டாகுகின்ற வூரும், கையில் பொருள் பறித்தே யோடுகொடுத்து ஓட்டும் ஊர் - போகின்றவர்களுடைய கைப் பொருளைப் பறித்துக்கொண்டு அவர்கள் கையில் பிசசையெடுக்கும் திருவோட்டைக் கொடுத்து விரட்டும் ஊரும், ஸ்ரீ வில்லிபுதூர் - ஸ்ரீ வில்லிபுத்தூரேயாகும், எ - று.

விசையராயன் தன் பல்லக்கின்பின் வந்தபோது பாடியது

8. திருமாலு மீசனும் பின்போயுந் தூது செலத்துணிந்தும்
அருமா துரியத் தமிழ்வளர்த் தாரவ ரோடுபங்காய்
வருமா மறையவன் பேர்சாதித் தேமிக வண்டமிழ்க்குப்
பெருமான் சிவிகைப் பின்சென்றான் விசயப் பிரமனுமே.

உரை:—திருமாலும் ஈசனும் - அரியும் அரனும், பின்போயும் தூது செலத் துணிந்தும் - முறையே ஆழ்வார்க்குப் பின்னே சென்றும் சுந்தரர்க்குத் தூது போவதற்குத் துணிவுகொண்டும், அருமா துரிய தமிழ் வளர்த்தார் - அருமையான இனிய தமிழை வளர்த்தார்கள், அவரோடு பங்காய் வருமா மறையவன் பேர் சாதித்தே - அவரோடு பங்கு போட்டுத் தமிழை வளர்க்க வந்த அயனுடைய பேரை நிலைநிறுத்தி, மிக வண்

டமிழ்க்கு - மிக வளமான தமிழின் பொருட்டு, விசயப்பிரமனுமே - விசய ராயனென்னும் பெயருடைய அயன்போன்ற வள்ளல், பெருமான் சிவிகைப் பின்சென்றான் - நாவலர் பெருமானுடைய பல்லக்குக்குப் பின்னே போயினர், எ - று.

## பரராசசிங்கம் பொற்பந்த மளித்தபோது கூறியது

9. பொங்குமிடி யின்பந்தம் போயதே யென்கவிதைக்
கெங்கும விருதுபந்த மேற்றதே—குங்குமந்தோய்
வெற்பந்த மானபுய வீரபர ராசசிங்கம
பொற்பந்த மின்றளித்த போது.

உரை:—குங்குமந் தோய் வெற்பந்தமான - குங்குமக் குழம்பு சாத்தப் பெற்ற மலைபோன்ற அழகிய, புயவீர பரராசசிங்கம் - தோள்களையுடைய வீரனாகிய பரராசசிங்க மன்னன், இன்று பொற்பந்தம் அளித்தபோது - இந்நாளில் பொன் கட்டியை அல்லது பொன் முடிசசைப் பரிசாகத் தந்த போது, பொங்குமிடியின் பந்தம்போயதே - மிகுந்த தரித்திரத்தின கட்டுப் பாடு விலகியது, என் கவிதைக்கு எங்கும் விருது பந்தம் ஏற்றதே - என் பாட்டுக்கு எங்கும வெற்றி யடையாளங்கள் அமைதல் ஏற்பட்டது, எ - று.

## சந்திரவாணன்மீ துரைத்தது

10. மாலே நிகராகுஞ் சந்திர வாணன் வரையிடத்தே
பாலேரி பாயச்செந் தேன்மாரி பெய்யநற் பாகுகற்கண்
டாலே யெருவிட முப்பழச் சாற்றி னமுதவயன்
மேலே முளைத்த கரும்போ விம்மங்கைக்கு மெய்யெங்குமே.

உரை:—மாலே நிகராகும் சந்திரவாணன் மலையிடத்தே - திருமாலுக் கொப்பான சந்திரவாணனது மலையிடத்தில், பால் ஏரி பாய - பாலாகிய குளத்து நீர் பாயவும், செந்தேன் மாரி பெய்ய - செம்மையாகிய தேன் மழை பொழியவும், நற்பாகு கற்கண்டாலே எருவிட-நல்ல கருப்பஞ்சாறு கற்கண்டு முதலியவற்றை யுரமாகப் போடவும், முப்பழசசாற்றின் அமுத வயல் - வாழை பலா மா என்ற மூன்று வகைக் கனிகளாலாகிய அமுதம் விளையும் வயலில, மேலே முளைதத கரும்போ - மேலாகத் தோன்றிய கரும்புதானோ, இம் மங்கைக்கு மெய் எங்குமே - இநத மாதுக்கு உடம்பு முழுவது மென்க, எ - று.

## இலக்கண விளக்க நூலாசிரியராகிய வைத்தியநாத நாவலரைப் புகழ்ந்தது

11\. ஐம்பதின்மர் சங்கத்தா ராகிவிடா ரோநாற்பத்
தொன்பதின்ம ரென்றே யுரைப்பரோ—இமபர்புகழ்
வன்மீக நாதனருள் வைததியநா தன்புடவி
தன்மீதந் நாட்சரிததக் கால்.

உரை :—இம்பர் புகழ் வன்மீக நாதனருள் வைத்தியநாதன் - இவ்வுல கத்தார் புகழ்கின்ற புற்றிடங்கொண்ட பெருமான் அருளால் வந்த வைத்திய நாத நாவலர், புடவி தன்மீது அந்நாட் சரிதககால் - பூமியின்மீது அந்தக் காலத்தில் நிலவியிருப்பா ரென்றால், ஐம்பதின்மர் சஙகத்தார் ஆகி விடாரோ - (சஙகப் புலவர்கள் முன்னிருந்த நாற்பதடுதான்பதின்மரொடு இவருஞ் சேர்த்து) ஐம்பது பேர்கள் எனறு ஆகிவிடமாட்டார்களா, நாற் பததொன்பதின்ம ரென்றே யுரைப்பரோ - ........., எ - று.

## இடும்பா வனத்திற் பாடியது

12\. பசிமுடுக நோவதல்லாற் பாழ்வீட்டிற் பாழ்த்த
கொசுக்கடி யாலுங் குமைந்தோம்—இசையில்
நெடுமபாவம் யாஞ்செய்தா னீரென்ன செய்வீர்
இடும்பாவன நாதரே.

உரை :—இடும்பாவன நாதரே - இடும்பாவனத்தி லெழுந்தருளி யிருக் கும் சிவபெருமானே!, பசி முடுக - பசியானது தொந்தரவு செய்வதால், நோவதல்லால் - துன்பப்படுவதலலாமல், பாழ் வீட்டில் பாழ்தத கொசுக் கடியாலும் குமைந்தோம் - நாஙகள் தங்கியிருநத பாழடைந்த வீட்டில் கேவலமான கொசுப் பூசசியின உபததிரவததினாலும் குழைந்து வருந்தி னோம், இசையில் நெடும்பாவம் யாஞ்செயதால நீர் எனன செயவீர் - பொருததமில்லாத பெரிய பாவங்களை யாஙகள் செயதிருந்தால் நாஙகள் அவறறின் பயனை யனுபவிக்கவேண்டுமே யொழிய நீர் யாதுஞ் செய்ய முடியாது, எ - று.

## நாகதேவனிட்ட வுணவைக் குறித்துறைத்தது

13\. வாயிலொன்று கல்லுமொன்று நெல்லுமான வன்னமும
வாடலாக வாறுமாதம வைததிருந்த கததரிக்
காயிலிட்ட கறியுமுப்பி லாதகஞ்சி வனனமுங்
காம்பொடிந்த வோரகப்பை கைபபிடித்த வண்ணமும்

தூயதாகத் துலக்கலின்றி யழுக்கடைந்த பாத்திரந்
தூக்கியுள் ளசுத்தநீர் துறத்துவந்த நேர்த்தியும்
ஓயலின்றி யீக்கள்வீழ்ந்து மொலுமொலென்ற சட்டியு
முடன்கொணர்ந்த நாகதேவ னூண்மறப்ப தில்லையே.

உரை :—வாயிலொன்று கல்லுமொன்று நெல்லுமான அன்னமும் - வாயிலே ஒரு கல்லும் ஒரு நெல்லுமாகச் சமைத்த சோறும், வாடலாக ஆறு மாதம் வைத்திருந்த கத்திரிக்காயிலிட்ட கறியும் - வாடிப்போகும்படியாக ஆறுமாதங் காயப்போட்டிருந்த கத்தரிக்காய்கொண்டு செய்த பொரியலும், உப்பில்லாத கஞ்சி அன்னமும் - உப்புப்போடாத கஞ்சி நீரும், காம்பொடிந்த ஓர் அகப்பை கைப்பிடித்த வண்ணமும் - காம்பில்லாத அகப்பையினால் பரிமாறின விதமும், தூயதாகத் துலக்கலின்றி அழுக்கடைந்த பாத்திரம் - சுத்தமாக விளக்காமல் மாசடைந்த பாத்திரத்தில், தூக்கியுள்ள சுத்த நீர் துறத்துவந்த நேர்த்தியும் - எடுக்கப்பட்ட தண்ணீரானது அழுக்கோடு கலந்து வந்த அழகும், ஓயலின்றி யீக்கள்வந்து மொலுமொலென்ற சட்டியும் - ஓயாமல் ஈக்கள்வந்து ஒலி செய்கின்ற மண் பாத்திரமும், உடன் கொணர்ந்த நாகதேவன் ஊண் மறப்பது இல்லையே - இவற்றோடு கூடப் படைக்கப்பெற்ற நாகதேவனுடைய சாப்பாட்டை என்றும் மறக்க முடியாது, எ - று.

---

# பரராச சிங்கம்

## பாடியது

---

### அந்தகக்கவி வீரராகவ முதலியார் செய்த திருவாரூருலாவை வியந்து பாடியது

1. புவியோர் பெருந்திரு வாரூருலாவைப் புலவர்க்கெல்லாஞ்
செவியே சுவைபெறு மாறுசெய் தான்சிவ ஞானவநு
பவியே யெனுநங் கவிவீர ராகவன் பாடியகற்
கவியே கவியவ னல்லாத பேர்கவி கற்கவியே.

உரை :—புவியோர் பெறுந் திருவாரூர் உலாவைப் - பூவுலகத்திலுள்ளோர் பெறத்தக்கதாக வியற்றப்பட்ட திருவாரூர் உலாவென்னும் பிரபந்தத்தை, புலவர்க்கெலாம் செவியே சுவை பெறுமாறு செய்தான் - கற்றவர்களுக்கெல்லாம் செவிச்செல்வம் கிடைக்கும்படியாக இயற்றினவராகிய, சிவஞான அனுபவியே எனும் நம் கவி வீரராகவன் - சிவஞான அனுபவ

முடையவரென்று சொல்லத்தக்க நம்முடைய அந்தகக் கவி வீரராகவ முதலியார், பாடிய நற் கவியே கவி - பாடிய பாட்டே தக்க பாட்டாகும், அவன் அல்லாத பேர் கவி - அவனல்லாத பிறருடைய பாட்டானது, கல் கவியே - மனமுருகாத கல்லுப்போன்ற பாட்டாகும், எ - று.

தன்மீது கூறிய வண்ணங் கேட்டுப் புகழ்ந்துரைத்தது

2. விரகன் முத்தமிழ் வீரராகவன்
வரகவி மாலையை மதிக்கும் போதெல்லாம்
உரகனும் வாணனு மொப்பத் தோன்றினுற்
சிரகர கம்பிதஞ் செய்ய லாகுமே.

உரை:—விரகன் முத்தமிழ் வீரராகவன் - முத்தமிழில் அன்பும் அறிவும் சிறந்து விளங்கிய வீரராகவ முதலியாருடைய, வரகவி மாலையை - வரத்தா லியற்றப்பெற்ற பாமாலையை, மதிக்கும்போதெல்லாம் - நயங் காணும் பொழுதெல்லாம், உரகனும் வாணனும் ஒப்பத் தோன்றினுல் - ஆயிரந் தலையுடைய ஆதிசேடனும் இரண்டாயிரங் கை யுடைய வாணா சுரனும் ஒன்றாக ஒருங்குவந் திருப்பாராயினுல், சிரகரகம்பிதஞ் செய்யலாமே - தக்கபடி தலை யசைப்பும் கை முழக்கமும் ஏற்படுவதாகும், எ - று.

பரராச சிங்கமென்ற அரசனுடைய பத்தினியார் பாடியது

3. போத வழகன் கவிவீர ராகவன் போற்றுகவி
யோதையைக் கேட்டுக்கொண் டாடாத பேரில்லை யோங்குபுவி
மாதை யெடுக்கும் வலன்முடிச் சேட மகிபற்கன்றே
காதைவகுக்கிலன் வேதா சிரக்கம்பங் காண்பதற்கே.

உரை:—போத அழகன் கவி வீரராகவன் போற்றுகவி - அறிவாகிய அழகை யுடையவராகிய கவி வீரராகவ முதலியாருடைய பேணத் தக்கப் பாட்டு, ஓதையைக் கேட்டுக்கொண்டாடாத பேரில்லை - ஓசை நயத்தைக் கேட்டுப் பாராட்டாதவர்களில்லை, ஓங்கு புவிமாதை எடுக்கும் வலன்முடிச் சேட மகிற்கு அன்றே - பூமாதேவியைத் தலையிற் சுமக்கின்ற வல்லமை யுடைய ஆயிரம் முடியுடைய ஆதிசேட மன்னனுடைய, சிரக்கம்பம் காண்பதற்கு - தலை யசைப்பைப் பார்ப்பதற்கு, வேதாகாது வகுக்கிலன் - பிரமா (பாட்டைக் கேட்பதற்குரிய) செவியைப் படைக்க வில்லை, எ - று.

# கச்சியப்பர்

## பாடியது

---

### கவி வீரராகவ முதலியாரைப் புகழ்ந்தது

1. பொங்குதமி ழயோத்தியில்வாழ் தசரதனென்
   போனிடத்தும் பூதூர்வேந்தன்
 துங்கவடு கன்னிடத்தும வீரராகவரிருவர்
   தோன்றி னரால்
 அங்கொருவ னொருகலைமா னெய்திடப்போய்
   வசைபெற்ற னவனிபாலன்
 இங்கொருவன் பல்கலைமா னெய்திடப்போய்க்
   கவியினா லிசைபெற்றனே.

உரை :—பொங்கு தமிழ் அயோத்தியில் வாழ் தசரத னென்போன் இடத்தும் - இனிமை மிகுந்த அயோததியில் வாழ்ந்த தசரத சக்கரவர்த்தி யென்பவருக்கும், பூதூர் வேந்தன் துங்க வடுகன் இடத்தும் - பூதூருக்கு அதிபதியாகிய சிறந்த வடுகனாத முதலியா ரென்பவருக்கும், வீரராகவர் இருவர் தோன்றினா - வீரராகவர் என்ற இருவர் தோன்றினார்கள், அங்கு ஒருவன் ஒரு கலைமான் எயதிடப்போய் வசை பெற்றான் - அவர்களுள் தசரதன் புதல்வனாகிய ராகவன் ஒரு கலைமானை எய்து கொல்லப்போய்ப் பழிக்குக் காரணமாயினான், அவனி பாலன் - அவன் பூமியைக் காக்கின்ற அரசன், இஙகு ஒருவன் பல்கலைமான் எய்திடப்போய்க கவியினால் இசை பெற்றான் - இந்நாட்டில் மற்றொரு வீரராகவன் பல் வகையான கலைகளை மிகுதியாகப் பெற்றுப்போய்ப் புகழடைந்தான், ஆல் - அசை, எ - று.

### இதுவுமது

2. நாரேனும் பூவா ணாறுமணமா நின்கவிதை
 ஆரேனுங் கேட்கி லவர்க்குந் தமிழ்வருங்காண்
 போரேறே யெங்கும பொழியவருங் கல்விக்குக்
 காரே கடலே கவிவீர ராகவனே.

உரை: —போரேறே - கல்வி வாதத்திற் சிங்கம் போன்றவனே !, எங்கும் பொழியவரும் கல்விக்குக் காரே - எஙகும் கவி மழையைச் சொரிய வருகின்ற கல்வி மேகமே !, கடலே - கடல்போன்ற அறிவுடையவனே !, கவி வீரராகவனே - அந்தகக்கவி வீரராகவ முதலியாரே !, நாரேனும்

பூவால் நறுமணமாம் - பூவோடு கூடிய நார் நல்ல மணத்தை யடையும், நின கவிதை யாரேனும் கேட்கில் அவர்க்கும் தமிழ் வரும் - உன்னுடைய பாட்டை யார் கேட்டாலும் அவருககுத் தமிழ்ககல்வி தானே அமையும், காண் - அசை, எ - று.

# கயத்தாற்றரசன்

## பாடியது

### கவி வீரராகவ முதலியார் தேகவியோகங் கேட்டு வருந்தி யுரைத்தது

1. இன்னமுதப் பாமாரி யிவ்வுலகத் திற்பொழிந்து
பொன்னுலகி னும்பொழியப் போயதால்—மன்னும்
புவிவீர ராகமன்னர் பொன்முடிமேற் சூட்டுங்
கவிவீர ராகவமே கம.

உரை :—மன்னும் புவிவீரராகவ மன்னர் பொன் முடிமேல் சூட்டும் - நிலைபெற்ற இவ்வுலகில் வீரமுடைய இராமனைப் போன்ற அரசர்கள் தங்களுடைய அழகிய முடிமேல் வைத்துக கொண்டாடத் தக்க, கவி வீர ராகவ மேகம் - கவி வீரராகவ மேகமானது, இன்னமுதப் பாமாரி இவ வுலகததிற் பொழிந்து - இனிய அமுதம்போன்ற பாட்டு மழையை இவ வுலகததிற் பெயதுவிட்டு, பொன்னுலகிலும் பொழியப் போயது - தேவ ருடைய உலகததிலும் அதனைப் பெயவதற்காகச் சென்று விட்டது, ஆல் - அசை, எ - று.

# பல வித்துவான்கள்

## பாடியது

### திருச்செந்தூர்த் திருவிழாக் காலத்தில் மழையை நிறுத்தப் பாடியது

1. வந்துமழை பொழியும் வானேவெஞ் சூர்தடிந்த
கந்தர் திருவிழாக் காலத்தில்—தொந்தரையா
நீர்தநுளியை யூற்றிவிட னேர்த்தியல மாற்றிவிடு
கீர்த்திவரு நாட்டென்மொழி கேள்.

உரை :—வந்து மழை பொழியும் வானே - கார் காலத்திற் றேன்றி மழை பெய்கின்ற மேகமே!, வெம்பூர் தடிந்த கந்தர் திருவிழா காலத்தில் - கொடிய சூரனை செற்ற முருகப்பெருமானது கந்தசஷ்டித் திருவிழாக் காலததில், தொந்தரையாம் நீர்த்துளியை யூற்றி விடல் - இடைஞ்சலான நீர்த்துளியைப் பெய்வது, நேர்ததியல - அழகல்ல, மாற்றிவிடு - மழையை நீககிவிடு, கீர்தத் வரும் - உனக்குப் புகழேற்படும், நாட்டு என் மொழி கேள் - உனக்குப் புகழை நாட்டக் கூடிய என்னுடைய சொல்லைக் கேட்பா யாக, எ - று.

## திருச்செந்தூர்க் கந்தர்மேற் பாடியது

2. போற்றுவார் வல்வினையைப் போக்குமே பூமலர்கொண்
டேற்றுவா ரைக்கயிலை யேற்றுமே—தோற்றரிய
சந்தந்தங்குஞ் செஞ்சொற்சங்கம பொங்குஞ் செந்திற்
கந்தன்செம பொனறண்டைக் கால்.

உரை :—தோற்றரிய சந்தம் தஙகும் செம்சொல் - அமைததுப் பாடு தற்கரிய வண்ண நயங்க ளமைந்த செம்மையான மொழிகளைக் கூறும், சங்கம் பொங்கும் செந்தில் - தமிழ்ச சங்கத்தார் பொலிவுற்று விளஙகும் திருச்செந்திற் பதியில் வீற்றிருக்கும், கந்தன் செம்பொன் தண்டைக் கால் - குமரப் பெருமானது செம்பொற் சதங்கை யணிந்த திருவடிகள், போற்று வார் வல்வினையைப் போக்குமே - வழிபடுகிறவர்களுடைய கொடிய கர்மங களை யொழிக்கும், பூமலர் கொண்டு ஏற்றுவாரைக் கயிலை ஏற்றுமே - அழகிய பூககளினல் அர்சசனை செய்வார்க்குக் கயிலாய பதவியைக் கொடுக் கும், எ - று.

## இதுவுமது

3. ஆறுமுக மென்றளவி லச்சந் தவிர்க்குமே
வேறுவினை வந்தால் விலக்குமே—கூறுபுகழ்
மாரியொத்த சூரபன்மன் மார்பிளக்க வேதொடுத்த
வீரசத்தி யானமிகுத்த வேல்.

உரை :—கூறு புகழ் - பேசப்படுகின்ற கீர்த்தியையுடைய, மாரி யொத்த சூரபன்மன் மார்பிளக்கவே - இடிபோன்ற சூரபன்மனது மார்பி னைக் கீறும்படியாக, தொடுத்த - விடுக்கப்பட்ட, வீர சத்தியால் மிகுத்த வேல் - வீரததோடு மிக்க வல்லமை பொருந்திய வேலாயுதமானது, ஆறு முகம் என்ற அளவில் அச்சம் தவிர்க்குமே - ஆறுமுக மென்ற நாமத்தைச சொல்லிய அளவிற் பயத்தை யொழித்துவிடும், வேறு வினை வந்தால் விலக்குமே - நமக்கு மாறுபாடான கரும பலன் வந்தால் அதனை யகற்றும், எ - று.

## இதுவுமது

4. வேலா விராலிமலை வீராவுனக் கொருபெண்
மாலாகி யேநின்று வாடுகிறாள்—நீலான
உற்பலக் கயற்கணிச்சி யுத்தரித் திடச்சமர்த்தி
அற்பசிற்றி டைக்கொடிச்சி யாள்.

உரை:—வேலா - வேலாயுதத்தை யுடையவனே !, விராலிமலை வீரா- விராலி மலையில் வீற்றிருக்கும் அண்ணலே !, உனக்கொரு பெண் மாலாகி நின்று வாடுகிறாள்-ஒரு மாது உன்மீது மோகங்கொண்டு தளர்வடைகிறாள், நீலான உற்பலக் கயல் கணிசசி - நீல நிறமுள்ள குவளைப் பூப்போன்ற கயல் மீனை யொத்த கண்ணையுடைய காதலியவள், உத்தரித்திடச சமர்த்தி - உமக்குப் பதில் சொல்லக்கூடிய திறமை யுடையவள் அற்ப சிற்றிடைசசி - நுட்பமான சிறிய இடையை யுடையவள், கொடிசசியாள் - அவள் குறிஞ்சி நிலப் பெண்ணவள், எ - று.

## இதுவுமது

5. கந்தனென்றும் வேலனென்றுங் கானமயில் வீரனென்றும்
செந்தனென்று மேன்புலவீர் செப்புகிறீர்—முந்தவிளம
கூனற்பிறை சூடச்சிவ னுருக்குப தேசித்தருள்
ஞானக்குரு வேடப்பய லை.

உரை:—முந்த இளம் கூனல் பிறைசூடு அசசிவனார்க்கு - முற்காலத் தில் வளைந்த இளஞ் சந்திரனைச் சூடின அந்தப் பரமசிவனுக்கு, உபதேசித் தருள் - பிரணவப் பொருளை யறிவித்தருளிய, ஞானக்குரு வேடப் பயலை- ஞானசாரிய வடிவமுடைய சிறு குழந்தையை, கநதனென்றும் வேலனென் றும்-கந்தனென்ற பெயராலும் வேலனென்ற பெயராலும், கான மயில் வீரனென்றும் - காட்டின் மயிலின்மீது வரும் அண்ணலென்றும், செந்த னென்றும் - சேந்தன் அதாவது சிவந்த நிறமுடையவ னென்றும், ஏன் புலவீர செப்புகின்றீர்-கல்விமான்களே! என அழைக்கின்றீர்கள், எ - று.

குறிப்பு:—சேந்தன் என்ற சொல் செந்தன் என்று முதல் குறு கிற்று.

## இதுவுமது

6. பன்னிரண்டு தோளா பரங்குன்ற வெப்பொழுதும்
என்னிரண்டு தோண்மீதி லேயிருப்பாய்—பொன்னின்
கதிர்முடியப் பாகுகிடக் கனவரையப் பாபழனிக்
கதிபதியப் பாகுமரப் பா.

உரை:—பன்னிரண்டு தோளா - பன்னிரண்டு திருக்கரங்களை யுடைய வனே!, பரங்குன்று - திருப்பரங்குன்றப்பெருமானே!, பொன்னின் கதிர் முடியப்பா - பொன்னொளி வீசும் கிரீடத்தைத் தரித்த அப்பனே !, குகிடக் கனவரை யப்பா - கோழியாகிய கனத்த குன்றினையுடைய தந்தையே !, பழ நிக்கு அதிபதியப்பா - பழனிக்குத் தலைவனான பெருமானே !, குமரப்பா - முருகையனே!, எப்பொழுதும் என்னிரண்டு தோள் மீதலே இருப்பாய் - எப்போதும் என்னுடைய இரண்டு புயதத்தின்மீ தமர்ந்து என்னை வாகன மாகக் கொள்வாயாக!, எ - று.

இதுவுமது

7. நோகாதோ வேலாநீ நோக்குமட மானுக்காப்
போகாவ னந்தேடிப் போனக்கால்—வாகாத்
தினநினைந்திட் டுனைவணங்கித் திரியுமன்பர்க் கருள்செயும்பொற்
கனகதண்டைச் சிறுசதங்கைக் கால்.

உரை :—வேலா நீ - வேலவனே நீ, வாகாத் தினம் நினைந்திட்டு உனை வணங்கித் திரியும் அன்பர்க்கு - முறையாக நாள்தோறும் உன்னைத் தியா னித்து வணங்கி யுனை வலஞ் செய்கின்ற அடியார்களுக்கு, அருள் செயும் பொற்கனக தண்டைச சிறு சதங்கைக் கால் - கிருபை பாலிக்கின்ற அழகிய பொற்சிலம்பும் சிறிய சதங்கையு மணிந்த உன்னுடைய திருவடி, நோக்கு மட மானுக்காப் போகா வனம் தேடிப் போனக்கால் - அழகிய இளமான் போன்ற பெண்ணுக்காக நடந்துபோகக் கூடாதகாட்டில் தேடி நீ போனால், நோகாதோ - (உன்னுடைய கால்கள்) வருந்தமாட்டாவோ, எ - று.

இதுவுமது

8. வாரீர் பழனிவடி வேலரே கடம்பைத்
தாரீரென் சிந்தையினிற் றுனுறையீர்—சேரீர்நீர்
கன்றுநஞ்சு பிஞ்சுமஞ்சு கண்களுஞ் சிவந்துபொங்க
என்றனங்க ளுங்கசங்க வே.

உரை:—பழனி வடிவேலரே - பழனியில் வீற்றிருக்கும் கூர்மையான வேலாயுதத்தை யுடையவரே!, வாரீர் - வருவீராக!, கடம்பைத் தாரீர் - கடப்பமாலையைக் கொடுப்பீராக!, என் சிந்தையினிற்றுன் உறையீர் - என் னுடைய மனத்திற் றங்குவீராக !, கன்றும் நஞ்சு பிஞ்சும் அஞ்சு கணைகளும் சிவந்து பொங்க - சினமுடைய இளம் பாம்பின் விடமானது பயப்படத் தக்க என் கண்கள் செந்நிறத்தோடு விளங்கும்படியாகவும், என் தனங் களும் கசங்கவே - என்னுடைய முலைகள் அமுக்கும்படியாகவும், நீர் சேரீர் - நீர் என்னைத் தழுவுவீராக, எ - று.

## இதுவுமது

9. மேகநிற மான்மருக வீறுதணி கேசவிது
வாகடின மேவுமிவ ளாவியருள்—வாகுவளை
நத்தத்தத் திற்பற்றி நச்சுப்பைக் குட்டத்து
நிர்த்ததிற் கிச்சித்த நீர்.

உரை :—வாகு வளை நத்து அத்தத்திற் பற்றி - வலப் பக்கமாக வளைந்த சங்கைக் கையிலேந்தி, நச்சுப்பைக் குட்டத்து - நஞ்சையும் படமு முடைய பாம்புள்ள குளததில், நிர்த்தத்திற்கு இச்சித்த - நடனஞ் செய்வ தற்கு விரும்பிய, நீர் மேக நிறமான் மருக - மழை மேகத்தின் கருநிற முடைய திருமாலினது மருமகனே !, வீறு தணிகேசா - திருத்தணியில் தனிச் சிறப்போடு வீற்றிருக்கும் பெருமானே !, மேவும் இவள் ஆவி அருள் - விரும்புகின்ற இவளுக்கு உயிரைக் கொடுத்தருள்வீராக !, இதுவா கடினம் - இது வுமக்கு வருததமா?, எ - று.

## இதுவுமது

10. பூவைக்கு நண்ணுபகற் போதுகம தாமெலிந்தாள்
வாவிக்க விற்றணிகை வாழ்குமரா—பாவிமதன்
அம்புரம் புகுந்தலைக்க வமபகந்த ணந்தெறிக்க
வெம்பிநெஞ்ச முந்திகைக்க வே.

உரை :—வாவிக் கவின் தணிகை வாழ் குமரா - அழகிய பொய்கையை யுடைய திருத்தணிகையில் வாழும் முருகப் பெருமானே !, பூவைக்கு - பெண்ணுக்கு, பாவி மதன் அம்பு - தீயவனாகிய மன்மதனுடைய கணையா னது, அம்புரம் புகுந்து அலைக்க - அழகிய பின்பக்கமாக ஊடுருவிச் சென்று வருததவும், அகம் தணந்து எறிகக - அறிவு மயஙகி யொழியவும், வெம்பி நெஞ்சமும் திகைகக - நெஞ்சம பதைத்துத் திகிலடையவும், நண்ணு பகற் போது - நேர்நத பகற்பொழுதானது, உகமதாம் - ஒரு யுகமாய்க் கழிந்தது, மெலிந்தாள் - அவள அதனால மிகவும் தளர்வுற்றாள், எ - று.

## இதுவுமது

11 அம்பிறைக்கு மைந்துமல ரமபிறைக்கு நொந்துமிக
அம்பிறைக்குங் கண்ணாட் கருள்புரிவாய்—நம்புதணி
கைக்கிரிக்கு ளுறறசிதர சச்சுடைத்த னக்குறத்தி
மையக்களித் தணைத்தவத்த னே.

உரை :—நம்பு தணிகைக் கிரிக்குளுற்ற - எல்லாரும் நம்பி வழிபடு கின்ற தணிகைமலை யென்னு மிடத்திற் பொருந்திய, சித்ர கச்சுடைத்

தனக்குறத்தி - அழகிய வாரணிந்த தனங்களையுடைய குறமாதாகிய வள்ளி நாயகியை, களித்து அணைத்த அத்தனே - மகிழ்ந்து தழுவிய அப்பனே!, அம் பிறைக்கும் - அழகிய இளஞ் சந்திரனுக்கும், ஐந்து மலர் அம்பு இறைக்கும் - ஐந்து பூங்கணைகளைச் செலுத்துகின்ற மன்மதனுக்கும், நொந்து மிக அம்பு இறைக்கும் கண்ணாட்கு - அதிகமாக வருந்திக் கண்ணீர் விடுகின்ற விழியுடைய பெண்ணுக்கும், அருள் புரிவாய் - ......, எ - று.

12. என்னிடத்தி லேகுமரா வெண்ணாதே பேதகமா
உன்னிடத்திற் கொண்டமயற் கோதாயோ—துன்னிரவு
செல்லாப் பகட்டுமென்கண் செல்லாப் புரட்டுமங்கம்
பொல்லாப் பரத்தைவஞ்சி போல்.

உரை :—துன்னிரவு செல்லாப் பகட்டும் என்கண் - நெருங்கிய இரவானது கழியாமல் என்கண் மயக்கமடைகின்றது, செல்லாப் புரட்டும் அங்கம் - எழுந்து நடக்க முடியாது உடம்பானது புரளுகின்றது, குமரா - குமரக் கடவுளே !, பொல்லாப் பரத்தை வஞ்சிபோல் - தீய விலைமகளிரைப்போல, என்னிடத்திலே பேதகமா எண்ணாதே - என்னிடத்திலே மாறுபாடாக நினைக்க வேண்டாம், உன்னிடத்திற் கொண்ட மயற்கு ஓதாயோ - உன்னிடத்திலே எனக்கேற்பட்ட மோகத்தைத் தீர்ப்பதற்கு வழி கூறமாட்டாயா, எ - று.

13. செங்கமலக் கண்கலங்கிச் சிந்தைநொந்தி ராமுழுதும்
வெங்கலைக்குஞ் சங்கலைக்கும் வேலோனே—அங்கசன்றன்
பூங்கணைமெத் தத்தைத்துப் பூங்கொடிகத் தும்பட்டுத்
தாங்கணைமெத் தத்தைததுத தான்.

உரை :—'வேலோனே - வேலாயுதப் பெருமானே !, பூங்கொடி - அழகிய கொடிபோன்ற மாதானவள், அங் சன்றன் பூங்கணை மெத்தத் தைத்து - மன்மதனுடைய மலர் வாளி மிகுதியாகத் தைக்கப்பெற்று, செங்கமலக் கண் கலங்கி - சிவந்த தாமரைப் பூப்போன்ற கண் கலக்கமடைந்து, இராமுழுதும் சிந்தை நொந்து - ......, பட்டுத்தாங்கு அணை மெத்தைத தைத்துத்தான் - பட்டினலாகிய படுக்கைமீது பொருந்தி, வெங்கலைக்கும் - கொடிய கலைசந்திரனுக்கும், சங்கு அலைக்கும் - சங்குகள் உள்ள கடலுக்கும், அஞ்சி - ......, கதறும் - கதறுகின்றாள், எ - று.

14. கந்தா கடம்பா கயிலாய மாமலையான்
மைந்தா சுவாமி வடிவேலா—சந்தக்
குறமகளாசை கொள்கணவா சூரபா னுகியகுமரா
அறுமுகவா பழனியின் வேலா.

உரை:—கந்தா - ஆறு முகமும் ஒன்றாய்ச் சேர்ந்த பெருமானே !, கடம்பா - கடப்பம் பூமாலை யணிந்தவரே !, கயிலாய மாமலையின் மைந்தா - கயிலாயப் பெருங்குன்றத்திற் கதிபதியாகிய சிவனாரின் குமாரனே!, சுவாமி- எசமானே !, வடிவேலா - கூர்மையான வேலை யுடையவனே !, சந்தக் குற மகள் ஆசைகொள் கணவா - அழகிய குறமாதின்மீது காதல்கொண்ட தலைவனே !, குருபரனாகிய குமரா - மேலான ஆசாரியனாகிய முருகப்பெருமானே !, அறுமுகவா - ஆறுமுகக் கடவுளே !, பழனியின்வேலா - பழனி மலையின் வேலவரே !, எ - று.

15. அன்பர்பயங் கெடுக்குமத்தி கிரியைத் துளைக்கும்
இன்பவள்ளி கண்ணுக் கெதிராகும்—மின்பரந்த
வாகுதோளி லேறிமீறி வாகுசாரி யோடியாடி
வேகசூரன் மார்பிடந்த வேல்.

உரை:—மின்பரந்த வாகுதோளிலேறி - மின்போல ஒளி வீசுகின்ற வீரவாகுதேவர் புயத்திலமர்ந்து, மீறி - அங்கிருந்து மேலே கிளம்பி, வாகு சாரி ஓடி ஆடி - அழகாக வலசாரி யிடசாரியாகப் பாய்ந்தசைந்து, வேக சூரன் மார்பிடந்த வேல் - விரைவு மிகுந்த சூரபதுமனுடைய மார்பைத் துளைத்த வேலாயுதமானது, அன்பர் பயம் கெடுக்கும் - அன்பர்களுடைய அச்சத்தை நீக்கும், அத்திகிரியைத் துளைக்கும் - அந்தக் கிரௌஞ்ச மலையை ஊடுருவிச் செல்லும், இன்பவள்ளி கண்ணுக்கு எதிராகும் - இன்பக்கொடிபோன்ற உமையம்மையின் சந்நிதானத்தில் நிலைபெறும், எ - று.

16. அஞ்சி மயல்சகிமா தங்கமுரு கிநின்ற
வஞ்சியைச்சேர் தென்றணிகை வள்ளலே—பஞ்சமலர்
அங்கசனுக் குங்கிரணத் தந்திமதிக் குங்கடலுக்
குங்குழலுக் குங்குயிலுக் கும்.

உரை:—தென் தணிகை வள்ளலே - அழகிய தணிகைப்பதியில் வீற்றிருக்கும் அருளாளரே !, பஞ்ச மலர் அங்கசனுக்கும் - ஐந்து பூங்கணைகளையுடைய மன்மதனுக்கும், கிரணத்து அந்திமதிக்கும் - நிலாக்கதிர் வீசுகின்ற மாலைச் சந்திரனுக்கும், கடலுக்கும் - சமுத்திரத்திற்கும், குழலுக்கும் - புல்லாங் குழலுக்கும், குயிலுக்கும் - குயிலின் ஓசைக்கும், அஞ்சி - பயந்து, மயல் சகியாது - மோகத்தைத் தாங்க மாட்டாது, அங்கம் உருகி நின்ற வஞ்சியைச்சேர் - உடல் இளகி நின்றபெண்ணை யணைவாயாக, எ - று.

17. தாமரைப்பூந் தேனையுண்டு தாதளைந்து வண்டிமிர்ந்து
காமரஞ்செய் வாவிகள்சூழ் கந்தர்சிவ—மாமலைவாழ்
பூவையரங் கந்தங்கம பூகமிலங் குங்கண்டம
காவையரங் கஞ்சங்கங் காண்.

உரை:—வண்டு தாமரைப்பூந் தேனை உண்டு தாது அளைந்து - வண்டுகள் தாமரைப் பூவிலுள்ள தேனை யுண்டு மகரந்தப் பூவிற் படிந்து, இமிர்ந்து கர்மரஞ் செய் - ரீங்காரஞ் செய்து இசைப்பாட்டுப் பாடவும், வாவிகள் சூழ் - பொய்கைகள் சுற்றி யிருக்கப்பெற்ற, சிவமா மலைவாழ் பூவையர் - சிவகிரியென்னும் பெரிய பதியில் வாழ்கின்ற மாதர்களுடைய, அங்கம் தங்கம் - உடம்பு பொன் மயமானது, கண்டம் பூகம் இலங்கும் - கழுத்தானது கமுகைப்போலப் பிரகாசிக்கும், வை அரம் கஞ்சம் கண் - கண்களானது கூர்மையான அரம்போலவும் தாமரைப்போலவும் உள்ளன, கந்தா காண்கா - முருகப்பிரானே கவனித்து அவர்களைக் காத்தருள்வாயாக !, எ - று.

## விநாயகர் வணக்கச் சிறப்பு

18. கல்விக்கு ஞானக் கருத்துண்டாங் காயமுறும்
தொல்வினைக ளெல்லாந் தொலையுமே—வில்லைத
னிற்புயற்றி ருக்கணத்த னித்தன்வச் சிரப்புயத்தொர்
கற்பகத்தி னைத்துதித்தக் கால்.

உரை:—வில்லைதனில் - வில்வாரண்ய மென்னும் தலத்தில், புயல் திருக்கண் அத்தன் - மேகம்போல அருளைப் பொழிகின்ற திருக்கண்களையுடைய அப்பனும், நித்தன் - நித்தியமானவனுமாகிய, வச்சிரப் புயத்தொர் கற்பகத்தினை - வயிரம்போன்ற தோள்களையுடைய ஒப்பற்ற கற்பக விநாயகப்பெருமானை, துதித்தக்கால - புகழ்ந்து பாடினால், கல்விக்கு ஞானக் கருத்துணடாம் - கலவி வளர்தற்குக் காரணமாகிய அறிவுக் கருத்துககள் உள்ளத்திற்றோன்றும், காயம் உறும் தொல்வினைகளெல்லாம் தொலையுமே - உடம்பைப் பாதிககின்ற பழைய கருமஙகள் யாவும் ஒழியும், எ - று

## இதுவுமது

19. வாங்குசிலை நுதலார் மாயக் கல்வியிலே
ஏங்கி மனமே யிளையாதே—மாங்கனிககாத் [றைச்
தமபியொக்கச் சண்டையிட்டுத் தந்தையைச்சுற் றந்தவொற்
கொம்பனைச்சற் றன்புவைத்துக் கூறு

உரை :—மனமே - நெஞ்சமே !, வாஙகு சிலை நுதலாற் வளை விற்போன்ற நெற்றியையுடைய பெண்களது, மாயக் கல்வியிலே - அறிவு மயக்கஞ் செய்யக்கூடிய சேர்க்கையிலே, ஏஙகி இளையாதே - அழுந்தியேக்கஙகொணடு தளர்ந்து போகாதே, மாஙகனிககா தம்பி யொக-ச சண்டையிட்டு - மாம்பழம் பெறுவதறகாகத் தம்பியோடு சமமாகச் சண்டை போட்டு, தந்தையைச சுற்று அந்த ஒற்றைக் கொம்பனை

தகப்பனாரைப் பிரதட்சணமாக வந்த ஒரு கொம்பைக் கையி லேந்திய அந்த விநாயகப்பெருமா னிடத்தில், சதறு அன்பு வைத்துக் கூறு-சிறிது பகதி செலுததி அவரைத் துதிப்பாயாக, எ - று.

20. சிந்தா குலந்தீருஞ் செய்கருமங் கைகூடுங்
சந்தான மென்றுந் தழைததேறும—பைந்தாமத்
தானைவயத் தானைமலைப் பாவையளித் தானைமகத்
தானைமுகத் தானைநினைத் தால்

உரை:—பைந்தாமத்தானை - புதுமலர் மாலை தரித்த பெருமானை, வயத்தானை - சுயாதீன முடையவனை, மலைப் பாவை யளித்தானை - மலை மகள் புதல்வனை, மகத்து ஆனை முகத்தானை - பெருமை பொருந்திய யானைமுகக் கடவுளை, நினைததால் - தியானித்தால், சிந்தா ஆகுலம் தீரும்-மனக்கவலை தீரும், செய் கருமம் கை கூடும் - செய்யு முயற்சி யினிதாக நிறைவேறும், சந்தானம் என்றும் தழைததேறும் - பரம்பரை யெப்போதும் வளர்ந்தோங்கும், எ - று.

விரிஞ்சைப் பதியிலுள்ள சிவபெருமான்மீது பாடிய துதி

21. செல்வம பெறலாஞ் செழித்தபுகழ் சேரலாம்
வில்வம புனைவார் விரிஞ்சேசர்—புல்லுமதன்
கோனைமுடித் தாரிமயக் கோதையிடத் தார்கமலத்
தாளைமனத் தாடுநினைத தால்.

உரை:—வில்வம் புனைவார விரிஞ்சேசர் - வில்வத்தழையை அணிபவ ராகிய திருவிரிஞ்சைப்பெருமான், புல்லு மதன கோனை முடித்தார் - நெருஙகிய மன்மதனது வீரததைதத தொலைததார், இமையக்கோதை யிடத் தார் - இமயமலை யரசன் மகளாகிய பார்வதியை இடப்பாகத்தில் வைத்துக் கொண்டார், கமலததாளை மனத்தோடு நினைத்தால் - அவருடைய திரு வடித்தாமரையை யுள்ளததில் தியானித்தால், செல்வம் பெறலாம் - ஐசுவரி யத்தை யடையக்கூடும், செழிதத புகழ் சேரலாம் - நிரைந்த கீர்த்தியைப் பெறுதல் கூடும், எ - று.

வேற் சிறப்பு

22. அண்டர்தமக்கரசா மன்புபட ரக்கொமபாம்
மண்டவுணர் தமமுயிர்கரு வன்னியாம—பண்டுதிறற்
கஞ்சனஞ் சடுங்கடம பணிந்தெழுந்து கந்துசூரை
மிஞ்சிநெஞ்சு றிந்தெறிந்த வேல்.

உரை:—பண்டுதிறல் கஞ்சனஞ்சிடும் - முற் காலத்தில வலிமையை யுடைய பிரமதேவன் பயப்படும்படியான, கடம்பணிந்து எழுந்து உகந்து -

கடப்பமாலையை விருப்பமாயணிந்து எழுந்து புறப்பட்டு, சூரை மிஞ்சி - சூர பதுமனுடைய ஆற்றலுக்கு மேற்பட்டு, நெஞ்சுறிந்து எறிந்த வேல் நெஞ் சைக் கிழித்துத் தள்ளிய வேலாயுதமானது, அண்டர் தமக்கு அரசாம் - விண்ணவர்களுக்கு வேந்தாகும், அன்புப்டாக் கொம்பாம் - அன்பாகிய கொடி படருவதற்குரிய கொம்புபோல்வதாகும் மண்டு அவுணாதம் உயிர்க்கு வன்னியாம் - நிறைந்த அசுரர்களுடைய உயிருக்குத் தீப்போல்வ தாகும், எ - று.

இதுவுமது

23. ஆதரவா யென்னருகி லஞ்சலென்று வந்துநின்று
போதரவு செய்யுமெப் போதுமே—ஓதுதமிழ்ச்
சந்தமுந்த லங்கிர்தஞ்செ றிந்துநன்கு யர்ந்துதங்கு
விந்தைகொண் டிலங்குசெந்தில் வேல்.

உரை:—ஓதுதமிழ் சந்தமுந்து அலங்கிர்தஞ் செறிந்து சிறப்பாகப் பேசுகின்ற தமிழ் வண்ணப்பாட்டுகளுள் அளவு மிகுந்த பகுதிகளில் மிகுதி யாகப் போற்றப்பட்டு நன்கு உயர்ந்து - நன்றாக வுயாவடைந்து தங்கு விந்தை கொண்டு-நிலைவரமான வியப்பினை யுடையதாய, இலங்கு செந்தில் வேல் - விளங்குகின்ற செந்திற் பெருமானுடைய வேலாயுதமானது, எப் போதுமே ஆதரவாய் என்னருகில் அஞ்சல் என்று வந்து - எக்காலத்திலும் அருள் கூர்ந்து என் பக்கத்தில் வந்து அஞ்சாதே என்று அபயங் கூறி, நின்று போதரவு செய்யும் - நிலைபெற்று எனனை நல்வழியிற் செல்லும்படி நடத்தும், எ - று.

இதுவுமது

24. இங்கிதமா நல்வாழ் வெமக்களிக்கு முற்பகல்செய்
சங்கடமாம வேலை தணிக்குமே—பொங்கமுறத்
தற்பரற்க னுக்கிரகித்திடக் கருத்த னித்தசத்த
வெற்பினைத் துளைதத வுக்ர வேல்.

உரை:—பொங்கமுற தற்பரற்கு அனுக்கிரகித்திட கருத்தன் - விளக்க மிகும்படி பரம்பொருளாகிய சிவபெருமானுகுப் பிரணவப் பொருளை அருள் செய்த ஆசாரியனாகியவனுடைய, நித்த சத்த வெற்பினைத் துளைதத உக்ரவேல் - நித்தியத் தன்மையுடைய ஏழு மலைகளையும் ஊடுருவிய வீர மிகுந்த வேலாயுதமானது, இங்கிதமாம் நல்வாழ்வு எமக்கு அளிக்கும் - இனிமையான சுக வாழ்க்கையை எங்களுக்குத் தரும், முற்பகல் செய் சங் கடமாம் வேலைத் தணிக்குமே - முன்னாளில் செய்த தீவினைப் பயனாக வந்த துன்பமாகிய கடலை வற்றச செய்யும், எ - று.

இதுவுமது

25. ஈட்டும வினைகளறுத் தின்பமுற வேயெனது
பாட்டுக்கு கந்தருள் பாலிக்கும்—நாட்டமிகும்
மண்டலங்க லங்ககண்டர்கண்டர் துண்டர் மிண்டராவி
விண்டொடுங்க மண்டியுண்ட வேல்.

உரை:—நாட்ட மிகும் மண்டலம் கலங்க - உறுதி மிகுந்த பூவுலகம் கலக்க முறுதற் கேதுவாகிய, அகண்டர் கண்டர் - எல்லை யில்லாதவர்களாகிய முட்போன்றவர்களும், துண்டர் - குறும்பர்களும், மிண்டர் - வலிமையுடையவர்களுமாகிய பல பொல்லாதவர்களுடைய, ஆவி விண்டு ஒடுங்க - உயிர்கள் பிரிந்து அடங்கும்படியாக மண்டி உண்ட - அவவுயிர்களை நெருங்கியுட்கொண்ட, வேல் - வேற்படையானது, ஈட்டும் வினைகளறுத்து - நமது செய்கையில் மிகுகின்ற இருவினை (ஆகாமிய)ப் பயன்களை யொழித்து, இன்ப முற - இன்பதனை யானடையும்படியாக, எனது பாட்டுக்கு உகந்து அருள் பாலிக்கும் - எனது கவிக்கு மகிழ்ந்து கிருபை செய்யும், எ - று.

இதுவுமது

26. உன்னவினி தாயிருக்கு மோங்குசெல்வ மும்பெருக்கும்
நன்னலரு ளைக்கொடுக்கு நாடோறும்—பன்னும்
சகடமுருள நெருடுகமல சரணகருணை யரியின்மருகன்
விகடகரியி னிளையமுருகன் வேல்.

உரை:—பன்னும் சகட முருள நெருடு கமல சரண - பேசப்பட்ட சகடாசுர னுருண்டு சாகும்படி தேய்த்த திருவடித் தாமரைகளையுடைய, கருணை அரியின் மருகன் - அருளுடைய திருமாலின் மருமகனும், விகட கரியின இளையமுருகன் - விகட சகர விநாயகனின் தம்பியுமாகிய குமரக் கடவுளின், வேல - வேலாயுதமானது, உன்ன இனிதாய் இருக்கும் - தியானிப்பவர்களுக்கு இன்ப மயமாயிருக்கும், ஓங்கு செல்வமும் பெருக்கும் - செழித்து வளாகின்ற செல்வத்தை மிகுதியாகக் கொடுக்கும், நாடோறும் நன்னல் அருளைக் கொடுக்கும் - ஒவவொரு நாளும் சிறந்த திருவருள் பாலிக்கும், எ - று.

இதுவுமது

27. ஊழ்வினையைப் போக்குமே யுள்ளொளியைக் காட்டுமே
வாழ்வதற்கோர் வித்தாய் வளருமே—தாழ்வார்
தடபட வெனவதிர் சடலதன் முடிமிசை
விடவதி பொடிசெயும் வேல்.

உரை:—தடபடவென அதிர் கடலதின் - தடபடவென ஒலி செய்கின்ற சமுத்திரத்தின், முடிமிசை விட - முடியாகிய அலைகளின்மீது செலுத்த, அதிபொடி செயும் வேல் - கடலைத் தூள்தூளாகச் செய்யவல்ல வேலாயுதமானது, தாழ்வார் - வழிபடுபவருடைய, ஊழ் வினையைப் போக்குமே - முன் செய்த பாவத்தின வலியை யொழிக்கும், உள் ஒளியைக் காட்டுமே - அகவொளியாகிய ஞானத்தை யுணாததும், வாழ்வதற்கோர் வித்தாய் வளருமே - நல்வாழ்க்கைக்கு அடிப்படியாய் நின்று அதனை விருத்தி செய்யும், எ - று.

இதுவுமது

28. ஓராறு சென்னி யொருமுருகா வென்றளவில்
தீராத வல்வினைநோய் தீருமே—போராடிக்
கொக்கரித்து வெற்படர்த்துக் கொக்கரக்கனைத்துணித்த
விக்ரமத்தி ருக்கரத்து வேல்.

உரை:—போராடிக் கொக்கரிதது வெற்படர்த்து - சண்டையிட்டு ஆரவாரஞ் செய்த கிரௌஞ்ச மலையைத தாககித துளைத்து, கொக்கு அரக்கனைத் துணித்த - மாமரததின உருவஙகொண்ட சூரபதுமனை யிருகூறாகப் பிளநத, விகரமத் திருக்கரத்து வேல் - பராககிரமமான திருக்கையிலுள்ள வேலானது, ஓராறு செனனி ஒரு முருகா என்றளவில் - இணையற்ற ஆறு முகங்களையுடைய குமரப் பெருமானே என்று கூறிய மாத்திரத்தில், தீராத வல்வினை நோய் தீருமே - நீஙகாத கொடிய கருமங்களாகிய வியாதியைக் குணப்படுத்தி யொழிக்கும், எ - று.

மீனாட்சியம்மை நிந்தாஸ்துதி

29. மாப்பிட்டெனுஞ்சிறுதூட்பிட்டுக் காகமண்ணைச்சுமந்தே
ஆப்பிட்டுக்கொண்டடிபட்டசொக் கேசருக்காசைபட்டுச்
சேப்பிட்டுமையிட்டுப்பூமாலை கந்தந்திமிர்ந்துமஞ்சட்
காப்பிட்டுவாழ்க்கைப்பட்டாள் கூடல்வாழுங்கயற்கண்ணியே.

உரை:—கூடல் வாழும் கயல் கண்ணியே - திருவாலவாயில் வீற்றிருக்கும் கயலமீன்போன்ற கணணையுடைய மீனாட்சியமமை, மாப்பிட்டு எனும் சிறு தூள் பிட்டுககாக - மாவை யவித்துச செய்யும் பிட்டினில் உதிர்ந்த சிறு தூள் வடிவமாகிய பிட்டை விரும்பி, மண்ணைச சுமந்து - மண் சுமந்து, ஆப்பிட்டுககொணடு அடிபட்ட சொககேசருக்கு - அகப்பட்டுக்கொண்டு அடிபட்ட சொக்கலிஙகப் பெருமான்பால், ஆசைப்பட்டு - காதல்கொண்டு, சேப்பிட்டு - சிவந்த திலகத மிட்டுககொண்டு, மையிட்டு - கண்ணுக்கு மையெழுதி, பூமாலை கந்தம திமிர்ந்து - பூமாலை தரிததுச் சந்தன முதலிய பூசிககொணடு, மஞ்சள் காப்பிட்டு - மஞசளும் கஙகணமு மணிந்து, வாழ்க்கைப்பட்டாள் - மணம் புரிந்து வாழ்க்கைக்குரியவளானள், எ - று.

30. காமா கயற்கண்ணி கோபம்பொ ருளென்றென் கண்பனிநீர்
சீமான் கரத்திற் றுடைக்கரி தேசெக மேழுமெச்சும்
கோமான் கரத்திற் குனிசிலை ராயன் குகன்சிலம்பில்
மாமாவின் காலல்ல வேமன்ன வாவுன் மலர்க்கரமே.

உரை :—செக மேழு மெச்சும் கோமான் - ஏழுலகமும் புகழுகின்ற அரசனும், கரத்திற் குனிசிலை ராயன் - கையில் வளைந்த வில்லையுடைய அரசனுமாகிய, குகன் சிலம்பில் - குகனுடைய மலையில் மன்னவா - வேந்தனே !, காமா - மன்மதனே !, கயற்கண்ணி கோபம் பொருள் - கயல்மீன் போன்ற கண்ணையுடையவளாகிய தலைவி (நீ எனக்கு அருள் செய்வது தெரிந்தால்) கோபித்துப் பொறுக்கமாட்டாள், (ஆதலினால்) என்றன் கண் பனிநீர் - என்னுடைய கண்ணிலிருந்து நடுக்கத்தோடு விழுகின்ற கண்ணீரை, சீமான் கரத்தில் துடைக்கரிதே - செல்வனாகிய உம்முடைய கையினால் துடைப்பது அரிதாகும், மாமாவின் காலல்லவே உன் மலர்க் கரமே - பெரிய லட்சுமியின் தாமரை தஙகுகின்ற திருவடியை வைக்கின்ற இடமல்லா உன்னுடைய தாமரைக் கையானது, எ - று.

## தலைவி கூற்று

31. ஆச்சரியந் தென்னமர மத்தனையுங் குத்துமுலை
காய்ச்சிருக்குந் தென்குடந்தைக் காவலா—மாச்சன்
வரக்குப்பை யாநீ மருவாநா ளெல்லாம்
சரக்குப்பை யாமே தனம.

உரை :—ஆசசரியம் - வியக்கத் தக்கதாக, குத்துமுலை - குவியலான தனங்கள்போல, தென்னமரம் அத்தனையும் காய்சசிருக்கும் - தென்ன மரங்கள் முழுவதும் காய்த்திருககின்ற, தென் குடந்தைக காவலா - அழகிய கும்பகோணத்துக்கு மன்னனே !, மாசசன் - மாய்சசனுடைய, வரக்குப் பையா - வரத்தினாற் பிறந்த மகனாகிய குப்பையனே !, நீ மருவா நாளெல்லாம் - நீ என்னை யணையாத நாட்களிலெல்லாம், தனம் - என்னுடைய கொஙகையானது, சரக்குப்பையாமே - மன்மதனது அம்பின் கூட்டம் நிறையப் பெறுகின்றது, எ - று.

## ஆபத்துச் சகாயர்மீது பாடிய நிந்தாஸ்துதி

32. தந்தைபோய்த் தாய்போய்த் தமர்போயென் சுற்றமுமபோய்
வெந்தபுரி யாகிவிட் டேனே—முந்தவே
ஆழாழி நஞ்சுண்ட வாபற்ச காயனெனும்
பாழாவான் கண்ணேறு பட்டு,

உரை :—முந்தவே - முற் காலத்திலேயே, ஆழாழி நஞ்சுண்ட - ஆழமான பாற்கடலில் உண்டான விடத்தை யருந்திய, ஆபற் சகாய னென்னும் - ஆபச் சகாயனென்னும் திருப்பெயருடைய, பாழாவான் கண்ணேறு பட்டு - மாயைக்கு அப்பாலுள்ள பெருமானது திருக்கண் பார்வை பொருந்தப்பெற்று, தந்தை போய்த் தாய் போய்த் தமர் போய் என் சுற்றமும் போய் - பெற்றோரையும் நண்பரையும் உறவினரையு மிழந்து, வெந்தபுரியாகி விட்டேன் - சூட்டினாற் கருகிய வைக்கோற் புரியின் தன்மையை யடைந்து விட்டேன், எ - று.

## விடனொருவன் பெண்கள் இடைக்கு இரங்கிக் கூறியது

33\. கைக்குடமும ரெண்டு கனககும்பக் குடமும்
முக்குடமுங் கொண்டான் முறியாதோ—மைக்குழலீர்
வேய்க்காற்றி னல்விளங்கும் வீரனந்தி மாநகரில்
ஈக்காற்றுக் காற்ரு விடை.

உரை :—வேய்க்காற்றினல் விளங்கும் - மூங்கில் வனத்தின் காற்று மிகுந்த பேர் பெற்ற, வீரன் நந்திமா நகரில் - வீர பாண்டியனது நந்திபுரமென்னும் ஊரில், மைக்குழலீர் - (வாழுகின்ற) மேகம்போன்ற கூந்தலையுடைய பெண்களே !, ஈக்காற்றுக்கு ஆற்ரு இடை - ஈப்பறக்கும்போதுண்டான காற்றினல் தாங்க முடியாத உங்களுடைய இடையானது, கைக்குடமும் ரெண்டு கனகக்கும்பக் குடமும் முக்குடமும் கொண்டால் - உங்கள் கைக் குடத்தோடு உங்கள் தனங்களாகிய இரண்டு பொன் குடங்களுமாகிய மூன்று குடங்களும் தாங்கினல் முடியாதோ - ஒடிந்து போகாதோ எ - று.

## திருமால் சிவனை யர்ச்சித்தது

34\. வையம புகழு மலரா யிரமெடுத்துக்
கையிலொரு மாமலரைக் காணமல்—வையகத்தில்
செங்கண்மா லீசன் றிருவடிக்கெண் ணையிரமாத்
தங்கண்மலர் சாத்தினன் றன்.

உரை :—வையகத்தில் - இப் பூமியின்மேல், செஙகண்மால் - சிவந்த கண்ணையுடைய விண்டுவானவா, ஈசன் திருவடிக்கு - சிவபெருமானுடைய திருவடிக்கு அர்சசனை செய்வதற்காக, வையம் புகழும் மலர் ஆயிரம் எடுத்து - உலகினர் துதிக்கும் ஆயிரம் தாமரைப்பூக்களை யெடுதது அரச்சனை பண்ணும்போது, கையில் ஒரு மாமலரைக காணமல் - கையில் ஒரு தாமரைப் பூக் காணப் பெருமல், எண்ணையிரமா - ஆயிரம் என்ற எண் குறைவில்லாமலிருககும்படி, தம் கண மலர் சாத்தினர்தான் - தன்னுடைய கண்ணை ஒரு மலராகத் திருவடியிற் சாத்தினர், எ - று.

## சிவனை வணங்காரை மாரியம்மன் தண்டித்தல்

35. பாம்புசேர் தோளிணையாள் பாளயத்து மாமாரி
சாம்பசிவன் றன்னடியைச் சாராரை—வேம்பின்
இலையையு டுத்தியவ ரீனமானம் போக்கித்
தலையில்விளக் கேற்றிவைப்பா டான்.

உரை:—பாம்பு சேர் தோளிணையாள் - பாம்பை யணியாகத் தரித்த இரு தோள்களையுடைய தேவியாகிய, பாளையத்து மாமாரி - பாளையத்தி லுள்ள பெரிய மாரியம்மன, சாம்பசிவன் தன்னடியைச சாராரை - பரம சிவனது திருவடியை வணங்காதவர்களை, வேம்பின் இலையை உடுத்தி - வேப்பிலையிலாகிய ஆடையை யுடுக்கும்படி செய்து, அவர் ஈனம் மானம் போக்கி - அவர்களுடைய குறைவுபட்ட மதிப்பையும் தொலைப்பதற்கு (அவர்களது) தலையில் விளககேற்றி வைப்பாள்தான் - ......, எ - று.

## கல்வி கற்கக் கூடாத நாட்கள்

36. அட்டமியி லோதிஞ லாசானுக் காகாது
சிட்டருக்குப் பன்ஞன்கு தீதாகும—கெட்டவுவா
வித்தைக்கு நாசமாம வெய்ய பிரதமையில்
பித்தரும பேசார் பிழை.

உரை:—அட்டமியில் ஓதினல் ஆசானுக்கு ஆகாது - எட்டாவது திதி யில் படித்தால் உபாததியாயருக்குக் கெடுதியுண்டாக்கும், சிட்டருக்கு-பன் ஞன்கு தீதாகும் - சதுர்த்தசியில் ஓதினல் அது மாணுக்கர்களுக்குத் தீமை விளைகும், கெட்ட உவா விதயைககு நாசமாம - பௌர்ணமி கலவிக்குக் கெடுதி யுண்டாக்கும், வெய்ய பிரதமையில் பிழை - கேடு செய்யக்கூடிய பாட்டிமையிற் படித்தால் தப்பு ஏற்படும், பித்தரும் பேசார் - பைததியங் கொண்டவாகளகூட, பாட்டிமையில் பேச மாட்டாாகள், எ - று.

## செவிலி கூற்று

37. ஆயிரம்பாக் கன்னமுலை யன்னநடைக் கன்னிபதி
ஞயிரமபாக் காஞளுன் ஞசையிஞல்—நீயிரங்கி
வந்தாள வேண்டுமலைப் பழனிவே லவனே
சந்தாள வேறில்லை தான்.

உரை:—மலைப்பழனி வேலவனே - பழனி மலையிலுள்ள வேலாயுதப் பெருமானே !, ஆயிரம் பாக்கன்ன முலை - கலசமபோன்ற தனத்தையும், அன்ன நடைககனனி - அன்னம்போன்ற நடையையுமுடைய சிறு பெண், உன் ஆசையிஞல் பதிஞயிரம் பாககாஞள் - உன்பாலுள்ள மோகததால் உடை யிழந்து நிருவாணமாஞள், நீ இரஙகி வந்தாள வேண்டும் - நீ கருணை

செய்துவந்து அவனை யாட்கொள்ள வேண்டும், சந்து ஆள - தூதுவிட, வேறு இல்லைதான் - வேறு ஆட்களில்லை, எ - று.

## தந்தையர் இவர்களா மெனல்

38. பிறப்பித்தோன் வித்தைதனைப் பேணிக் கொடுத்தோன்
சிறப்பினுப தேசஞ் செய்தோன்—அறப்பெரிய
பஞ்சத்தி லன்னம பகர்ந்தோன் பயந்தீர்த்தோன்
எஞ்சாப்பி தாக்களென வெண்.

உரை:—பிறப்பிதத்தோன் - பெற்றெடுத்தவன், வித்தை தனைப் பேணிக் கொடுத்தோன் - கல்வியை விரும்பிக் கற்பித்தவன், சிறப்பின் உபதேசம் செய்தோன் - வீடு பெறுவதற்குக் காரணமாகிய உண்மையை யறிவித்தவன், அறப்பெரிய பஞ்சத்தில் அன்னம் பகர்ந்தோன் - மிகுந்த கொடிய கருப்பில் ஏழைகளுக்கு உண வளித்தவன், பயந்தீர்த்தோன் - அச்சததை நீக்கினவன், (ஆகிய இவாகள்) எஞ்சாப் பிதாக்கள் என எண் - நிலைதத தந்தையர்களாகக் கருதுக !, எ - று.

## தலைவி கூற்று

39. கானக் கடன்மல்லைக் கார்வண்ணன் றானுமால்
கானக் குழன்மடவீர் நானுமால்—ஆனக்கால்
தன்கையிற் சங்காழி தாமிருக்கப் போவதேன்
என்கையிற் சங்காழி யின்று.

உரை :—கானக்குழல் மடவீர்-கத்தூரிச சாந்தணிந்த கூந்தலையுடைய தோழிகளே !, கானக்கடல் மல்லை காரவண்ணன் றானுமால் - சோலை யடுக் கப்பெறற சமுத்திரஞ்சூழ்ந்த மாவலி புரத்திலிருக்கும் மேகம்போன்ற கரியநிறமுடைய திருமால் மாலெனப்படுவர், நானும்மால் ஆனக்கால். நான்மால் அடைந்தால், (இருவருககும் மாலென்ற பெயரே யேற்படும், ஆனால்) தன் கையில் சங்காழி தாமிருக்க - அந்தத் திருமால் கையில் சங்குஞ் சக்கரமும் நீஙகா திருககவும், இன்று என் கையில் சங்காழி போவ தேன் - இங்ஙாளில் என் கையிலுள்ள சங்கும் ஆழியும் அதாவது வளைய லும் மோதிரமும் கழன்று போவது எதனாலே, எ - று.

## புலவரை யாதரியாரை யிகழ்தல்

40. கட்டியடிப் போர்க்குங் கன்மீதி லேற்றுவர்க்கும
எட்டியடிப் போர்க்கு மீவரே—திட்டமுடன்
பாடுவோர்க் கீயாரே பல்லுதிரத் தாடையினிற்
போடுவோர்க் கீவார் பொருள்.

உரை :—திட்டமுடன் இடுவோர்க்கு ஈயாரே - முறையாகக் கவி யியற்றுவோர்க்குப் பொருள் கொடாதவர்கள், பல்லுதிரத் தாடையினில் போடுவோர்க்குப் பொருள் ஈவார் - பல்லு சிதறும்படியாகக் கன்னத்தில் அடிக்கின்றவர்களுக்குப் பொருள் கொடுப்பார்கள், கட்டி யடிப்போர்க்கும் கன்மீதி லேற்றுவர்க்கும் எட்டி யடிப்போர்க்கும் ஈவரே - தங்களைத் தூணில் கட்டி அடிக்கின்றவர்களுக்கும், தங்களைக் குனியவைத்து முது கில் கல்லேற்றுகின்றவர்களுக்கும், ஓங்கிக் கன்னத்தி லறைகின்றவர்களுக் கும் பணம் கொடுப்பார்கள், எ - று.

## செவிலி கூற்று

41. செய்யாள் கணவா செகராஜ சேகரா
அய்யா வடகங்கைக் காரியா—துய்யா
குடஞ்சுட்டுப் பின்போன கோபாலா முத்து
வடஞ்சுட்டுக் கண்டுயிலாண் மான்.

உரை :—செய்யாள் கணவா - திருமகளுக்கு நாயகனே!, செகராஜ சேகரா - உலக மன்னர் முடிமேலிருப்பவனே!, அய்யா - ஐயனே, வட கங் கைக்கு ஆரியா - வடபாலுள்ள கங்கைக் கரையில் உயர்வாகப் போற்றப் படுபவனே!, துய்யா - புனித மானவனே!, குடஞ்சுட்டுப் பின்போன கோபாலா - பசுத தொகைகளின் பின்னே சென்ற பசுக் காவலனே!, மான் - என் மகள், முததுவடஞ்சுட்டு - மாாபிலணிந்த முதது மாலையினுல் தகிக்கப்பெற்று, கண் துயிலாள் - தூங்காதிருக்கிறுள், எ - று.

## தாய் கூற்று

42. உன்றன் மகளை யொறுப்பதற்கு காரணமென்
என்றன் மகட னியல்புகேள்—குன்றுச்
சிராப்பளிய னேறிவருஞ் சேவின்மணி யோசைக்
கிராப்பளியுங் கொள்ளா ளிவள்.

உரை :—உன்றன் மகளை ஒறுப்பதற்குக் காரணம் என் - உன் மகளை நீ கண்டிப்பதற்குக் காரணமென்ன, என்றன் மகள் தன் இயல்பு கேள் - என் புதல்வியின் தன்மையைக் கேட்பாயாக!, குன்றுச சிராப் பளியன் ஏறிவரும் சேவின் மணியோசை - குறைவில்லாத திருச்சிராப்பளிப் பெரு மான் எழுந்தருளி வருகின்ற காளையின் கழுத்திற் கட்டிய மணி யொலி யைக் கேட்டு, இவள் - என் மகள், இரா - இராததிரியில், பளியுங் கொள் ளாள் - படுக்கையிற் படுத்துத் தூங்குகிறுளில்லை, எ - று.

## இதுவுமது

43. நீரூருஞ் செஞ்சடைமே னீரூரும பாம்பணிந்து
நீரூரி லேவருத னீதியோ—நேரே
படவரவஞ் சாடப் பலியிடென வந்தால்
இடவர வஞ்சாளோ விவள்.

உரை :—நீரூருஞ் செஞ்சடைமேல் - கங்கை பாய்கின்ற சிவந்த சடையின்மீது, நீரூரும் பாம்பு அணிந்து - நீரிலே செல்லக்கூடிய பாம்பை யாபரணமாகக்கொண்டு, நீர் ஊரிலே வருதல் நீதியோ - நீர் ஊருக்குள்ளே வருவது முறையா?, நேரே பட அரவம் சாட - கண்ணெதிரிலே படத்தையுடைய பாம்பானது சீறிப் பாய, பலி இடு என வந்தால் - பிசசை போடென்று நீர் சொல்லிக்கொண்டு வரின், இவள் இடவர அஞ்சாளோ - இவள் சோறிடவருவதற்கு அஞ்சமாட்டாளா?, எ - று.

## கருடனுக்குஞ் சந்திரனுக்குஞ் சிலேடை

44. வாலைப் பொருந்துதலால் வல்லரவம் பற்றுதலால்
மாலை யெடுததுநெடு வானுறலால்—சோலைதிகழ்
உமபர்பூ சிக்கருளு மொற்றியூ ரன்வரையில்
அம்புலியு நன்கருட னும.

உரை :—வாலைப் பொருந்துதலால் - சந்திரன வெண்மை யுடைமையாலும், வல்லரவம் பற்றுதலால் - கொடிய ராகு கிரகததால் பற்றப்படுதலாலும், மாலை எடுத்து நெடுவான் உறலால் - சாயஙகாலததை யணுகிப் பெரிய ஆகாயத்தில் தோன்றுதலாலும்,

(கருடன்) வாலைப் பொருந்துதலால் - வாலுடைமையாலும், வல்லரவம் பற்றுதலால் - பெரிய பாமபுகளைப் பிடிப்பதாலும், மாலையடுத்து நெடுவான் உறலால் - திருமாலை யணுகி வைகுண்டததிற் சேரதலாலும், உம்பா பூசிக்க அருளும - விணணவா வழிபட அவாகளுககு கிருபை செய்கினற, சோலை திகழ ஒற்றியூரன வரையில - பொழில்கள் திகழ்கின்ற திருவொற்றியூர்ப் பெருமானது மலையில், அம்புலியும் நன் கருடனும் சந்திரனும் நலல கருடனுககு ஒப்பாவான, எ - று.

## முருகனை வேண்டல்

45. அமமையிலே யேறி யடியே னிடர்தீர
இம்மையிலே வந்தென்னை யீடேற்றி—மும்மையிலே
எந்தப்பா வஞ்செய்தே னந்தப்பா வந்தீரக்
கந்தப்பா வந்திப்போ கா.

உரை :—கந்தப்பா - குமரப் பெருமானே !, அம்மையிலே ஏறி - அழகிய மயில்மீதிலே எழுந்தருளி, அடியேன் இடர் தீர இம்மையிலே வந்து - அடியேனுடைய துயர மொழியும்படி இந்தப் பிறவியிலே எனக்குத் தோன்றியருளி, என்னை யீடேற்றி - என்னை நற்கதிக்குச் செலுத்தி, மும்மையிலே எந்தப் பாவஞ் செயதேன் அந்தப் பாவந்தீர - முப்பிறவியிலே செய்த பாவம் தொலையும்படியாக, வந்து இப்போ கா - இப்பொழுது அருள்செய்து காப்பாற்றுவாயாக !, எ - று.

## கல்வி முறை

46. எழுதரிது முன்ன மெழுதியபின் னத்தைப்
பழுதறவா சிப்பரிது பண்பா—முழுதுமதைக்
கற்பரிது நற்பயனைக் காண்பரிது கண்டக்கால்
நிற்பரிது தானந் நிலை.

உரை :—முன்னம் எழுது அரிது - முதலில் கற்பதை யெழுதுவது அருமையான செயலாகும், எழுதிய பின் அத்தைப் பழுதற வாசிப்பது பண்பாம - எழுதிய பிற்பாடு எழுதியதைக குற்றமில்லாமற் படிப்பது நல்ல முறையாகும, முழுதுமதைக் கற்பரிது - எழுதியதை முற்றிலும் மனப்பாடஞ் செய்தல் அரிய செயலாகும், நற்பயனைக் காண்பரிது - எழுதிய சொல்லின் தக்க பொருளுணர்தல் அதனினும் அரிய செயல், கண்டக்கால் தான் அந்நிலை நிற்பது அரிது - தக்க பொருளை அறிந்தபின் நூல் கூறிய அந்த வொழுக்கத்திலே நிலை பெறுதல் அதனினும் அரிய செயலாகும், எ - று.

## விடு கவி

47. ஏறேறு நீரேறு மெண்ணிலுயிர்க் குயிராம்
பாரேறுங் காலாற் படியளக்கும்—வீறேறும்
அன்னங்கா ணீசனரி யயனுந்தா மன்று
துன்னுபுகழ் மாரியப்பா சொல்.

உரை: —ஏறேறு - காளை யேறுவது அதாவது காளையினால் சுமக்கப் படுவது அல்லது உழப்படுவது, நீரேறும் - நீர் பாயப்பெறுவது, எண்ணில் உயிர்க்கு உயிராம் - ஆலோசிததுப் பாரக்குமிடத்தில் உயிர் உடம்பில் நிலை பெறுதற்குத் துணை செய்வதால் உயிர்க்குயிராவது, பாரேறும் காலால் - உலகத்தா ரேற்றிப் பேசும் அளவு கருவியால், படியளக்கும் - படி படியாக அளக்கப்படுவது, வீறேறும் - தனிச சிறப்புடைய, அன்னங்காண் - உணவாக இருப்பது, ஈசன அரி அயனும் தாமன்று துன்னுபுகழ் மாரி - மும் மூர்த்திகளுக்கும் நிவேதனமாக வழஙகப்படுவதால் அவாகளைச் சார்ந்த புகழ் மிகுதியை யுடையது, அப்பா சொல்-அப்பனே ! இது என்னவென்று சொல் (இது நெல் என்பது கருத்து), எ - று.

தலைவன் ஏமாற்றமடைந்து தன்னுட் சொல்லிக்கொண்டது

48. கோடுதிக்குங் கும்பமுலைக் கோதையரைக் கூடவென்றால்
மாடுதின்னி யென்னை மறித்தானே—மாடுதின்னி
தன்பொழுதும போச்சுதே தன்னாந் தனித்திருந்த
என்பொழுதும் போச்சுதே யென்.

உரை :—இன்று - இன்றைக்கு, கோடுதிக்கும் கும்பமுலைக் கோதை யரைக் கூட என்றால் - யானைக் கொம்புபோல் தோன்று சிறந்த தனங்களை யுடைய தலைவியைச சேர்வதற்கு இருளிற் சென்றால், மாடு தின்னி என்னை மறுத்தானே - மாடு தின்னுவதாகிய வைக்கோலினுற் செய்த பாவை வடிவம் உண்மையான ஆள்போல என்னைத் தடுப்பதாகத் தோன்றிற்று, மாடு தின்னி தன் பொழுதும் போசசுதே தன்னாந் தனித்திருந்த என் பொழு தும் போசசுதே - வைக்கோல் வடிவம் விலகாதிருந்து நின்ற விடத்திலே நிற்கப் பொழுது விடிந்தது அதற்குப் பயந்து தனியே நின்ற என்னுடைய பொழுதும் வீணுகப் போயிற்று, எ - று.

வறுமையைக் கூறல்

49. அத்தற்கு மூன்றுகண் ணுயிரங்க ணிந்திரற்குப்
பத்தா யிரங்கணெந்தன் பச்சைவடம—இத்தையான்
மெள்ள விரித்துடுத்தேன் வெண்ணைநல் லூர்ச்சடையா
எள்ளிருக்க வில்லை யிடம்.

உரை :—வெண்ணெய் நல்லூர் சடையா - திருவெண்ணெய் நல்லூரில் வாழ்கின்ற சடையப்ப வள்ளலே !, அததற்கு மூன்று கண் - அப்பனுகிய சிவபெருமானுக்குக் கணகள் மூன்றுள்ளன, ஆயிரஙகண் இந்திரற்கு - இந்திரனுக்கு ஆயிரங் கணகள் உள்ளன, எந்தன் பசசை வடம் பத்தாயிரம் கண் - அழுக்கடைந்து பசசையான கயிறுபோன்ற என்னுடைய ஆடை பத்தாயிரம் கண் அதாவது பீத்தலுடையது, இத்தையான் மெள்ள விரித்து உடுததேன் - இதனை மெதுவாக விரிததுக் கட்டினேன், எள் இருக்க வில்லை இடம் - எள்ளுகூட அதிலே தஙக இடமில்லாதபடி எல்லாங் கிழிசச லாக விருந்தது, எ - று.

சிவ தலங்கள் ஆயிரத்தெட்டென்பது

50. மூவர்கவி மூந்நூறு முன்சோழ னைந்நூறு
நாவலர்மா ணிக்கர்தல நாற்பதெட்—டோவறுசீர்
நூதனசி வாலயங்க ளூற்றறுப துங்கூட
ஓதவரு மாயிரத்தெட் டோர்.

உரை:—மூவர்கவி முந்நூறு - சம்பந்தர் அப்பர் சுந்தரரென்ற மூவர் தேவாரப் பதிகங்கள் பெற்ற திருப்பதிகள் முந்நூறும், முன் சோழன் ஐந்நூறு - சோழ மன்னர் முன்னதாக அமைத்த தலங்கள் ஐந்நூறும், நாவலர் மாணிக்கர் தலம் நாற்பதெட்டு-பேரறிஞராகிய மாணிக்கவாசக சுவாமிகள் பாடிய திருப்பதிகள் நாற்பத்தெட்டாகும், ஓ அறுசீர் நூதன சிவாலயங்கள் நூற்றறுபதுங்கூட - நீங்காத கீர்த்தியையுடைய புதிய சிவன் கோயில் நூற்றறுபதையுஞ் சேர்த்து, ஆயிரத்தெட்டு ஓத வரும் ஓர்-ஆயிரத்தெட்டு எண்ண முடியுமென்று தெரிவாயாக, எ - று.

## புகையிலை வர்ணனை

51. நாலெழுத்துப் பூடு நடுவே நரம்பிருக்கும
காலுந் தலையுங் கடைச்சாதி—மேலாக
ஒட்டு முதலெழுத்து மோதுமூன் றெழுத்தும்
விட்டார் பரமனுக்கு வீடு

உரை:—நாலெழுத்துப் பூடு-நாலெழுத்தினலாகிய ஒரு பூண்டு, நடுவே நரம்பிருக்கும் - அதன் நடுவில் நரம்புபோன்ற சிறு தண்டிருக்கும், காலும் தலையும் கடைசசாதி - முதலெழுத்தையும் கடைசியெழுததையுஞ் சேர்த்தால் இழிநத சாதியை யுணர்ததும், மேலாக ஒட்டு முதலெழுத்தும் ஓதும் மூன்று எழுததும் விட்டார பரமனுககு வீடு - எஞ்சி நின்ற பகுதி சிவபெருமான் இருப்பிடத்தை யுணாத்தும, எ - று.

குறிப்பு:—புகையிலை, புலை, கைலை.

## கைத்தடியின் குணம்

52. முனியதட்டு முட்டுக்கு முன்னீ ரளக்கும
கனியுதிர்க்குங் கவ்வுநாய் காக்கும—தனிவழிக்குப்
பத்திரம தாக்கும் பயந்தீர்க்கும பாமபடிக்கும
கைத்தலத்திற் றண்டிருந்தக் கால்.

உரை:—கைத்தலத்தில் தண்டிருந்தக்கால் - கையில் ஒரு கோலானது இருக்குமாயின், முனி யதட்டும் - பிசாசைப் பயமுறுததும், முன் தூக்கும்-முன் கிடந்தால் அதை யெடுததுத தூரப்போடும், முன்னீர் அளக்கும் - எதிரே இருககின்ற தண்ணீரின் ஆழததை யளநது காட்டும், கனி யுதிர்க்கும் - மரத்திலிருககும் பழததைததட்டிக் கீழே உதிரசசெயயும், கவ்வு நாய காக்கும்-கடிக்க வருகிற நாயை யோட்டி நம்மைக் காக்கும், தனி வழிக்குப பததிரமதாக்கும் - தனியே வழிச செல்லுங காலத்திற் பாதுகாப்பான துணையாகும். பயம் தீர்க்கும்-அசசததை நீக்கும், பாம்பு அடிக்கும் - ......, எ - று.

## குடையின் குணம்

53. பகலோன் றெறுங்கிரணம் பாய்பறவை யெச்சம்
மிகமேலு ருதகற்றும விண்ணின் — முகிலதனால்
பெய்யுமழை யைத்தடுக்கும பேரழகு மாமொருவர்
கையிற்கு டையிருந்தக் கால்.

உரை:—ஒருவர் கையில் குடை யிருந்தக்கால் - ஒருவருடைய கையிற் குடை யிருக்குமானால் அது, பகலோன் தெறும் கிரணம் - நம்மைத் துன் புறுத்தும் சூரியனுடைய கதிர், பாய் பறவை எசசம் - வானில் பறக் கின்ற பட்சிகளின் எசசமென்னு மிவற்றை, மிக மேல் உருதபடி அகற் றும் - அதிகமாக நம்முடைய உடம்பில் விழாதபடி விலக்கும், விண்ணின் முகிலதனால் பெய்யு மழையைத தடுக்கும் - ஆகாயததில் மேகத்தினால் சொரியப்படும் மழை நீரைத தடுக்கும், பேரழகுமாம் - மிகுந்த அழகு தருவதுமாகும், எ - று.

## பாதரட்சையின் குணம்

54 கல்லு முருத்தாது காலின்முட் டையாது
எல்லைமார்த் தாண்டன்சூ டேருது—தொல்லைவரு
மாலை யிருளில் வழிநடக்கக் கூசாது
காலிற் செருப்பிருந்தக் கால்.

உரை:—காலில் செருப்பு இருந்தக்கால் - ஒருவன் காலில் செருப்புப் போடப்பட்டிருந்தால், கல்லும உருததாது - பாததை வழியிலுள்ள கல்லு வருத்தப் படுததாது, காலில் முள் தையாது -......, எல்லைமார்த் தாணடன் சூடு ஏருது - காலி னெல்லைக்குட் பட்ட சூரிய வெப்பத்தைத் தடுக்கும், தொல்லை வருமாலை இருளில் வழி நடக்கக கூசாது - இடைஞ் சல் வரக்கூடிய முன்னிருட்டில் வழி நடப்பதற்குக கால் பின் வாஙகாது, எ - று.

## தோழி கூற்று

55. வந்தவளைக் கையாது வாய்முத்தந் தந்தருள்வாய்
தொந்தவளைக் கையாது வாரகையா—சந்தவளை
கோசையிடத் தானே குயிலோசைக் கஞ்சியுளத்
தாசையிடத் தானே யறிந்து.

உரை:—தொந்த வளைகையா - பொருத்தமான சங்கைக் கையி லேந்தியவனே !, துவாரகையா - துவாரகைப் பதிக்குரியவனே !, சந்து வளை கோசை யிடத்தானே - சநதன மரஙகள் சூழ்ந்த கோசைப்பதியில் வீற்றிருப்பவனே !, குயிலோசைககு அஞ்சி - குயிலின் ஒலிக்குப் பயப்

பட்டு, உளத்து ஆசையிடத்தானே அறிந்து - அது உள்ளத்திலாசையை மிகுதியாக உண்டாக்க இதைத் தானறிந்து, வந்தவளை - உன்னை நாடி வந்த பெண்ணை, கையாது - வெறுப்புகொள்ளாது, வாய் முத்தம் தந்து அருள்வாய் - திருவாயினல் முத்தம் அளித்தருள்வாயாக !, எ - று.

56. அறிந்துதவிப் பாரை யருள்கோசை யாண்மால்
செறிந்துதவிப் பாரைத திருத்தும்—திறந்தழைந்த
வைகுந்த னூர்வாய் மடமானே கொவ்வைநிகர்
வைகுந்த னூர்வாய் மடுத்து.

உரை :—கொவவை நிகா மடமானே - கொவவைப் பழம்போன்ற இதழையுடைய இளையமாதே !, வைகுநதன ஊர்வாய் மடுத்து - தஙகுகினற தன்னுடைய ஊரிலுஞ் சோாது, அறிந்து தவிப்பாரை யருள் கோசை யாள்மா - தன் பெருமையை யறிந்து அருள்பெறும் தாகமுடையவர்க்கு அருளைக கொடுககின்ற கோசைப்பதிககுத் தலைவனுகிய திருமால், தெரிந்து உதவிப்பாரைத திருததும் - அனபுகூாநது உதவிசெயது உலகத்தவரைத் திருததஞ் செயகினற, திறம தழைநத - வலிமை சிறப்புற்றோங்குதற்குக் கேதுவாகிய வைகுந்தன் ஊாவாய - வைகுந்ததை மனதில் தியானிப்பாயாக !, எ - று.

57. மடுக்குஞ் சரமழைக்கும வான்கோசை மாலே
விடுக்குஞ் சரமழைககு மேலாய்—முடுக்கும
அநங்கனை யஞ்சங்க மடுத்தேனை யாள்வாய்
அநங்கனை யஞ்சங்க மலர்.

உரை :—மடு குஞ்சரம் அழைக்கும் வான் கோசை மாலே - நீர் மடுவில் முதலை வாயிலகப்பட்டுககொண்ட யானை யழைதத கோசைப்பதியில் வீற்றிருககினற பெருமானே !, விடுக்கும் சரமழைகக மேலாய் - தான் செலுததுகின்ற அம்புமாரிககு மேலாக, முடுககும் அனஙகனை - தூரததுகின்ற மன்மதனுககு, அஞ்சு அஙகம் அடுத்தேனே - பயப்படுகின்ற உடம்பைப் பொருநதிய எனககு, அனஙகம் நை - அறிவின்மையை யொழிககின்ற, அம் சஙக மலா - அழகிய சஙகமபோனற பூவைக்கொடுத்து, ஆள்வாய் - ஆட்கொள்வாயாக!, எ - று.

58. அலரோதி மத்தா னறைகோ சைமாலே
அலரோதி மததா லடிக்கும—அலரோதி
நந்தனகத் தாளுறவே நண்ணிநின்று யானடைந்தேன்
உந்தனகத தாளுறவே யோர்ந்து.

உரை :—அலா ஓதிமததான் - தாமரைப் பூவில் வீற்றிருக்கின்ற அயன், அறை - போற்றுகின்ற, கோசை மாலே - கோசைப் பதியிலிருக்கும் பெரு

மானே !, அலர் ஓதி - ஆற்றுகின்ற சொல்லைச் சொல்லி, மத்தால் அடிக் கும் - தயிர் கடையு மத்தினாலே தாக்கிய, அலர் ஓதி - பூமுடித்த குழலை யுடைய ஒரு இடைச்சி, நந்தன் அகத்து ஆள்ப - நந்தகோபன் வீட்டில் ஆட்சி செய்யும்படியாக, நண்ணி நின்றாய் - நீ அவனுக்கு அருள்புரிந்து நெருக்கமாய் நின்றாய், ஓர்ந்து - உன் பெருமையை யாராய்ச்சி செய்து, உந்தன் நகு அத்தாள் - விளங்குகின்ற உன்னுடைய அந்தத் திருவடியைப் பொருந்துவதற்காக, யான் அடைந்தேன் - யான் உன்பால் வந்து சேர்ந் தேன், (நீ எனக்கு அருள் செய்வாயாக!, எ - று

59. ஓர்ந்தண் டரையாளு முத்தமநற் கோசையனே
ஈர்ந்தண் டரையாளு மிந்திரையும—சேர்ந்திலகு
தூயத் திருக்கறுப்பா தோற்றியடி யேனுடைய
மாயத் திருக்கறுப்பாய் வந்து.

உரை :—ஓர்ந்து அண்டரை யாளும் உததம - தகுதியறிந்து விணணை வர்களை யாட்கொள்ளுகினற உததமனே !, நற் கோசையனே - நல்ல கோசைப் பதியிலுள்ள பெருமானே!, ஈாந் தண தரையாளும் இநதிரை யும் - மிகுந்த குளிர்ச்சியுடைய பூமிககு அதிபதியாகிய பூதேவியும் சீதேவி யும், சோாநது இலகு தூயத திருக கறுப்பா - ஒன்றுகூடித் திகழும் புனித மான அழகிய கரிய நிறமுடையவனே !, தோற்றி வந்து - எழுந்தருளி வந்து, அடியேனுடைய - ........., மாயத் திருக்கு அறுப்பாய - வஞ்சக மான குற்றத்தை யொழிததருள்வாய, எ - று.

60. சல்லடைக்கண் ணாகித் தளர்ந்தா ளருள்புரிவாய்
மல்லடையுங் கோசைநகர் வைகுந்தா—கல்லடையும
பாந்தளிரை தேர்காலான் பாணம வருத்துதலால்
மாந்தளிரை தேர்காலாண் மார்பு.

உரை :—மல்லடையுங கோசைநகர் வைகுந்தா - செழிப்பு நிறைந்த கோசைப்பதியி லுறைகினற வைகுந்தப் பெருமானே!, கல்லடையும் பாந் தள் இரை - மலையினினறு வருகின்ற பாம்பின் உணவாகிய, காலதேரான் - தென்றற் காற்றாகிய தேரினையுடைய மன்மதனது, பாணம் வருததுத லால் - அம்பு துன்புறுத்துவதினால், மாந தளிரை தேர் காலாள் - மாந் தளிரை யொத்த பாதமுடையவளது, மார்பு - மாாபானது, சல்லடைக் கண்ணாகித் தளர்ந்தாள் - அரிப்புக கணகள்போலத துளைககப்பட்டு மெலி தாள், அருள் புரிவாய் - அருளிச செய்வாயாக !, எ - று.

## விடு கவி

61. தூது மதுரை துவரை கடையிடைமுன்
ஓதுகின்ற மூவெழுத்து மொக்குமே—நீதி
செகராஜ சேகரன்வாழ் சிங்கையெனுஞ் செல்வ
நகரா யிழையார் நகை.

உரை :—நீதி செகராச சேகரன் வாழ் - நியாய நெறியில் நிற்கும் செகராச சேகர மன்னன் வாழ்கின்ற, சிங்கை யெனும் செல்வ நகர் - சிங்கைப் பதியாகிய வளநிறைந்த ஊரிலே உள்ள, ஆயிழையார் நகை - தெரிந்தெடுத்த நகைகளை யணிந்த பெண்களுடைய பல்லானது, தூது மதுரை துவரை கடையிடைமுன் ஓதுகின்ற மூவெழுத்தும் ஒக்குமே - தூது மதுரை துவரை யென்ற சொற்களில் இறுதியிலும் நடுவிலும் முதலிலுமுள்ள மூவெழுத்தும் குறித்தால் வருஞ்சொல் வருமோ அச்சொல்லைக் காட்டும் பொருளை யொப்பதாகும். (அதாவது முத்துப்போல்வதாகும்), எ - று.

62. காரங்க மேனிக் கருணைக் கடலான
சீரங்க நாதரே செல்வரே—நீரங்கே
அள்ளியுண்ட வெண்ணெய்க்கா வம்மை யடிப் பாளென்று
பள்ளிகொண்டாற் போமோ பயம்

உரை:—கார் அங்கமேனி - கரு நிறமுடைய உறுப்புக்களோடு கூடிய திரு வடிவத்தினராகிய, கருணைக் கடலான - கிருபா சமுத்திரமாகிய சீரங்க நாதரே - சீரங்கப் பெருமானே !, செல்வரே - ......, நீர் அங்கே அள்ளியுண்ட வெண்ணெய்க்கா - நீர் இடையர் சேரியில் எடுத்துத் தின்ற வெண்ணெய்க்காக, அம்மை அடிப்பாள் என்று - தாயார் உம்மை மோதுவா ளென்று இங்கே ஓடிவந்து, பள்ளிகொண்டால் - படுக்கையிற் படுத்துக் கொண்டால், பயம் போமோ - அச்சம் ஒழிந்து விடுமோ ?, எ - று.

63. மேயும் பசுவதனை வேங்கை யடித்ததென
ஆயனுரை செய்த தறியாயோ—மாயன்
விழிசுமக்குஞ் சோணகிரி வித்தகா நின்மேல்
பழிசுமக்கு நன்றாகப் பார்.

உரை:—மாயன் விழிசுமக்கும் சோணகிரி வித்தகா - திருமால் தன் கண்ணை மலராக அர்ச்சித்ததனால் அக் கமலமலரைத் திருவடியிற் சுமக்கும் திருவண்ணாமலையில் வீற்றிருக்கும் விநோதப் பெருமானே ! மேயும் பசு வதனை வேங்கை யடித்த தென - மேய்கின்ற பசுவதனைப் புலியடித்து விட்டதென்று, ஆயன் உரை செய்தது அறியாயோ - இடையன் உனக்குத் தெரிவித்ததை நீ அறிய மாட்டாயா ?, நின்மேல் பழி சுமக்கும் நன்றாகப்

பார் - அதைக் கவனியாவிட்டால் பழி யுமக்குண்டாகும் (ஆதலால் கவனிப்பாயாக), எ - று

குறிப்பு :—பசு வென்பதை இளம் பெண்ணெனப் பொருள்கொண்டு வேங்கையாகிய பொன்போன்ற பசலை படரப்பெற்று வருந்துவதைத் தூதர் உணர்ததவும், அப் பெண்ணைக் கவனியாது இருப்பது பழிக்கிடமாகு மென்றவாறு.

64. படைப்பானுங் காப்பானும் பார்க்கி லருணேசன்
படைப்பா னயனென்றல் பாவம்—படைக்கிலயன்
ஐந்தலையி லொன்றையர னறுத்த போதிலவன்
தன்றலையைப் பண்ணறியான் றான்.

உரை:—பார்க்கில் படைப்பானும் காப்பானும் அருணேசன் - ஆராயுமிடத்து உள்ளபடி எல்லாவற்றையும் படைப்பவனும் காப்பவனும் அருணாசலேசுரராகிய சிவபெருமானே யாவர், படைப்பான் அயன் எனறல் பாபம் - சிருட்டி செய்பவன் பிரமாவென்று சொல்லுதல் தவறு, அவன் படைக்கில் பிரமா முற்றிலும் படைக்கக் கூடுமானல், ஐந்தலையில் ஒன்றை அரன் அறுத்த போதில் - அவனது ஐந்து தலையில் ஒரு தலையைச சிவபெருமான் கிள்ளியபோது, அவன் தன் தலையைப் பண்ணறியான் தான் - கிள்ளப்பட்ட தன் தலையைப் பழையபடி யுண்டாக்கிக்கொள்ள அவனால் முடியாது போயிற்று, எ - று.

## பழநி வேலவர்மீது நிந்தாஸ்துதி

65. நாறுங் கடம்பு நடையுடையும் பாவனையும்
வீறுமுனக் கேன்பழநி வேலவா—ஆறுதனில்
வெட்டுண்டா னுங்களையன் வெண்ணெய்தனை யேதிருடிக்
கட்டுண்டா னுங்களம்மான் காண்.

உரை :—பழநி வேலா - பழநி வேலவரே!, நாறும் கடம்பும் - நல்ல வாசனையுடைய கடப்பம் பூமாலையும், நடையுடையும் பாவனையும் - கெம்பீரமான நடையும் பட்டுடையும் அழகிய தோற்றமும், வீறும் - இறுமாப்பும், உனககு ஏன் - ... , (ஏனென்றால்) உங்கள் ஐயன் - உனது தகப்பனார், ஆறுதனில் வெட்டுண்டான் - திருநெல்வேலியில மூங்கிலடியில் பால் இடையனபோகிற வழியிலிருந்து அவனால் வெட்டுப்பட்டார், உங்கள் அம்மான் வெணணெய்தனையே திருடி - உனது மாமனாராகிய திருமால் இடையர் சேரியில வெணணெயைத திருடிக் கட்டப்பட்டு அடிப்பட்டார காண் - அசை, எ - று.

## கணிகையர் கூற்று

66. பூங்கோதை மாதர் புனைகின்ற முத்தாரம்
வாங்கோங் குடிக்குவடு வென்றே—நாங்கள்
முலைக்கோ டணிவதெல்லா முக்கண்ணன் சென்னித்
தலைக்கோடு பட்ட தழும்பு.

உரை :—பூஙகோதை மாதர் புனைகின்ற முத்தாரம் - அழகிய கூந்தலை யுடைய இல்லறப்பெண்டிர் கண்ணிலிருந்து சிந்திய கண்ணீர்த் தொகுதி யாகிய முத்து வடத்தை, குடிக்கு வடுவென்றே வாங்கோம் - எஙகள் குலத்திற்குக் குறைவென்று நாங்கள் வாஙகுவதில்லை, (முலைமேல் கண்ணீர் சிந்துவதில்லை) நாங்கள் முலைக்கோடு அணிவதெல்லாம் - நாஙகள் முலைக் குவட்டின்மேல் அல்லது கொம்பின்மேல் அணிந்து கொள்வனவாயும், முக் கண்ணன சென்னி தலைக்கோடு - சிவபெருமான் தலையில் தரித்த மூன்றாம் பிறைபோன்ற நகக்குறி, பட்ட தழும்பு - பட்டதனா லுண்டாகிய வடுவே யாகும், எ - று

67. இவ்வரையு மாவிக் கிரங்குவோர் தாமில்லை
ஐவரையுங் காததவ னாதலினால்—மைவரைசெல்
வானிரங்கு முத்துகிருஷ்ண மன்னனது தொண்டை
மானிரங்கு வானென்றாண் மான்.

உரை :—மான் - என் மகள் கூறுவாள், இவ்வரையும் ஆவிக்கு இரங்கு வோர் தாமில்லை - இதுவரை என்னுடைய உயிருக்கு இரக்கம் வைப்பவர்கள் யாரையுங் காணேன், மைவரை செல்வானிரஙகு - கரிய மலைமேல தவழு கின்ற மேகமானது இரஙகிப் பெய்யக்கூடிய நாட்டையுடைய, முத்துக் கிருஷ்ண மன்னன் அது தொணடைமான - நமது தொண்டைமானாகிய முததுகிருஷ்ண வேந்தன், ஐவரையுஙகாதத அவன் ஆதலினால் - பஞ்ச பாணடவர்களைக் காப்பாற்றிய கண்ணன் அமிசமாதலினால், இரஙகுவான் என்றாள் - என்மீது இரக்கம் வைப்பானென்று கூறினாள், எ - று.

68. வாரிதாளஞ் சொரியமா மலையினூ டுருவிச்
சேரனமர் நாளடவுஞ் சேர்ந்ததே—மூரிமதன்
அமபோ டலைகின்ற வாயிழைக்கு நீகுதிரைக்
கொம்போ குலோத்துங்கா கூறு.

உரை :—குலத்துங்கா - குலத்துங்க சோழனே! அல்லது குலததிற் சிறந்த மன்னனே!, மூரிமதன் அமபோடு அலைகினற ஆயிழைக்கு - வலிமையுள்ள மன்மதனது கணையினாலே துன்புறுகின்ற மாதுக்கு, வாரி தாளஞ் சொரிய - கடல்போன்ற கணணனது முததுப்போன்ற கண்ணீ ரைத சிந்த, மாமலையின் ஊடுருவி - அக் கண்ணீரானது பெரிய வளம்

பொருந்திய முகத்தின் வழிவாகச்சென்று, சேரன் அமர் நாடு அளவும் சேர்ந்ததே - கொங்கைநாடு வரை யெட்டிற்று, நீ குதிரைக்கொம்போ கூறு - நீ அவளுக்குக் குதிரைக் கொம்புபோல அரியவனு யிருக்கின்றாயோ சொல்வாயாக, எ - று.

குயிலைப் பழித்தல்

69. தேமிருக்கு மாந்தளிரைச் செந்தீ வனமென்றும்
பூமுருக்கை யத்தீப்பொ றியென்றும—நாமிருக்கும்
மாப்படுமே யென்றெண்ணி வாடிமனந் தளர்ந்து
கூப்பிடுமே யந்தக் குயில்.

உரை :—அந்தக்குயில் - அழகிய குயில்கள், தேமிருக்கு மாந்தளிரைச் செந்தீவனமென்றும் - மணதோடுகூடிய மாமரதின் தளிர்த்தொகுதியை சிவந்த நெருப்புக காடென்றும, பூ முருக்கை - அதன் பக்கத்திலுள்ள முருககம்பூவை, அததீப்பொறி யெனறும் - ......, எண்ணி - நினைந்து, நாமிருகக மாப்படுமே என்று - நாம் வசிககினற மாமரம் தீயினு லழியு மென்று பயந்து, வாடி மனம் தளர்நது - ..... , கூப்பிடுமே - கூக்குர லிடுகின்றது, எ - று.

இதுவுமது

70. காமனூர் வீட்டினிலே கள்ளன் புகுந்தானே
சோமனைப் பாமபு சூழ்ந்ததோ—மாமரந்தான்
தீப்பட்டு வேகிறதோ தியாகேசர் நன்னாட்டில்
கூப்பிட்ட தேயக் குயில்.

உரை :—தியாகேசா நன்னாட்டில் அக்குயில் கூப்பிட்டதே - தியாக ராசப் பெருமானது செழிதத தேசததில் அநதக் குயில்கள் கூப்பாடு போட்டதறகுக காரணம, காமனூா வீட்டிலே கள்ளன் புகுந்தானே - மன் மதன் இலலததிலே திருடன் பிரவேசித்தானு, சோமனாரைப் பாம்பு சூழ்ந்ததோ - திஙகளை யிராகு சுற்றிக் கொண்டதோ; மாமரந்தான் தீப் பட்டு வேகுதோ - அக் குயிலகள் குடியிருக்கும் மாமரமானது நெருப்புப் பட்டு எரிகிறதோ தெரியவில்லை, எ - று.

71. செந்தமிழோ ருய்யவன்பு செய்யவந்த சோழவள்ளல்
சந்ததமுஞ் சேராநா டாழ்குழலே—வந்தனைசெய்
ஐங்கரனை வேலவனை யனறழற்கண் வந்தவனைச்
சங்கரனை வாசகிலையத தான.

உரை :—தாழ் குழலே - வளர்ந்து தாழ்கின்ற அளகத்தையுடைய தோழியே !, செநதமிழோா உய்ய அன்பு செய்யவந்த சோழ வள்ளல் -

செம்மையான தமிழ் வாணர்கள் நன்கு வாழும்படி அவர்களுக்கு ஆதர வளிக்கும்படி தோன்றிய சோழமன்னனாகிய கொடையாளன், சேரா நாள் - என்னைத் தழுவாத நாட்களில், சந்ததமும் - எப்போதும், ஐங் கரனை - ஐந்து கைகளையுடைய யானைமுகக் கடவுளையும், வேலவனை - குமரக் கடவுளையும், அன்று அழற்கண் வந்தவனை - சிவபெருமானது நெருப் புள்ள நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றிய வீரபத்திரக் கடவுளையும், சங் கரனை - சிவபெருமானையும், வாசுகியை - வாசுகியாகிய பாம்பையும், வந் தனை செய் - வணங்குவாயாக !, எ - று.

குறிப்பு:—கரும்பு வில்லை முறிக்க ஐங்கரனையும், கடலை யடைக்க வேலனையும், சந்திரனைத் தேய்க்க வீரபத்திரனையும், மன்மதனை யெரிக்க சங்கரனையும், தென்றலை யுண்ண வாசுகியையும் வணங்கு என்பது கருத்து.

## சேலத்தை யொரு புலவர் புகழ்ந்தது

72. சேலநக ரேமதுரை சீர்ச்செழிய னேசெழியன்
சாலவதி லுள்ளோரே சங்கத்தார்—சீலமிகும்
கம்பால தேவர் கடம்பவன வாசர்
தமபாரி மீனாட்சித் தாய்.

உரை:—சேலநகரே மதுரை - சேலமென்னும் பட்டினமே மதுரைப் பதி போல்வதாகும், சீர்ச செழியனே செழியன் - அங்கேயுள்ள புகழுடைய செழியனென்னும் வள்ளலே பாண்டியன் போலாவான், சால அதிலுள் ளோரே சஙகததார் - அதிற் சிறப்பாக விருக்கும் புலவர்களே சங்கப்புலவர்க ளாவார், சீல மிகும் கம்பால தேவர் - ஒழுக்கத்திற் சிறந்த கம்பால தேவ ரென்னும் பெரியவர், கடம்பவன வாசர் - கடம்ப வனததில வசிப்பவ ராகிய சோமசுந்தரக் கடவுளுக் கொப்பாவார், தம்பாரி மீனாட்சித தாய் - அவன் தேவி மீனாட்சியம்மைக் கீடானவள், எ - று.

## சிவ பக்தியின் பெருமை

73. மங்கையர்கள் மேனிமிசை வைத்திருக்கு மாசைதனைப்
பங்குசெய்து நூற்றிலொரு பங்கெடுத்துக்—கங்கைமதி
வேணியரன் பாதார விந்தத்தில் வைத்தாக்கால்
காணலாங் காணுக் கதி.

உரை:—மங்கையர்கள் மேனி மிசை வைத்திருக்கும் ஆசைதனை - பெண்களுடைய உடம்பினிடத்துக் கொண்டுள்ள இச்சையை, பங்கு செய்து நூற்றிலொரு பஙகெடுத்து - நூறு பஙகு வைத்து அதிலொரு பங்கை யெடுதது, கங்கை மதி வேணியரன் பாதார விநதததில வைததக் கால் - கங்கையையும் சந்திரனையும் அணிந்த சடை முடியையுடைய பரம

சிவனது திருவடித் தாமரையிற் செலுத்தினால், காணக்கரி காணலாம்-பிறர் காணமுடியாத வீட்டு நெறியை நாம் பெறலாம், எ - று.

நமச்சிவாயனென்னும் செல்வனை யிகழ்ந்தது

74. புட்டவல் பட்டாணி பொரிதேங் குழலப்பம்
மட்டவிழுந் தோசை வடையுடனே—சட்டமுடன்
ஓயாமற் சோறுகறி யுண்டையுண்டை யாயடைக்கும்
வாயா நமச்சி வாயா.

உரை:—புட்டு அவல் பட்டாணி பொரி தேங்குழல் அப்பம் - பிட்டு அவல் பட்டாணிக் கடலை நெற்பொரி தேங்குழல் என்னும் பணியாரம் அப்பம், மட்டு அவிழும் தோசை வடையுடனே - வாசனை கமழும் தோசை வடை முதலிய இவற்றோடு கூடி, சட்டமுடன் - முறையாக உணவுகளை ஏற்பாடு செய்துகொண்டு, ஓயாமல் - நீக்குப் போக்கில்லாமல், சோறு கறி- அன்னத்தையும் பலவகைக் கறிகளையும் உண்டை உண்டையா யடைக்கும் - உருட்டி உருட்டிப் போட்டு வயிற்றை நிரப்பும், வாயா - வாயினை யுடையவனே!, நமசிவாயா - நீயோ நமசிவாயன், எ - று

75. குச்சிலியர் மாதர்குய முங்குவல யத்தோர்
மெச்சுதமிழ் மாதர்வியன் முலையும—சிச்சீ
தெலுங்கமட மாதர்சிங் காரக கொங்கைக்
கலிங்கமென வேசொல் கவி.

உரை:—குச்சிலியர் மாதர் குயமும் - குச்சிலியப் பெண்களின் முழுவதும் மூடின தனங்களும், குவலயத்தோர் மெச்சு தமிழ் மாதர்வியன் முலையும் - பூவுலகினர் பாராட்டும் தமிழ்ப் பெண்களின நன்கு மூடாத பருத்த முலையும், சிச்சீ - வெறுப்பை விளக்கக்கூடியன வாதலால், தெலுங்க மடமாதர் சிங்காரக கலிங்கக் கொங்கையெனவே - இளைய தெலுங்கப் பெண்டிரது அழகு தெரியும்படி துணியினால் மூடியும் மூடப்படாமலுமிருக்கிற தனங்களைப்போல விருக்கும்படியாக, கவி சொல் - பாட்டு இயற்றுவாயாக!, எ - று.

குறிப்பு:—அழகும் பொருளும முற்றிலும் விளங்காமலும், வெற்றென விளங்கும்படியாகவும் பாடாமல் தெரிந்தும தெரியாமலு மிருக்கும்படியாகவும் பாட்டு கூறவேண்டு மென்பது கருத்து.

76. இங்கிருக்க வென்று லெமனெட்டா னிவ்விடமவிட்
டங்கிருக்க வென்று லயனெட்டான்—எங்குவைத்துப்
பேணுவே னிவ்வுடலைப் பித்தா பிறைசூடும்
தாணுவே சொக்க நாதா.

உரை:—பித்தா பிறை சூடும் தாணுவே சொக்கநாதா - பித்தனென்னும் பெயர் பெற்றவரே!, சந்திரனைத் தரித்த சுயம்பு மூர்த்தியே!, சொக்கலிங்கப் பெருமானே !, இங்கு இருக்கவென்றால் எமன் ஒட்டான் - இந்தவுலகத்தி லிருக்கலா மென்றெண்ணினால் எமன் அதற்கிடங் கொடுக்கமாட்டான், இவ்விடம் விட்டு அங்கு இருக்கவென்றால் அயன் ஒட்டான் - இந்தவுலகத்தை விட்டு அந்த வுலகத்திற் போய் நிலைவரமாக இருக்கலா மென்றால் அயன் மீளவும் பிறப்பிப்பதனால் அங்கிருக்க விடமாட்டான் இவ்வுடலை எங்கு வைத்துப் பேணுவேன் -......, எ - று.

77\. வெள்ளிமலை பொன்னின்மலை மேவமகிழ் வீடாகி
பிள்ளைகளோ புத்திசொலும் பிள்ளைகளாய்—தெள்ளுமுகம்
வாடா வடிவுடையாள் மாமனையா ளானக்கால்
ஆடாரோ வொற்றியப்ப னார்.

உரை :—வெள்ளி மலை பொன்னின்மலை மேவ மகிழ வீடாகி - கைலைமலையும் மேருமலையும் விரும்பி மகிழ்வோடு தங்கும்படியான இல்லங்களாகவும், பிள்ளைகளோ புத்தி சொலும் பிள்ளைகளாய் - புதல்வர்களோ தனக்கு அறிவுரை கூறக்கூடிய சிறந்த புதல்வர்களாகவும், தெள்ளு முகம் வாடா வடிவுடையாள் மா மனையாள் ஆனக்கால் - தெளிவான திருமுகம் வாடப் பெறாத அழகுடைய உமையம்மை பெரிய தேவியாகவும் அமைந்தால், ஒற்றி அப்பனார் ஆடாரோ - திருவொற்றியூர்ப் பெருமானாகிய தந்தையார் நடனஞ் செய்ய மாட்டாரா ?, எ - று.

உமாபதி சிவத்துக்கு அம்பலவாணர் எழுதிய திருமுகம்

78\. அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைச் சீட்டுப்—படியின்மிசைப்
பெற்றான் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை.

உரை:—அடியார்க்கு எளியன் சிற்றம்பலவன் - அன்பர்களுக்கு எளிதில அருள் புரிந்த பெரியோனான ஞானசபைப் பெருமான், கொற்றங்குடியார்க்கு எழுதிய கைச்சீட்டு - கொற்றவன் குடியிலிருக்கும் உமாபதி சிவாசாரியாருக்குச் சிறு சீட்டு விவரம் யாதெனில், படியின் மிசை - இவ்வுலகினில், பெற்றான் சாம்பானுக்கு - பெற்றான் சாம்பானென்னும் பறையனுக்கு, பேதமறத் தீக்கை செய்து - வித்தியாசமில்லாத ஞான தீட்சையைச் செய்வித்து, முத்திகொடுக்க முறை - வீடளித்தல் பொருத்தமாகும், எ - று.

79. பரம ரகசியத்தைப் பாழான வாயால்
இரவுபக லெந்நேர மின்றிக்—குரனெரியக்
கூப்பிட்டுங் காணுமோ கோலமட நெஞ்சேமால்
பூப்பிட்டுங் காணுப் பொருள்.

உரை:—கோலமட நெஞ்சே - கொண்டதே போற்றும் மூட மனமே!, மால் பூப்பிட்டும் காணுப்பொருள் - திருமால் பூமியைப் பிளந்துபோய்க் காண முடியாத பரம்பொருளாகிய, பரமரகசியத்தை - மிக அந்தரங்கமான கடவுளை பாழான வாயால் - வீண் வாயால், இரவு பகல் எந்நேரமும் இன்றி - இரவு பகலென்ற காலவரையரை யில்லாமல், குரல்நெரியக் கூப்பிட்டுங் காணுமோ - தொண்டை நெரியும்படியாகக் கதறினதினுல் காண முடியுமா !, எ - று.

கடலொடு கூறல்

80. காந்தனுக் கென்றன் கொடியகாம விகாரமெலாம
போந்தறிவித் தாலுனக்குப் புண்ணியமாம—சேர்ந்தோடும
தேளிபட வாடுந்திரைக் கடலேமன் மதன்கை
வாளிபட வாடு மனம்.

உரை:—சேர்ந்தோடும் தேளிபட ஆடும் திரைக்கடலே - கூட்டங் கூட்டமாய்ச செலகினற தேளி மீன்கள் கரையிற பொருந்தும்படி அசையும் அலைகளையுடைய சமுத்திரமே!, மன்மதன் கை வாளிபட மனம் வாடும்- காமன கைககணை பட்டு நெஞ்சந் தளர்கின்றது, காந்தனுக்கு எனறன் கொடிய காம விகாரமெலாம - என்னுடைய நாயகனுக்கு என்னுடைய பொல்லாத இசசை வேறு பாடுகளை யெல்லாம், போந்து அறிவிததால் உனக்குப் புணணியமாம் - நீ போய்த தெரிவிததால் உனககு நன்மை யுணடாகும், எ - று.

81. கம்பனென்றுங் கும்பனென்றுங் காளியொட்டக் கூத்தனென்
கும்பமுனி யென றும்பேர் கொள்வாரே—அம்புவியில் [றும
மனுவலர் புடைசூழ் வாழ்குடந்தை மாரியப்பன்
அந்நாளி லேயிருந்தக கால்.

உரை:—அம்புவியில் மன் நாவலர் புடை சூழ் வாழ் குடந்தை மாரியப்பன் - அழகிய பூவுலகில் நிலையான புகழுடைய கல்விமானகள் பககததிற் சூழ்ந்திருககப்பெற்ற கும்ப கோணததல் வாழுகினற மாரியப்ப னென்னும புலவன, அநநாளிலே இருநதக்கால - பெரிய புலவர்கள் வாழ்ந்த காலததில் வாழ்ந்திருநதால் கமபனென்றும் கும்பனென்றும் காளி யொட்டக் கூததனென்றும் கும்ப முனி யென்றும் போ கொள்வாரே - கம்பன்

கும்பன் காளி முத்து ஒட்டக்கூத்தன் அகத்தியரென்ற பெரும் புலவர்கள் கீர்த்தி யுடையவராக மாட்டார், எ - று.

82. மெய்ச்சரசமாகவிளை யாடும்வேளையிலே
கைச்சரசமென்றதல்லாற் கைச்சரசமென்றேனோ
அச்சனகியார்மீதி லாசைகொண்டராவணனைத்
தச்சுருவவாளிதொட்ட தாமோதரேந்திரனே.

உரை :—அச சனகியார் மீதில ஆசைகொண்ட ராவணனை - அந்த சீதா பிராட்டியாரிடத்தில் தவறான இச்சைகொண்ட இராவணன் உடம்பில் தசசுருவ - தைததது ஊடுருவும்படியாக, வாளி தொட்ட - கணை செலுத்திய, தாமோதரேந்திரனே - தாமோதரப் பெருஞ் செல்வனே !, மெய்ச சரசமாக விளையாடும் வேளையிலே - உடம்பு படும்படியாக விளையாடுஞ் சமயத்தில், கைச்சரசம் என்றதல்லால் - இது கைக்கலப்பென்று கூறினேனே அன்றி, கைச்சரசம் என்றேனோ - வெறுப்புச சுவைக்குரிய விளையாட்டு என்றேனோ, எ - று.

83. மீன்பார்த்துவிண்பார்த்து வேளையும்பார்த்தாள் வரவு
தான்பார்த்தெனைப்போற் சரிபார்க்கும்வெண்குருகே
மான்பார்த்துவாளிதொட்ட மால்சிவநாராயணனை
நான்பார்த்துமாதர்நகை பார்த்திருந்தேனே.

உரை :—மீன் பாாதது - குளததிலுள்ள மீனையும் கவவுவதற்கு நேரம் பார்தது, விண் பார்தது - ஆகாயததைபு நோககி, வேளையும் பாாதது - இன்னபொழுது இன்ன செய்யலாமென்று கருதி, ஆள் வரவுதான் பாாதது - மனிதா வருவதையும் நோக்கி, எனைப்போல சரிபாாககும் வெண் குருகே - எனைப்போல் காரியத்தை முடிககக கருதும் வெணணிற முடைய நாரையே !, மான் பார்தது வாளி தொட்டமால் சிவ நாராயணனை - மாய மானைக் குறி வைத்து அம்பு செலுததிய திருமாலமிசமான சிவ நாராயணனென்னும் வள்ளலை, நான் பார்தது - நானடையககருதி (அடையாமையால்) மாதர் நகை பார்த்திருந்தேனே - பிறபெண்கள் என்னைப்பார்த்துச சிரிப்பதை நான் பார்த்திருக்க லானேன், எ - று.

84. முல்லைமுல்லையாய்த்தொடுத்து மோகமதனெய்யவந்த
வில்லைவில்லையாய்நறுக்கி மெல்லமெல்லத்தாராயோ
இல்லை இல்லையென்றுசொல்லி யேற்கவருமபாவலர்கள்
தொல்லைதவிர்க்குங்களந்தைச் சுப்ரமண்யபூபதியே.

உரை :—இல்லை இல்லை என்று சொல்லி எற்க வரும் பாவலர்கள் - தஙகள் வறுமையை மிகுத்துக்கூறிப் பரிசு பெற வரும் கவிஞர்களுடைய, தொல்லை தவிர்க்கும் களந்தைச சுப்பிரமணிய பூபதியே - துயரததை

யொழிக்கும் திருக்களந்தையில் வாழ்கின்ற சுப்பிரமணிய மன்னனே !, முல்லை முல்லையாய்த் தொடுத்து மோக மதன் எய்ய வந்த விலலை - முல்லைப்பூவைத தன் வெற்றிக் கறி குறியாக அம்பாகச செலுத்துவதற்கு மயல் விளைக்கும் மன்மதன் உபயோகிக்குங கரும்பு வில்லினை வில்லையாய் நறுககி - வட்டத் துணடுகளாக நறுக்கி, மெல்ல - வாயிலிட்டுச் சுவைக்கும் படியாக, மெல்லத தாராயோ - மெதுவாகக் கொடுக்க மாட்டாயா, எ - று.

85. ஆயிரங்கண்ணுகமத னம்புமேலம்புவிட
ஈயிரங்குசெநதேனி ருலினங்கமானேனே
தாயிரங்கவேணபெண்க டாமிரங்கவானிரங்க
வேயிரங்கும்வாயா விசயரகுநாயகனே.

உரை :—ஆனிரங்க - பசுககள் மன முருகும்படியாக, வேயிரஙகும் வாயா - வேய்ங குழலை யூதும் வாயை யுடையவனே !, விசைய ரகுநாய கனே - விசைய ரகுநாத வள்ளலே !, தாயிரஙக - என் தாய் மனம் வருந் தும்படியாகவும், வேண பெண்கள் தாமிரஙக - மிகுந்த தோழிகள் வருந் தும்படியாகவும், மதன் அம்புமேல் அம்புவிட - மன்மதன் கணைகளைத் தொடர்ச்சியாக மிகவுஞ் செலுத்துவதால், அஙகம் - உடம்பானது, ஆயிரங் கணணுக - ஆயிரந் துவார முடையதாகவும், ஈ இரஙகு செந்தேன இருலினஙக மானேனே - தேனீக்கள் ஒலிக்கின்ற செந்தேன் கூடுபோல வும ஆனேன், எ - று.

86. கன்னலெனுஞ்சிறுகுருவி ககனமழைக்காற்றுமல்
மின்னலெனுமபுழுவெடுதது விளக்கேற்றுங்காரகாலம
மன்னவனூர்தென்மதுரை மாவலிவாணனைப்பிரிந்திங்
கென்னபிழைப்பென்னவிருப் பென்னநகைப்பினனமுமே.

உரை :—கன்னலெனும் சிறு குருவி - சிறு தூக்கணாங் குருவி, ககன மழைககு ஆற்றுமல் - வானில் நிறைந்த மேகஙகள் பொழியும் மழைக் காலதது இருளைப் பொறுக்க முடியாமல், மின்னலெனும் புழுவெடுத்து - மின்மினிப் பூச்சியைத் தூக்கிகொண்டு போய, விளககேறறுங கார் காலம - தனது கூட்டில் தீபமாக வைத்தற்குரிய மழைக காலததில், மன்ன வனும் தென்மதுரை மாவலிவாணனைப் பிரிந்து - அழகிய மதுரைககு அரசனாகிய மாவலி வாணனென்னும் வள்ளலை விட்டுப் பிரிந்திருத்தல், இஙகு என்ன பிழைப்பு - இவவிடத்தில் என்ன வாழ்வாகும், என்ன விருப்பு - எதை யாம் விரும்பககூடும், இன்னமுமே என்ன நகைப்பு - இன்னும் எதனைப் பார்த்து நாம் களித்தல் கூடும், எ - று.

## தலைவி கூற்று

87. கைத்தலத்தழற் கணிச்சி வைத்திடப்புறத்தொருத்தி
கட்கடைப்படைக்கிளைத்த திறலோராம்
முத்தலைப்படைக்கரத் தெமத்தர்சிற்சபைக்குணிற்கு
முக்கணக்கருக்கொருத்தர் மொழியாரோ
நித்திலத்தினைப்பதித்த கச்சறுத்தடிக்கனத்து
நிற்குமற்புதத்தனத்தி னிடையேவேள்
அத்திரத்தினைதொடுத்து விட்டுநெட்டயிற்கணைத்த
லக்கணுற்றிடச்செய்விக்கு மதுதானே.

உரை:—கைத்தலத்து அழல் கணிச்சி வைத்து - திருக்கரத்தினிடமாகத் தீயையும் மழுவையும் வைத்துக்கொண்டு, இடப்புறத்து ஒருத்தி கட்கடைப்படைக்கிளைத்த திறலோராம் - இடப்பாகத்தி லிருக்கின்ற உமையம்மையின் கடைக்கண்ணாகிய ஆயுதத்திற்குத் தோற்ற வலிமையை யுடையவராகிய, முத்தலைப் படைக்கரத்து எமது அத்தர் - மூன்று கிளையுடைய சூலத்தைக் கையிலேந்திய எமது தலைவரும், சிற்சபைக்குள் முக்கண்ணருக்கு - சிற்றம்பலத்தினின்று நடமாடும் மூன்று கண்ணையுடைய சோதி வடிவானவருமாகிய பெருமானுக்கு, நித்திலத்தினைப் பதித்த - முத்து மாலைகளை பதியப்பெற்று, கச்சறுத்து - விம்மி வாரினைக் கிழித்துக்கொண்டு, அடிக்கனத்து - புடை பரந்து, நிறகும் அற்புதத் தனத்தினிடையே - நிலைபெறுகின்ற எனது அதிசயமான முலைகளுக்கிடையில, வேள் அத்திரத்தினைத் தொடுத்துவிட்டு - மன்மதன் அம்புகளைச் செலுத்திப் பாயச்செய்து, நெட்டயில் கணைத்து அலக்கணுற்றிடச் செய்விக்கும் அதுதானோ - அந்த நீண்ட அம்புக் கூட்டத்தினால் துன்பப்படும்படி செய்கின்ற அச்செயலை, ஒருவர் மொழியாரோ - ஒருவரெடுத்துச் சொல்ல மாட்டாரா?; எ - று.

## பால் விற்கும் இடைச்சியரை நோக்கி யொருவன் கூறியது

88. சருப்பாலேபணையடித்துப் பனிநீர்தேக்கிக்
கதலிபலாக்கனியதனால் வரம்புகட்டும்
திருப்பாலைவாழீசர் பவனியாடுந்
தெருவிற்பால்விலைபகர்சிற் றிடைச்சியாரே
அருட்பாலோ பொருட்பாலோ காமப்பாலோ
ஆழிதனைக்கடைந்தெடுத்த வமுதப்பாலோ
இருப்பாலேமணமபடைத்தீர் நில்லீர்செல்லீர்
எந்தப்பால்விற்கவந்தீரியம்புவீரே.

உரை :—கருப்பாலே பணையடித்து - கரும்பைக்கொண்டு வயலை யடித்துப் பண்படுத்தி, பனி நீர் தேக்கி - பனி நீரை வயல் நிரம்ப நிற்கும்படியாகச் செய்து, கதலி பலாக் கனியதனால் வரம்பு கட்டும் - வாழைப்பழம் பலாப்பழம் முதலியவற்றின் தொகுதிகளைக்கொண்டு வயல்களுக்கு எல்லையமைக்கின்ற, திருப்பாலை வாழீசர் பவனியாடும் தெருவில் - திருப்பாலையில் வீற்றிருக்கின்ற பரமசிவன் திருவுலாப் போகின்ற வீதியில், பால விலை பகர் சிற்றிடைச்சியாரே - பாலின் விலை கூறுகின்ற நுண்ணிய இடையையுடைய இடைக்குல மகளிரே !, அருட்பாலோ பொருட்பாலோ காமப்பாலோ - அறம் பொரு ளின்பமென்னும் மூன்றின் பகுதிகளாகிய பால்களையோ, ஆழிதனைக் கடைந்தெடுத்த அமுதப்பாலோ - திருப்பாற் கடலைக் கடைந்தெடுத்த அமுதமாகிய பாலையோ, எந்தப்பால் விற்க வந்தீர் - எவ்வகையான பாலை விற்பதற்கு நீங்கள் வந்தீர்கள், இருப்பாலே மனம் படைத்தீர் - இரும்புபோல வல் நெஞ்சுடையவர்களே !, நல்லீர் - நல்லவர்களே !, செல்லீர் - போகாமல் நின்று, இயம்புவீரே - கூறுவீர்களாக !, எ - று.

வறுமை கூறல்

89. பூப்பார்த்துப்புகழ்பார்த்துப் பொருள்பார்த்துக்
கவிதைசொல்லும புலவோர்தங்கள்
நாப்பார்த்துக்கொடை கொடுக்குநல்லதம்பி
தந்தசொக்க நாதாவென்றல்
காப்பாற்றமுடியாது கையிலொருகாசுமில்லை
கடனென்றாலும
பார்ப்பாத்திசோறிடுவா ளிருந்தாலுமுறங்கமதப்
பயலொட்டானே.

உரை :—பூப்பார்த்துப் புகழ் பார்த்துப் பொருள் பார்த்து - நிலத்தின் வரவு கருதியும் புகழ் மிகுதியாக வுண்டாவது கருதியும் தனனிடத்திலுள்ள பொருளின் அளவை நோக்கியும், கவிதை சொல்லும் புலவோர் தங்கள நாப்பார்த்து - பாவலர்களின் சொல் வன்மையினை யளந்து பார்த்தும், கொடை கொடுக்கும் நல்லதம்பி தந்த சொக்கநாதா - பரிசளிக்கின்ற நல்ல தம்பி யென்பவரின புதல்வராகிய சொக்கநாதரே !, எனறால் காப்பாற்ற முடியாது - என்றால் என்னைச் சௌகரியமாகப் பாதுகாத்துக்கொள்ள முடியாது, கையிலொரு காசுமில்லை - ......, கடன் எனறாலும் - கடனாக வேண்டுமானாலும், பாரப்பாத்தி சோறிடுவாள் - சோறுசசாலை வைத்திருக்கிற பிராமணத்தி யன்னமிடக்கூடும், இருந்தாலும் மதப்பயல் உறஙக ஒட்டானே - அது அவவாறானாலும் மன்மதச சிறுவன் என்னைச சுமமா தூங்கவிடமாட்டான், எ - று.

உள்ளன்பொடு இட்ட கூழின் சிறப்பை யுரைத்தது

90. கெட்டசாறுதவிடுகஞ்சி கிருமியுண்டமாவறைக்
    கீரைவேர்தெளிந்தமோர் முறிந்தபாகுகிண்டிமா
இட்டசோறுகொழியலுப்பி டாதபுற்கையாயினும்
    எங்குமன்பதாகநுங்க வின்பமாயிருக்குமே
பட்டபாகுபசுவினெய் பருப்புமுக்கனிக்குழாம்
    பாளிதங்கடாளிதங்கள் பண்ணியாரவகையுடன்
அட்டபாற்குழம்புகன்ன லமுதமோடுமுதவினும்
    அன்பினோடளித்திடாத வசனமென்னவசனமே.

உரை :—கெட்டசாறு - சுவை கெட்டரசமும், தவிடு கஞ்சி - தவிடும் கஞ்சியும், கிருமி யுண்டமா - புழுப்பிடித்த பொரிமாவும், அறைக்கீரை வேர் - அறைக்கீரை வேரும், தெளிந்த மோர் - நீர் மோரும், முறிந்த பாகு - பதங் கெட்ட கருப்புக் கட்டிப்பாகும், மா கிண்டி இட்ட கொழியல் சோறு-வரகுமாவிட்டுக் கலந்த கொழியலரிசிச் சோறும், உப்பிடாத புற்கை யாயினும்-உப்பில்லாத கூழுமாகிய இக் கேவல வுணவுகளாயினும், எங்கும் அன்பதாக - எவ்விடத்திலும் அன்போடுகூடி யிடப்படுமானால், நுங்க இன்பமா யிருக்குமே - உண்ணுதற்கு அவை யினியனவா யிருக்கும், பட்ட பாகு - நன்று யமைந்த வெல்லப் பாகினையும், பசுவின் நெய் பருப்பு முக் கனிக் குழாம் - பசுநெய் பருப்பு வாழை பலா மாவென்னும் மூன்று வகைப் பழத்தொகுதிகள், பாளிதம் பாலன்னம், தாளிதங்கள் - தாளித்த உணவு வகைகள், பண்ணியார வகையுடன் - தின்பண்ட வகைகள் என்பவற்றினையும், அட்ட பால் குழம்பு - நன்றாகச் சமைத்த பாற்குழம்பு, கன்னல் - கற்கண்டு, அமுதமோடு உதவினும் - பாயச முதலியவற்றோடு உணவு அளித்தாலும், அன்பினோடு அளித்திடாத அசனமென்ன அசனமே - அன்போடு போடாத சோறு நல்ல வுணவாகாது, எ - று.

சிறப்புச் சிவத்தலங்கள்

91. தங்கவடகயிலாய முதலாமைந்து
    துளுவமொன்றுதொண்டைவள நாட்டெண்ணான்கு
தங்குநடுநாட்டிருபத் திரண்டுபொன்னித
    தலநூற்றுத்தொண்ணூற் மலைநாட்டொன்று
கொங்கேழுசிங்களத்தி லிரண்டுவையைக்
    குளிர்தமிழ்நாட் டீரேழுமேலாஞ்சூலச்
செங்கையார்தலமிருநூற் றெழுபானாறில்
    தென்பாகங்கயிலாயந் திருக்குற்றாலம்.

உரை :—துங்கவட கயிலாயம் முதலாம் ஐந்து - உயர்ந்த வடதிசை கயிலாய முதலிய ஐந்து தலங்களும், துளுவம் ஒன்று - துளுவ நாட்டிலுள்ள தலமொன்றும், தொண்டை வளநாட்டு எண்ணான்கு - செழிப்புள்ள தொண்டை நாட்டுத் தலங்கள் முப்பத்திரண்டும், தங்கு நடு நாட்டு இருபத்திரண்டு - நடு நாட்டிலுள்ள தலங்கள் இருபத்திரண்டும், பொன்னித் தலம் நூற்றுத் தொண்ணூறும் - காவிரிபாயும் சோழ நாட்டிலுள்ள தலங்கள் நூற்றுத் தொண்ணூறும், மலைநாட்டு ஒன்று - மலையாள நாட்டுத் தலமொன்றும், கொங்கு ஏழு - கொங்கு நாட்டுத் தலமேழும், சிங்களத்து இரண்டு - ஈழ நாட்டுத்தல மிரண்டும், வையைக்குளிர் தமிழ் நாட்டு ஈரேழும் - வையை நதி பாய்கின்ற தமிழ் நாடாகிய பதினான்கு மாக, மேலாஞ் சூலச் செங்கையார் தலமிரு நூற்றெழுபானாறில் - சூலந்தரித்த சிவந்த கையையுடைய சிவபெருமானது உயர்ந்த தலங்களாகிய இருநூற்றெழுபத்து நாலினில், தென் பாகங் கயிலாயம் திருக்குற்றாலம் - தென் பக்கத்துக் கயிலாயம் திருக்குற்றால மாகும், எ - று.

92. ஓதுமைந்திலொன்றிலைந்தி லொன்றுமன்னவன்பிதா
ஊர்திதொட்டோரேழின்மீதி லுற்றசாபநிருபனார்
தாதுகொண்டகோபிதாரன் தம்பிதம்பிதம்பிசேய்
தண்குடைப்பினைவன்மற் றலைக்கிரீடதுவசனார்
காதனண்பன்றந்தைபாகன் பின்னவன்பகைச்சுமைக்
கலையெடுத்தகையரையர் கதிபெறத்தவஞ்செய்தோன்
தீதிருளைகொண்டுவந்த சிலைவதிந்தபதியினான்
சிறமறிந்தவன்கொள்பாரி சேரிலாலுறைந்ததே.

உரை :—ஓதும் ஐந்தில் ஒன்று - பேசப்படுகின்ற ஐம்பூதங்களில் ஒன்றாகிய நிலம், ஐந்தில் ஒன்று - நிலத்தின் பகுதியாகிய ஐந்திணையுள் ஒன்று குறிஞ்சி நிலம், மன்னவன் - அந நிலததிற்குத் தலைவன் முருகன, அவன் பிதா - அவனுடைய தகப்பனாராகிய பரமசிவன், ஊர்தி - அவனுடைய வாகனம் இடபம; தொட்டோரா எழின மீதிலுறற - அதிலிருநது எழாவதாகிய விருச்சிகததிற் கடுத்தாற்போலுள்ள, சாப நிருபனா - தனுசுக்குத் தலைவனாகிய பரசுராமன், தாதுகொண்ட கோபிதாரன் தம்பி - வாசனைத் தூள் கலந்த சந்தனதூளணிந்த தசரதராமன் அவன் தம்பி, தம்பி தம்பி சேய் - அவன் தம்பியாகிய பலராமன் தமபியாகிய கண்ணனின் புதல்வனாகிய மன்மதன, தண் குடை - அவனுடைய குளிர்ந்த குடையானது திங்கள், பின் ஐவன் - திங்களுக்குப்பின் ஐந்தாவதுநாட் கிரகமாவது சனி, மற்று அலைக் கிரீடம் - அவன தலையிலுள்ள கிரீடம் பாம்பு, துவசனார்-பாம்பைக் கொடியாக வுடையவன் துரியோதனன், காதல் நண்பன் - அவனுடைய விருப்ப மிகக சிநேகிதன் கர்னன், தந்தை - அவன் தந்தை சூரியன், பாகன் - சூரியனது தேர்ப்பாகன் அருணன், பின்னவன் - அவன் தம்பி

கருடன், பகை - அவனுக்கு விரோதி ஆதிசேடன், சுமை - ஆதிசேடனுடைய பாரம் பூமி, கலை - பூமியின் ஆடை கடல, எடுதத கையர் - அக கடலை யெடுதது குடித்த கையையுடையவா அகததியா, ஐயா - அவா தகப்பனா பிரமா, கதிபெறத் தவஞ்செயதோன் - பிரம பதவியை யடைவதற்குத தவஞ் செயதவன் அநுமான், தீதில்தாதை - அவனுடைய குற்றமற்ற தகப்பனார் வாயுபகவான், அவன் கொண்டுவந்த சிலை - அவன் மோதியடிதது பிடுங்கிக்கொண்டுவந்த கல்லு மேருவின் சிகரம், வதிந்த பதியினான் - சிகரங்கள் போய்த தங்கிய விடததை யுடையவன் இராவணன், சிரம் அரிந்தவன - அவன் தலையை வெட்டியவன் இராமனாகிய திருமால், தொள் பாரி - அவன் மணந்த மனைவி இலக்குமி, சோ இல் - அவள் போய்ச சோகின்ற வீடு தாமரை, ஆல உறைந்ததே - அநதத தாமரைப்பூ ஆலமரத்தின் மேலிருந்தது, எ - று.

93. தொடுத்தமுத்தமிழுக் ககத்தியனெனவே
தோன்றியபுவனச்சே றையர்கோன்
சொலக்கணப்புலவ னிலக்கணக்கவியைத்
துதித்தகங்களித்திடுங் களியேம்
மடத்தினிற்புகுந்து மதுத்திறந்தவனார்
வடித்தகட் குடித்துநின்றவனார்
வறுத்தகட்கடித்துக் குதட்டுகின்றவனார்
மயக்கியுட் டியக்கமுற்றவனார்
கடுக்கனைமிடற்றி லொடுக்கிவிட்டவனே
கையிலே சிலம்பையிட்டவனே
கனத்தநூற்கொடியை நாவிலிட்டவனே
கண்ணிலே குழையையிட்டவனே
முடுக்கியவயிற்றி லாழியிட்டவனே
முகத்திரு பதக்கமிட்டவனே
முனைத்ததோளிருபான் சதங்கையிட்டவனே
முழுப்புரட் டவர்க்கலாதிலையே.

உரை :—தொடுதத முததமிழுக்கு அகத்தியன் எனவே - பாமாலையாகத் தொடுககப்பெற்ற இயல இசை நாடக மென்னும் முததமிழுககும் அகததியரென்று சொல்லும்படியாக, தோன்றிய புவனச சேறையா கோன் - உலகத்திலவதரித்த சேற்றூா மன்னன், சொல் அககணப்புலவன் - சொற்களின் தொகுதியை நன்றாக ஆராய்நத கல்வியாளன், இலக்கணக் கவியை - அவனது பாட்டு இயல்பு நிறைந்த பாடல்களை, துதித்து அகம் களித்திடும் களியேம் - போற்றி மனமகிழ்ச்சி யடைகின்ற களியர் நாங்கள், மடத்தினில் புகுந்து மதுததிறந்தவன் யார் - எங்கள் மடத்திலே புகுந்து

எங்கள் கட் குடத்தைத் திறந்தவன் யார், வடித்த கள் குடித்து நின்றவன் யார் - தயார் செய்த மதுவைக் குடித்தவன் யார், வறுத்த சுள் கடித்துக் குதட்டுகின்றவன் யார் - மதுபானத்திற்குத் துணையாகவுள்ள கருவாட்டு வறுவலைத் தின்று மெல்லுகின்றவன் யார், மயக்கியுந் தியக்கமுற்றவனார் - கள்ளினாலே மயக்கமடைந்து திட்டுமுட்டுப்படுகின்றவன் யார், கடுக்கனை மிடற்றில் ஒடுக்கி இட்டவனே - ஆரவாரிக்கின்ற விடத்தைக் கண்டத்தி லடக்கிவிட்ட பரமசிவனே, கையிலே சிலம்பை இட்டவனே - கையிலே மலையை யெடுத்துப் பிடித்த கோபாலனே, கனத்த நூல் கொடியை நாவிலிட்டவனே - மேன்மையான கல்விப் பெண்ணாகிய கலைமகளை நாவில் வைத்துக்கொண்ட பிரமனே, கண்ணிலே குழையை இட்டவனே - கண்ணிலே காதையுடைய ஆதிசேடனே, முடுக்கிய வயிற்றிலே ஆழி இட்டவனே - வயிற்றிற் கடலை யடக்கிய அகத்தியனே, முகத்து இருபது அக்கம் இட்டவனே - முகத்திலிருபது கண்களையுடைய இராவணனே, முளைத்த தோள இருபான் சதம் கை இட்டவனே - தோளில் முளைத்த இரண்டாயிரங் கைகளையுடைய வாணசுரனே, முழுப்புரட்டு அவர்கலாது இலையே - முழுத்தன்மையான சூழ்ச்சிகள் அவர்களுக்குத் தெரியுமேயல்லாது பிறர்க்குத் தெரியாது, எ - று.

94. பொன்முக நோக்கிமின் றன்முக நோக்குமுன் போயினனென்
றுன்னிட வீழ்ந்தனள்கை தொடவுய்ந்தன ளுன்னுடனே
பின்னும புணர்ந்திடமுன் னறிவுற்றிடப் பெற்றபிறப்
பென்னலமென் றனளேரகத் தான்மலையீர்ங் கொடியே.

உரை :— ஏரகத்தான் மலை யீரங்கொடியே - சுவாமிநாதப் பெருமானது மலையிலுள்ள குளிர்ந்த கொடிபோன்ற பெண், பொன் முகம் நோக்கி மின் தன் முகம் நோக்கும் - தலைவனது அழகிய முகத்தைப் பார்த்துப் பிற்பாடு தனதுடம்பையும் உற்று நோக்குவாள், முன்பு போயினன் என்று உன்னிட வீழ்ந்தனள் - தலைவன் தன்னைவிட்டு முன்பாகவே சென்று விட்டானென்று கேட்டவுடன் அயர்ந்து கீழே வீழ்ந்தாள், கை தொட உய்ந்தனள் - அவன் திரும்பி வந்து கை தொட்டவுடன் உயிர் பிழைத்தவள் போலானாள், உன்னுடனே பின்னும் புணர்ந்திட - உன்னோடு பிற்பாடு கலவியானபோது, முன்னறி வுற்றிட பெற்ற பிறப்பென்ன நலம் என்றனனே - முன்னமே உன்னை யறியும்படியாகப் பிறந்த சென்மம் எவ்வளவு நன்மையானதென்று சொன்னாள், எ - று.

## சமுத்திரராசன் கூறியது

95. நீறணிந் திருபரம சிவனுக் கணிந்துகொள
நிகரில் பிறை யொன் றீந்தனன்
நீலவண் ணன்றனக் கூதவுங் கூடக்கும்
நிலவுநற் சங்க மோடு

கூறரிய பூமாது தமமையீந் திட்டனன்
கோபதி தனக்கு நிதியும
குளிர்பஞ்ச தருவுமளி நற்காம தேனுங்
கொடுத்தனன் றேவர்கட்கு
மாறுநரை திரைமூப்பு வீவிவை யிலாததோர்
மாவமுத முங்கலைகடேர்
மன்னுமசு வனிதேவ ரிருவரையு மீந்தனன்
மாவுலகர் மீதிலன்பு
வீறுபெறவைத் திருக்கின்ற வெனையங்கைகொடு
விறன்முனிவ னுண்டபோது
மிகுகருணை கடலரச னுபகாரி யென்றொருவர்
விள்ளா திருந்த தென்னே

உரை :—நீறணிந்திடு பரமசிவனுக் கணிந்துகொள நிகரில் பிறை யொன்று ஈந்தனன் - திருநீறு தரித்த சிவபெருமானுக்குத் திருமுடியிற் சூடிக் கொள்வதற்காக ஒப்பற்ற சந்திரனை நான் கொடுத்தேன், நீல வண்ணன் தனக்கு ஊதவும நிலவுநற் சங்கமோடு - நீல நிறமுடைய திருமாலுக்குத் திருவாயில் வைத்து ஊதுதற்குப் பாஞ்சசன்னிய மென்ற சங்கத்தையும், கூடவும் கூறரிய பூமாது தம்மை ஈந்திட்டனன - மனைவியாகக் கூடுதற்குச் சொல்லுதற்கு முடியாத அழகுடைய தாமரைப்பூவில் வாழும் இலக்குமியையும் கொடுத்தனன், கோபதி தனக்கு நிதியும குளிர்பஞ்சதருவும அளிநற் காமதேனும் கொடுத்தனன் - இந்திரனுக்குச் சங்கநிதி பதுமநிதி யென்ற இருநிதிகளையும குளிர்ந்த கற்பகம் பாரிசாதம் சந்தனம் தேவதாரு மந்தாரமென்ற ஐந்து தேவ மரங்களையும் வேண்டியதைக் கொடுக்கின்ற காமதேனுவையும் கொடுத்தனன், தேவர்கட்கு மாறு நரை திரை மூப்பு வீவு இவை இலாததோர் மகா அமுதமும் - வேறுபாடான நரை திரை மூப்பு மரணம் இவைகளில்லாமல் செய்யவல்ல ஒப்பற்ற பெரிய அமுதத்தையும், கலைகள் தேர மன்னும் அசுவனி தேவர் இருவரையும் ஈந்தனன் - மருத்துவக்கலை முதலிய கல்வித் துறைகளில் தேர்ச்சிபெற்ற அசுவனிதேவ ரிருவர்களையும் அளித்தேன், மாவுலக மீதில் அன்பு வீறு பெற வைத்திருக்கின்ற எனை - பெரிய உலகத்தார் மீதில் சிறப்பான அன்பு வைத்திருக்கின்ற என்னை, அங்கைகொடு விறல் முனிவன் உண்டபோது - உள்ளங்கையில் உளுந்து அளவாகச் செய்து திறமையுடைய அகத்திய முனிவர் பருகினபோது, மிகு கருணை கடலரசன் உபகாரி என்றொருவர் விள்ளாது இருந்தது என்னே - மிகுந்த தயையுடைய சமுத்திர மன்னன் பல போககும் உதவி செய்தவனென்று ஒருவரும் அந்த முனிவனிடஞ் சொல்லா திருந்தது எதனால், எ - று.

## தலைவி கூற்று

96. வல்லெனச் சொன்முலை யில்லெனச் சொலிடை
வல்லியே யெனது வாய்மைகேள்
வளமிகுத்திடு விரிஞ்சைவாழ் கடவுள்
வருமுன் மன்மதன் பகைத்தெனைக்
கொல்லவே தனது தேரிலேறி முன்
குறுகினானவன் றேரினைக்
குலவு மங்குலுண் டுவகை யானபின்
கூறும் யானமிசை வந்தனன்
சொல்லு நூலிடை கண்டவ் வானையைத்
தோற் றிரிந்திட வென்றபின்
தூரமாகவே பூவிருந் தென்மேற்
சூத பாணமொன் றேவினான்
ஒல்லை வந்துமதி முகமுனக்கணை
ஒளியிழந் திகழ் குவியவே
ஓவியத்தைநிக ரொத்த நந்துணைவ
னுருவு கண்டுசென் றனரோ.

உரை :—வல்லெனச் சொல் முலை இல்லெனச் சொல் இடை வல்லியே - சொக்கட்டான் காயென்று சொல்லக்கூடிய தனங்களையும் இல்லை யென்று சொல்லக்கூடிய நுட்பமான இடையையுமுடைய கொடிபோன்ற பெண்ணே!, எனது வாய்மை கேள் - யான் சொல்லுகின்ற உண்மையைக் கேட்பாயாக!, வள மிகுத்திடு விரிஞ்சை வாழ் கடவுள் வருமுன் - செழிப்பு மிகுந்த விரிஞ்சைப்பதியில் வீற்றிருக்கும் சிவபெருமான் எனக்குத் தலைவ ராக வரு முன்பாக, மன்மதன் பகைத்தெனைக் கொல்லவே தனது தேரில ஏறி முன் குறுகினான் - காமக்கடவுள் என்னிடம் விரோதங்கொண்டு என்னைக் கொல்வதற்காகத் தென்றலாகிய அவனுடைய தேரின்மீது ஏறி வந்தான், அவன் தேரினைக் குலவும் அல்குல் உண்டு உவகையான பின் - அவனுடைய தேர் போன்ற கடிதடத்தில் தலைவர் புணர்ந்து மகிழ்ந்த பின், கூறும் யானை மிசை வந்தனன் - சிறப்பாகப் பேசப்படும் யானைமேல் அவன் வந்தான், சொல்லும் நூல் இடை கண்டு அவ்வானையை - நூலென்று சொல லக்கூடிய இடை சுமக்கின்ற யானையாகிய முலையை, தோல் திரிந்திட வென்ற பின் - தோல் திரையும்படியாக அழுத்திய பின் (அல்லது மன்மத னுடைய யானை தோற்று ஓடும்படியாக அதனை வென்றடக்கிய பின்) தூரமாகவே பூவிருந்து என்மேல் சூதபாணமொன்று ஏவினான் - தூரமாய் ஓடிப்போய் தாமரைப்பூமே லிருந்துகொண்டு என்மேல் மாம்பூவாகிய கணை யைச் செலுத்தினான், ஒல்லை வந்து மதிமுகம் உன- தலைவன் விரைவாக

வந்து சந்திரன்போன்ற என் முகத்தை விருப்பத்தோடு கருதிப்பார்த்த அளவில், கணை ஒளி இழந்து இதழ் குவியவே - பூங்கணையானது பிரகாச மற்றுக் கூம்பிப் போகவே, ஓவியத்தை நிகர் ஒத்த நம் துணைவன் உருவு கண்டு சென்றனன் - சித்திரம்போன்ற தம் தலைவனுடைய அழகிய உருவத்தைப்பார்த்து மன்மதன் ஓடிப்போயினன், அரோ - அசை, எ - று.

## விநாயகர் பவனி வருதல்

97. மாங்குயின்மொழி கொண்டவ னிதையே
 மாநிலத்தி லிலாத புதுமைகேள்
கோங்குசண்பகங் கொன்றைபொற் கூவிளம்
 கோதின் மாதெங்கு வாழை வருக்கைபார்
பாங்குபா னதிசூழுஞ் சேண்பாகைவாழ்
 பன்னும்வீதியில் யாவரும் பார்க்கவே
வீங்குமோரெலி மேலொரு யானைகொல்
 வெம்புலிப் பலகொண்டு நடந்ததே.

உரை:—மாங்குயில் மொழிகொண்ட வனிதையே மாநிலத்தில் இலாத புதுமை கேள் - மாமரத்திலுள்ள குயில்போலு மினிய சொல்லினையுடைய பெண்ணே! இந்த பெரிய உலகத்திலில்லாத ஒரு அதிசயத்தை நான் சொல்லுகிறேன் கேள், கோங்கு சண்பகம் கொன்றை பொற் கூவிளம் கோதில்மா தெங்கு வாழை வருக்கையார் - கோங்க மரமும் சண்பக மரமும் கொன்றை மரமும் அழகிய வில்வ மரமும் குற்றமற்ற மாமரமும் தென்னை மரமும் வாழை மரமும் பலாமரமும் பொருந்திய, பாங்கு பால் நதி சூழும் சேண்பாகை - கரையினையுடைய பாலாறு சூழப்பெற்ற சேண் பாகை யென்னும் ஊரில், பன்னும் வீதியில் - புகழப்படுகின்ற தெருவினில, வாழ் யாவரும் பார்க்கவே - வாழுகின்ற ஜனங்களெல்லாரும் தரிசிக்கும் படியாக, வீங்கும் ஓர் எலிமேல் - ஒப்பற்ற பெருச்சாளியின்மேல், ஒரு யானை - ஒப்பற்ற யானைமுகக் கடவுள், வெம்புலி பல கொண்டு நடந்ததே - விரும்பத்தக்க அறுகம்புல் மாலையை யணிந்துகொண்டு எழுந்தருளி வந்தனர், எ - று.

## பாதாதி கேசம் உருவகம்

98. பன்னுமோர்வனி கனுக்குறுந் துணைவர்
 பாரிலோர் புதுமை வஞ்சிகேள்
பசியதா மோர்கொடி யசையவேயிரு
 பதும மாமலர் வதிந்தன
துன்னுமம் மலரின்மேல் வராலுகள்
 தொக்க ஞெண்டதி விருக்கநீள்

துணைகுறங்கதனி லுற்றிருக்க மிசை
துஷ்ட நாகமொன் றுற்றதே
அன்னதின் மேலொரு சிங்கமே வவதில்
அளவிலா வெறும் பேறிமேல்
அடர்ந்த நாகமணி பணிகள் கொண்டவிரு
ஆரமார் மலையைத் தூக்கின
மன்னுமம் மலையிற் சங்கிருக்கவதில்
மதிய மொன்றுநகை காட்டவெம்
மதியின்மீது செற்றுரைத்தனஞ் செயும்
வகைசொல் வார்கள்கவி வாணரே.

உரை:—வஞ்சி பாரிலோர் புதுமை கேள் - வஞ்சிக்கொடி போன்ற பெண்ணே உலகத்திலோர் அதிசயம் சொல்கின்றேன் அதைக் கேள்!, பன்னுமோர் வணிகனுக்கு உறும் துணைவர் - ஒரு செட்டிக்குச் சிறப்பாகப் பேசப் படுதற்குரிய நெருங்கிய வாழ்க்கைத் துணைவரைப்பற்றி யான் சொல்லுகின்றேன், பசியதாம் ஓர் கொடி - பசுமையான ஒரு கொடியானது (அதாவது இளமையான ஒரு பெண்ணின் கொடிபோன்ற வுடம்பு) அசையவே இருபது மாமலா வதிந்தன - அசைந்து செல்வதற்குரிய இருதாமரைப் பூக்களின்மேல் அக்கொடி தங்கிற்று (அதாவது அப் பெண்ணுக்குப் பாதங்கள் இரண்டு தாமரை மலர்களை யொத்திருந்தன) துன்னும அம்மலரின் மேல் வரால் உகள - வரால் மீன்போன்ற கணைக்கால்க ளசைய, தொக்க ஞெண்டு அதிலிருக்க - நண்டுபோல இரண்டு முழங்கால்க ளிருந்தன, நீள் துணை குறங்கு அதனில் உற்றிருக்க - நீண்ட இரண்டு தொடைகள் அதிலிருந்தன, மிசை துஷ்ட நாகம் ஒன்று உற்றதே - அதற்குமேல் துஷ்டத்தனமுள்ள பாம்புபோல அல்குலிருந்தது, அன்னதின்மேல ஒரு சிங்கம் மேவ - அதன்மேல சிங்கம்போன்ற இடையிருக்க, அதில் அளவிலா எறும் பேறி - அளவற்ற எறும்புபோன்ற உரோம ஒழுங்கமைந்து, அடர்ந்த நாக மணிபணிகள் கொண்டவிரு ஆரமார் மலையைத் தூக்கின - நெருக்கமான நாகரத்தினங்களைப் பதித்த ஆபரணங்களை யணிந்த சந்தனம் பூசப்பெற்ற மலைகளைப்போன்ற இரண்டு முலைகளைத் தாங்கிற்று, மன்னும் அம்மலையில் சங்கிருக்க - நிலைபெற்ற அந்த தனங்களுக்குமேல சங்குபோன்ற கழுத்து அமைந்திருக்கவும், அதில் மதியம் ஒன்று நகைகாட்ட - அதற்குமேல் சந்திரன்போன்ற முகம் விளங்கவும், வெம் மதியின்மீது - விரும்பப்பெற்ற மதி போன்ற முகத்திற்கு மேலாக, செல் துரைத்தனம் செயும் - மேகம்போன்ற கூந்தலானது தலைமையாக அமைந்திருக்கும், வகை சொல்வார்கள் கவி வாணனே - இவற்றின் நயத்தைக் கண்டு சொல்பவர்கள் பாவலர்களே, எ - று.

99. மாறுளைந்திடு தாறு விட்டிடு
வாழை தாழைவன் மாழைசூழ்
மாநிலத்தினி லேயொ ரற்புதம்
வாய்த்த துண்டதை வஞ்சிகேள்
கூறுவாரண மொன்றினிற் றலை
கொண்டவாயிரம பாம்பின் மேல்
கூடியே நெடுநாள தாகவே
கோரசிங்க மிருந்து பின்
தேறுகாலை யளிக்க வஃதொரு
சரியோர் நரிமுன்பு போய்ச்
செகத்தில் யாவரு மறியொணா வகை
செய்த போரினை யென்சொல்வேன்
வீறுமந்நரி திட்டி பட்டிட
வெந்து சாம்பலாய் விட்டது
விருப்ப மோடிதை யுற்றுணர்ந்து
விளம்ப வல்லவர் புலவரே.

உரை:—மாறுளைந்திடு தாறு விட்டிடு - ஒன்றோடொன்று மாறாகப் பின்னிக் கிடக்கின்ற குலைகளைத் தள்ளிய, வாழை தாழை வன்மாழை சூழ் - வாழை மரங்களும் தென்னமரங்களும் மாமரங்களும் சூழப்பெற்ற, மா நிலத்திலே - பெரிய நாட்டில், ஓர் அற்புதம் வாய்த்தது உண்டு அதை வஞ்சி கேள் - ஒரு அதிசயமான கதை நடந்தது அதைப் பெண்ணே கேட்பாயாக !, கூறுவாரணம் ஒன்றினில் - சிறப்பாகப் பேசப்படும் ஐராவதம் போன்ற, தலை கொண்ட ஆயிரம் பாம்பின்மேல் - தலைக ளாயிர முடைய ஆதிசேடன்மீது, கூடியே நெடு நாளதாகவே கோர சிங்க மிருந்து - பொருந்தி நெடுநாளாக வீரமிக்க நரசிங்கமாகிய விஷ்ணு தங்கி, பின் தேறு காலை அளிக்க - தேள்போன்ற மன்மதனைத் தோற்றுவிக்க, அஃது ஒரு சரியோர் நரிமுன்பு போய் - அது நீதி செலுத்துகின்ற ஒப்பற்ற சம்புவின் முன்போய, செகதில் யாவரும் அறியொணா வகை செய்த போரினை என் சொல்வேன் - உலகத்தில் யாவருக்குந் தெரியாத முறையில் செய்த சண்டையை என்னென்று சொல்வேன், வீறும் அந் நரி திட்டி பட்டிட வெந்து சாம்பலாய் விட்டது - தனிச சிறப்புடைய அந்தச் சிவபெருமானின் நெற்றிக்கண் நோக்கமானது பட்டவுடன் மன்மதன் வெந்து சாம்பலாகி விட்டான், விருப்பமோடு இதை யுற்றுணர்ந்து விளம்ப வல்லவா புலவரே -......, எ - று.

100. திருநிறைந்திடு நளினவாவியு மருவழங்கிய சோலையும்
செம்பொனாலய முந்துலங்கிய சிகரகோபுர மதில்களும்
பரிதிமண்டல மளவுமண்டப வளமைகொள்பசு மாதைவாழ்
பசுபதீச்சுர னடிமையாகிய பாவையேசில புதுமைகேள்
அரிமகன்றிரு நாதன்மெச்சிய வஞ்சுதாய்மக னல்லவோ
ஆடுமாடுமெ டுக்கவந்தவ னப்பன்மைந்தனு மல்லவோ
நரியோரானையை யீன்றதும்பட நாகப்பாமபை யெடுத்ததும்
நண்டுமேலொரு சிங்கநின்றது நவவிசித்திர மாகுமே.

உரை:—திருநிறைந்திடு நளின வாவியும் - இலட்சுமிகரம் பொருந்திய தாமரைப்பூப் பொய்கைகளும், மரு வழங்கிய சோலையும் - வாசனை வீசுகின்ற பொழில்களும், செம்பொன் ஆலயமும் - சிவந்த பொன்னினாலமைக்கப் பெற்ற கோயில்களும், துலங்கிய சிகர கோபுர மதில்களும் - விளக்கமான முடிகளையுடைய கோபுரமும் பெரிய சுவர்களும், பரிதி மண்டல மளவும் மண்டப வளமைகொள் - சூரிய மண்டலததை யளாவுகின்ற மண்டபங்களும் நிறைந்திருக்கின்ற, பசுமாதை வாழ் பசுபதீசுரன் அடிமையாகிய பாவையே சில புதுமை கேள் - பசுமாதைப் பதியில் வாழ்கின்ற பசுபதீசுவர சுவாமியின் அடியாளாகிய பெண்ணே சில அதிசயங்களைக் கேட்பாயாக! அரிமகன் - அபிமன்னன், திருநாதன் மெச்சிய இலக்குமி கணவனாகிய கண்ணனால் புகழப்பட்ட, அஞ்சுதாய் மகனல்லவோ - பாஞ்சாலியின் புதல்வனல்லவா, ஆடு எடுக்க - நடனஞ் செய்வதற்காக, மாடு எடுக்க வந்த காளை வாகனததின்மேல் எழுந்தருளி வந்த, அப்பன - தந்தையாகிய சிவபெருமான், மைந்தன் அல்லவோ - மகா வீரனல்லவோ, நரி ஓர் ஆனையை ஈன்றதும - சம்புவாகிய சிவபெருமான் ஆனைமுகக் கடவுளாகிய விநாயகரைப் பெற்றதும், படநாக பாம்பை எடுததததும் - அந்த யானைமுகக கடவுள் நாகப் பாம்பைப்போன்ற வல்லபை சததியின நிதம்பததைதத துதிக்கையால் தொட்டதும், நண்டு மேல் ஒரு சிஙகம் நின்றதும் - முழஙகாலமேல இடையிருப்பதும், நவ விசிததிரமாகுமே - புதிய ஆசசரியஙகளாகும், எ - று.

101. பொன்னனைய தாமரைக்குப் போதான் போதப்
புளகிதமா மலர்மாரன் புரக்குமாமன்
முன்னவனன் மருகனவன் றந்தைதோழன்
மொழிக்கிணையா னுதியனக ருறையும் பூபன்
நன்வரையி லரிவையர்க்க மொன்றுமான
நம்மிரண்டு வாய்மூன்று நாமநான்கு
நுண்ணிடையைந் தூராறு விழிகளேழு
நூற்புலவீ ரிப்புதுமை நுவலுவீரே.

உரை :—பொன் அனைய தாமரைக்குப் போதான் - பொன்போன்ற தாமரைக்குப் பகைவனாகிய சந்திரனை, போத - உதிக்க, புளகிதமாம் - மகிழ்ச்சியோடு விரிகின்ற, மலர் - குவளை மலரையுடைய, மாரனை - மன்மதனை, புரக்கும் - பெற்றுக் காத்த, மா - திருமகளின் அமிசமான ருக்குமணியின், மன் - தலைவனாகிய கண்ணனது, முன்னவன் - அண்ணனாகிய பலராமனின், நன் மருகன் அவன் - நல்ல மருமகனாகிய முருகனுடைய, தந்தை தோழன் - தந்தையாகிய சிவபெருமானுடைய தோழனாகிய குபேரன், மொழிக்கு இணையான் - என்ற சொல்லுக்குத் தகுதியுடையவனாய, உதியன் நகர் உறையும் பூவன - பாண்டியனூராகிய மதுரையில் வாழ்கின்ற பூபதியின், நன் வரையில் - நல்ல மலைமீது, அரிவையர்க்கு அம் ஒன்றும் - பெண்ணுக்குத் தலை ஒன்றாவது ராசியைக் குறிக்கும் மை அதாவது மேகமாகும், ஆனனம் இரண்டு - முகமானது இரண்டாவது நாளைக் குறிக்கும் திங்கள் போன்றது, வாய் மூன்று - செவ்வாயாகும், நாமம் நான்கு - பெயர் உரோகணி, நுண் இடை ஐந்து - நுண்ணிய இடையானது ஐந்தாவது ராசியாகிய சிங்கம் போன்றது, ஊர் ஆறு - தொடை ஆறாவது இராசியாகிய கன்னி அதாவது வாழைத்தண்டைப் போன்றது, விழிகள் ஏழு - கண்கள் ஏழாவது இராசியாகிய துலாக்கோல் அல்லது அம்பு போன்றது, நூற் புலவீர் இப்புதுமை நுவலுவீரே - நூலாராய்ச்சியுடைய புலவர்களே இந்த அதிசயத்தைத் தெரிந்து கூறுங்கள் !, எ - று.

## புகையிலை

102. சீராருந் திருநெடுமா லானிரைப்பின்
புகையிலைக்காம் பெடுத்துக்கொண்டான்
வாராரு முலைபுமை சேரரனேசம்பு
கையிலைபில் வசிப்பதானான்
சீராரு மக்கினிக்குப் புகையிலையே
யென்றாற்பின் சீவன்போகும்
பேராரும் புகையிலைதன் பெருமைதனை
யெவராலும் பேசொணாதே.

உரை :—சீராருந் திரு நெடுமால் ஆனிரைப்பின் புகையிலைக் காம் பெடுத்துக்கொண்டான் - சிறப்பு பொருந்திய திருமாலமிசமான கண்ணன் பசுக்கூட்டத்திற்குப் பின்னே செல்லுகையில் அவற்றை யோட்டுவதற்கு மூங்கிற்கோலைக் கையிற்கொண்டான், வார் ஆரும் முலைபுமைசேர் அரனே சம்பு கையிலையில் வசிப்பதானான் - கச்சு நிறைந்த தனங்களையுடைய உமையம்மையின் கணவனாகிய சம்பு கைலை மலையில் வாழ்கின்றவனானான், சீராரும் அக்கினிக்குப் புகையிலையே என்றால் பின் சீவன் போகும் - சிறப்பு பொருந்திய நெருப்புக் கடவுளுக்குப் புகையில்லையானால் உயிரில்லையாகும்,

பேராரும் புகையிலைதன் பெருமைதனை எவராலும் பேசொணாதே - பேர் போன புகையிலையின் பெருமையை யாவராலும் அளவிட்டுச் சொல்ல முடியாது, எ - று.

## திருமாலுக்கும் தட்டானுக்கும் சிலேடை

103. பொன்னுடனே தினமபழகிக் குழல்வா யூதிப்
போந்துருக்கு மணிசேர்த்துப் படியுங்கொண்டு
மின்னு'மா தங்கமதை நிறுத்து மச்ச
வேலையிலே வரையெடுத்து விரும்பி நாளும்
மன்னுகணை யாழிசங்கு வட்டங் காட்டி
வடிவுளசிற் றிடைச்சிகளை வணக்கையாலே
அன்னசத்ர சோமனக ரழகன் றன்னை
அலங்காரப் பொற்கொல்ல னென்னலாமே.

உரை :—பொன்னுடனே தினமபழகி - இலக்குமியோடு நாள்தோறும பயின்று, குழல் வாய ஊதிப் போநது - பசுக்களை யழைப்பதற்காகப் புல்லாஙகுழலை வாயில் வைத்தூதிச சென்று, ருக்குமணி சேர்தது - உருக்குமணியை மனைவியாகச சோத்துககொண்டு, படியும் கொண்டு - பூமியையும் வயிற்றுட்கொண்டு, மாதஙக மதை நிறுதது - யானையைக் காப்பாற்றி, வேலையிலே மின்னும் மசசம - சமுத்திரத்திலே மின்னுகின்ற மசசமாக அவதரிதது, வரை எடுதது - கோவர்த்தன கிரியைக் குடையாக எடுத்துப் பிடிதது, விரும்பி நாளும - விருப்பதேதோடு எந்நாளிலும், மன்னு கணை ஆழி சஙகு வட்டம் காட்டி - அம்பு சககரம் சஙகு வளைதடி என்பனவற்றைத திருககரஙகளில் வைத்துக காட்டி, வடிவுள சிற்றிடைசசிகளை வணககையாலே - அழகிய சிறு இடையுடைய கோபிகாஸ்திரீகளை தன் கைகளால் வளைப்பதினாலே, அன்ன சதர சோமன் நகா அழகன் தன்னை - அன்ன சத்திரம் வைதத சோமனுடைய பதியில வீற்றிருக்கும் அழகனாகிய திருமால்,

பொன்னுடனே தினம் பழகி - பொற்கொல்லன் பொன்னைககொண்டு தினந்தோறும் வேலைசெயது, குழல் வாய ஊதி - ஊதுகுழல் வாயிலாக நெருப்பை யூதி, உருககுமணி சோத்து - இரததினஙகளோடு உருகுகின்ற தஙகததைச சேர்தது, படியும் கொணடு - கட்டளைப் படிக்கல்லை வைத்து, மின்னும் மாதஙகமதை நிறுதது - மின்னுகின்ற பெரிய தஙகத்தைத தராசில் நிறுத்து, மசசம் எடுத்து - பொன் மசசமெடுதது வைத்து, வேலையிலே வரை எடுத்து - தொழிலிலே அளவு எடுதது, விரும்பி நாளும் கணையாழி சங்கு வட்டம் காட்டி - விருப்பமாக ஒவவொரு நாளும் நிலைபேறுள மோதிரம் சஙக வளையல்கள முதலியவற்றைச செய்து காட்டியும் - சேதாரம் சாட்டியும், வடிவுள சிற்றிடைச்சிகளை வணக்கையாலே - அழகான சிறிய

இடையுடைய பெண்கள் நகை விரும்பிச் சூழவதினாலே, அலங்கார பொற் கொல்லன் என்னலாமோ - அணி செய்யும தட்டானென்று சொல்லலாம், எ - று.

104. பஞ்சலக்ஷண மதனிலோ ரிலக்கணமேழு
பாரையடியா லளந்த
பகவனது பேர்கொண்டு பாண்டிமா நகர்தனைப்
பார்த்துக்கை யால்வளைத்து
அஞ்சக் கரக்கடவு ளணியினது பெயர்மறந்
தயனூர்தி பெயர்வெறுத்து
யானையின் பெயராகி மதனவேள் போர்கிலக்
காயினள் வந்தணைகுவாய்
வஞ்சியிடை முன்சொன்ன தனிலொன்று குழல்பின்
வகுத்தமொழி தன்னிலொன்று
வாருண்முலைராசி தனிலொன்று பல்லோர்நிலம
வதனமகபதி மனைவிபேர்
கொஞ்சுமொழி யானதுசவுக்கியப் பெயர்பெற்ற
குருவியிதழோர் பிரபந்தம்
குணமாண்டி லொன்றுநற் கோவளம் வாழும்
குபேரசங்கர லிங்கனே.

உரை :—கோவளம் வாழும் குபேர சங்கரலிங்கனே - கோவளத்தில் வாழும் குபேரனை போன்ற செல்வமுடைய சங்கரலிங்க வள்ளலே!, பஞ்ச லட்சண மதனிலோர் இலக்கணம் - ஐந்திலக்கணம் கூறும் யாப்பிலக்கணங் களி லொன்றாகிய காரிகை (அதாவது பெண்) பாரை யடியாலளந்த பகைவ னது பேர் கொண்டு - ஏழுலகையும் திருவடியாலளந்த கடவுளுடைய பெயரை அதாவது மால்கொண்டு, பாண்டிமாநகர்தனைப் பார்த்துக் கையால் வளைத்து - சுழி கூடல் கைவிரலினு லிழைத்துப் பார்த்து, அஞ்சக்கரக் கடவு ளணியினது பெயர் மறந்து - பஞ்சாட்சரத்தை யுடையவராகிய சிவ பெருமான் அணிகின்ற ஆபரணமாகிய பாம்பை அதாவது பணியை மறந்து, அயன் ஊர்தி பெயர் வெறுத்து - பிரமாவின் வாகனமாகிய அன்னத்தை அதாவது சோற்றை வெறுத்து, யானையின் பெயராகி - யானையின் பெய ராகிய அத்தி அதாவது எலும்பாய்ப் போய், மதன வேள் போற்கு இலக் காயினள் - மன்மதனுடைய சண்டை செய்வதற்குக் குறியாயினள், வந்து அணைகுவாய் - வந்து அவளைத் தழுவுவாயாக, வஞ்சியிடை முன் சொன்ன தில் ஒன்று - பெண்ணிடையானது முன் சொன்ன காரிகை அதாவது நூல் போன்றது, குழல் பின் வகுத்த மொழி தன்னிலொன்று - அவளுடைய கூந்தலானது பின் சொன்ன மால் அதாவது மேகம் போன்றது, வாருள

மூலே ராசிதனி லொன்று - அவள் கசசக்குள்ளாக இருக்கின்ற தனமானது இராசிகளி லொன்றாகிய கும்பம் போன்றது, பல் ஓர் நிலம் - அவளுடைய பல்லானது ஐவகை நிலஙகளி லொன்றாகிய முல்லே போன்றது, வதனம் மகபதி மனைவிபேர்-அவளுடைய முகமானது இந்திரன் மனைவியாகிய சசி அதாவது சந்திரன் போன்றது, கொஞ்சு மொழியானது சவுக்கியப் பெயர் பெற்ற குருவி - அவள் கொஞ்சிப் பேசுஞ் சொல்லானது சுகம் அதாவது கிளியின் மொழி போன்றது, இதழ் ஓர் பிரபந்தம் - அவளுடைய உதடானது மடல் அதாவது தாமரை யிதழ்போன்றது, குணம் ஆண்டில் ஒன்று - அவளுடைய குணமானது (சுபகிருது) சுபமான தன்மையுடையது, எ - று.

105. பங்கயத் திருமடந்தை மேவிய படீர
குங்கும புயாசலன்
பனசநாத னருளாளன் மெச்சுதமிழ்
பாடியாடி வருகளியரோம்
திங்களொத்த நிழலெங்கள் பஞ்சமிதெளிந்த
பூசையி னலத்திலே
சேரவே மதுவைத் தெளியவிட்டபடி
செப்புவார்கள் கவிவாணரே
கங்கை பெற்றமகன் வாலிவாலிதரு
காளைவாளபின னல்லவோ
காமனுக்குவிழி யாயிரங்கமு
கப்புவிட்டது குடத்திலே
மங்கையர்க்கு முலேகாலலே யெருமை
வாலிலே பனைபழுத்ததும்
மல்லிகைக் கொடியை யானைதின்றொரு
மருப்புமாவினை யளித்ததே.

உரை :—பஙகயத திருமடநதை மேவிய படீர குங்கும புயாசலன் - தாமரைப் பூவிலிருககும் இலககுமி பொருந்திய செஙகுஙகும மணிந்த புயஙகளை யுடையவனுகிய, பனச நாதன் அருளாளன் - பனசை நகாக் கதிபதியாகிய கொடையாளியை மெசசு தமிழ்ப் பாடியாடி வருகளியரோம் - புகழ்கின்ற தமிழ்ப்பாடலேப் பாடி ஆட்டமாடி வருகின்ற களிப்புடையோம் நாஙகள், திஙகளொத்த நிழல் எஙகள் பஞ்சமி தெளிந்த பூசையின் நலத்திலே சேரவே - வளர்பிறைப் பஞ்சமியிலே நாஙகள் செயகின்ற பூசையில் நலத்திலே சேரும்படியாக, மதுவைத தெளிய விட்டபடி செப்புவாாகள் கவிவாணரே - கள்ளினைத் தெளிவாக எடுக்கின்ற முறையைப் புலவர்கள் கூறுவாாகள், கஙகை பெறற மகன் வாலி - கஙகையின் புதல்வன் பரிசுத்தனுகிய பீஷ்மன், வாலிதரு காளைவாள் அபினனல்லவோ - வெள்ளை நிறமுடைய

பாண்டுவின் புதல்வன் ஒளியுடைய அர்ச்சுன னல்லவா ?, காமனுக்கு விழி யாயிரம் - கற்பகக் காவினுக்குத் தலைவனாகிய இந்திரனுக்குக் கண்களாயிரம், கம் உகு அப்பு விட்டது குடத்திலே - மேகமானது சொரிகின்ற நீரை குடத்திலே விட்டது மங்கையர்க்கு முலை காலலே - பெண்களுக்குக் கற்பு முளைத்தது, எருமை வாலிலே - கவரிபோன்ற வெள்ளிய கூந்தலுண்டான போது, பனை பழுத்ததும் - பார்வதி பூப்படைந்ததும், மல்லிகைக்கொடி- பார்வதியை, ஆன் ஐ - காளைகுத தலைவனாகிய சிவபெருமான், தின்று - கூடி, ஒரு மருப்பு மாவினை யளித்ததே - ஒன்றைக கொம்பையுடைய யானைமுகக் கடவுளை யளித்தார, எ - று.

## சிவபெருமான்மீது நிந்தாஸ்துதி

106. தேவரீ ருமது துர்க் குணமதனைச் செப்பிடத்
தொலையுமோ தொண்டன்
சிறுவனை வதைத்தீர் மறலியை யுதைத்தீர்
செமமன்மைத் துனனையுங் கொன்றீர்
வாவெனு மாமன்ற லையறுப் பித்தீர்
மாமியைக் காதறுப்பித்தீர்
மருமகன் றலையைத் திருகினீ ரவனு
மகளையு மூக்கறுப்பித்தீர்
தாவுசேர் புரத்தை நீறெழச் சுட்டீர்
சமபரன் றன்னையு மெரித்தீர்
தாருகா வனத்துவி ருடிகடங் கடையலர்
கற்பையுங் கெடுத்தீர்
மேவிய வுமமைப் பசுபதியென்று மேதினி
சொல்லவு மானீர்
வித்தக நித்தா வத்தனே யீசா விமலனே
யமலநா யகனே.

உரை:—வித்தக நித்தா அத்தனே ஈசா விமலனே யமல நாயகனே - அறிவுடைய நித்தியப்பொருளே!, எவ்வுயிர்க்குந் தந்தையே!, முதல்வனே!, குற்ற மற்றவனே!, பார்வதி பதியே!, தேவரீர் உமது துர்க்குண மதனைச செப்பிடத் தொலையுமோ - சுவாமியே உமது தீய வியல்புகளைச சொன்னால் முடிவுறுமோ, தொண்டன் சிறுவனை வதைத்தீர - சிறுதொண்டனுடைய பிள்ளையை நீர கொன்றீர, மறலியை யுதைத்தீர் - இயமனைக காலாலுதைத் தீர, செம்மல் மைத்துனனையுங் கொன்றீர - ஆண்மை யுடையவனாகிய திரு மாலைத் தக்கன் யாகத்தில் மடியச செய்தீர, வாவெனும் மாமன் தலை யறுப் பித்தீர் - வாவென்று உம்மை யழைத்த மாமனாகிய தக்கனை வீரபத்திர

னல் கொல்வித்தீர், மாமியைக் காது அறுப்பித்தீர் - அவன் மனைவியைக் காதை யிழக்கும்படி செய்தீர், மருமகன் தலையைத் திருகினீர்-திருமாலின் மகனும் உமது மருமகனுமாகிய பிரமாவின் ஒரு தலையைக் கொய்தீர், அவன் நாமகளையும் மூக்கறுப்பித்தீர் - அவன் நாவில் வீற்றிருக்கும் சரசுவதியையும் தக்கன் யாகத்தில் மூக்கினை யிழக்கும்படி செய்தீர், தாவுசேர் புரத்தை நீறெழச் சுட்டீர் - வலிமையுடைய திரிபுரத்தைச் சாம்பலாகும்படி எரித்தீர், சம்பரன் றன்னையும் எரித்தீர் - சம்பராசுரனையும் அழித்தீர், தாருகா வனத்து விருடிகள் தங்கள் தையலர் கற்பையுங் கெடுத்தீர்-தாருகா வனத்து முனிவர்களுடைய பெண்டிர் உம்பால் மோக முறும்படிசெய்து அவர்களுடைய கற்பையு மழித்தீர், மேவிய உம்மைப் பசுபதியென்று மேதினி சொல்லவும் ஆனீர் - இச்செயல்கள் செய்யும் தன்மை பொருந்திய உம்மைப் பசுக்களாகிய உயிர்களைக் காக்கும் தலைவனென்று உலகத்தார் புகழவும் பெற்றீர், எ - று,

## மாதர் கலவி வர்ணனை

107. ஏகவெண் கவிகைநிழ லிலமபுவிய
லேகவென் றையமெனச்செயும
இராமசே துரகு நாதபூபன் மிகு
ரவிகுலாதிப துரந்தரன்
கோகமண் டலமெனக் குளிர்ந்ததுலைராய
தொண்டைம ளைிதமால்
கோடியத்தரகு ராமனுக்கிளைய குமணன்
மேவியுறை வரைமினுர்
மேகமண்டல மசைந் தசைந்துநல
சந்த்ரமண்டல மறைந்தது
மேருமண்டல மசைந்த போதுவட
விருக்ஷமொன் றுமிசை நின்றது
நாகமண்டல மசைந் தசைந்தமுத
சலதிபொங்கமல ரணையின்மேல்
நாலுமண்டல மசைந்தபோதுபதி
னலுமண்டல மசைந்தவே.

உரை:—ஏகவெண் கவிகை நிழலில் - தனது ஒற்றை வெண் கொற்றகுடை நிழலின் கீழ் அதனொளியில், அம்புவி அலேக ஏகவென்று ஐயமெனசசெயும - அழகிய பூமியானது வெள்ளேடோ வென்று சந்தேகப்படும்படி செய்யும், இராமசேது ரகுநாத பூபன் - இராமர் கட்டிய சேதுவைக் காக்கும் ரகுநாத பூபதியும், மிகுரவி குலாதிப துரந்தரன் - சூரிய

குலத்திற் கதிபதியாய் அதனைப் பேணுபவனுமாகிய, கோக மண்டலமென குளிர்ந்த - சந்திர மண்டலமெனக் குளிர்ச்சியுடைய, துரைராய தொண்ட மன் அளித்தமால் - துரைராயனென்னும் தொண்டைமான் பெற்ற மன்ன னுகிய, கோடி அத்த ரகுராமனுக்கு இளைய குமணன் மேவியுரை வரை மினர் - கோடி பொன்னுடைய ரகுராமனுக்குத் தம்பியாகிய குமண வள் ளலது மலையிலுள்ள பெண்களுடைய, மேக மண்டலம் அசைந்தசைந்து நல சந்த்ர மண்டலம் மறைந்தது - கூந்த லசைந்தசைந்து நல்ல சந்திர மண்டலம்போன்ற முகமானது மறைவுற்றது, மேறு மண்டலம் அசைந்த போது வடவிருக்ஷ மொன்று மிசை நின்றது - மேரு மண்டலம் போன்ற தனங்களசைந்தபோது ஆலவிருட்சம் போன்ற உரோம ஒழுங்கு அதன் மீது காணப்பெற்றது, நாலு மண்டலம் அசைந்தசைந்து அமுத சலதி பொங்க - கடிதம் அசைந்தபோது சுரதநீர் பொங்கவும் மலரணையின்மேல் நாலு மண்டலம் அசைந்தபோது பதிஞலு மண்டலம் அசைந்தவே - பூம் படுகையில் கூந்தல் முகம் தனம் கடிதடம் என்னும் நாலு பகுதிகளும் அசையவே பதினன்கு லோகமும் மயல்கொண்டு ஆடின, எ - று.

இதுவுமது

108. ஏருடைக்கவி வாணருக்கு மிரப்பவர்க்கு நிரந்தரம்
இன்றுநாளை யெனுமலீயு மிராக்கதச்சொற் பராக்ரமன்
வீரவிக்ரம விசயராயன் விளங்குசாரல்வரை மெல்லியார்
மேவிவாழு மநுராக போகவிசித்ர மாகியவேளையில்
தாரகைக்குல முதிரவும்வட மேருபொற்கிரி யசையவும்
தாகவேலை சிவப்பவுமமதி தன்னைவந்திருண் மூடவும
காரணக்குறி யானதிப்படி காசினிக்கிது புதுமையே
காஞ்சிசூழு தலத்திலேமிகு கலகமுள்ளது காணுமே.

உரை :—ஏருடைக் கவிவாணருக்கும் இரப்பவர்க்கும் - அழகான கவி கள் பாடும் புலவர்க்கும் யாசகர்கட்கும, நிரநதரம் - எககாலததிலும், இன்று நாளை எனுமல் ஈயும் - இன்றைக்கு வாருஙகள் நாளைககு வாருஙகளென்று சொல்லாமற் கொடுககின்ற, கதம் இராசசொல் பராக்கிரமன் - கோப மில் லாதவனென்று பேர் பெறற வீரனுகிய வீர விககிரம விசயராசன் - பராக் கிரமத்தையுடைய விசயராசனென்னும் வள்ளலது, விளங்குசாரல் வரை மெல்லியார் - விளக்கமான பக்கஙகளையுடைய மலையில் வாழும் மென்மைத் தன்மையுடைய பெண்டிர்கள், மேவி வாழும் அநுராக போக விசித்திர மாகிய வேளையில் - விரும்பிக் காதல் வாழ்கையை அனுபவிக்கும் அரிய சமயத்தில், தாரகைக்குலம் உதிரவும் - நட்சததிரம்போன்ற மலாகள் சிதற வும், வடமேரு பொற்கிரி யசையவும் - வடமேரு மலைபோன்ற அழகிய தனஙக ளசையவும், தாக வேலை சிவப்பவும் - வேட்கையை யுணர்த்தும் கடல்போன்ற கணணைது சிவக்கவும், மதிதன்னை வந்து இருள் மூட

வும் - மதிபோன்ற முகத்தை இருள்போன்ற கூந்தல் மறைக்கவும், கார ணக் குறியானது இப்படிக் காசினிக்கிது புதுமையே - இந்தக் குறிக ளெல்லாம் ஒரு காரணத்தைக் காட்டும் அடையாளமானது உலகத்திலுள் ளார்க்கு ஒரு வியப்பாகத் தோன்றும், (அக்காரியமாவது) காஞ்சி சூழு தலத்திலே மிகு கலக முள்ளது காணுமே - எழுகோவை மணியாடை மூடிய கடிதடத்தில் கலவிச செயல் நிகழ்ந்ததென்றறிக, எ - று.

109. சீனர்சோனக ரீழராரியர் திறையளந்திடு வாயிலான்
சேரையாதிப னரசகேசரி செல்வனுகிய கல்விமான்
மீனுலாவிய கண்ணியர்க்குளம் வெள்குருமய றந்தவன்
மிக்கதேவனல் வரையிலேயொரு விசித்திர மாவொரு வஞ்சி
ஆனைமேலொரு பூவிருந்திட வந்தமாகிய பூவின்மேல் [கேள்
அச்சமற்றொரு குதிரைநின்றிட வந்தவாமபரி மீதிலே
கானுலாவிய புலியிருந்தது கருதுமப்புலி மீதிலே
கடியசிங்க மிருந்துலாவிடல் காசினிக்கிது புதுமையே.

உரை :—சீனர் சோனகர் ஈழர் ஆரியர் திறையளந்திடுவாயிலான் - சீனர் துலக்கர் ஈழ மண்டலத்தார் ஆரிய நாட்டினர் என்பவர்கள் கப் பத்தை யளந்து கட்டும் வாசலை யுடையான், சேரை யாதிபன் அரச கேசரி - சேரைப்பதிக்குத் தலைவனாகிய அரசகேசரி யென்னும் மன்னன், செல்வனாகிய கல்விமான் - செல்வமும் கல்வியும் ஒன்றாக வாய்க்கப்பெற்ற வன், மீனுலாவிய கன்னியர்க்கு உளம் வெள்குரு மயல் தந்தவன் - மீன் போன்ற கண்ணையுடைய பெண்களுக்கு நெஞ்சம் நாணாது ஆசைப்படும் மோகத்தை யளித்தவன், மிகக தேவன் நல் வரையில ஒரு விசித்ரமாம் ஒரு வஞ்சி கேள் - மிகக தெய்வத்தன்மையுடைய அவனுடைய மலையின மீது ஒரு அதிசயத்தைப் பெண்ணே கேட்பாயாக, ஆனைமேல் ஒரு பூ இருந்திட - விநாயகக கடவுள்மேல் ஒரு மலா தங்கவும், அந்தமாகிய பூவின் மேல் அச்சமற்று ஒரு குதிரை நின்றிட - அழகிய அந்தப் பூவினமேல் அச்சமில்லாமல் ஒரு குதிரை அதாவது பத்திரியாகிய இலை இருந்திட, அந்தவாம் பரிமீதிலே கானுலாவிய புலி யிருந்தது - அநத அழகான இலை யின்மீது வாசனைபொருந்திய தாமரைப்பூ விருந்தது; கருதும் அப்புலி மீதிலே கடிய சிஙகம் இருந துலாவிடல் - விரும்பப்பெறற அந்தத தாம ரைப் பூவின்மீது அரியாகிய வண்டு இருநதது, காசினிக்கு இது புதுமை தானே - உலகததாாககு இசசொறகள் புதுமையைத தருவதாகும், எ - று.

110. வாடைப் பனிமட்டோ மதன்வாடப் பணிச்சிக்கென்
பலைவேலை யொலிக்கே திருமலைவேலை நினைத்தாள்
கூடற்கிறை காணுதவள் கூடற்கர சேகின்
குவளைத்தொடை தாவென்றொரு குவளைததழு விலையே

ஆடற்கொடி யிடையா ணகை யாடற்கிட மானாள்
அஞ்சமபுக னடையாளிதை யஞ்சமபுக லானாள்
ஓடித்திரி கின்றாடுய ரோடித்திரி கின்றாள்
உறவாடுவ திவரேமய லுறவாடுவ திவளே.

உரை :—கூடற்கு அரசே - மதுரைப்பதிக்கு மன்னனே !, வாடைப் பனிமட்டோ - வடகாற்றின் குளிர்ச்சிக்கு மாத்திரமா, மதன் வாடு அப்பு அணிசசி - மன்மதன் வாட்டுதற் கேதுவாகிய அம்பு நெருங்கப்பெற்று இக்கு என் மலை - கரும்பு வில்லாகிய மலைக்கும், வேலை ஒலிக்கே - அவன் முரச மாகிய கடலின் முழக்கத்திற்கும் பயப்பட்டு, திருமலை வேலை நினைத்தாள் - ......, கூடற்கு இறை காணாது - கூடுவதற்குரிய தலைவனைக் காணாமல், அவள் நின் குவளைத் தொடை தாவென்று - அவள் உன்னுடைய குவளை மலர் மாலையைக் கொடுவென்று, உருகுவளைத் தழுவிலையே - மனமுருகிக் கேட்பவளை நீ யணைந்தா யில்லையே, ஆடற் கொடி யிடையாள் - ஆடுகின்ற கொடிபோன்ற இடையை யுடையவள், நகையாடற்கு இடமானாள் - பலரும் பார்த்துச் சிரிப்பதற்குரியவளானாள், அஞ்சம் புகல் நடையாள் - அன்னம் சரண்புகக்கூடிய நடையை யுடையவள், இதையம் சமபு உகலானாள் - இருதயத்தில் சுகத்தை யிழந்தவளானாள், ஓடித் திரிகின்றான் துயரோடு இதது இரிகின்றாள் - ஓடித் திரிபவளாகிய அவள் துயரினாலே மனமுறிந்து அஞ்சுகின்றாள், உறவு ஆடுவது இவரே - இவரே அவளோடு கலந்து உறவாடுதற்குரியவர், மயல் உறவாடுவது இவளே - மோக மிகுதியாலே தளர்கின்றவள் இவள்தான், எ - று.

111. உழைசுமந்திடு கையரேயிள நற்பதஞ்சலி மெய்யரே
உண்பலிகொள வந்துமாதர்க ளுயிரையும்பலி கொள்கிறீர்
பிழைசுமந்திட வெங்கள்வாசலி லேனடிக்கடி வருகிறீர்
பெண்கள் வாழ்ந்திடு வீதியல்லது பின்னைவேறிட மில்லையோ
இழைசுமந்தவ ருயிர்பறிப்பது தருமமோவிது தேவரீர்
இன்றுவந்தது போலநாளையு மித்தவீதியில் வந்திடில்
பழிசுமந்திடு நீரொருத்தர் பலிக்குமந்த நிமித்தமாப் [மே.
பாவம்வந்திட வேண்டுமோவொரு பறையறைந்து பின்வாரு

உரை :—உழை சுமந்திடு கையரே - மானை யேந்திய திருக்கரத்தை யுடையவரே!, இளநற் பதஞ்சலி மெய்யரே - மென்மையான நல்ல திருவடியினா லாடுகின்ற திருமேனியை யுடையவரே!, உண் பலிகொளவந்து மாதர்கள் உயிரையும் பலி கொள்கிறீர் - உண்ணுகின்ற சோற்றினை வாங்குவதற்கு வந்து பெண்களுடைய உயிரையும் பிச்சையாகக் கவர்ந்து கொள்கின்றீர், பிழை சுமந்திட எங்கள் வாசலிலேன் அடிக்கடி வருகின்றீர் - குற்றத்திற்குப் பொறுப்பாக எங்களுடைய வீட்டு வாசல்களுக்கு ஏன் அடிக்கடி வரு

கிறீர், பெண்கள் வாழ்ந்திடு வீதியல்லது பின்னை வேறிடம் இல்லையோ - பெண்கள் தெருவல்லது பிசசை யெடுக்கப் போவதற்கு வேறிடமில்லையோ, இழை சுமந்தவா உயிா பறிப்பது தர்மமோவிது - ஆபரணமணிந்த பெண்க ளுடைய உயிரைக் கொள்ளை கொள்வது நீதியாகுமா, தேவரீர் இன்று வந்ததுபோல நாளையும் இந்த வீதி வந்திடில் - ......, பழி சுமந்திடும் - பழியேற்பட்டு விடும், நீர் ஒருத்தா பலிக்குவந்த நிமித்தமாப் பாவம் வந்திட வேண்டுமா - நீா பிசசைக்கு வந்த காரணமாகப் பாவ மேற்பட வேண்டுமா, ஒரு பறை யறைந்து பின் வாருமே - நீர் வருவதானல் பறையறைந்து விளம்பரஞ்செய்து வருவீராக, எ - று.

112. விலைமதித்திடு தமிழ்ப்புனைந்திடு வீராகவ னுதவுமால்
வெள்ளியூர்வரு வேலபூபதி வெற்பிலேயொரு புதுமைகேள்
அலையிருக்கிற கடலிலேயொரு குவளைநிற்குது கமலமோ
அருகிருக்குது முல்லையான வருமபுநிற்குது வதனுளே
கலையிருக்குது மானிருக்குது கரியமேகமு முடுகுவாள்
காணவேயிரு பிறைகணிற்குது கண்கண்முக்கணை வள்ளலும
மலையிருக்குது வரவிருக்குது வஞ்சிநிற்கிற வஞ்சிகீழ்
வாழைநிற்குதுநடுவிறேன்றொடைவைத்திருக்குதுகாணுமே.

உரை :—விலை மதிததிடு தமிழ புனைநதிடு வீராகவன் உதவுமால் - விலை மதிததறகுரிய தமிழ்க கவிகளை இயற்றக்கூடிய வீராகவப் புலவரின புதலவராகிய, வெள்ளியூா வரு வேலபூபதி வெற்பிலே ஒரு புதுமை கேள் - வெள்ளியூரில் வாழ்கின்ற வேலப்ப மனனனது மலைமீது ஒரு விசிததிரம் கேட்பாயாக, அலையிருககிற கடலிலே ஒரு குவளை நிற்குது - அலையுடைய கடலைப்போன்ற கணணிலே குவளைப் பூப்போன்ற கருமணி யிருக்கிறது, கமலமோ அருகிருககிறது - தாமரைப் பூப்போன்ற வாய் அதன் பககததி லிருககிறது, அதனுளே முல்லையான அரும்பு நிற்குது - அதற்குள்ளே முல்லை யரும்புபோன்ற பற்களிருக்கின்றன, கலை யிருக்குது - கலைச சந்தி ரன்போன்ற நெற்றியிருககிறது, மான் இருக்குது - மான்போன்ற பார்வை யிருக்கிறது, கரிய மேகமும் இருக்குது - கரிய முகில்போன்ற கூந்தலு மிருக்கிறது, முடுகுவாள் காணவே - கண்ணிலிருந்து வரும் ஒளியைக கவனித்துப் பாாகக, இரு பிறைகள் நிற்குது - இரண்டு பிறைகள்போன்ற புருவஙகள் நிற்கின்றன, கணகண் முக்கு அணைவு அள்ளலும்-கண்கள் முனை யிற் பொருந்திய சாந்துபூசிய மலையிருக்கிறது அதாவது காம்புத் துவாரஙக ளுடைய முலைகளிருக்கினறன, அரவு இருக்கிறது - பாம்புபோன்ற உரோம ஒழுங்கிருக்கிறது, வஞ்சி நிற்கிற - வஞ்சிக கொடிபோன்ற இடை யிருககி றது, வஞ்சிக் கீழ் வாழை நிற்குது - இடைக்குக்கீழ் வாழைபோன்ற துடை யிருக்கிறது, நடுவில் தேன் தொடை வைத்திருக்கிறது - துடைக்கு நடுவே

தேன் கூடுபோன்ற அல்குலிருக்கிறது, நாணுமே - பார்த்துக கொள்ளுமே' எ - று.

### சொக்கநாதருக்கும் தலைவிக்கும் அரிக்கும் சிலேடை

113. அருகினத்தமர் வையையாற்றிகழ் சங்கமேமிக வுடைமையால்
ஆதரித்திடும் கூடலாலுய ராசையம்பர மாகையால்
இரவினைப்பிரி யாமையால்விட மன்னமாக வருந்தலால் [ய்வாய்
இரதிவேள்பகையாகையாலுமையிவளு மொத்தனளருள்செ
பரவையின்க ணடைந்து நாவலர்பின் செலப்புகழ் மேவியும
பரசுபற்றியு நாகமீது பயின்றுமானிட மாகியும
மருதிடைப்புக லுற்றுமண்டர்ம னங்களிக்க நடித்துநீள்
மாலுமாகிய சொக்கரேதமிழ் மதுரைமாநக ரீசரே.

உரை:—பரவையின் கண் அடைந்து - சிவபெருமான் பரவைபால் தூது போயும், திருமால் பாற்கடலின்கண் பள்ளிகொண்டும்!, நாவலா பின் செல - அரன் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குப் பின்னே போயும், அரி திருமழிசை யாழ்வார்க்குப் பின் சென்றும், புகழ் மேவியும - இருவரும புகழை விரும்பி யவ்வாறு சென்றும், பரசு பற்றியும் - அரன மழுவாயுதததைக கொண்டும, அரி தண்டாயுததகைக் கைக்கொண்டும், நாகமீது பயின்றும்- அரன் கைலைமீது வீற்றிருந்தும், அரி ஆதிசேஷனுகிய பாம்பின்மீது படுத்தும், மானிடமாகியும் - இடது திருக்கரத்தில் சிவன் மானைத தரிததும், அரி மனிதராகப் பிறந்தும், மருதிடைப் புகலுற்றும் - அரன் திருவிடைமருதூரிற் றங்கியும், அரி கண்ணனாய் மருத மாததிடையிருநது அசுரனைக கொன்றும், அணடா மனங் களிகக நடித்தும் - தேவர்கள் மகிழும்படியாகச சிற்சபையில் அரன் நடனஞ் செயதும், அரி காளிஙக னென்னும் பாம்பின் மீது நடனஞ் செய்து மிருந்தமையால், நீள மாலுமாகிய சொககரே-நீண்ட திருமால் போன்ற அரனாகிய சொககலிஙகப்பெருமானே !, மதுரைமா நகா ஈசரே - மதுரைப்பதிககுத தலைவரே !, அருகு நத்து அமா வையையால்- பக்கத்தில் சஙகுகள் அமர்ந்திருக்கும் வையையாற்றை யுடைமையாலும், திகழ் சஙகமே மிகவுடைமையால்-விளங்குகின்ற தமிழச சங்கஙகளை மிகுதியாக வுடைமையாலும், ஆதரித்திடு கூடலால் - விரும்பிப் பாதுகாககின்ற கூடல் பதியை யுடைமையாலும், உயா ஆசை அம்பரமாகையால் - உயர்ந்த திக்குகளை தமக்கு ஆடையாதலாலும், இரவினைப் பிரியாமையால் - ஐய மேற்றலைக் கைவிடாமையாலும, விடம் அன்னமாக அருந்தலால்-விடத்தை யுணவாகக் கொண்டமையாலும், இரதி வேள் பகையாகையால் - இரதியோடுகூடிய மன்மதனுக்கு நீர் விரோதியாதலாலும்.

இவள் - இப் பெண்ணானவள், அருகு நத்து அமா வையையால் - பக்கத்தில் கூட்டமாயுள்ள உறவினர் இவளை வைதலாலும், திகழ் சஙகமே

மிக வுடைமையால் - திகழ்கின்ற சங்க வளையல்களை மிகுதியாகத் தரித திருப்பதாலும், ஆதரித்திடு கூடலால் - உமமோடு கூடுதலை விரும்புதலா லும, உயர் ஆசை அம்பரமாகையால் - இவளுடைய வேட்கையானது ஆகாயம் வரையும அளாவி யிருப்பதாலும் இரவினைப் பிரியாமையால் - இராததிரி நீங்கப் பெறுமையாலும், விடம் அன்னமாக அருந்தலால் - அன்னத்தை விடம்போல வெறுத்துண்ணுதலாலும், இரதி வேள் பகை யாதலால் - இவளுக்கு மன்மதனும் சததுருவாதலாலும், இவளும் ஒதத னள் - இவள் உமக்கு ஒப்பாக இருக்கின்றவள், ஆதலால் அருள் செய் வாய் - இவளுககுக கருணை செய்வாயாக!, எ - று.

114. சோனையொத்த கொடைக்காரன்புக
ழதிகமாகிய தொண்டைமான்
துட்டரைப்பலி யிட்டுவிட்டலர்
சோனகன்வரை தன்னிலே
ஆனெய்தன்னையுண் டெலியெடுத்தது
மரசுதானொரு முசலின்மேல்
அம்பலந்தனி லேதழைத்தது
மன்றுதானொரு புதுமைகேள்
மீனையுண்ட பருந்திலேறி
மிகப்பருததது சிங்கமாம
வேளையில்லொரு பக்கிகொதறி
விசுபபுளாடிய பாகனுர்
மானிருப்பது மலையிலேபெரு
மனிதர்தின்பது வாரணமம
வண்டுமேறசில பூனையேறுதல்
வையகத்தில் வளப்பமே.

உரை:—சோனை யொதத புகழ கொடைககரன் - மேகம்போன்ற கீரததியையுடைய கொடுககும கையையுடையவன, அதிகமாகிய தொணடை மான் - மிகவுயாநத தொணடமான அரசன், துட்டரைப் பலியிட்டு விட்ட லா சோனகனவரை தன்னிலே - துட்டாகளைக கொன்று தள்ளி வீரத தோடு விளஙகுகின்ற திருககவீரனபோன்ற அவனுடைய மலையிலே, ஆனெய தனனையுணடு எலி யெடுததது - சிவாலயததில விளககிட பசு நெயயை யுணட எலியானது அரசனாயத தோன்றியதும், அரசு தானொரு முசலின்மேல் அமபலநதனனிலே தழைததும - அரசனாகிய சிவபெரு மான முயலகனை மிதிதது நின்று பொன்னமபலததிலே நடனஞ் செயத தும், அன்றுதான் - அப்போது நடநதது, ஒரு புதுமை கேள் - இப்போது ஒரு புதுமை சொல்லுகிறேன் கேள், மீனையுண்ட பருந்திலேறி மிகப்

பருத்தது சிங்கமாம் - மீனைத் தின்கின்ற கருடன்மீதேறிய திருமால் நரசிங்காவதாரத்தில் இரணியன் இரத்தத்தைக் குடித்ததில் மிகக் கொழுப்படைந்ததும், வேளையில ஒரு பக்ஷி கொத்தி விசும்புளாடிய பாகனுர் - அச சமயத்தில சிம்புள்பறவையாக வந்து சிவபெருமான் அந் நரசிங்கத்தின் உக்கிரகத்தை யடக்கி யாகாயத்திலுலாவினர், மானிருப்பது மலையிலே - மானுகிய உமாதேவி யிருப்பது கைலைமலையிலே, பெருமனிதர் தின்பது ஆரணம் - பெரிய மனிதர்கள் அனுபவத்திலறிவது வேதப்பொருள், சில பூனை (பூநெய்) மேல் வண்டு ஏறுதல் - சில வகையான தேனிருக்குமிடத்தில் வண்டு போய்த் தங்குதல், வையகத்தில் வளப்பமே - வையகத்தில் மரபாயுள்ள செய்தி, எ - று.

115. மைதவழ்ந்த மகிழடிக்க ணொற்றியூரி லிட்டசூள்
வழுவழுக்கச் சுந்தரற்கு மன்னிமுன் மறைந்தகண்
எய்தவே கொடுத்திரண்டு தூதுசென் றொருத்தியோ
டிணங்கின ரிணங்கியு மிசைந்தநூலி லேயெலாம
பொய்தவிர்ந்து காமமுந் துறந்ததூய ரேநமைப்
பொருந்துவார லாதபேர் பொருந்தலா ரெனச்சொல்வார்
செய்தவாறு செய்வரென்று தேறிநிற்ப தேயலால்
தெரியுமோ தியாகராயர் திருவுளத் தியற்கையே.

உரை :—மை தவழ்ந்த மகிழடிக்கண் - மேகஙகள் ஊர்ந்து செல்லும் படியான மகிழமரத்தினடியில், ஒற்றியூரில் இட்ட சூள் வழுவழுக்க - ஒற்றியூரிற் செய்த சபதமானது தவறவே, சுந்தரற்கு மன்னி முன் மறைந்த கண் எய்தவே கொடுத்து - சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு மறைந்த கண்ணை மறுபடி நிலைபெறும்படியாக மீளக் கொடுத்து, இரண்டு தூது சென்று - அவருக்காகப் பரவையாரிடத்திலே இரண்டுதரம் தூது போய், ஒருத்தியோடு இணங்கினர் - உமையம்மையாகிய தேவியோடு கூடியிருந்தார், இணங்கியும இசைந்த நூலிலே எல்லாம் - அப்படிப் பெண்ணோடு சேர்ந்திருந்தும பொருத்தமான சாத்திரங்களிலெல்லாம், பொய் தவிர்ந்து காமமும் துறந்த தூயரே - பொயயும் காமமும் ஒழிந்த பரிசுத்தமானவரே, நமைப் பொருந்துவார் அலாதபேர் பொருந்தலார் எனச் சொல்வார் - நம்மை வந்து சேரக்கூடும் மற்றவர்கள் வந்து சேரக்கூடாதென்று கூறியிருக்கின்றார், செய்தவாறு செய்வரே என்று தேறி நிற்பதே யலால் - அவர் முன்னே செய்த சரித்திரங்களில் அருளிச்செய்த முறையிலே அருளிச்செய்திருப்பாரென்று நம்பி யிருப்பதேயல்லாது, தெரியுமோ தியாகராயர் திருவுளத் தியற்கையே - மற்றப்படி நாம் தியாகராசப் பெருமானுடைய திருவுளத்தை யறியமுடியுமோ? (முடியாது), எ - று.

116. எத்தலப் புறத்தினும் பிறப்பிறப்பி னுட்படும்
எவ்வுயிர்க்கு மயன்விதிப்ப தென்பதே மிகச்சொல்வார்
கைத்தலத்தி லவர்பெருங் கபாலமாய வன்பெரும்
கருந்தலைக்கு ளொன்றுபட்ட கருமமார் விதித்ததோ
அத்தனைக்கு மொருவரா யளிப்பதோ வதன்றியும்
அன்னவேத னுதியோரை யாளெனப் படைப்பதோ
சித்தமித் தனைக்கெலாந் தியக்கமா நமக்கெலாம்
தெரியுமோ தியாகராயர் திருவுளத் தியற்கையே.

உரை :—எத்தலப் புறத்தினும் பிறப்பிறப்பினுட்படும் எவ்வுயிர்க்கும் அவன் விதிப்பது என்பதே மிகச சொல்வார் - எவவுலகத்திலும் எந்த வகையான பிறப்பினும் எல்லா வுயிர்களுக்கும் வினையின் பயனை வரையறைப்படுததுவது பிரமாதனென்று மிகுதியாகச சொல்வார்கள், கைத் தலததில் அவர் பெருங கபாலமாய் - சிவபெருமானது கையினிடமாகத்தலையோடாய அமாந்த, பெரும் கருந்தலைக்குள் ஒன்றுபட்ட கருமம் ஆர் விதித்ததோ - பிரமாவினுடைய பெரிய கரியதலைப் பகுதியில் அப்படிப் பொருந்துவதற் கேதுவான வினைப்பயனை எழுதினவர் யார், அத்தனைக் கும் ஒருவராய் அளிப்பதோ - பிரமா முதலிய அவவளவு பேரையும் பாது காப்பது சிவபெருமான் ஒருவர்தானே, அன்றியும் அனனவேதன் ஆதி யோரை ஆள் எனப் படைப்பதோ - அது தவிரவும் அன்னவாகனமுடைய பிரமா முதலியோரை அதிகாரஞ் செலுத்துமபடி நியமித்தும் ஒருவர் தானே சிததமிததனைக்கெலாம் தியக்கமோ நமக்கு - இவ்வள வெல்லாம் சிந்திப்பதானல் நமககுத திகிலேற்படுமோ, எலாந் தெரியுமோ தியாகராயர் திருவுளத் தியற்கையே - தியாகராசப் பெருமான் திருவுளததின் தன்மை முழுவதும் நாமறிய முடியுமா ? (முடியாது), எ - று.

117 அருணமார் முலைக்கிடுப டீரதூளி மொய்ப்பவும
அருமைபெற்ற சிறூர்தவழ்ந் தடிப்பொடிக்குண் மூழ்கவும்
பொருவிலாத யானைவாசி சேனையின் பராகமே
பொதுளவுந் திருந்தவம் புரிந்துபோக வைப்பரோ
சருவிழாத வகைநமக்கு மாலயன் புரந்தரன்
கரங்குவித் துளங்கனிந்து கண்குளிர்ந்த மாசினற்
றிருவிழா வெழுந்தபூழி யுடலமூட விடுவரோ
தெரியுமோ தியாகராயர் திருவுளத் தியற்கையே.

உரை :—அருணமார் முலைக்கிடுபடீரதூளி மொய்ப்பவும் - தனங்களுக் கிடுகின்ற சிவந்த சந்தனப் பொடியானது நெருங்கி நம்மேல் பரவவும், அருமை பெற்ற சிறூர் தவழ்ந்து அடிப்பொடிக்குள் மூழ்கவும் - அருமை

யாகப் பெற்ற சிறு குழந்தைகளுடைய பாததூளியினுள் மூழ்கவும், பொருவிலாத யானை வாசி சேனையின் தூளிபராகமே - ஒப்பற்ற யானை குதிரை முதலியன கலந்த சேனையின் தூளியானது பொதுளவும் திருந்தவம் புரிந்துபோக வைப்பரோ - நெருங்கும்படியாகப் படையுளிருந்து அவச செயல் செய்து ஒழியும்படியாக நம்மை யமைப்பாரோ, கருவிழாத வகை - பிறவியில் விழாதபடி, நமக்கு -......, மால் அயன் புரந்தரன் - திருமாலும் பிரமாவும் இந்திரனும், கரம் குவித்து உளம் கனிந்து - கைகுவித்து வணங்கி மனமுருகி, கண் குளிர்ந்த - கண் குளிரும்படி காட்சி பெற்ற, மாசில் நல் திருவிழா எழுந்த பூழி - குற்றமற்ற நல்ல திருவிழாவிலெழுந்த நல்ல புழுதியான்து, உடலம் மூடவிடுவரோ - நம்முடைய உடலிற் படியும் படியாக அமைப்பாரோ, தெரியுமோ தியாகராயர் திருவுளத்து இயற்கையே - தியாகராயப் பெருமானுடைய திருவுள்ளத் தன்மையை நாம் அறிய முடியுமா ? (முடியாது), எ - று.

118. செய்யோன களங்கன் வளவன் சோழகுலேசன்
சென்னிக்குல தீபன்னுயர் பொன்னித்திரு நாடன்
பொய்யோடொரு நாளுமுறை செய்யாமநு துங்கன்
போர்வல்லவன் மல்லற்பொழில் பொங்குங் குருகீரே
ஐயோவவ ரைப்போலொரு நிட்டூரரு முண்டோ
அஞ்சம்படு கைக்கேதுயர் நெஞ்சம்படு கைக்கே
வெய்யோன் விழுகைக்கேமுழு மதிவந்தெழு கைக்கே
விழிநீர்சொரி கைக்கேயெனை விட்டுப்பிரிந் தாரே.

உரை:—செய்யோன் - செம்மையான இயற்கை யுடையவன், அகளங்கன் - களங்க மற்றவன், வளவன் சோழ குலேசன் - செழிப்புடையவன் சோழவமிசத்தலைவன், சென்னிக்குல தீபன் - சென்னியென்னும் அரச குடும்பத்திற்கு விளக்குப்போல்பவன், உயர்பொன்னித் திருநாடன் - உயர்ந்த காவிரிபாயும் அழகிய தேசத்தை யுடையவன், பொய்யோடு ஒரு நாளும் முறை செயயா மநுதுங்கன் - தவறான நீதி செலுத்தாத மனுநீதி யுடைய சிறப்புடையவன், போர் வல்லவன் - போரில் திறமை யுடையவன் ஆகியவனது மல்லல்பொழில் பொஙகுமக குருங் குருகீரே - வளம் பொருந்திய சோலையில் விளங்கும் நாரைகளே !, ஐயோ அவரைப்போல் ஒரு நிட்டூர முண்டோ - ஐயோ அவரைப்போலொரு கொடியவ ரிருக்கிறரா, அஞ்சம் படுகைக்கே - மன்மதனுடைய பஞ்ச பாணஙகள் நம்மைத் தாக்குவதற்கே, துயர் நெஞ்சம் படுகைக்கே - அதனால் நாம் துன்ப மடைவதற்கே, வெய்யோன் விழுகைக்கே - சூரியன் அஸ்தமிப்பதற்கே, முழுமதி வந்து எழுகைக்கே-பூரணசந்திர னுதயமாகவே, விழி நீர் சொரிகைக்கே-

கண்ணீர் பொழிவதற்கே, எனைவிட்டுப் பிரிந்தாரே - தலைவர் என்னை விட்டகன்றாரே, எ - று.

119. தாக்கச்செறி சுடர்பட்டது தனமேல்விடு பனிநீர்
தாளத்தொகை பொடிபட்டது தழலுற்றது களபம்
வாக்குக்குழ றிப்போனது வசமற்றது கைகால்
மைதோய்விழி நிலையுற்றதென் மடிமேற்றுயில் கொள்வாள்
மூக்கிற்கரம் வைத்தாலுயி ருண்டில்லைய னங்கன்
முழுநீல மெடுத்தாலுயிர் விடுகின்றது சரதம்
காக்கத்திரு வுளமோதுயர் காணத்திரு வுளமோ
கண்ணங்குடி நின்றார்தம தெண்ணந்தெரி யாதே.

உரை:—தனமேல் விடுபனி நீர்தாக்கச செறி சுடர் பட்டது - முலைகளின் மேல் தெளிக்கின்ற பனி நீரானது நெருங்கிய தீப்பொறி பட்டாற் போலிருந்தது, தாளத்தொகை பொடிப்பட்டது - தனங்களின் மீதுள்ள முத்துத் தொகுதிகள் வெப்பத்திஞல் வெடித்து உதிர்ந்துபோயிற்று, தழலுற்றது களபம் - சந்தனமானது நெருப்புப்போல வெதுப்பிற்று, வாக்குக் குழறிப் போனது - தலைவியின் மொழியானது தடுமாற்ற மடைந்தது, வசமற்றது கைகால் - கைகளும் கால்களும் அவள் வசப்படாமற் போயின, மைதோய் விழி நிலையுற்றது - மை தடவிய கண்கள் அசையாமல் நின்றது, என் மடிமேல் துயில் கொள்வாள் என்னுடைய மடிமேல் தூக்கங கொண்டாள், மூக்கில் கரம் வைததால உயிா உண்டில்லை - மூக்கில் கை வைததுப் பார்ததால் உயிர் உண்டோ இல்லையோ என்ற சந்தேகம் ஏற்படுகின்றது; அனங்கன் முழுநீல மெடுததால் உயிா விடுகின்றது சரதம் - மன்மதன் முழுக்குவளை மலரை யெடுத தெயவாஞல் இவளுககு உயிா போவது உண்மையாகும், காக்கத திருவுளமோ துயா காணத திருவுளமோ - அவளைக காப்பாற்ற வேண்டுமென்ற திருவுளககருததா அல்லது அவளைத் துன் புறுத்த வேண்டுமென்கிற திருவுளககருததா, கண்ணங்குடி நின்றார் தமது எண்ணம் தெரியாதே - கணணஙகுடியினின்ற பெருமானுடைய நோகக மின்னதென்று தெரியவில்லையே, எ - று.

120. செங்கான்மட வன்னமபடர் தீயாமெண வெருவிச்
சிறையிற்பெடை மறையக்கொடு திரியத்திரள் கமுகின்
பைங்காய்மர கதமீது படர்ந்தேறி நறுந்தண்
பானைக்கிடை பவளக்கொடி படர்காவிரி நாடா
தங்காதலி யுடன்மைந்தரு முடனாக வணங்கித்
தலைகாவெம துடல்காவெம துயிர்காவக ளங்கா
கொங்காமது துங்காவென மதுரேசர் வணங்கும
கொல்யானைகள் பங்காவிவள் குழலோசை பொருளே.

உரை:—செஙகால் மட அன்னம்படர் தீயோ மென வெருவி - சிவந்த கால்களையுடைய இள அன்னமானது பரவிய நெருப்போ வென்றஞ்சி, சிறையில் பெடை மறைய - தன்னுடைய சிறகின்கீழ்த தன்னுடைய பெட்டை யன்னமானது புகலடைய, கொடுதிரிய - அப் பெண்ணன்னத் தோடு திரியும்படி, திரள் கமுகின - திரண்ட பாக்குமரத்தின், பைஙகாய மரகத மீது - பசிய காயாகிய மரகத மணிகள்மீது, படர்ந்தேறி - படர்நது சென்று, நறுந்தண் பாளைக்கிடை பவளக்கொடி படர்காவிரி நாடா-வாசனை யுடைய குளிர்ந்த பாளைகளுககிடையில் பவளக்கொடியானது பரவி கிடக கின்ற காவிரிபாயும் சோழவள நாட்டை யுடையவனே !, தன் காதலியுடன் மைந்தரும் உடனுக வணஙகி - தஙகள் மனைவி மக்களுடன் வழிபட்டு, அக ளஙகா - களஙகமற்ற மன்னனே !, கொஙகா - கொஙகிற் கதிபதியே!, மது துஙகா - தேன் போலச சிறந்தவனே !, தலைகா எமது உடல்கா எமது உயிரகா - எமது தலையைக காக்கவேண்டும் எமது உடலைக் காக்கவேண்டும் எமது உயிரைக காககவேண்டு மென்று பிராாததித்துக் கூற, மதுரேசா வணஙகும் - மதுரேசப் பெருமானை வணஙகுகின்ற, கொல் யானை கன் பங்கா - கொல்லும் யானையைப் பக்கத்திலுடைய மன்னனே !, இவள் குழல் ஓசை பொருளே - ..., எ - று.

121. நீறுபட்ட கமலமெய்யர் நிலவுபட்ட வேணியர்
நித்தரத்தர் பித்தர்சுத்தர் நிமலர்காவை யீசர்செஞ்
சேறுபட்ட களபமார்பர் திருவெண்ணுவ லீசனர்
திருவுளத்தி னினைவறிந்து செப்பவேண்டும் வண்டுகாள்
மாறுபட்ட வேள்கையமபி னூறுபட்ட கொஙகையும
மஞ்சுபட்ட குழலுமூட்ட மாசுபட்ட மேனியும்
ஆறுபட்ட கண்ணுமஙகன் வேறுபட்ட சிந்தையும
அந்திபட்ட போதுபாவி யாவிபட்ட பாடுமே.

உரை:—வண்டுகாள் - வண்டுகளே !, நீறுபட்ட கமல மெய்யர் - திரு நீறு பொருந்திய தாமரைப் பூப்போன்ற திருமேனியை யுடையவா, நிலவு பட்ட வேணியர் - சந்திரன் பொருந்திய சடை முடியை யுடையவா, நித்தர் - நிததியா, அத்தர் - தநதையானவா, பிதத‌ா - பித்தரென்ற பெயருடையவர், சுததர் - பரிசுத்தமானவர், நிமலா-குற்றமற்றவர் அல்லது பாசமற்றவர், காவை யீசர்-திருவானைக காவிலுறையும் பெருமானர், சேறு பட்ட களப மார்பர் - சந்தனச சாந்துபட்ட திருமார்பினை யுடையவர், திரு வெண்ணுவல் ஈசனர் - வெள்ளையான நாவல் மரததடியில் வதியும் பெரு மான், திருவுளததின் நினைவறிந்து - திருவுளக் கருத்தினை யறிந்து, மாறு பட்ட வேள் கை யம்பின் ஊறுபட்ட கொஙகையும் - பகை கொண்ட மன் மதனுடைய கணை பொருந்திய தனஙகளின வருத்தத்தையும், மஞ்சு பட்ட குழலும் - மேகம்போன்ற கூந்தலும், மூட்ட மாசபட்ட மேனியும்-நிரம்பிய

அழுக்கு பொருந்திய உடம்பும், ஆறுபட்ட கண்ணும் - கண்ணீர் ஆறாகப் பாய்கின்ற விழியும், அவயவ வேறுபட்ட சிந்தையும் - அப்படி விகார மடைந்த மனமும், அந்திபட்டபோது பாவியாவி பட்ட பாடுமே - மாலை வந்தபோது தீவினையால் பட்ட துயரமும், செப்ப வேண்டும் - பெருமானுக்கு எடுத்துக் கூறவேணடும், எ - று.

122. பாரிகூப்பிட நெடியசோலை பரந்துகோகில நிரையெலாம்
பரிந்துகூப்பிட வன்றில்வெள்ள மிருந்துகூப்பிட நதியெனும்
நாரிகூப்பிட விறைவர்பார்வையி னலனழிந்தவ னம்பினல்
நைந்துகூப்பிடு மிவளைவைத்தினி நாங்கள் கூப்பிட னீதியோ
வாரிகூப்பிட முன்னமேமத வாலிகூப்பிட விராவணன்
மறிந்துகூப்பிட மதிலிலங்கையின் மகரதோரணமறுகெலாம்
ஓரிகூப்பிட வில்வளைத்தரு ளொருவனேமழை யுருவனே
உலகையோரடி யாலளந்திடு மோங்குவேங்கட வாணனே.

உரை :—வாரி கூப்பிட - கடலானது அணை கட்டும்போது அழைக்கவும், முன்னமே மதவாலி கூப்பிட-அதற்கு முன்பாக செருக்குடைய வாலியழைக்கவும், இராவணன் மறிந்து கூப்பிட - இராவணன் மீண்டு மழைக்க, மதிலிலங்கையின் மகரதோரண மறுகெலாம் - மதிற் சுவருடைய இலங்கை நகரில் மகர தோரணங் கட்டிய தெருக்களிலெல்லாம் ஓரி கூப்பிட - நரியூளை யிடும்படியாக, வில் வளைத்தருள் ஒருவனே - வில்லை வளைத்து அம்பு விடுத்த ஒப்பற்றவனே !, மழை யுருவனே - மேகம்போன்ற திருமேனியை யுடையவனே !, உலகை யோரடியால் அளந்திடும் ஓங்கு வேங்கடவாணனே - உலகத்தைத் தமது திருவடியாலளந்த திருவேங்கடத்திலுறையும் பெருமாளே !, நெடிய சோலை பாரி கூப்பிட - பெரிய பொழில்கள் மகரந்தத்தை நிலத்தின்மே விடவும், பரந்து கோகில நிரையெலாம் பரிந்து கூப்பிட - குயில் வரிசைக ளெல்லாம் எங்கும் பரவி இரக்கம் வரும்படியாகக் கூவவும், அன்றில் வெள்ளம் இருந்து கூப்பிட - அன்றிற் பறவைக் கூட்டமானது மரங்களில் தங்கிக் கூவவும், நதியெனும் நாரி கூப்பிட - ஆறாகிய பெண் ஒலி செய்யவும், இறைவர் பார்வையின் நலன் அழிந்தவன் அம்பினல் - சிவபெருமானினது கண்ணினல் உருவழிந்த மன்மதனுடைய அம்பினல், நைந்து கூப்பிடும் இவளை - நைந்து வருந்துகின்ற இப்பெண்ணின் பொருட்டு, இனி நாங்கள் கூப்பிடல் நீதியே - இனிமேல் நாங்கள் உன்னிடம் முறையிடுவது நியாயமா ?, எ - று.

123. தண்டாமரைதரு நாண்மலர்மீ தோதிமமீனத்
தாளத்திரள் பவளத்திர ளொண்றேழையர் தங்கைக்
கொண்டாடிட முன்னைக்கிது மன்னத்திரு செம்மைக்
குணநான்மடி யுளதாகிய குழகாவிரி நாடா

பண்டாலிலை யமளித்துயில் குழவிப்பரு வத்தே
பௌவத்தொடு முலகைச்சிறு பவளத்திரு வாயால்
உண்டாயக ளங்காநிக ளங்கால்கரி தொழுதாள்
உய்யத்திரு வுளமோவெது செய்யத்திரு வுளமோ.

உரை :—தண்டாமரை தரு மலர்மீது ஓதிமம் - குளிர்ந்த செந்தாமரைப் பூவினமீது அன்னமானதிருப்பதை, மீனத தாளததிரள் பவளத்திரள் எனறு - நட்சத்திரம்போன்ற முததின தொகுதி பவளககூட்டத தின்மே லிருப்பதுபோலா மென்று, ஏழையா தம் கைக் கொண்டாடிட - பெண்கள் தஙகள கையகத்திற் பிடிததுக கொணடாடுவதினுலே, முன்னைக் கிது யன்ன முன் - செந்தாமரை மலரி லிருப்பதோடு பெண்களுடைய கையாகிய செந்தாமரையிலும் பொருந்துவதால், செம்மைககுண நான் மடியுளதாகிய - செந்நிறமானது நான்கு மடஙகு அதிகமாகப் பெற்ற, குழ காவிரி நாடா - புதுப் புனலுடைய காவிரி பாயும் நாட்டையுடையவனே !, பண்டு ஆலிலை யமளிததுயில் குழவிப் பருவத்தே - முறகாலததில் ஆலிலையாகிய படுககையில் படுதது றஙகும் பிள்ளைப் பருவததிலேயே, பௌவததோடும் உலகைச சிறு பவளத திருவாயால் உணடாய் - கடலோடு உலகத்தையும் உன்னுடைய சிறிய வாயினுலே உட்கொண்டாய, அகளஙகா - களஙக மற்றவனே !, நிகளஙகால் கரிதொழுதாள் - உன்னுடைய விலஙகு பூட்டிய ஆனையினடியை அவள தொழுதாள், உய்யத திருவுளமோ - இது செய்யத திருவுளமோ அவளுய்யும்படி நீ மனம் வைககிருயா அல்லது வேறு யாதுசெயயக கருதுகின்ருய், எ - று

124. வன்னகுங்கும படீரவாகுவரி
கேசரிக்குரிய மருகனும
மதுரையாதிபதி சீவலச்செழியன்
வழுதிவம்சகுல தீபகன்
தன்னைமுன்பவனி கண்டுநெஞ்சுகலை
வளைகள்தோற்ற மடமங்கையர்
தாயரற்றவரு மல்லரின்றெனது
தலையெழுத்தினு மடைந்ததால்
என்னையிந்நிலவி லிட்டுவைப்பதுவு
மன்றிவெய்யபனி நீரைமேல்
இறைத்துநித்திலமு நீறுசெய்திடுவ
ளிளமையான பருவத்திலே
அன்னையன்னயதி பாவிபாவியிவ
ளாலைகொண்டவளு மல்லண்முன்

ஆசைகொண்ட சில மாதர்தங்களிட
வருகிருந்தவளு மல்லளே.

உரை :—வன்ன குஙகும படீரவாகு அரிகேசரிக்குரிய மருகனும் - குஙகுமப்பூக்கலந்த செஞ்சந்தனக் குழம்பணிந்த புயஙகளையுடைய அரிகேசரி வேந்தனுககுரிய மருமகனுகிய, மதுரையாதிபதி - மதுரைக்குத் தலைவனுகியும, சீவலசெழியன் வழுதிவம்சகுலதீபகன் தன்னை - பாணடியகுலவிளக்காயுமுள்ள சீவலமாற பாணடியனை, முன்பவனி கண்டு - முன்னுளில் ஊர் வலம் வருவதைக கண்டு, நெஞ்சு கலை வளைகள் தோற்ற மடமஙகையா - மனத்தையும ஆடையையும் வளையல்களையும் மோகததால் நழுவபபெற்ற, இளம் பெண்கள், தாயா அற்றவரு மல்லா - தாயிலலாதவர்களாயு மில்லை, என்று என தலையெழுத்திறு மடைநததால் - இந்நாளில் எனக்கு மாத்திரம் தாயின் கெடுதி தலையெழுததாய அமைநதது, என்னை இந்நிலவிலிட்டு வைப்பதுவும் - எனக்குச சூடிருப்பதாகவெண்ணி நிலவொளியி லிருககும்படி செய்தும், அன்றி வெயய பனிநீரை மேல் இறைத்தும் - அதுவுமல்லாமல் வெப்பந் தருகின்ற பனிநீரை என்மேல் தெளிதது, நிததிலமும் நீறு செய்திடுவள் அன்னை - என் முத்துமாலையும் வெப்பததால் பொடிபடும்படியாகத தாய செயகின்ருள், அனனை பாவி பாவி இளமையான பருவத்திலே ஆசை கொண்டவளல்லள் - மிகப் பாவியாகிய என் தாய தனது இளமைப் பருவததிலே காதல் கொண்டவளல்ல, முன் ஆசை கொண்ட சில மாதா தஙகளிட அருகிருந்தவளும் அல்லல் - காதல்கொண்ட சில பெண்கள் பக்கததிலேகூட அவளிருநததாகத தெரியவிலலை, எ - று.

125. பூதம்பணி கொண்டாய்கடல் பாதந்தொழ நின்ருய்
புயலைத்தளை யிட்டாய்கயல் பொற்குன்று பொறிததாய்
மூதண்டபு ரேசன்கதிர் முடிசிந்தமு னிந்தாய்
மூரிச்சிலை வேளாண்மை மூடிக்குந்திற மரிதோ
வேதண்டமோ ரெட்டுங்கிளர் வேழங்களோ ரெட்டும
விடநாகமு முடிநொந்து விழாமற்புவி யாளும்
கோதண்டமு குந்தாவர குலசேகர மாரு
கூடற்பதி யிறைவாவுயர் கொற்கைப்பெரு மானே.

உரை :—வேதண்ட மோர் எட்டுங் கிளா வேழஙகளோர் எட்டும் - அட்டகுல பருவதஙகளையும் எட்டுதிக்கு யானைகளையும், விட நாகமும் முடிநொந்து விழாமல் புவியாளும் - விடமுடைய பெரிய பாம்புகளும் வருநதாமல் பூமியை யாளுகின்ற, கோதண்ட முகுந்தா வரகுல சேகர மாரு - வில்லையுடைய திருமாலமிசமானவனே! வரத்தாற் பிறந்த குலசேகர பாண்டியனே!, கூடற்பதி இறைவா - மதுரைப்பதிக்குத் தலைவனே!, உயர் கொற்கைப் பெருமானே - உயர்ந்த கொற்கைப் பதிக்கு அதிபதியே!, பூதம்

பணிகொண்டாய் - பூதங்களை ஏவி வேலை செய்வித்தாய், கடல் பாதம் தொழ நின்றாய் - சமுத்திரமானது உன்னுடைய திருவடியை வணங்கும் படியாகப் பெருமிதத்தோடு நின்றாய், புயலைத் தளையிட்டாய் - மேகத்திற்கு விலங்கு பூட்டினாய், கயல் பொறகொன்று பொறித்தாய் - கயல் மீன் கொடியை மேருவில் வரைந்தாய், மூதண்ட புரேசன் கதிர்முடி சிந்த முனிந் தாய் - வானுலகத்திற் கதிபதியின் மணிமுடியாகிய கிரீடம் விழும்படி யாகக் கோபித்தாய், மூரிசசிலை வேள் ஆணமை முடிக்குந் திறமரிதோ - வலிய கரும்பு வில்லையுடைய மன்மதனுடைய வீரத்தை யழிக்குந் திறமை யுனக்குக் கடினமா ?, எ - று.

126. அண்டரண்டபகி ரண்டமுந் திசையும்
வெடிபடப்பிளிறி யடியினால்
அரவினுச்சிநெற நெறெனப் புடவி
யடவிதூளி யெழவடவையும
துண்டகண்டமுற வடுபனைக்கைமத
வேழநல்கியருள் தொண்டைமான்
துங்கவேங்கடவன் மல்லையாதிபதி
தோளின்மாலையரு ளாதநாள்
சண்டை சண்டைமத ராஜனுக்குமிவ
ளுக்குமென்பதறி யாமலே
தழலில்வெய்யபனி நீரையும புழுகு
தன்னையுங்கொடிய வன்னைமீா
மொண்டு மொண்டிளகு சந்தனத்தொடு
குழைழக்கிநீரிவள் பிழைக்கவோ
மூச்சுமில்லையொரு பேச்சுமில்லை யிவண்
முலையிலிட்டறிய வாருமே.

உரை :—அண்டரணட பகிரண்டமுந் திசையும் வெளிபட பிளிறி - வானுலகமும் அதற்கு மேற்பட்ட வுலகங்களும் எதிரொலிசெயயும்படியாக முழங்கி, அடியினால் கீழே பலமாக அடிவைததது நடப்பதால், அரவின் உச்சி நெறநெறென - பாம்பின் சிரசானது நெறநெறெனவும், புடவி யடவி தூளி எழ - பூமியிலும் காடுகளிலும் புழுதி கிளம்பும்படி யாகவும், வடவை யும் துண்ட கண்டமுற - வடவா முகாக்கினியும் துணடு துணடாகும்படி யாகவும், அடுபனைகைக மதவேழம் நலகியருள் தொண்டைமான்-கொல்லும் படியான மதம் பொருந்திய யானையைப் பரிசாகக் கொடுததருள்கின்ற தொண்டைமானென்னும் மன்னன், துஙக வேஙகடவன் - சிறந்த திரு வேங்கட மலைக்கு அதிபன், மல்லையாதிபன் - கடல் மல்லையாகிய மாவலி புரத்திற்குத் தலைவன், தோளின் மாலை யருளாத நாள் - அவன் தோளி

னுள்ள மாலையைக் கொடுக்காத நாட்களில், சண்டை சண்டைமத ராச னுக்கு மிவளுக்கும் என்பதறியாமலே - உக்கிரமான போர் மன்மதவேந்த னுக்கும் இவளுக்கும் ஏற்படுமென்பது தெரியாமல், , கொடிய அன்னைமீர்- கொடுமையான தாய்மார்களே !, தழலில் வெய்ய பனி நீரையும் புழுகு தன்னையும் - தழல்போலச் சூடான பனி நீரையும் புனுகையும், மொண்டு மொண்டு - எடுதெடுத்து, இளகு சந்தனத்தொடு குழைக்கிறீர் - நெகிழ்ந்த சந்தனத்தோடு கலக்குகிறீர்களே!, இவள் பிழைக்கவே - இவள் உயிர் வாழ் தற்கு வழியாயிது ?, இவளுக்கு - மூச்சுமில்லை ஒரு பேச்சுமில்லை - ......, இவள் மூலையிலிட்டு அறியவாருமே - சூடு இருக்கிறதா இல்லையா என்று சோதித்துப் பாரப்பதற்கு வாருங்கள், எ - று.

127. கன்றுகொண்டு விளவெறிந்த கண்ணர்பூசை செய்திடும்
கமலமா யிரத்திலொன்று காணவில்லை யென்றுகண்
ணன்றுகொண்டு விட்டவாதி கடவுளோடு பங்குகொண்
டயலிருந்து வாழ்பவ னலங்கன்மாலை தருவனே
குன்றுகொண்டு பந்தடித்து நீழலைச் சுளித்து போய்க்
குந்தியம்பு ராசியைக் குடித்துவேழ மெட்டையும்
வென்றுகொன்று பிளிறுகின்ற களிறுநல்கி யுலகெலாம
விதாணதனை நிலைநிறுத்து மிழலைவீதி நாதரே.

உரை :—குன்று கொண்டு பந்தடித்து நீழலைச் சுளித்துபோய் - மலை களை யெடுத்துப் பந்துபோல வீசித தன்னுடைய நிழலைக்கண்டு கோபித் துசசென்று, குந்தியம்பு ராசியைக் குடித்து - ஓரிடதிலிருந்து கடலைக் குடித்து, வேழம் எட்டையும் வென்று - எட்டுத்திக்கு யானைகளையும் தன் னுடைய ஆற்றலினலே செயித்து, கொன்று பிளிறுகின்ற களிறு நல்கி - பலவற்றைறயுஙகொன்று முழங்குகின்ற யானையைக்கொடுத்து, உலகெலாம் விதாணத்தை நிலைநிறுத்தும்-எல்லா வுலகங்களிலும் ஈகையை நிலைநிறுத்து கின்ற, மிழலை வீதி நாதரே - திருவீழிமிழலை வீதியி லெழுந்தருளும் பெரு மானே!, கன்று கொண்டு விளவெறிந்த கண்ணர் பூசைசெய்திடும் - கன்றுக் குட்டியை யெடுத்து விளவாய் நின்ற அசுரனை எறிந்து கொன்ற கிருஷ்ண மூர்த்தி அர்சசனைசெய்கின்ற, கமலமாயிரத்திலொன்று காணவில்லை - ஆயி ரம் தாமரைப்பூவில் ஒருபூக்காணுமல்போகவே, கண் அன்று கொண்டுவிட்ட ஆதி கடவுளோடு-அன்று கண்ணையெடுதது ஒரு மலராக அர்ச்சிக்க அதனை ஏற்றுக்கொண்ட முதற்கடவுளாகிய சிவபெருமானேடு, பஙகுகொண்டு அய லிருந்து வாழ்பவன் - ஒரு பாகம் திருமேனியிற் கொண்டு பக்கத்திலிருந்து வாழ்பவனுகிய திருமால், அலங்கல் மாலை தருவனே - விளங்குகின்ற தன் னுடைய மாலையைக் கொடுப்பானே, எ - று.

128. பேயிரங்கவு முயிரருந்திய பிள்ளைமாமுகில் சுந்தரன்
பெருகுதண்புனல் வையையந்துறை பிரிவுறுத மகன்றில்காள்
தாயிரங்குவ தற்றவர்க்கொரு தமரிறங்க நினைப்பரோ
தலையிலிப்படி யெழுதுமோவிது சதுமுகற்கிது நீதியோ
வேயிரங்குவ தொன்றுகாம விரோதமொன்றுள தல்லதால்
வெண்மதித்தழ லென்றொருத்தியை வெல்லவித்தனை வேண்டு
ஆயிரம்பகைகூடியென்செயு மாவியொன்றலதில்லையால் [மோ
ஆகிலுஞ்சொல நீரறிந்திரு மன்பர்பெண்பழி யாளரே.

உரை :—பேயிரங்கவும் உயிரருந்திய பிள்ளை மாமுகில் சுந்தரன் - பூதகியாய்ப் பால் கொடுக்கவந்த பேய் மகளின் உயிரைக்கவர்ந்த குழந்தை வடிவான பெரிய மேகம்போன்ற அழகனுடைய, பெருகுதண் புனல் வையை யந்துறை பிரிவுறுத மகன்றில்காள் - வெள்ளமாகப் பெருகுகின்ற வையை நதிக்கரையிற் வாழும் பெண்ணன்றிற் பறவைகளே!, தாயிரங்க அற்றவர்க்கு ஒரு தமரிரங்க நினைப்பரோ - அன்னை பரிவு கூறுதற்கில்லாத பெண்களுக்கு உறவினர் பரிதாபப் படுவார்களா, தலையில் இப்படி எழுதுமோ இது சதுமுகற்கு இது நீதியோ - தலையில் இவ்வாறு எழுதுவானு அந்த பிரமனுக்கு இது முறையாகுமா?, வேயிரங்குவதொன்று காம விரோதம் ஒன்று அல்லாதால் - வேய்ங்குழல் ஒலிப்பது ஒரு கெடுதி மன்மதனுடைய பகை மற்றொரு கெடுதியல்லாமல், வெண்மதித் தழல் ஒன்று - வெண்மையான சந்திரன் ஒரு தீயகாகும், ஒருத்தியை வெல்ல இத்தனை வேண்டுமா - ஒருத்தியைச செயிப்பதற்கு இவ்வளவு இடைஞ்சல்கள் வேண்டுமா, ஆயிரம் பகை கூடி யென் செயும் - விரோதமான காரியங்கள் ஆயிரம் கூடினுலும் என்ன, ஆவி யொன்றல தில்லையால் - உயிர் ஒன்று தவிர வேறில்லை, ஆகிலுஞ் சொல நீர் அறிந்திரும் - ஆனுலும் என்னைப்பற்றித் தலைவருக்கு எடுத்துச சொல்ல நீர் இவற்றை அறிந்திருப்பீராக, அன்பர் பெண்பழியாளரே - காதலர் பெண்ணைக் கொல்லும் பாதகரே, எ - று.

129. காவிரித் துறைப்படிந்து பொருநையைக் கலக்கியே
கடைக்கணங்கிகொண்டுகொற்கை கனல்கொளுத்துமியானை
வாவுமிக்க மாவுகைக்கும் வஞ்சிவென்ற வஞ்சியான் [யான்
மதுரைவீர கஞ்சுகன் வரைப்புறத்து மாதரீர்
பாவையர்க்கு வாடைவே றெனக்குவேறு வாடையோ
பாயன்மற் றவர்க்குவே றெனக்குவேறு பாயலோ
யாவருக்கு மதியம்வே றெனக்குவேறு மதியமோ
யாரொருத்தி பெண்பிறந் திரண்டுபட்ட துலகமே.

உரை :—காவிரித் துறைப்படிந்து பொருநையைக் கலக்கியே - காவிரி யாற்றுத் துறையில் மூழ்கி தாமிரபர்ணியிற் படிந்து கலக்கி, கடைக்கண் அங்கிகொண்டு - கடைக்கண்ணிலிருந்து தோன்றும் நெருப்புப் பொறியைக் கொண்டு, கொற்கை கனல் கொளுத்தும் யானையின் - கொற்கையில் தீப் பற்றும்படி செய்யும் யானையை யுடையவனும், வாயுமிக்க மாவுகைக்கும் வஞ்சிவென்ற வஞ்சியின் - தாவிச செல்வதில் சிறந்த குதிரைகளைச் செலுத்தும் சேர மன்னனை வென்ற வஞ்சகமற்றவனுமாகிய, மதுரைவீர கஞ்சுகன் வரைப்புறத்து மாதரீர் - மதுரையிலுள்ள வீரகஞ்சுகனென்னும் மன்னனுடைய மலையிடத்து வாழும் பெண்களே!, பாவையர்க்கு வாடை வேறு எனக்கு வேறு வாடையோ - வாடைக் காற்றானது மற்றப் பெண்களுக்கு ஒரு வகையாகவும் எனக்கு வேறு வகையாகவும் அமைந்துளதோ, பாயல் மற்றவர்க்கு வேறு எனக்கு வேறு பாயலோ - படுக்கை மற்றவர்க்கு வேறு வகையாகவும் எனக்கு வேறு வகையாகவும் அமைந்துளதோ, யாவருக்கும் மதியம் வேறு எனக்கு வேறு மதியமோ - மற்றெல்லாருக்கும் சந்திரன் வேறு விதமாகவும் எனக்கு வேறு விதமாகவும் ஒளி தருகின்றதோ, யான் ஒருத்தி பெண் பிறந்து இரண்டு பட்டது உலகமே - யான் ஒருத்தி பெண்ணைப் பிறந்த பிற்பாடு இவைகளெலலாம் எனக்கொரு வகையாகவும் மற்றவர்களுக்கு ஒரு வகையாகவு மிருப்பதால் உலகமே இருவேறு தன்மை யுடையதாயிற்று, எ - று.

130. திக்கயங்க ளெட்டுமுட்ட வைத்தபுட்ப தாகையான்
செழியர்கொற்ற வளவர்வந்து திறையளக்கு முன்றிலான்
மைக்கருங்கண் மாதரார் மனங்கவற்று மாரவேள்
மதுரைவீர கஞ்சுகன் மணந்துதந்த பந்தநோய்
கைக்குள்வந் தகப்படாது கண்முனிற்கு மொருவராற்
காணொணாது காணுமென்று காட்டொணாத தன்றியும்
ஒக்குமென் றுரைக்கலான வுவமையில்லை யிருவருமே
உள்ளறிந்த தன்றிமற் றிவ்வூரறிந்த தல்லவே.

உரை :—திக்கயங்கள் எட்டு முட்டவைத்த புள் பதாகையான் - எட்டுத் திக்குகளிலுமுள்ள யானைகளைப்போய்த் தட்டும்படியாக பரவுகின்ற பறவைக்கொடியை யுடையவன், செழியா கொற்ற வளவர்வந்து திறை யளக்கு முன்றிலான் - பாண்டியர்களும் வீரமுடைய சோழர்களும் வந்து கப்பங் கட்டுகின்ற வாசலை யுடையவன், மைக்கருங்கண் மாதரார் மனங்க வற்று மாரவேள் - மை தீட்டிய கண்களையுடைய பெண்களின் மனத்தை மோகத்தால் வருத்துகின்ற மன்மதனைப்போல்பவன் ஆகிய, மதுரைவீர கஞ்சுகன் மணந்து தந்த பந்த நோய் - மதுரைவீர கஞ்சுக னென்பவன் என்னைக் கலியாணஞ்செயது எனக்குக் கொடுத்த வியாதியானது, கைக் குள் வந்து அகப்படாது - நம்முடைய கையினிடத்தி லகப்படுவது

யில்லை, கண் முன்னிற்கும் ஒருவரால் காணொணாத - கண்ணுக்கு முன்னே நிற்பதுபோலத் தோன்றும் ஆனால் உறுதியாகக் காண முடியாது, காட்டொணாதது - இன்னொருவருக்குக் காட்டவேண்டுமென்றாலும் அது முடியாததாக விருக்கிறது, அனறியும - அது வல்லாமலும், ஒக்குமென் றுரைக்கலான உவமையில்லை - அது எதைப்போலும் என்று சொல்லுதற்கு உவமானப் பொருளுமில்லை, இருவரும் உள அறிந்ததன்றி மற்று இவவூர் அறிந்த தல்லவே - தலைவனும நானும் அறிந்தோமே யன்றி மற்றும் இவவூரிலுள்ளவர்கள் அதைத தெரியவில்லை, எ - று.

தாய் பாலனைப் பார்த்துக் கூறல்

131. மலைந்த மன்னவர்கள் வானிலேற
வடிவாள்விதிர்த்த முகில்சுந்தரன்
வாகைகொண்ட பராராஜ கேசரிதன்
மதுரையங்குரிசில் பின்புபோய்
உலைந்தலைந்து விளையாடுகின்ற வுனைவந்
தெடுத்துரிய தாயலால்
உங்களையரை யழைத்து வாவென
வுரைத்தபோதவளோ டென்சொனாய்
அலைந்தலைந் தவிழ்செய் குழலுமக்குழலி
லள்ளியிட்ட சிறுபூழியும
அமுதமூறு கனிவாயு மந்தவமு
தருவியாறொழுகு பண்டியும்
கலைந்தசெம் பொன்வளை யும பிசைந்திரு
கருங்கண்மைப்படு புறங்கையும
கழன்று தொங்குமலர் ஞாணுமாகவரு
காதலார்சிறிய களபனே.

உரை :—அலைந்து அலைந்து அவிழ்செய குழலும் - அலைந்தலைந்து அவிழ்ந்து கிடக்கின்ற தலைமயிரும், அக்குழலில் அள்ளியிட்ட சிறு பூழியும் - அதிலே யெடுத்துப் போட்டுக்கொண்ட புழுதிப்பொடியும், அமுதமூறும் கனிவாயும் - அமுதம்போன்ற இனிய நீர் ஊறுகின்ற குழைவான திருவாயும், அந்த அமுத அருவி யாறு ஒழுகு பண்டியும் - வாயிலிருந்து விழுகின்ற அமுத நீர் வழிந்து விளங்கும் வயிறும், கலைந்த செம்பொன வளையும் - கழலுகின்ற செம்பொன்னினால் செய்த கையிலிட்ட காப்பும், பிசைந்து இரு கருஙகண் மைப்படு புறஙகையும் - கண்ணைப் பிசைவதினால் கண்ணிற் தீட்டிய மைபட்ட புறஙகையும், கழன்று தொஙகு மலா ஞாணுமாக வரு காதலா சிறிய களபனே - நெகிழ்ந்தசைகின்ற பூப்போன்றுள்ள அரைஞாணுமுடைய விருப்பததைத் தருகின்ற யானைக்கன்று போன்ற

வனே !, மலைந்த மன்னவாகள் வானிலேற - எதிர்தத அரசாகள் இறந்து சுவர்ககம் புகும்படியாக, வடிவாள் விதிர்த்த முகில் சுந்தரன் - கூரிய வாளை வீசிய மேகம்போன்ற அழகனுகிய, வாகை கொண்ட பரராச கேசரிதன் மதுரை யஙகுரிசில் பின்பு போய் - வெற்றிகொண்ட பரராச கேசரியென்னும் மதுரை மன்னன் பின்சென்று, உலைந்து அலைந்து விளை யாடுகின்ற உனைவந் தெடுத்து - உடல் வருந்த விளையாடுகின்ற வுன்னைச செவிலி தன் கையிலெடுத்து, உயரிய தாயலால் - உனது மேன்மையான தாயை யல்லாமல், உஙகள் ஐயரை அழைத்து வாவென உரைத்தபோது அவளோடு என் சொனுய் - உன்னுடைய தகப்பனுரையுங கூட்டிக் கொண்டு வருவாயென்று சொன்னபோது நீ அதற்குப் பதிலாக யாது கூறினுய், எ - று.

132. பாகசாதன கிரீடகோடிபொடி
படவெறிந்தகொடி மீனவன்
படவிலேறி யெழில் வாசியேறியெழு
பார்புரக்குமுகில் சுந்தரன்
தியாக தாருவென நாவலர்க்குதவு
செங்கையானரச ராகவன்
திசைதொறுந் தரளமணி கொழித்துவரு
திருவயற் றுறையிலன்னமே
மாகமவேகம்வரு திங்களா லிளைய
தென்றலாலொலி செயன்றிலால்
வாடையா லயல்சொல் வமபினுல் கடல்செய்
கமபினுல்மதன னமபினுல்
ஆகமேதுபடு நெஞ்சமேது படு
மாலைசயேதுபடு கிலையிலா
அமளியேதுபடு நாணமேதுபடு
மந்திமாலைபடு நேரமே.

உரை:—பாகசாதன கிரீட கோடிபொடி படவெறிந்த கொடிமீனவன்- இந்திரர்கள் பலருடைய முடிகள் கீழே விழும்படியாக வளையெறிந்த பாண் டியனுடைய, படவிலேறி எழில் வாசியேறி - கப்பலி லேறிசசென்றும் அழகிய குதிரைகள்மீது சென்றும் எழுபார புரக்கும் முகில் சுந்தரன் - ஏழு லோகத்தையும் காப்பாற்றுகின்ற மேகம்போன்ற சுந்தரனென்னும் பெய ருடையவன், தியாகதாருவென நாவலர்க்குதவு செஙகையான் அரச ராக வன் - ஆகிய கற்றவாகளுக்குக் கொடையளிக்கின்ற சிறந்த கையையுடைய ராமன்போன்ற மன்னனது, திசைதொறும் தரளமணி கொழித்துவரும் திருவயல் அன்னமே - திசைகளிலிருக்கும் முத்துகளையும் இரத்தினஙகளை

யும் கொழிக்கின்ற திருவயலைச் சூழ்ந்துள்ள குளப் படித்துறைகளில் வதி கின்ற அன்னமே, மாகம் வேகம் வரு திங்களால் - ஆகாயத்தில் வேகமாக கதிர் வீசி வருகின்ற சந்திரனாலும், இளைய தென்றலால் - மெல்லிய தென்றற் காற்றினாலும், ஒலிசெய் அன்றிலால் கூவுகின்ற அன்றிற் பறவையினாலும், வாடையால் - வாடைக் காற்றினாலும், அயல் சொல் அம்பினால் - அயலா ருடைய பழி தூற்றுதலாகிய கணையினாலும், கடல் செய் கம்பினால் - கடல் செய்கின்ற அதிர்ச்சியினாலும், மதனன் அம்பினால்-மன்மதனுடைய கணையி னாலும், அந்தி மாலைபடு நேரமே - மாலைப்பொழுதில் மயங்குகின்ற முன் னிரவு நேரத்தில், ஆகம் ஏதுபடும் - உடம்பு என்ன பாடுபடும், நெஞ்சம் ஏதுபடும் - மனம் என்னபாடுபடும், ஆசை யேதுபடும் - காதலுணர்ச்சி யெவ்வளவு துன்புறுத்தும், நிலையிலா அமளி யேதுபடும் - திறமாகப் படுக்க முடியாத படுக்கை எவ்வாறாகும், நாணம் ஏதுபடும் - வெட்கம் எவ வாறு நிலைபெறும், எ - று.

133. சந்தனாடவிமலைப் பிறந்த தமிழ்ச்சங்கம
விறிவளர் கூடலான்
தாறுகொன்றுநிழல் சீறநின்றகழை
சாய்த்தெறிந்தகளி யானையான்
மந்தரா சலமெடுத்து வாசுகிபிணித்து
வாரிதி கடைந்தமால்
வாகைவாகுபெறு சுந்தரன் குவலைமாலை
கேட்டபின் மடந்தைமீர்
அந்திமாலைதனில் வந்துபோர்செயு
மனந்தவேள் பகழிவெள்ளமோ
ஆவிசோரமட நாண்வரம்பழியு
மாசைகொண்டபெரு வெள்ளமோ
இந்தவானிலவின் வெள்ளமோ மகளி
ரேசுகின்றபெரு வெள்ளமோ
இருகண்மாரி பொழிவெள்ளமோ வுலகி
லெந்தவெள்ளமிக வானதே.

உரை:—மடந்தைமீர் - பாங்கிமாரே !, சந்தனாடவிமலைப் பிறந்த தமிழ்ச சஙகம் வீறி வளர் கூடலான் - சந்தனக காடுகளுடைய பொதிய மலையில் தோன்றிய தமிழைச சிறப்பாக வளாக்கின்ற சஙகஙகள் தஙகிய மதுரைப் பதியை யுடையவன், தாறு கொன்று நிழல் சீறநின்ற கழை சாய்த்தெறிந்த களியானையான் - வாழைக் குலைகளை யழித்துத தன்னிழ லைப் பார்த்துக கோபித்துக கரும்புகளை முறிததுத் தள்ளுகின்ற மத யானையை யுடையவன், மந்தராசலமெடுதது வாசுகி பிணிதது வாரிதி

கடைந்த மால் - மந்தர மலையை மத்தாக நாட்டி வாசுகியைக் கடைகயிறு கப் பூட்டித் திருப்பாற் கடலில் அமுதங் கடைந்த திருமாலின் அம்சமான வன், வாகை வாகுபெறு சுந்தரன் - வெற்றிமாலையைப் புயத்தி லணிந்த சுந்தரனென்னும் மன்னனுடைய, குவளைமாலைகேட்டபின் - குவளைமாலையை வேண்டுமென்று நாண கேட்டபின், அந்திமாலைதனில் வந்து போர்செயும் அனங்கவேள் பகழி வெள்ளமோ - சாயங்காலப் பொழுதில் சண்டை செய்கின்ற உருவிலாத மன்மதனுடைய கணைகளின் பெருக்கமோ, ஆவி சோர மட நாண வரம்பு அழியு மாசைகொண்ட பெரு வெள்ளமோ - உயிர் தளரும்படியாக மடமை நாணம் என்பவற்றின் எல்லைகள் அழிதற் கேது வாகிய காதல் மிகுந்த பெருக்கமோ, இந்தவான் நிலவின் வெள்ளமோ - ஆகாயத்திற் காணப்படுகின்ற சந்திர வொளியின பெருக்கமோ, மகளிரேசுகின்ற பெருவெள்ளமோ - பெண்கள் பழி கூறுகின்ற வசை மொழியின் பெருக்கமோ, இருகண் மாரி பொழி வெள்ளமோ - இரண்டு கண்களிலிருந்து வடிகின்ற கண்ணீரின் பெருக்கமோ, உலகில எந்த வெள்ளம் மிக ஆனதே - உலகத்தில் எதன் பெருக்கம் மிகுதிப்பட்டதாகு மென்று கூறுங்கள், எ - று.

134. பழுத்துடைந்தகனி நெக்கு நெக்குருகி
சாறுவீழவடி சேறெழும
பல்பெருஞ்சுனையை யமுதமென்று வெயில்பட
வொணுதென மறைப்பபோல்
பொழிற்புறஞ் சொரியுமுகி லினந்தழுவு
புதுவைவாழ்சடைய னுதவுசேய்
பூதலமபரவு சேதிபன்றனது
பொன்னிருடனைய பூவையார்
விழித்தனந்தலொ டெழுந்திருந்ததுவு
மெய்துவட்சியு மகிழ்ச்சியும
மென்மருங்கினி லெடுத்தடுத்ததுவும
மேகலைத்தலை யணைத்ததும
வழுத்திவந்துதிரு நீறுதந்துவிடை
தந்தபார்வையை மறப்பினும
வாசலின்படி பிடித்து நின்றநிலை
மனமறப்பதிலை காணுமே.

உரை:—பழுத்துடைந்த கனி நெக்கு நெக்குருகி - பழுத்துக் கீறிய பழங்கள் பிளவு பிளவாய வெடித்துக் கசிந்து, சாறுவீழ வடிசே றெழுபல் பெருஞ் சுனையை - கனிரசம் கீழே விழுந்து மணலோடு கலந்து நிறைந் திருக்கும் பல பெரிய நீர் நிலைகளை, அமுதமென்று வெயில்பட வொணு

தென மறைப்ப போல்-அமுத மென்று அதன்மேல் வெயில் படாது மறைப்
பதுபோல, பொழிற் புறஞ் சொரியும் - சோலையின் வெளியே மழையைப்
பொழிகின்ற, முகிலினம் தழுவு புதுவை வாழ் சடையனுதவு செய்-மேகக்
கூட்டங்கள் தழுவும் சோலைகள் சூழ்ந்த புதுவைப்பதியில் வாழ்கின்ற
சடைய னென்பவர் புதல்வராகிய, பூதலம்பரவு சேதிபன் தனது பொன்
னின் நாடனைய பூவையார் - உலகத்தார் போற்றுகின்ற சேதிப
மன்னனுடைய காவிரிநாடு போன்ற வளமுடைய பெண்டிர், விழித்து
அணைந்தலொ டெழுந்து இருந்ததுவும் - தூக்கத்தோடு விடியற் காலத்தி
லெழுந்துட்கார்ந் திருந்ததும், மெய் துவட்சியும் மகிழ்ச்சியும் - உடம்பி
னசைவும் நகைப்பும், மேகலையை மென் மருங்கினில் எடுதது உடுத்தது
வும - நல்ல ஆடையை நுட்பமான இடையி லெடுத்துக் கட்டியதுவும், தலை
யணைத்ததும் - தலையில் மூடிக்கொண்டதும், வழுத்திவந்து திருநீறு தந்து
விடைதந்த பார்வையை மறப்பினும் - வழிபட்டுத திருநீறு கொடுததுப்
போய வரும்படி விடை கொடுத்து நோக்கினதை நான் மறநதாலும், வாச
லின் படி பிடித்து நின்ற நிலை மன மறபபதிலை காணுமே - வாசற்படியைப்
பிடிததுக்கொண்டு நின்ற நிலையினது அழகை நான் மறக்க முடியா தென
பதை அறிக, எ - று.

135. தோகைநீமழைக் காலமென்று துளங்கி
வாடுவ தென்கொலோ
சொன்னமேநினை வானமன்னவர்
சொன்னமேன்மை மறப்பரோ
தியாகமாமுகிற் செழியன் வண்புகழ்
தேக்கிஞனிடுக்க ணீக்கினன்
செஞ்சொல்வாணர் விளங்கவே
யொருவஞ்சவேழம வழங்கினன்
மேகமேயெழு லன்றுகார்ண்மத
யானைநின்ற கிளர்ச்சியே
மின்விளங்கிய தன்றுகாணதன்
மிக்ககொம்பின் விளக்கமே
மாகவீழ்துளி யன்றுகாணிது
மாறிலாமத தாமரையே
வான்முழக்கம தன்றுகாணது
மாமுழக்க முழக்கமே.

உரை :—தோகை - மயில் போன்றவளே !, சொன்னமே - தஙகம்
போன்றவளே !, நீ மழைக்கால மென்று துளங்கி வாடுவ தென்கொலோ -
நீ கார் காலமென்று மனங்கலங்கித் தளர்வது எதனாலே, நினைவானமன்ன

வர் சொன்ன மேன்மை மறப்பரோ - உன்னிடத்தில் வருகின்றேனென்று சொன்ன நினைவுடைய மன்னர் சொன்ன சொல் மறக்க மாட்டார், தியாகமா முகில் செழியன் வண்புகழ் தேக்கினான் இடுக்கண் நீக்கினான் - பெரிய மேகம்போன்ற கொடையாளியாகிய பாண்டியன் பாவலர்க்கு வறுமைத் துன்பத்தை நீக்கி வளமான புகழை நிறையப்பெற்றான், செஞ்சொல் வாணர் விளங்கவே யொருவஞ்ச வேழம் வணங்கினான் - செவ்வியமொழியில் பாடும புலவர்கள் சிறப்படையும்படியாக ஒரு கபட நாடகமுடைய யானையைக் கொடுத்தான்; மேகமே எழலன்று காண்மத யானை நின்ற கிளர்ச்சியே - மேகம்போலத் தோற்றுவது மேகமல்ல அவனது யானையினுடைய ஊக்கமே மின்விளங்கிய தனறுகாண் அதன்மிக்க கொம்பின் விளக்கமே - மின்னல் போலத் தோன்றுவது மின்னலல்ல அந்த யானைகொம்பினுடைய பிரகாசமே, மாகம் வீழ்துளி யன்றுகாண் இது மாறிலாதமத தாரையே-மழை பெய்வதாகத் தோன்றுவது ஆகாயத்திலிருந்து விழும் மழைத்துளியல்ல அந்த யானை சொரிகின்ற மத வெள்ளமே, வான் முழக்கமது அன்றுகாண் அது மாமுழக்க முழககமே - வானத்தில் தோன்றுகின்ற இடியல்ல அந்த யானையின் பெரிய கர்ச்சனையே இடிபோல் தோன்றுகிறது, எ - று

136. வாசமேவுசொற் பொய்யாதபிள்ளை நாயன் மாதைசூழ்
 வாவிமேவு சோலைசூழு மதுரகீத வண்டுகாள்
ஓசைகூர மாரனெய்ய வுள்ளுடைந்த நோயெலாம்
 ஒருவரோ டுரைக்கொணு தென்னுள்ளகத் தடக்கினேன்
பேசொணுது வாய்திறந்து பேசவேண்டு மாகிலோ
 பெண்பிறக் கொணுதுபெண் பிறக்கவேண்டு மாகிலோ
ஆசைகொள் ளொணுததாசை கொள்ளவேண்டு மாகிலோ
 அங்கொருத்த ரிங்கொருத்த ராகொணுது காணுமே.

உரை :—வாசமேவு சொற் பொய்யாத பிள்ளை நாயன் மாதை சூழ் - மணம் பொருந்திய நற்சொல்லினையுடைய பொய்யாத பிள்ளை நாயகன் என்னுந் தலைவரது மாதைப்பதியைச் சுற்றியுள்ள, வாவிமேவு சோலைசூழு மதுரகீத வண்டுகள் - பொய்கைகள் பொருந்திய பொழிகள் சூழ்ந்த இனிய இசையைப்பாடும் வண்டுகளே !, ஓசைகூர மாரனெய்ய உள்ளுடைந்த நோயெலாம் - வருத்தத்தால் கூக்குரல் மிகும்படியாக மன்மதனெய்த அம்பினாலாகிய மன முறிவாகிய வியாதியை யெல்லாம், ஒருவரோடு உரைகொணுது என்னுள்ளத்து அடக்கினேன் - ஒருத்தரோடும் சொல்லக்கூடாமல் என் மனததிற் குள்ளேயே அடக்கிக்கொண்டேன், பேசொணுது வாய்திறந்து பேசவேண்டு மாகிலோ - அவற்றையெல்லாம் வாய் திறந்து பேசுதற்கு நீதியில்லை, (அவற்றைப் பேசவேண்டுமானல்) பெண் பிறக் கொணுது - பெண்ணுகப் பிறததல் கூடாது, பெண் பிறக்க வேண்டு மாகிலோ ஆசை கொள்ளொணுதது - பெண்ணுய்ப் பிறக்கவேண்டு

மானால் ஆசை கொள்ளக்கூடாது, ஆசை கொள்ளவேண்டுமாகிலோ அங் கொருத்தர் இங்கொருத்தர் ஆகொணாது காணுமே - காதல் கொண்டால் தலைவ ரொருவிடத்திலும் தலைவி மற்றொரு விடத்திலுமாகப் பிரிந்திருக் கக்கூடாது, (இருவரும் ஒன்றாய்ச் சேர்ந்திருக்கவேண்டு மென்பது கருத்து), எ - று.

137. பல்லார்பகை கொள்ளுந்தொழில் கடியாது கொல்லரவம்
பால்கைத்து வெறுக்குந்துயர் பரிகாரமி லாநோய்
பொல்லாருள மகிழுங்கதை புகையார்சொரி யனலம்
பூவும்பொரு கலகம்பிறர் போக்காமருள் கண்டும்
கொல்லாரரு ளென்னக்குளிர் குடகாவிரி யமுதம்
குடிகொண்டகு டந்தைக்கொரு கோனெங்கள்கு மண்டூர்
நல்லார்திரு மலையன்புய னளினத்தொடை யருளான்
நல்கின்றவர் நல்காதது நான்செய்திடு பிழையே.

உரை :—(காதலரது பிரிவாற்றாமையாகிய செயல்) பல்லார் பகை கொள்ளும் தொழில் - பலபோ விரோதங் கொள்வதற்குரிய செயலாகும், கடியாது கொல் அரவம் - அது கடியாமல் கொல்லுகின்ற பாம்பாகும், பால் கைத்து வெறுக்கும் துயர் - பால் கசந்து வெறுக்கப் படுதற்கேது வாகிய துன்பமது, பரிகார மிலா நோய் - மருந்தில்லாத வியாதி, பொல் லார் உளம் மகிழும் கதை - தீயவர்கள் பார்த்து மன மகிழுகின்ற சரித்திர மாகும், புகையார் சொரி அனலம் - புகையாது எரிகின்ற தீயாகுமது, பூவும் பொரு கலகம் - பூவினால் சண்டை விளைக்கின்ற கலகமாகும், பிறர் போக்கா மருள் கண்டும் - அது தலைவர் தவிரப் பிறரால் நீக்க முடியாத மயக்க மென்பது தெரிந்தும் கொல்லார் அருள் என்ன - கொல்லாதவர் களுடைய கருணைபோல, குளிர் குடகாவிரி யமுதம் குடிகொண்ட குடந் தைக் கொருகோன் - குளிர்ந்த காவிரி நீராகிய அமுதம் நிலைபெற்றிருக்கும் கும்பகோணத் திருப்பதிக்குத் தலைவனும் ஆகிய, எங்கள் குமண்டூர் நல் லார் திருமலையன் - எங்களுடைய குமண்டூரிலிருக்கும் திருமலைய னென் பவர், புயன் நளினத் தொடை யருளான் - புயத்தி லணிந்துள்ள தாமரை மலர் மாலையை எனக்குக் கொடுக்கா திருக்கிறான், நல்கின்றது நல்காதது நான் செய்திடு பிழையே - கொடுக்கக் கூடிய மாலையை அவன் கொடாம லிருப்பது நான் செய்த தீவினையே, எ - று.

பரத்தையர்க் கூற்று

138. கைகொடுத்து மளகபார மயிர்கொடுத்து மறைவிலே
கடிசுருட்கொடுத்து மாசைகை நகங்கள் வைபென
மெய்கொடுத்து மெய்யிதென்று பொய்கொடுத்தும் விலைபெறு
விரலின்மோ திரங்கொடுத்தும் வித்தம்வாங்க வல்லமோ

மைகொடுத்த விழிசிவப்ப நுதல்வியர்ப்ப வரையிலே
மயில்கொடுத்த வமளிசோர மரகதக் கொழுந்துபோல்
நெய்கொடுத்த பொழுதிலாயர் மனையிலாடு மேகமே
நீதிகண்ட பாலைவந்த நீலகண்ட பூபனே.

உரை :—மைகொடுத்த விழி சிவப்ப - மை தீட்டிய கண்கள் சிவக்கும்படியாகவும், நுதல் வியர்ப்ப - நெற்றியில் வியர்வை தோன்றும்படியாகவும், வரையிலே மயில் கொடுத்த அமளி சோர - மலையிலுள்ள மயிலின் தோகையினாற்செய்த படுக்கை கலையும்படியாக, மரகதக் கொழுந்துபோல் - பச்சை மணியின் ஒளிபோல, நெய் கொடுத்த பொழுதில் ஆயர் மனையிலாடு மேகமே - வெண்ணெய் தந்தபோது அதை வாங்கித் தின்று இடையர்கள் வீடுகளில் விளையாடின மேகம் போன்றவனே !, நீதிகண்ட பாலைவந்த நீலகண்ட பூபனே - நீதிகண்ட பாலை யென்னும் ஊரில் தோன்றிய நீலகண்ட மன்னனே!, கைகொடுத்தும் அளகபார மயிர் கொடுத்தும் - பிடிப்பதற்குக் கையைக் கொடுத்தும் தடவுதற்குக் கூந்தல் மயிரைக் காட்டியும், மறைவிலே கடி சுருள் கொடுத்து - மறைவாகக் கடிப்பதற்கு வெற்றிலைசசுருள் கொடுத்தும், ஆசை கை நகங்கள் வையென மெய் கொடுத்து - காதலினால் நகக்குறிகள் வைக்கும்படி உடம்பைக் காட்டியும், மெய்யிதென்று பொய் கொடுத்தும் - மெய்யான மோகந் தருவதென்று பொய்யான வுடலைக் காட்டியும், விலை பெரு விரலின் மோதிரங் கொடுத்தும் - விலை மதிக்க முடியாத மோதிரத்தை விரலிலணிவித்தும், விதநம் வாங்க வல்லமோ - உன்னிடம் நாங்கள் பொன் பெற முடியுமா ?, எ - று.

139\. குருத்துவாழைகள் வேள்குடைக்கொரு கோறருந்திருமங்கலம்
குடிவிளங்கிய வாவிநாயகர் கோபுரந்திரு மண்டபம்
நிருத்தமாதரோ டாடல்பாடல்கள் கண்டமாமுகில் பாலைவாய்
நீலகண்டன் வலரக்குளே யெதிர்நிற்குமாதர் முகத்திலே
பருத்திராது சிறுதுவெண்மை படாதுரேகை விடாதுசெம்
பவளமொன்றை யெடுத்துமிக்க பதப்படுத்தி வணக்கியே
அருத்துபாகி லழுத்தியண்டர் தமமுதையுள்ளி னடக்கியே
அழகுகொண்டுபொ திந்ததொன்றினை யதரமென்னுமிவ்வுல
[கமே.

உரை :—குருத்து வாழைகள் வேள் குடைக்கு ஒரு கோல் தரும் - இளம் வாழைத் தண்டுகள் மன்மதனுடைய குடைக்காம்புக்குத தடியாகப் பயன்படுவதுபோல விளங்கும், திருமஙகலம் குடி விளஙகிய வாவி நாயகர் - திருமங்கலத்திலுள்ள குடிகள் தழைக்கும்படியாக விளங்கும் உயிரபோன்ற கடவுளுக்கு, கோபுரந் திருமண்டபம் நிருத்த மாதரோடு ஆடல் பாடல்கள் கண்ட - கோபுரமும திருமண்டபமும் அமைத்து பெண்களுடைய ஆடல்

பாடல்களோடு கூடிய திருவிழாவும் ஏற்படுத்திய, மாமுகில் - பெரியமேகம் போன்ற வள்ளலாகிய, பாலைவாய் நீலகண்டன் - பாலைப்பதியி லுறையும் நீலகண்ட மன்னருடைய, வரைக்குளே எதிா நிற்கு மாதர் முகத்திலே - மலையிலே உள்ள பெண்களுடைய திருமுகத்தில், பருத்திராது - அதிகமாகப் பருக்காமலும், சிறுது - சிறியதா யில்லாமலும், வெண்மை படாது - வெண்ணிறங் கலவாமலும், ரேகை விடாது - உரிய வரிகள் தவறும லிருக்கப் பெற்றும் உள்ள, செம்பவள மொன்றை யெடுத்து மிக்கப் பதப் பண்படுத்தி வணக்கியே - செந்நிறமான பவளத் துண்டொன்றை யெடுத்துப் படுத்தி, அருத்துபாகில் அழுத்தி - உண்ணுகின்ற வெல்லப்பாகிற் றோய்த்து, அண்டர்தம் அமுதை யுள்ளி னடைகியே - தேவாமிர்தத்தை யதனு ளடைத்து, அழகுகொண்டு பொதிர்த தொன்றினை - அழகாக அமைத்துவைத்த ஒரு உறுப்பினை, அதரம் என்னும் இவ்வுலகமே - இவ்வுலகத்தார் உதடு என்று சொல்வார்கள், எ - று.

140. வனசன்கொடி லங்காபுரி நிருபன் கொடியனிலன்
 மைந்தன்கொடி சேரன்கொடி மாரன்கொடி துரியோ
தனனன்கொடி நிகராகிய நடைசொல்லிடை நுதல்கண்
 தடவல்குல் படைத்தாண் மயறணியத் தொடைதாராய்
கனகங்குடைதுகிறண்டிகை காளங் கரிபரிதேர்
 கற்றோர்களை வாழ்வித்தருள் கார்கண்டய ரதிபன்
கனிதங்கிய கமலாசன மாதைப்பிள்ளை நாயகன்
 நாராயண பட்டப் பொனிநன்ன டுடையானே.

உரை:—கனகம் குடை துகில் தண்டிகை காளம் கரி பரி தேர் - பொன்னும் குடையும் ஆடையும் சிவிகையும் ஊது சின்னமும் யானையும் குதிரையும் தேரும் கொடுதது, கற்றோர்களை வாழ்விததருள் - படித்தவர்களை நன்றாக வாழச செய்கின்ற, கார் கண்டு அயர் அதிபன் - மேகத்தைப் பார்த்து ஈகையைச செயகின்ற தலைவன், கனிதங்கிய கமலாசன மாதைப் பிள்ளை நாயகன் - நன்றாக வாழ்கின்ற தாமரைப்பூ விருக்கையையுடைய மாதைப்பதியில் வாழ்கின்ற பிள்ளை நாயகனென்னும் வள்ளலே!, நாராயண பட்ட-நாராயண னென்னும் பட்ட முடையவனாகிய, பொனி நன்னாடுடையானே - நல்ல காவிரி நாட்டிற்கு அதிபதியே, வனசன் கொடி நடை - பிரமன் கொடியி லெழுதப்பெற்ற அன்னம்போன்ற நடையும், லங்காபுரி நிருபன் கொடியான் சொல் - இராவணனது கொடியிலுள்ள வீணையைப் போன்ற சொல்லும், அனிலன் மைந்தன் கொடி இடை-வாயு புத்திரனாகிய வீமனுடைய கொடியாகிய சிங்கம்போன்ற இடையும், சேரன் கொடி நுதல்-சேரனுடைய கொடியாகிய வில்போன்ற புருவமும், மாரன் கொடி கண் - மன்மதனுடைய கொடியாகிய கயல்மீன் போன்ற கண்ணும், துரியோதனன் கொடி அல்குல் - துரியோதனனுடைய கொடியாகிய அரவம்

போன்ற அல்குலும், படைத்தான் மயல் தணிய தொடை தாராய் - இவ்வளவு உறுப்புகளையும் படைத்த பெண்ணின் மயக்கம் நீங்கும்படி மாலையளிப்பாயாக, எ - று.

141. கொதித்தெழுந்த திரைக்கட னஞ்சுண்ணீ ரானீர்
குலவுதொண்டன் மகவையடிச் சுண்ணீ ரானீர்
கதித்தபன்றிக் கெட்டாத கழல ரானீர்
கருதலர்கள் புரமெரித்த மிடுக்க ரானீர்
எதிர்த்துவந்த காளியண்ட வாத ரானீர்
எந்நாளு நிருவாணி யானீர் தில்லைப்
பதிக்கரசே சிவகாமி பங்களுரே
பத்தர்சித்தர் பரவுசிற் றம்பலவ ளுரே.

உரை:—தில்லைப்பதிக்கரசே - தில்லைத்தலததிற்குத் தலைவரே!, சிவகாமி பங்களுரே - சிவகாமி யம்மையைப் பாகமாக வுடையவரே !, பத்தர் சித்தர் பரவு சிற்றம்பலவளுரே - பத்தர்களும் சிததர்களும் தொழுகின்ற சிற்சபையி லாடுகின்ற பெருமானே!, கொதித்தெழுந்த திரைககடல் நஞ்சு உண்ணீரானீர்-பொஙகிக் கிளம்பிய பாற்கடலிலுள்ள விஷத்தை யுண்டவரானீர், குலவு தொண்டன் மகவையடிச சுண்ணீரானீர் - உம்மை வழிபடுகின்ற சிறுததொண்டனுடைய பிள்ளையை யறுத்துக் கறி சமைத்து உண்டவரானீா, கதித்த பன்றிக் கெட்டாத கழல ரானீர் - உம்மைக காண வேணுமென்று பன்றி வடிவுகொண்ட திருமாலுக்குக் காண முடியாதவரானீர், கருதலர்கள் புரமெரித்த மிடுக்க ரானீா - பகைவர்களுடைய திரிபுரததை யெரித்த வீரரானீா, எதிர்த்து வந்த காளியண்ட வாதரானீர்-நடனஞ் செய்வதில் போட்டிபோடவந்த காளியோடு நெருஙகி வாதாடினீர், என்நாளும் நிருவாணி யானீர்-எப்போதும் திக்கையே ஆடையாக வுடைமையால் ஆடை யில்லாதவரானீா, எ - று.

142. எட்டைக்கட்டி யெழுத்தோ டெழுத்துவைத்
திணைத்துக்கட்டி யிசைகட்டி லோபர்மேற்
பாட்டைக்கட்டி யென்றெண்டையுங் கட்டிய
பாவங்கட்டிய தென்றைக்குத் தீருமோ
தோட்டைக்கட்டுங் குழலே யுனதடித்
துணையைக்கட்டிய பேர்க்குப் பரகதி
வீட்டைக்கட்டிய தாயே நெல்வேலி வாழ்
மெல்லியேதிரு வெண்ணீற்று வல்லியே.

உரை:—தோட்டைக் கட்டும் குழலே - தோட்டினைக் காதிலணிநத கூந்தலுடைய உன்னையே!, உனதடித் துணையைக் கட்டிய பேர்க்குப் பர

ரதி வீட்டைக் கட்டிய தாயே - உனது இரு திருவடியையும் சரணுகப் பிடித்துக் கொண்டவர்களுக்கு மேலான நிலையாகிய மோட்சத்தைக கை வரும்படி செய்யும் அம்மையே !, நெல்வேலி வாழ் மெல்லியே - திருநெல் வேலிப் பதியில் வீற்றிருக்கின்ற மென்மை வாய்ந்த தேவியே !, திருவெண் ணீற்று வல்லியே - திருநீற்றினை யணிந்த கொடிபோன்றவளே !, ஏட்டைக் கட்டி எழுத்தோடு எழுத்து வைத்து இணைத்துக் கட்டி - ஏடுகளைத் தயார் செய்து ஒன்றைச சேர்த்து எழுத்துக்குப்பின் எழுத்து பொருந்தும்படி எழுதி, இசை கட்டி - அதற்குரிய ராகமமைதது, லோபர்மேல் பாட்டைக் கட்டி, ஈயாதவர்கள்மீது பாட்டியற்றி, என் தொண்டையும் கட்டியது என்றைக்குத் தீருமோ - என் தொண்டை கட்டிப்போவதற்குரிய பாவததை யென் தலைமேற் சுமந்து கொண்டது எப்போது ஒழியுமோ ?, எ - று.

143. தனக்காறு மாதமும் போய்நாட்டிற் காட்டிற்
றங்குபட்டி விக்கிரமன் சரிதம்போல
எனக்காறு மாதமும போயானி யாடி
ஆவணிவந் தெய்தியபின் மாதம்போனல்
மனக்காதல் கொண்டிருந்த மாதர்பின்னை
மாதப்பே ரிட்டழைப்பார் மதுரை வாசல்
தனக்கான மதிமந்திரி யிந்திரன் றன்
தபோபலனே குடந்தைக்குந் தமிழ்க்கும் வாழ்வே.

உரை:—மதுரை வாசல் தனக்கான மதிமந்திரி இந்திரன்றன் தபோ பலனே-பாண்டியன் மதுரைப்பதி வாயிலுக்குததக்க அறிவுடைய அமைசச ரான பெருஞ் செல்வனின் தவப்பயனு லுதித்தவனே !, குடந்தைககும் தமிழ்க்கும் வாழ்வே - குடந்தைப்பதியில் தலைவனும் தமிழகக்கு ஆக்கந் தேடு பவனே!, தனக்காறு மாதமும் போய் நாட்டில் காட்டில் தஙகுபட்டி விககிர மன் சரிதம்போல - விக்கிரமாதித்தனும் பட்டியும் நாடாறு மாதம் காடாறு மாதம் அரசு செலுத்திய கதைபோல, எனக்காறு மாதமும் போய் - என் னைப் பிரிந்த ஆறுமாத காலமாகியும், ஆனி ஆடி ஆவணி வந்தெய்திய பின் மாதம் போனல் - ஆனி ஆடி ஆவணி புரட்டாசி என்கின்ற மாதங்கள் கழிந்தால், மனக்காதல் கொண்டிருந்த மாதர் - என்பால் உள்ளத்திலே ஆசைகொண்ட பெண்டிர், பின்னை மாதப்போ இட்டு அழைப்பாா - நீர் சொன்னபடி மீண்டும் வாராததை யெண்ணி அல்பிசி யென்றழைப்பார்கள், (அல்பிசி - சீ அல்பனே), எ - று.

144. குன்றுகுடையா வெடுத்துக் கோவைக் காத்த
கோபாலா நின்பெருமை கூறக்கேண்மோ
அன்றுமலர் வந்தவடன் வீட்டைவிட்டே
ஆயர்மனை வந்ததனு லாயர் மாதர்

கன்றுகட்டுந் தாம்புகொண்டே யுரலிற் கட்டிக்
கரியதிரு மேனிசிவப் பேற மத்தால்
என்றுமழி யாப்பெயராத் திருடனென்றே
ஏற்றியது முன்தலையி னெழுத்துத் தானோ.

உரை :—குன்று குடையா எடுத்துக் கோவைக் காத்த கோபாலா - கோவர்த்தன கிரியை எடுத்துக் குடையாகப் பிடித்துப் பசுக்களைக் காப்பாற்றிய கோபால கிருஷ்ணனே !, நின் பெருமை கூறக் கேண்மோ - உன்னுடைய பெருமையைச் சொல்லக் கேட்டருள்வாயாக, அன்று மலர் வந்தவள் தன் வீட்டை விட்டே - அக்காலத்தில் தாமரைப்பூவில் தோன்றிய திருமகளின் வீட்டை விட்டு, ஆயர் மனை வந்ததனால் - இடையர்களுடைய இல்லங்களிற் போய்ச் சேர்ந்ததனால், ஆயர் மாதர் - இடைப் பெண்கள், கன்று கட்டும் தாம்புகொண்டே உரலிற் கட்டி - கன்றுக்குட்டியைக் கட்டுகின்ற கயிற்றைக்கொண்டு உன்னை யுரலிற் சேர்த்துக் கட்டி, கரிய திருமேனி சிவப்பு ஏற - உன்னுடைய கருநிறமுள்ள உடம்பில் சிவந்த நிறமுள்ள இரத்தக்கரை படும்படி, மத்தால் என்றும் அழியாப் பெயராய்த் திருடனென்றே ஏற்றியதும் - மத்தைக்கொண்டு என்றும் மாறாத திருடனென்று பெயருண்டாகும்படியாக அடித்ததும், உன் தலையி னெழுத்துத்தானோ - உன் தலையில் விதித்த விதியோ ?, எ - று.

145. சேல்வண்டு வசமளியே நாணாக
பெண்ணின்மேற் சினந்தேயைந்து
கோல்வண்டு முனைதீட்டிக் கழைகுழைத்தங்
கசனெய்த கொடுமைதன்னால்
பால்வண்டு நிறைபழன வாதிபுரித்
தியாகேசர் பாலிலாறு
கால்வண்டே போயுரையின் கைவண்டு
பூமுகந்த கணக்கைத்தானே.

உரை :—ஆறுகால் வண்டே - ...., சேல் வண் துவசம் - சேல்மீன் சிறந்த கொடியாகவும், அளியே நாண் ஆய் - வண்டே வில்லின் நாணாகவும் வைத்து, இப்பெண்ணின்மேல் சினந்தே - இந்த மாதின்மேல் கோபித்து, ஐந்துகோல் வண்டு முனை தீட்டி - கொல்லக்கூடிய ஐந்து அம்புகளின் நுனிகளைக் கூர்மையாகச் செய்து, கழை குழைத்து - கரும்பு வில்லை வளைத்து, அங்கசன் - மன்மதன், எய்த கொடுமை தன்னால் - அம்புகளைச் செலுத்திய கொடுஞ் செய்கைகளினாலே, பின்கை வண்டு பூமுகந்த கணக்கைத்தானே - பெண்ணின் கையிலிருந்த வளையல்கள் பூமியில் கழன்று விழுந்த அளவினை, பால் வண்டு நிறை பழன ஆதிபுரி தியாகேசர் பால் போயுரை - பால்போன்ற வெள்ளை நிறமுடைய சங்குகள் நிறைந்த வயல்க

ளுடைய திருவொற்றியூர்த் தியாகராசப் பெருமானிடம் தெரிவிப்பாயாக !, எ - று.

146. கொல்லா விரதத் தமிழ் முனிவன்
முதலோர்குண வாகட நூலில்
எல்லாப் பிணிக்கு மருந்திசைத்தா ரியானுமவை
தேர்ந்துறுதி கண்டேன்
பொல்லாப் பசிநோய்க் கொருமருந்து
புகலாமையின்யான் றேடிநின்றன்
சொல்லா மெனவெண்ணுழி யந்நோய்
தொலைந்ததுறைசார் பறிகிலனே.

உரை :—கொல்லா விரதத் தமிழ் முனிவன் முதலோர் - அருளொழுக்கத்தை மேற்கொண்ட அகத்தியர் முதலிய முனிவர்கள், குணவாகட நூலில் - வாகடம் போன்ற வைத்திய நூல்களில், எல்லாப் பிணிக்கும் மருந்து இசைத்தார் - எல்லா நோய்களுக்கும் இன்ன இன்ன மருந்தென்று விதித்தனர், யானும் அவை தேர்ந்து உறுதி கண்டேன் - நானும் அவற்றை யாராய்ச்சிசெய்து அவற்றின் முடிபுகளைத் தெரிந்தேன், பொல்லாப் பசி நோய்க் கொரு மருந்து புகலாமையின் - கொடிய பசியாகிய வியாதிக்கு ஒரு மருந்தும் அந் நூல்களில் விதிக்காமையால், யான் தேடி நின்றன் சொல்லா மென எண்ணுழி - யானதற்கு மருந்தை நாடி உன் மொழியே அதற்கு மருந்தென்று நினைத்தபோது, அந்நோய் தொலைந்த துறைசார்பு அறிகிலனே - அந்த நோய் ஒழிந்துபோன விதத்தையும் அதன் தொடர்பினையும் அறியாதவனானேன், எ - று.

147. கட்பூக்குழன் மாவடுவண்டாங்
கழைவிற்புதல் கூரசிநாட்டம்
எட்பூத்துண்ட முருக்கோட்ட
மிலகுவிது வானனம்பாணி
தட்பூச்சுவர்க்கஞ் சிலம்பிடைநூனி
தம்பமகிப்பை வராற்றுள்சொல்
வெட்பால்குரல் கோகிலமன்ன
நடையும்வடமீன் கற்புடையாள்.

உரை :—கண் - மாவடுவைப்போன்ற கண்ணும், பூக்குழல் வண்டாம் - வண்டைப்போன்ற அழகிய கூர்தலும், கழை வில் புதல் - கரும்பு வில்லைப் போன்ற புருவமும், கூர் அசி நாட்டம் - கூரிய வாள்போன்ற பார்வையும், என் பூத்துண்டம் - எள்ளின் மலரைப்போன்ற மூக்கும், முருக்கு ஓட்டம் - முருக்கம் பூப்போன்ற உதடும், இலகு விது ஆனனம் - ஒளிருகின்ற சந்திரன்போன்ற முகமும், பாணி தட்பூ - குளிர்ந்த தாமரைப் பூப்போன்ற

கையும், சுவர்க்கம் சிலம்பு - மலைபோன்ற தனமும், இடை நூல் - நூலிழை போன்ற இடையும், நிதம்பம் அகிபை - பாம்பின் படம்போன்ற கடிதடமும், வரால் தாள் - வரால் மீன்போன்ற கணைக்காலும், சொல் வெட்பால் - வெண்மையான பாலின் சுவைபோன்ற மொழியும், குரல் கோகிலம் - குயில் போன்ற ஒலியும், அன்ன நடையும் - அன்னம்போன்ற நடையும், வடமீன் கற்புடையாள் - அருந்ததிபோன்ற கற்புமுடையாளிப் பெண், எ - று.

## வெறி விலக்கல்

148. இத்தை யணையவுரு வில்லான் விடுமலரே
வைத்தகரை யோதடுக்க மாட்டாதே—நித்தநித்தம்
அங்கமுகங் காத்துறைசை யம்பலவா ணன்புயத்திற்
செங்கழுநீர்த் தாரணையே தேடு.

உரை :—இத்தையல் நைய - இப் பெண்ணானவள் வருந்தும்படியாக, உருவில்லான் விடு மலர் ஏவை - மன்மதன் செலுத்துகின்ற பூங்கணையை, தகர் ஐயோ தடுக்கமாட்டாதே - (பலியிடப்படும்) ஆடானது தடுக்கமுடியாது, (பரிதாபம்!) நித்தம் நித்தம் - நாள்தோறும், அங்கமுகங்காதுறை சை - அழகிய பாகு மரங்கள் சூழ்ந்த திருவாவடுதுறையில் வீற்றிருக்கும், அம்பலவாணன் புயத்தில் - அம்பலவாண சுவாமியினுடைய தோளி லணிந்த, செங்கழுநீர் தாரினையே தேடு - செங்கழுநீர் மாலையினையே நாடிப்பெறுவாயாக!, எ - று.

149. பண்டுமைக்கோர் பால்கொடுத்த பண்பனைக்கோ டீச்சரத்துக்
கண்டுமையல்கொண்டவன்றாள்கண்ணுற்றாய்-ஒண்டொடியாய்
வந்திநின்றார் வந்தரக்கேண் மாலையெங்கண் மாதினுக்குத்
தந்திநின்றார் தந்திடென்று தான்.

உரை :—ஒண் தொடியாய் - ஒளியுள்ளவளை யலைத்தரித்த பாங்கியே!, பண்டு உமைக்கு ஓர் பால்கொடுத்த பண்பனை - பழைய காலத்தில் உமையம்மைக்கு ஒரு பாகமாகிய இடப்பாகத்தைத் தந்த நற்குணமுடைய சிவபெருமானை, கோடீசசுரத்துக் கண்டு - கோடீச்சுரத் திருப்பதியிற் போய்ப் பார்த்து, மையல்கொண்டு - அன்புகொண்டு, அவன்தாள் கண்ணுற்று - அவனுடைய திருவடியைத் தரிசித்து, எங்கள் மாதினுக்கு - எங்கள் சிறு பெண்ணுக்கு, மாலைதந்தி - மோகத்தைக் கொடுத்தாய், நின் தார் தந்திடு என்று - உன்னுடைய மாலையைக் கொடுத்துவிட வேண்டுமென்று, வந்து நின்று - வணங்கி நின்று, ஆர்வந் தரக்கேள் - அன்போடு கேட்பாயாக, எ - று.

150. வாக்கு மனமுமெட் டாப்பர மேசர் வலியநம்மைக்
காக்கும் படிகங்க ணங்கட்டிக் கொண்டனர் காய்ந்துநமைத்
தாக்கும் படியணு காதினி மாயைச் சனியனிதம்
பாக்கும் பணமும்வைத் தேயழைத் தாலும் படியகத்தே.

உரை :—வாக்கு மனமும் எட்டா பரமேசர் - சொல்லுக்கும் மனத்திற்கும் அப்பாற்பட்ட பெரிய முதல்வராகிய சிவபெருமான், வலிய நம்மைக் காக்கும்படி கங்கணங் கட்டிக்கொண்டனர் - தாமாக வந்து நம்மைக் காப்பதற்காக உறுதி செய்துகொண்டார், இனி - இனிமேல், மாயைச சனியன் - மாயையாகிய சனியனை, நிதம் படியகத்தே பாக்கும் பணமும் வைத்து அழைத்தாலும் - இப்பூவுலகில் தினந்தோறும் வெற்றிலை பாக்கும் காணிக்கையும் வைத்துக் கூப்பிட்டாலும், காய்ந்து நமைத் தாக்கும்படி அணுகாது - நம்மைச சினந்து வாதனை செய்வதற்கு அண்டாது, எ - று.

151. பொருதுவட் டாடுஞ்சி றூர்வீதி யைந்நதிப் புண்ணியமுன்
ஒருதுவட் டாமகன் செற்றோன்பணி பரனுற் றிடுவான்
கருதுவட் டாவெனுஞ் சொல்லாய் பொறுத்துக் கணப்பொழு
திருதுவட் டாமல்விடு மோமதன னிருங்கணையே. [திங்

உரை :—வட்டாய் எனும் சொல்லாய் - சாக்கரைக்கட்டி யென்று சொல்லத்தக்க மொழியையுடையவளே !, மதனன் இருங்கணை துவட்டாமல் விடுமோ - காமனுடைய பெரிய அம்பு நம்மை வருத்தாது விடுமா, பொருது வட்டாடும் சிறூர்வீதி யைந்நதிப் புண்ணியன் - விளையாட்டுச சண்டைசெய்து வட்டாடுகின்ற சிறு பிள்ளைகள் நிறைந்த தெருக்களையுடைய திருவையாற்றுப் பெருமானை !, முன் ஒரு துவட்டா மகன் சென்றோன் பணிபரன் - முற்காலத்தில் தனிச சிறப்புடைய துவட்டாவின் புதல்வனாகிய இராவணனைக் கொன்ற இராமபிரான் வழிபட்ட பெரியோனை, உற்றிடுவான் கருது - அடைவதற்கு எண்ணுவாயாக, பொறுத்துக் கணப்பொழுது இங்கு இரு - பிரிவாற்றாமையைத் தாஙகிகொண்டு ஒரு சிறிது நேரமிஙகே இருப்பாயாக, எ - று.

152. இளந்தென் றலைவட வானலமென்னு மெழில் மதன்கா
களந்தென் றலைநமன் காணென வேங்குங் கடலகடு
பிளந்தென் றலையென் றினியொழிப் பானெனும பேதையிவ்வா
றளந்தென் றலையிலெழுத் தெனுங்கூ ழையருமபொருளே.

உரை :—பேதை - எனது சிறுமகளானவள், இளந் தென்றலை வடவா அனல மென்னும் - மெல்லிய தென்றற் காற்றினை வடவாமுகாக்கினி யென்று கூறுகிறாள், எழில் மதன் காகளம் தென்றலை நமன் காணென ஏங்கும் - அழகிய காமககடவுளது ஊது சின்னமாகிய குயிலைத் தெற்குத்

திக்கிலுள்ள காலனென்று எண்ணி யஞ்சுகிறாள், என்று - பகலவன், கடல் அகடு பிளந்து - சமுத்திரத்தின் வயிற்றைக் கீறிக்கொண்டுதித்து, அலை என்று ஒழித்திடுவான் - இராத்திரியின் இருளை எப்போது தொலைப்பான், எனும் - என்று கேட்டாள், கூழையரும் பொருள் - கடைசியான நட்பம் யாதெனில், இவ்வாறு அளந்து என் தலை எழுத்து எனும் - இப்படி என் வினைப்பயனை யளந்து என் தலையில் பிரமனெழுதிய எழுத்தே யாகுமென்பாள், எ - று.

153. ஊசிக்கழகு முனைமழுங்காமை யுயர்ந்தபர
தேசிக்கழகிந் திரியமடக்க திரண்முலைசேர்
வேசைக்கழகின் னிசைபலநூல்கற் றவித்வசனர்
நாசிக்கழகு பொடியெனக்கூறுவர் நாவலரே.

உரை :—ஊசிக்கு அழகு முனை மழுங்காமை - ஊசிக்கு அழகு தருவது அதனுடைய நுனி கூர்மை கெடாதிருத்தில், உயர்ந்த பரதேசிக்கு அழகு இந்திரிய மடக்கல் - மேலான துறவிகளுக்கு அழகு தருவது ஐம்பொறி யடக்குதல், திரள் முலை சேர வேசிக்கு அழகு இனனிசை - குவிந்த முலைகளையுடைய விலைமகளிர்க்கு அழகு தருவது இனிய சங்கீதம் பல நூல் கற்ற வித்வசனர் நாசிக்கு அழகு - இலக்கியங்கள் பலவற்றையும் படித்துத் தேர்ந்த கல்விமான்களின் மூக்குக்கு அழகு தருவது, பொடியெனக் கூறுவர் நாவலரே - மூக்குப் பொடியென்று நாவன்மை யுடையவர்கள் சொல்வார்கள், எ - று.

பார்வதி வழிபாடு

154. துரிசுந் தரியலர் நேராஞ் சனனமுந் துன்மதியாம்
பரிசுந் தரியல கமேநல் லூரிற்படர் செருக்காங்
கரிசுந் தரியல ரோனுக்கெட்டாத முக்கண் ணன்மகிழ்
கிரிசுந் தரியலங் காரியைப் போற்றுதி கேடறவே.

உரை :—அகமே - நெஞ்சமே!, தரியலர் நேராம் - சத்துருக்களுக்குச் சமமாகிய துருசும் - குற்றங்களையும், சனனம் - பிறப்பையும், துன்மதியாம் பரிசும் - தீயவறிவாகிய வெகுமதியையும், தரியல் - பொறக கருதாது, படர் செருக்காம் கரிசு உந்த - மிகுந்த அகங்காரமாகிய குற்றம் தங்களைப் பிடித்துத் தள்ள, அரியலரோனுக்கு எட்டாத - திருமாலுக்கும் பிரமனுக்கு மகப் படாத, முக்கண்ணன் மகிழ் - மூன்று கண்ணுடைய சிவபெருமான் விரும்பும், கிரிசுந்தரி யலங்காரியே - மலையரசன் மகளாகிய அழகம்மையே!, கேடறவே - தீங்குகளெல்லாம் ஒழியும்படி, நல்லூரில் போற்றுதியே - நல்லூரில் வழிபடுவாயாக, எ - று.

கலவியின் பிரிவாற்றாமையால் தலைவன் கூறியது

155. விடவாளை வென்றவிழி யாளைப்பூமியின் மேலதிர
நடவாளைப் பெண்கட நாயகமாமொரு நாயகத்தை
மடவாளை யென்னுள்வதி வாளையின்ப மருவவென்சொற்
கடவாளை யென்றெய்வமே யென்றுபோயினிக் காண்பதுவே.

உரை :—என் தெய்வமே - எனது கடவுளே !, விடவாளை வென்ற விழியாளை - நஞ்சு கலந்த வாளினுஞ் சிறந்த கண்ணுடையவளை, பூமியின் மேல் அதிர நடவாளை - நிலத்தின்மீது ஒலியுண்டாகாமல் மெதுவாக நடக்கும் இயல்புடையவளை, பெண்கள் தம் நாயகமாம் ஒரு நாயகத்தை - பெண்களுக்குத் தலைமையான ஒப்பற்ற தலைவியை, மடவாளை - இளமை யுடையவளை, என்னுள் வதிவாளை - என் மனததில் தங்கியிருப்பவளை, இன்பம் மருவ என் சொற்கடவாளை - இன்ப நுகர்வதில் என் கட்டளைக் கடங்கி நடப்பவளை, என்று போய் இனி காண்பதுவே - இனிமேல் எந்நாளிற் போய்க் காணமுடியும், எ - று.

தனக்கு நோய்தீர்த்த வீசனென்னும் ஒரு வைத்தியன்மீது பாடியது

156. தேசம் புகழுந் திருநெல்லை யில்வாழு
மீசனைநம் மீசனுக்கொப் பென்னலாம்—ஈசன்
பிறவாமற் காப்பான் பிறந்தாரை நாளும
இறவாமற் காப்பா னிவன்.

உரை:—தேசம் புகழும் திருநெல்லையில் வாழும் ஈசனை - நாட்டினர் போற்றுகின்ற திருநெல்வேலிப்பதியில் வீற்றிருக்கும் கடவுளை, நம்மீசனுக்கு ஒப்பென்னலாம் - வைத்தியனாகிய நம்மீசனுக்குச சமானமாகச சொல்லலாம், ஈசன் பிறவாமல் காப்பான் - கடவுள் நம்மைப் பிறவி யெய்தாமற் காப்பாற்றுவான், இவன் பிறநதாரை நாளும் இறவாமற் காப்பான்- இவ்வைத்தியன் பூமியிற் பிறந்தவர்களை யெக்காலததிலுஞ் சாகாதபடி காப்பாற்றுவான், எ - று.

தட்டானைப்பற்றிப் பாடியது

157. மொய்வேலை சூழுலகின் முத்துக்கு மாரபத்தன்
கைவேலை போலநாங் கண்டதில்லை—அவ்வேலை
செய்யுமவற் குத்திறல் விச்சுவ கருமன்
கையும்பொ ழியும்பொன் காண்.

உரை:—மொய் வேலை சூழுலகில் - நெருங்கிய கடல் சூழ்ந்த பூமியின் கண், முத்துக் குமாரபத்தன் கைவேலை போல நாம் கண்டதில்லை - முத்துக் குமாரபத்தனுடைய கையினுல் அணி செய்யும் வேலைத்திறம்போல

நாம் பார்த்ததில்லை, அவ்வேலை செய்யும் அவற்கு - அப்படிப்பட்ட உயர்ந்த தொழில் செய்கின்ற அப்பததனுக்கு, திறல் விசுவ கருமன் கையும் பொன் பொழியும் - சாமர்த்திய முடைய தெய்வகம்மியனாகிய விசுவ கருமனுங் கூடத் தனது கையால் பொன்னை வளமாகக் கொடுப்பான், காண் - அசை, எ - று.

## வெறி விலக்கல்

158. இந்தவச மந்தவசந் தன்மலைதற் கேதுசெய்யு
நொந்தவச முற்றுட்கே நோக்குங்கால்—பைந்தொடியாய்
ஆண்டகுருத் தென்றுறைசை யம்பலவாணன்
பூண்டதிறச் செங்கழுநீர்ப் பூ.

உரை:—பைந்தொடி - புதிய வளையலணிந்த பாங்கியே !, நொந்த வசமுற்றுட்கே - வருந்தித் தன்னிலை மறந்த தலைவிக்கு, இந்த அசம் - இந்த ஆடானது, அந்த வசந்தன் மலைதற்கு ஏதுசெய்யும் - அந்த மன்மத னுடைய சண்டையை எதிர்த்து என்ன செய்யக்கூடும் ?, நோக்குங்கால் - ஆராயுமிடத்து, ஆண்ட குரு - நம்மை யாட்கொண்ட ஆசாரியனாகிய, தென் துறைசையம்பல வாணன் - அழகிய திருவாவடு துறையில் வீற்றி ருக்கும் அம்பலவாண சுவாமிகளுடைய, புயத்தில் பூண்ட திறச செங்கழு நீர்ப்பூ ஆய - தோளிற்றரித்த நல்ல திறமுடைய செங்கழுநீர மலரை நாடுவா யாக, எ - று.

159. அருமாதவர்புகழ்சந் தரற் கூடியோரையற்பெற்ற
திருமால்பெண்ணென்பதுதேற்ற மன்றேவத்தெளிவுகொண்
ஒருவாதவற்குறித்தன்பு செய்வோர்களுலகறிய [டே
மருவாத்தர்நெற்றிமிசையோனி முத்திரைவைப்பர்களே.

உரை:—அருமாதவர் புகழ் சந்திரர்கூடி - அருமையான பெரிய தவஞ் செய்தவர்கள் போற்றுகின்ற சிவபெருமானைப் புணர்ந்து, ஓர் ஐயன் பெற்ற - அரிகர புத்திர னென்னும் ஒரு தெய்வத்தைப் பிறப்பித்த, திரு மால் - அரி, பெண்ணென்பது தேற்ற மன்றே - பெண்ணினத்தைச் சார்ந் தவனென்பது தெளிவல்லவா ?, அத்தெளிவு கொண்டே - அந்தத் தெளிவு காரணமாக, ஒருவாது அவற்குக் குறித்து அன்பு செய்வோர்கள் - நீங் காமல் எப்போதும் அவனை நோக்கிப் பக்தி செய்கின்ற அடியார்கள், உலகறிய மருவாத்தம் நெற்றி மிசை - உலகத்தார்க ளறியத் தங்கள் நெற்றியிலே பொருந்தும்படியாக, யோனி முத்திரை வைப்பர்களே - யோனி முத்திரையாகிய நாமத்தை வைப்பார்கள், எ - று.

பரத்தையர்க்குஞ் சிவபெருமானுக்கும் சிலேடை

160. வரைவின்மாதராயிருத்தலாற் பதியிலாமாண்பால்
குரைகடற்புவிமாந்தர்செய் வினைத்திறங்குறித்துக்
கரைசெய்போகமங்குறுத்தலாற் கடையின்மங்கலத்தால்
உரைசெய்வேசையரர னெனற்கையமுமுளதோ.

உரை:—உரைசெய் வேசையர் - விலை மகளிரென்று பேசப்படுவோர், வரைவின் மாதரா யிருத்தலால் - மணமில்லாத பெண்டிரா யிருப்பதாலும், பதியிலா மாண்பால் - குறிப்பிட்ட தலைவ னில்லாத சிறப்பாலும், குரை கடல் புவி மாந்தர் செய் வினைத் திறங்குறித்து - முழங்குகின்ற கடல்சேர்ந்த பூமியிலுள்ள மனிதர்கள் ஈகின்ற அளவினைக் கருதி, கரை செய போக மஙகுறுததலால் - அவவவர்க கேற்ற வரம்புக்குட்பட்ட அனுபவததைக் கொடுத்தலாலும், கடையின் மஙகலததால் - விதைவைக ளாகாது முடிவற்ற மங்கல முடைமையாலும்,

அரன் - பரமசிவன், இல்வரை மாதரா யிருததலால் தன்னுடைய மனைவி மலை யரசன் மகளாக இருக்கப்பெறுதலாலும் பதியிலா மாணபால் - தனககு மேற்பட்ட தலைவனை யில்லாத சிறப்பாலும், குரை கடல் புவி மாந்தர் செய்வினைத் திறங் குறிதது - முழங்குகின்ற கடல் சூழந்த பூமியின் மக்கள் செய்கின்ற வினைகளின் தன்மைக கேற்ப, கரைசெய போக மங குறுத்தலால் - அளவு படுததப்பட்ட வினைப்பயனை அனுபவிக்கும்படி செய்தலாலும், கடையில் மஙகலததால் - எல்லையற்ற மஙகலப் பொருளா யிருததலாலும், எனக்கு ஐயம் உளதோ - விலை மகளிர் சிவபெருமானுககு ஒப்பென்று சொல்வதற்குச சந்தேக முளதோ ?, எ - று.

161. பின்னர்வந்துறுசெயலுயி ரறிதராப்பிறழ்ச்சி
முன்னர்ச்செய்திரோபவததி னன்முதியவரிளைஞர்
இன்னரென்றுறுதின்பமங் கீதலாலிவரை
என்னரும்புகழீசனென் றியம்புதலியல்பே.

உரை:—பின்னர் வந்துறு செயல் உயிர் அறிதராப் பிறழ்ச்சி முன்னர்ச் செய் திரோபவத்தி - பின்னே வரப்போகிற செயற் பயனை மககள் முன்னே அறியாதபடி மாறுபாடு செய்கின்ற மறைப்பை விலைமகளி ருடைமையாலும், உயிர்கள் பின்னனுபவிக்க வேண்டிய வினைப்பயனை முன்னே அறியாதபடி மாற்றஞ் செய்கின்ற மறைப்புத தொழிலை யிறைவ னுடைமையாலும், முதியர் இளைஞர் இன்னரென்றுறுது இன்பம அங்கு ஈதலால் - வயது சென்றவர் இளையவர் என்கின்ற வேறுபாடில்லாது விலை மகளிர் பொருளுக்குத் தக்கபடியும் கடவுள் அன்புக்குத் தககபடியும் இன்பப்பயன் கொடுத்தலாலும், இவரை என்னரும் புகழ் ஈசனென்று இயம்பு

தல் இயல்பே - பரத்தையரை நினைப்பதற்கரிய புகழுடைய ஈசனுக்கு ஒப்பாகக் கூறுதலியற்கையாம், எ - று.

162. அல்லதூமவர்பரத்தையரெனும் பெயரடைவான்
நல்லவர்புகழ்பரதநூற் கேள்விகணனுகச்
செல்வமல்குநற்பொது விடையாடலாற்சிறந்த
முல்லைவெண்ணகை யனையரையரனெனன்முறையே.

உரை :—அல்லதூமவா பரதைதயரெனும் பெயரடைவான் - அன்றியும் விலைமகளிா பரத்தையரெனப் படுதலாலும், பரதது ஐயா - சிவஞா மேலான பரதத்துக்குத் தலைவனென்னும் பெயருடைமையாலும், நல்லவா பரத நூல் கேள்விகள் நணுக செல்வம் மல்கு நல் பொதுவிடை யாடலால் - அறிஞர்கள் போற்றுகின்ற பரத நாட்டிய நூல் முறைகளுககுப் பொருநத செல்வ நிறைநத நல்ல சபை நடுவே பரத்தைய ராடுவதாலும், சிவபெருமான் சிற்சபையில் நடனஞ் செய்வதாலும், சிறநத முல்லை வெண்ணகை யனையரை அரனெனன முறையே - சிறந்த வெள்ளைநிறமுள்ள முல்லைப் பூப் போன்ற பரத்தையரை யரனுக்குச சமமென்று கூறுதல் பொருததமுடையதே, எ - று.

## திருக்கடவூர்ச் சுவாமி துதி

163. பொன்னருகுநாரருகும் பூவையாரருகுநிலம
தன்னருகுமுழன்றுழன்று தவித்திருந்தேன்கடவூரில்
முன்னருகர்தமைவென்ருர் முதன்மூவர்தமிழ்மணக்கும
உன்னருகுவரப்பெற்றே னுடையாயுன்னருளியல்பே.

உரை :—பொன்னருகு நாரருகும - பொன்னைப் பக்கத்திலுடைய மனிதா பககத்திலும், பூவையாரருகும் - மாதாகளுக்குச சமீபத்திலும், நிலம் தன்னருகும் - மண்ணிலுள்ள தாவர சொத்துக்களிடத்தும், உழன்று உழன்று தவிதகிருந்தேன் - அலைந்தலைந்து ஆசைப்பட்டிருந்தேன், உடையாய - என்னை யாள்பவனே !, கடவூரில் - திருக்கடவூரில், முன்னருகர் தமை வென்ருர் - முற்காலத்திற் சமணரை வென்றவராகிய திருஞான சம்பந்தர், முதல் மூவர் தமிழ் மணக்கும் - முதலிய மூவர்களுடைய தேவாரத்தின் வாசனை வீசும், உன்னருகு வரப்பெற்றேன் - உன் பக்கத்தில் வரப் பெற்றேன், உன்னருள் இயல்பே - இது உன் திருவருளின் தன்மையாகும் எ - று.

இராசிகளில் உதித்தவன் குணம்

164. ஆடோடெதிரிடேல் மாடோடுசேரேல்
தண்டுகொண்டிற்புகேல் நண்டுக்கிடங்கொடேல்
சிங்கத்தானோடே துங்கப்போர்செயேல்
கன்னிமகனைத் துன்னிவிடாதே
கோலானென்றிலுந் தோலான்றேளான்
தன்னைப்பேண வுன்னிக்கொள்ளுக
வில்லான்றன்னைச் சொல்லால்வளைத்திடு
மானோடே யானுவழக் கிடேல்
குடத்தான் படையெலாம் படத்தான் வெல்லுவன்
மீனத்தா னட்பைத் தானுகந் திடுகவென்
றோதினர் மூதறி வுடைய நாவலரே.

உரை :—ஆடோடு எதிரிடேல் - மேட ராசியிற் பிறந்தவனை எதிர்க்காதே, மாடோடு சேரேல் - இடப ராசிக்காரனுடன் கூடாதே, தண்டு கொண்டு இல் புகேல் - மிதுன ராசிக்காரனுடைய வீட்டிற்குள் செல்லாதே, நண்டுக்கு இடங் கொடேல் - கடகராசி யுடையவனுக்கு இடங் கொடாதே, சிங்கத்தானோடு துங்கப் போர் செயேல் - சிங்கராசியிற் பிறந்தவனோடு உக்கிரமான சண்டை செய்யாதே, கன்னி மகனைத் துன்னி விடாதே - கன்னி ராசியிற் பிறந்தவனோடு நெருங்காதே, கோலா னென்றிலும் தோலான - துலா ராசியிற் பிறந்தவன் தோல்வியடைய மாட்டான், தோளான் தன்னைப் பேண உன்னிக் கொள்ளுக - விருச்சிக ராசியிற் பிறந்தவனைப் பாதுகாப்பதில் யோசனை செய்யவேண்டும், வில்லான் தன்னைச் சொல்லால் வளைத்திடு - தனு ராசியிற் பிறந்தவனைப் பேச்சினாலே இணக்கிக்கொள்ளலாம், மானோடே யானு வழக்கிடேல் - மகர ராசியிற் பிறந்தவனோடு தொலையாத விவகாரஞ் செய்யாதே, குடத்தான் படையெலாம் படத்தான் வெல்லுவன் - கும்ப ராசியிற் பிறந்தவன் சேனைகளையெல்லாம் அழியச்செய்து செயமடைவான், மீனத்தான் நட்பைத் தானுகந் திடுகவென்று - மீன ராசியிற் பிறந்தவனுடைய சினேகத்தைப் பிரியமாகத் தேடிக்கொள்கவென்று, ஓதினர் மூதறிவுடைய நாவலரே - இவ்வாறாகப் பழைமையான அறிவுடைய பெரியோர்கள் கூறினர், எ - று.

திருவாரூர்ப் பெருமானைத் தூது விடுத்ததைப்பற்றி
இகழ்ந்து பாடியது

165. தருக்காலு மலர்ப்பொழில்சூ ழாரூர்தமைப்
புலமைத்தா ருக்குத்தன்னால்
பெருக்காலு மிவராருமைப் பெம்மானென்
றெண்ணுமற் பெண்பித்தேறி

முருக்காலும் வெலற்கரிய விதழ்ப்பரவை
யிணங்கும்வகை மொழிந்துவாவென்
றிருக்காலு நடத்தினு ளொருக்காலுந்
தமிழ்க்கிரங்கி யிருக்கொணுதே.

உரை :—தருக்காலு மலர்ப்பொழில் சூழ் ஆரூர் தமை - மரங்கள் சிந்துகின்ற பூக்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருவாரூரி லிருக்கும் பெருமானை, புலமை தருக்குத் தன்னுல் - சுந்தரமூர்த்தி தன் கல்வித் திறமையினு லேற்பட்ட செருக்கினுலே, பெருக்காலும் இவர் அருமைப் பெம்மானென்று எண்ணுமல் - வளம் நிறைந்த இறைவர் கிடைப்பதற்கரிய கடவுளென்று மதியாமல், பெண் பித்தேறி,- மாதா மயக்கத்தின் மிகுதியால், முருக்காலும் வெலற்கரிய இதழ் பரவை இணங்கும் வகை மொழிந்து வா என்று - முருக்கம்பூவினுலும வெல்லமுடியாத சிவப்பழகுடைய உதட்டினளாகிய பரவையாா தான் வருதற் கிசையும்படி தூது போய் மொழிந்து வாவென்று, இருக்காலும் நடத்தினா - இரண்டு தடவை சுவாமியை நடக்கும்படி செய்தாா, ஒருக்காலும் தமிழ்க்கு இரங்கி இருக்கொணுதே - ஒரு போதும் தமிழப் பாட்டின பொருட்டு ஆரூரா தயவுசெய்திருக்ககூடாது, எ - று.

ஒரு கன்னியைப் புகழ்தல்

166. அருக்கன்மதி யுதித்துவரு மம்புவியி
லதிசயங்க ளன்பாய்க் கேளீர்
உருக்குமந்த வுடலீரா றுன்றறையு
மொன்றறையு முகந்து கொண்டு
இருக்குமந்த விடந்தனிலே நாலிரண்டு
விதமான திருக்கக் கண்டேன்
திருக்குளத்துப் படித்துறையிற் கலுக்கெனவே
சிறுக்கியவள் சிரிக்கின் றுளே.

உரை :—அருக்கன்மதி யுதித்துவரும் அம்புவியில் அதிசயங்கள் அன்பாய்க் கேளீர் - ஞாயிறும் திஙகளும் தோன்றி யொளிசெய்து வருகின்ற இநதப் பூமியிலுள்ள வியப்புக்களைப் பிரியமாயக் கேட்பீராக !, உருக்குமாத உடல் ஈராறு ஒன்றறையும் ஒன்றறையும் முகந்துகொணடு - மனதையுருக்ககூடிய இறைவா திருமேனி பதினைந்தாவது நட்சத்திரமாகிய சோதியை யுட்கொணடு, இருக்கும் அந்தவிடந் தன்னிலே - வீற்றிருக்கும் கோயிலிலே, நாலு இரண்டு விதமானது இருக்கக கண்டேன் - ஒரு கன்னியிருக்கப் பார்ததேன், திருக்குளததுப் படித்துறையில் கலுக்கெனவே சிறுக்கியவள் சிரிக்கின்றுளே - ,........, எ - று.

இதுவுமது

167. திருக்குளத்திற் றிருக்குள சுந்தரக்கடவுள்
விருப்பமொடு சிறந்து வாழும்
இருக்களந்த குருக்கண்மனைத் தெருக்கணிறை
புதுவையினி லெனைப்பார்த் தன்பா
மருக்கிளர்ந்த முருக்கிதழ்ச்செந் திருக்கமலம்
பெருக்கமொடு வதிந்து தோன்றும்
திருக்குளத்தங் கரையருகே சிறுக்கிநின்று
கலுக்கெனவே சிரிக்கின் றாளே.

உரை :—திருக்குளத்திற் றிருக்குள சுந்தரக் கடவுள் விருப்பமொடு சிறந்து வாழும் - அழகிய நெற்றியிற் கண்ணுடைய சோமசுந்தரக் கடவுள் கருணையோடு சிறப்பாக வீற்றிருக்கின்ற, இருக்களந்த குருக்கள் மனைத் தெருக்கள் நிறை-வேதங்களை யாராய்ந்து கற்ற அர்ச்சகர்களுடைய வீடுகள் நிறைந்த தெருக்களையுடைய, புதுவையினில் - புதுவைப் பதியில், செந்திருக கமலம் பெருக்கமொடு வதிந்து தோன்றும் திருக்குளத்தங் கரையருகே-செந்தாமரைப் பூக்கள் மிகுதியாகத் தங்கி விளங்கும் அழகிய குளத்தங்கரைக்குச சமீபத்தில், மருக்கிளர்ந்து முருக்கிதழ் சிறுக்கி - வாசனை கமழும் முருக்கம் பூப்போன்ற உதட்டினையுடைய சிறுமி, எனைப் பார்த்து அன்பாய் - என்னை அன்போடு பாரத்து, நின்று கலுக்கெனவே சிரிக்கின்றாளே - ......, எ - று.

ஒரு மாதின்மீது மையல் கொண்டது

168. அக்கப்புநற்சசிமை மிக்கச் சடைக்குளணி
யத்தற்கு மெய்ப்பு தல்வனா
உக்கிரக் கோழிக்கொடியர் பச்சைப்பரிக்குமு
ரருற்றுச் செழித்த வரைமேல்
கைக்கிட்ட தன்வளையி னற்பொற்
சரத்தினொளி கப்பத்தெருக்க ளளவும்
செக்கச் சிறுக்கியவள் பக்கச்செருக்கிலுயிர்
சிக்கிக் கொளத் திரியுமே.

உரை :—அக்கு (அணி)-எலும்புமாலை யணிவதுடன், அப்பு நற்சசியை மிக்கச சடைக்குளணி - கங்கையையும் நலல சந்திரனையும் சடையினிடமாக வணிகின்ற, அத்தற்கு மெய்ப் புதல்வனா - சிவபெருமானுக்குத் திருமேனிற் றேன்றிய முருகக்கடவுள், உக்கிரக் கோழிக் கொடியர் - வீரமான கோழிக் கொடியை யுடையவர், பசசைப் பரிக்குமார் - மயிலாகிய பச்சை வாகனமேறும் இளைய பெருமான், உற்றுச செழித்த வரைமேல் -

தங்கி வளமிகுந்த மலையின்மேல், கைக்கிட்ட தன் வளையின் நற்பொன் சாத்தினொளி தெருக்களளவும் கப்ப - தன் கையிலணிந்த காப்பினோடு சேர்த்த பொன்சரட்டி னொளியானது வீதியின்வரை கவரப்பெற்ற, செக்கச் சிறுக்கியவள் பக்கச் செருக்கில் - மிகச் சிவந்த நிறமுடைய சிறு பெண்ணின் ஒரு பக்கமாகச் சாய்ந்தமைந்த கொண்டைச் செருக்கினில்- உயிர் சிக்கிக்கொளத் திரியுமே - அகப்பட்டுச் சிக்கிக்கொள்வதற்கு உயிரானது அதைச் சுற்றித் திரிகின்றது, எ - று.

திருவாரூர்ப் பெருமான் துதி

169. கங்குலிலே நடப்பார்க்குக் காலிலே
கண்வேண்டுங் கண்டீரந்தச்
சங்கரனார் திருத்தாளிற் கண்ணிடந்து
சாத்திவைத்த சமத்தைப்பாரீர்
அங்கணனாரூர ராடவே கிண்கிணிக்கா
லருமை யெல்லாம்
செங்கணெடு மாறனக்கே யல்லான்மற்
றொருவருக்குந் தெரிந்திடாதே.

உரை :—கங்குலிலே நடப்பதற்குக் காலிலே கண் வேண்டும் கண்டீர், இராத்திரியிலே வழி செல்பவருக்குப் பாதத்திலே கண்ணிருக்கவேண்டுமென்று நீங்கள் அறிவீர்கள், அந்தச் சங்கரனார் திருத்தாளிற் கண்ணிடந்து சாத்திவைத்த சமத்தைப் பாரீர் - அந்தப் பரமசிவனது திருப்பாதத்தில் திருமால் தன் கண்ணை அகழ்ந்தெடுத்து அர்ச்சித்த திறமையைக் கவனிப்பீராக [1], அங்கணனாரூரர் ஆடவே - அழகிய அருட்கண்ணராகிய திருவாரூர்ப் பெருமான் ஆடுங்காலத்தில், கிண்கிணிக்கால் அருமையெலாம் - கிண்கிணி யணிந்த அப்பெருமானது திருவடியில் அறிதற்கரிய நுட்பங்களெல்லாம், செங்கண் நெடுமால் தனக்கு அல்லால் - சிவந்த கண்ணையுடைய நீண்ட திருமாலுக்கல்லாமல் மற்றொருவருக்குந் தெரிந்திடாதே - ......, எ - று.

செங்காட்டங் குடிப்பெருமான் நிந்தாஸ்துதி

170. ஓர்குடிக்கே யோர்மகவாஞ் சிறுத்தொண்டன்
பிள்ளைபழி யொன்று போதும
பார்குடிக்குட் செங்காட்டங் குடிமேவு
முத்தரா பதியா ரேநீர்
கார்குடிக்குங் கஞ்சுகமுங் கப்பறையும்
பொக்கணமுங் கையிற் கொண்டே

யார்குடியைக் கெடுப்பதற்கே யாண்டிவே
டங்கொண்டே யலைகின் றீரே.

உரை:—பார் குடிக்குட் செங்காட்டங் குடிமேவும் உத்தராபதியாரே - உலகத்திலுள்ள ஊர்களுக்குள் திருச்செங்காட்டங்குடியைத் தெரிந்து அங்கே விரும்பியதோடு சென்ற வடதேசத்தாரென்று தம்மைச் சொல்லிக்கொண்ட பெருமானே!, ஓர் குடிக்கே ஓர் மகவாம் சிறுத்தொண்டன் பிள்ளைபழி யொன்றுபோதும் - ஒரு குடும்பத்திற்கு ஒரே பிள்ளையாயிருந்த சிறுத்தொண்டரது புதல்வனைக் கொன்ற பழிச் செயலொன்றுமே போதுமானதாயிருக்க, காரகுடிக்கும் கஞ்சகமும் கப்பறையும் பொக்கணமும் கையில் கொண்டே - கருமை மிகுந்த போர்வையையும் பிச்சைப் பாத்திரத்தையும் மிகுந்த சுமையையுங் கையி லெடுத்துக்கொண்டு, இங்கு - இந்த விடத்தில், ஆண்டி வேடம் கொண்டே - ......, யார் குடியைக் கெடுப்பதற்கு அலைகின்றீர் - ......, எ - று.

குறிப்பு:—யார் பிறவியை யொழித்து ஆட்கொள்வதற்கு இந்தத் தவவேடங் கொண்டு வந்தீர் என்பது கருத்து.

171. அச்சுதனு ருமமுடைய மைச்சினனுர்
படியளந்தே யகிலங் காத்தார்
நிச்சயமாய் வாழ்வுதரும லட்சுமிதன்
னுடன்பிறந்தீர் நிலைமை யாக
உச்சிதமாம பொன்மலையும வெள்ளிமலையும்
படைத்தீ ருமக்குச் சார்பாய்ப்
பச்சைமர கதமிருக்கப் பிச்சையெடுத்
துண்டதென்ன பட்டி யாரே.

உரை:—பட்டியாரே - திருடன் போன்றவரே!, அச்சுதனுர் உம்முடைய மைச்சினனுர் படியளந்தே அகிலங் காத்தார் - அழியாதவரென்று பேர்படைத்த திருமாலாகிய உன்னுடைய மைத்துனர் தன்னுடைய திருவடியா லுலகத்தை யளந்து பூமியிலுள்ளவர்களை யெல்லாம் காப்பாற்றினர், நிச்சயமாம் வாழ்வு தரும் லட்சுமி தன்னுடன் பிறந்தீர் - உறுதியாய் வாழ்வதற்கு வேண்டும் பொருளைக் கொடுக்கக்கூடிய திருமகளுக்கு நீர் சகோதரர், நிலைமையாக உச்சிதமாம் பொன்மலையும் வெள்ளி மலையும் படைத்தீர் - நிலைவரமாய் நிற்கு மேன்மையுடைய மேருமலையையும் கயிலை மலையையும் உடையவர் நீரே, உமக்குச் சார்பாய்ப் பச்சை மரகத மிருக்க - உமக்குத் துணையாகப் பச்சை ரத்தினமாகிய மரகதம் போன்ற உமாதேவியாரிருக்கும்போது, பிச்சை யெடுத்து உண்டதென்ன - ஐயம் வாங்கி யுண்டதற்கு என்ன காரணம்?, எ - று.

ஒற்றியூர்த் தியாகர் நடனச் சிறப்பு

172. மாத்தவர்க் கெலாமுடலம் புளகிப்பவி
நோதமாய் மகிழுவாடும்
கூத்தவர்க்குப் பார்த்தவர்கள் கொடுப்பதல்லாற்
பார்த்தவற்கே கொடுப்பா ருண்டோ
நீத்தவர்க ளேகலந்த வொற்றியூர்த்
தியாகேசர் நிருத்தங் கண்ணுல்
பார்த்தவர்க்குக் கேட்டதன்றிக் கிடையாத
பாகதியும் பாலிப் பாரே.

உரை:—மாததவர்க்கெலாம் உடலம் புளகிப்ப - பெரும் தவமுடையவ ரெல்லார்க்குங்கூட உடம்பில் மயிர்ச சிலிர்ப்புண்டாகும்படி, விநோதமாய் மகிழ ஆடும் - ஆசசரியப்பட்டுக் களிக்கும்படியாகக் கூத்தாடுகின்றவர்களுக்கு, பாாத்தவாகள் கொடுப்பதல்லால் பார்ததவர்க்கே கொடுப்பாருண்டோ - கூத்துப் பார்ததவாகள் ஏதாவது பரிசாகக் கொடுப்பதன்றி ஆட்டம் பாாததவர்களுக்குக் கூத்தாடிகள் ஏதாவது கொடுப்பதுண்டோ? நீத்தவர்களே கலந்த ஒற்றியூர்த் தியாகேசர் - துறவிகளே மிகுதியாகச சென்று தஙகிய திருவொற்றியூரி லுறையும் தியாகராசப் பெருமான், நிருத்தம கண்ணுல் பார்ததவர்க்கு - நடனத்தைக் கண்டு மகிழ்ந்தவாகளுககு, கேட்டதன்றி - அவாகள் வேண்டியதை மாத்திரமல்லாமல், கிடையாத பாகதியும் பாலிப்பாரே - பெறுதற்கரிய உயர்ந்த வீட்டின்பததையும் அளித்தருள்வா, எ - று.

ரகுநாத சேதுபதியின் யானையை வியந்தது

173. கடிவாங்கு மலர்த்தடஞ்சூழ் சேதுபதி
ரகுநாதன் களிநல்யானை
அடிவாங்கி முன்னடக்கில் வடகலிங்கங்
கிடுகிடெனு மங்கதேசம்
குடிவாங்கும் கடலேழு முள்வாங்கு
மொன்னலர்கள் கோட்டைவாசற்
படிவாங்கு மரசர்மணி முடிவாங்குஞ்
சேடன்முடி படியுந்தானே.

உரை:—கடிவாஙகு மலர்த்தடஞ்சூழ் சேதுபதி ரகுநாதன் களிநல் யானை - வாசனை வீசுகின்ற பூம்பொழில்கள் சூழ்ந்த சேது சமஸ்தான மன்னனுகிய ரகுநாத சேதுபதியின் மகிழ்சசியுடைய வீரமான யானை யானது, அடி வாஙகி முன்னடக்கில் - அடி யெடுத்து வைத்து முன்சென் ரூல், வட கலிங்கம் கிடுகி டெனும் - வடக்கேயுள்ள கலிங்க நாட்டரசர் நடு

நடுங்கி அஞ்சுவர், அங்க தேசம் குடி வாங்கும் - வங்காள நாட்டுக் குடிகள் உள்ளடங்குவர், கடலேழும் உள் வாங்கும் - சத்த சமுத்திரங்களும் சுருங்கிக் கொள்ளும், ஒன்னலாகன் கோட்டை வாசற்படி வாங்கும் - சத்துருக்க ளுடைய அரண்மனை வாசற்படிகள் அதிர்ந்தடங்கும், அரசர் மணி முடி வாங்கும் - மன்னர்களுடைய மணிகள் பதித்த கிரீடங்கள் அசைந்து பணி யும், சேடன் முடிபடியும் - ஆதிசேடனுடைய தலை கீழே தாழும், எ-று.

வண்டோச்சி மருங்கணைதல்

174. சினம்பெரிதாய் மதனைவென்ற திருவாரூர்த்
தியாகேசர் திகழுநாட்டில்
இனம்பெரிதா மதுகரமே இவளளக
மீதிருந்த லியல்போ வேறே
வனம்பெரிதாக் கிடையாதோ விடையொடிந்தாற்
பழிசுமக்கு மார்பிற் கொங்கைக்
கனம்பெரிதா யிடைசிறிதா யிருந்தாலுங்
கொடிக்குக்காய் கனத்தி ராதே.

உரை :—சினம் பெரிதாய் மதனை வென்ற திருவாரூர தியாகேசர் திகழு நாட்டில் - கோப மதிகப்பட்டுக காமனைக் கண்ணால் எரித்து வெற்றி கொண்ட திருவாரூர்த் தியாகராசப்பெருமான் வீற்றிருக்கும் தேசத்தில், இனம் பெரிதா மதுகரமே - கூட்டம் பெரிதாகவுடைய வண்டே !, இவள் அளகமீ திருததல் இயல்போ - இவளுடைய கூந்தல்மேல் தங்குதல் முறை யாகுமா?, வேறே வனம் பெரிதாக் கிடையாதோ - வேறே பெரிய பொழில் கள் தங்குவதற்கு உங்களுக்குக் கிடைக்க மாட்டாதோ, இடை யொடிந் தால் பழி சுமக்கும் - நுண்ணிய இடுப்பானது இற்றுப்போனால் அந்தப் பழி உங்கள்மேலாகும், மார்பிற் கொங்கைக் கனம் பெரிதா யிடை சிறிதா யிருந் தாலும் - அவள் மார்பிடத்தே தனங்களின் கனம் அதிகமாயும் இடை சின்ன தாகவு மிருந்தாலும், கொடிக்குக் காய் கனத்திராதே - கொடியிலுள்ள காய் அது தாங்காதபடி கனத்திருக்க மாட்டாது, எ - று.

தலைவி கார்காலங்கண்டு கூறுதல்

175. ஞானத்தா லரிதூண்புக் கொளிப்பவேதனளினத்
தாயிரங்கதவு மடைக்கவீசன்
ஆனைத்தோல் போர்த்ததுவு மன்றிக்கைகயி லனலேந்திச்
சுடலையினின் றுடுங்காலம
வானத்தா ரையும்பனியும் வாடைக்காற்றும் வருத்தாமமைப்
பிரித்ததெய்வம் வகுத்தகாலம

சீனத்தார் சிங்களத்தார் செகத்தார் போற்றுஞ்
சிவந்தெழுந்த பல்லவர்கோன் சேராக்காலம்.

உரை :—சீனத்தார் சிங்களத்தார் செகத்தார் போற்றும் சிவந்தெழுந்த பல்லவர்கோன் சேராக் காலம் - சீன நாட்டினரும் சிங்கள நாட்டினரும் பிறவுலகத்தாரும் புகழ்ந்து துதிக்கின்ற சிவந்தெழுந்த பல்லவ மன்னனாகிய தலைவன் நம்மைப் புணராத காலம், வானத்தாரையும் பனியும் வாடைக் காற்றும் நம்மை வருத்தப் பிரித்த தெய்வம் வகுத்த காலம் - வானத்தினின்று பெய்கின்ற மழைத்தாரையும் குளிர்ச்சியும் வாடைக்காற்றும் துயர் கொடுக்கும்படியாக நம்மைத் தலைவனிலிருந்து பிரித்த வினைத்தெய்வம் ஏற்படுத்திய கார் காலமாகும், (அது) ஞானத்தால் அரிதூண் புகவொளிப்ப - அதன் கொடுமையை முன்னறிந்த பயனாலே திருமால் தூணிற்புகுந்து ஒளித்துக்கொள்ள, வேதன் நளினத் தாயிரங் கதவும் அடைக்க - பிரமன்தானிருக்கும் தாமரையின் ஆயிர மிதழ்க் கதவுகளையும் அடைத்துக்கொள்ள, ஈசன் - சிவபெருமான, ஆனைத்தோல் போர்த்ததுவு மன்றி - தனது திருமேனியின் மேல் யானைத்தோலைப் போர்த்துக்கொண்டது மல்லாமல், கையில் அனலேந்திச் சுடலையில் நின்று ஆடும் காலம் - திருக்கையில் நெருப்பினை யெடுத்துக்கொண்டு சுடுகாட்டில் நடனமாடுங் காலமாகும், எ - று.

176. கன்றினிதூட்டிக் கறந்த தீம்பாலுங்
கலவியின் மகளிரும் பறவை
தின்றதீங்கனியும வேட்டையின் ஞமலி
கறித்திடுகின்ற மென்றசையு
மொன்றையுமெச்சி லெனவிகழ்ந்துரையா ருணர்ந்துளோ
ருறுகடன் பொருட்டும்
நன்றுடன் வேள்வி வேட்டிடும்பொருட்டு
நனிபொருள்வழங்க னன்றுமால்.

உரை :—கன்றினி தூட்டிக் கறந்த தீம்பாலும - நன்றாகக் கன்றுக்குட்டிக்குப் பால் குடிப்பித்துப் பின் கறந்த இனிய பாலும, கலவியின் மகளிரும் - புணர்ச்சிக் காலத்திற் பெண்களது எச்சிலும், பறவை தின்ற தீங்கனியும் - பட்சிகள் கொத்தி வீழ்வித்த இனிய பழமும, வேட்டையில் ஞமலி கறித்திடுகின்ற மென்றசையும் - வேட்டைக் காலத்தில் வேட்டைநாயப்பற்றிக் கடித்து வீழ்த்திய பிராணிகளின் மெல்லிய ஊனும், உணர்ந்துளோர் ஒன்றையும் எச்சிலென இகழ்ந்துரையார - ஆகிய இவற்றின் பொருட்பயன் தெரிந்தவர் எதனையும் உச்சிட்டமென்று இழிவாகக் கூறார்கள், உறு கடன் பொருட்டும் - மிகுதியான கடனைச் செலுத்துவதற்காகவும், நன்றுடன் வேள்வி வேட்டிடும் பொருட்டும் - உயிருக்குத் தீமை யில்லாத முறை

யில் வேள்வி செய்திடுதற்கும், நனி பொருள் வழங்கல் நன்றாமால் - போதுமான பொருளளித்தல் புண்ணியச செயலாகும், எ - று.

177. காம்பாயர் தெய்வத்தின் பேரீரெழுத்தின் கடையெழுத்தை
யாம்பாதி செய்தது வேகுறியாமலர்ப் பாவையங்கம்
பூம்பாவை யாக்குநல் லண்ணாமலையர் பொருப்பிடத்தே
தாமபாதி வைத்தும் வாரதிருந்தாலென்ன சாற்றுவதே.

உரை :—மலர்ப்பாவை - தாமரைப் பூவிலிருக்கும் இலக்குமி போன்றவளே !, அங்கம் - எலும்பினை, பூம்பாவை யாக்கும் நல் அண்ணாமலையர் - பூம்பாவையென்ற பெண்ணாகச செய்வதற்கு அருள்புரிந்த நன்மையுடைய சிவபெருமானாகிய திருவண்ணாமலைப் பெருமானது, பொருப்பிடத்தே - மலையின்மீது, காம்பு ஆயா - மூங்கிற் குழலை யூதுகின்ற இடையருடைய, தெய்வததின் பேரீா ஈரெழுத்தின் கடை யெழுததை - வழிபடு கடவுளாகிய திருமாலின் இரண்டெழுததுப் பேராகிய அரி யென்பதின் ஈற்றெழுததாகிய ரி யென்பதனை, ஆம்பாதி செய்து - பாதியாகச செயது அதாவது பாதிரியெனக கொண்டு அதுவே குறியா - அதனையே இரவிற் சந்திககும் இடமாகக கருதி, தாம்பாதி - தாமரையை, வைததும் - இட்டிருந்தும், வராதிருந்தால் என்ன சாற்றுவதே - தலைவி வரவில்லையானால் நாம் என்ன கூறுவது, எ - று.

குறிப்பு:—இது தோழியை நோக்கித் தலைவன் கூறியது. பாதி யென்பதற்கு நேரான சொல் அரை; அதைத் தாம் என்பதோடு சேர்த்தால் தாமரை யென்றாகும்; தலைமகன் இரவைச் சந்திக்கக் குறிதத விடததில் தான் வந்ததற்கு அடையாளமாகத் தன் கையிலிருந்த தாமரைப்பூவை அஙகே இருந்த பாதிரி மரத்தின் கீழே வைததுப் போனான்; அதனை இங்கு தோழிக்கு அவன் குறிப்பித்தான்.

178. வாரண மாங்கள மாமலை யாமுலை யாரணங்கே
வாரணஞ் சூழ்புவி நாடிய தேவந்தை வந்தவன்பால்
வாரண மாமரு ணாசல வீரவசந் தன் வெற்பில்
வாரண மேலொரு வாரணமேறி வதிந்ததுவே.

உரை:—வாரணம் ஆம் களம் - சங்குபோன்ற கழுத்தினையும், மாமுலை யாம் - பெரிய மலைபோன்ற தனஙகளையு முடைய, ஆரணங்கே - அழகிய மாதே !, வாரணஞ் சூழ்புவி நாடிய - கடல் சூழ்ந்த பூமியிலுள்ளவர்கள் விரும்பிப் போற்றுகின்ற தேவந்தை வந்த - தேவை நகரிற் றோன்றிய, அன்பால் வாரணமாம் - அன்பினாலே கடல்போன்றவனாகிய, அருணாசல வீர வசந்தன் வெற்பில் - அருணாசல வீர வசந்தன் என்பவனுடைய மலையிலே, வாரண மேலொரு வாரணமேறி வதிந்ததுவே - அத்திமரத்தின்மீது ஆம்பற்பூ வைக்கப்பட்டிருந்தது, எ - று.

குறிப்பு:—அத்தி யென்பதும் ஆம்பல் என்பதும் வாரணமாகிய ஆனையைக் குறிக்கும் பெயர்கள்.

179. பார்க்க வனைத்தனிக் கண்ணெறி மாயன் பகைத்திலகன்
பார்க்க வனைத்தகு சீரான் வடமலைப் பார்த்தன்வெற்பில்
பார்க்கர னைக்கடிந் தேயில கானனப் பைங்கிளியே
பார்க்கர னைச்சுமந் தேயிருந் தாளெரு பார்க்கரனே.

உரை :—பார்க்கவனை - சுக்கிரனுடைய, தனிக்கண்ணெறி மாயன் - ஒரு விழியைக் குத்திய திருமால், பகைத்து - முதலிலவனை விரோதித்து, இலகு அன்பு ஆர்க்க - உள்ளத்தில் விளங்குகின்ற அன்பைப் பின்னே செலுத்த, அனைத்தகு சீரான் - அவவன்பிற்குத்தக்க குணத்தைக் காட்டினவன், வடமலைப் பார்த்தன் வெற்பில் - அவன்போன்ற வடமலைப் பதியிலுள்ள பார்த்தனென்பவனது மலையிலே, பார்க்கரனைக் கடிந்தே இலகு ஆனன பைங்கிளியே - முழுமதியை வெறுக்கச்செய்யும்படி விளங்குகின்ற திருமுகத்தையுடைய இளங்கிளி போன்றவளே !, பார்க்கரனை - அலரியை, சுமந்தே இருந்தான் ஒரு பார்க்கரனே - ஒரு மூங்கில் மரம் தாங்கி யிருந்தது, எ - று.

குறிப்பு:—பாஸ்க்கரன் என்ற சொல் பார்க்கரன் என்றாகியது; பாற்கரன் என்பது பாட்டெதுகை நோக்கிப் பார்க்கரன் என்றாயிற்று கடைசியடியிலுள்ள பார்க்கரன் என்பது சூரியனைக் குறித்தது. அலரி யென்ற சொல்லும், அரி யென்ற சொல்லும் சூரியனைக் குறிக்கும். அலரி பூவையும் அரியென்பது மூங்கிலையும் இங்கே குறித்தன.

180. சீரணி கொன்றை வினைதீர்த்த நாதர் செழுங்கிரியில்
காரண மாமிது காரண மேயரன் கன்னிகையும்
நாரணன் றேவியும் வேறுசெய் தாருடை நன்முடிமேல்
ஈரணை மூவண மாமலர் தானும்வந் தெய்தியதே.

உரை :—சீரணி கொன்றை வினை தீர்த்த நாதர்-புகழ்பெற்ற அழகிய கொன்றை மாலையை யணிந்த வினைதீர்த்த பெருமானது, செழும் கிரியில்- வளமான மலையின்மேல், காரணமா மிது காரணமே - இது வியப்பிலுஞ் சிறந்த வியப்பாகும், அரன் கன்னிகையும் அரனது தேவி கையிலுண்டாகிய கங்கை நீரையும், நாரணன் தேவியும் - திருமால் மனைவியாகிய பூதேவி யென்னும் மண்ணையும், வேறு செய்தாருடை நன்முடிமேல் - வேற்படுத்தும் தேற்றாங்கொட்டை மரத்தின் நல்ல நுனியிலே, ஈரணை மூவண மாமலர் தானும் வந்தெய்தியதே - இரண்டோடு கூடிய மூன்றாகிய ஐவணப்பூ தோன்றியிருந்தது, எ - று.

குறிப்பு:—ஐவணம் என்பது மருதொன்றியைக் குறிக்கும்.

181. அலைகடலிற் றுயினா ரணன்றேடற் கரியரண்ணா
மலையர்தம் வெற்பினண்பா மயிலே வண்டுணாமரத்தில்
சிலைமலை கொண்டவன் சேய்மா துலன்றந்தை சேய்க்கிரங்கா
மலரினை வைத்தகன்றார் கண்டுவந்தோ மதிசயமே.

உரை :—அலைகடலிற் றுயில் நாரணன் தேடற்கரியர் - அலைகளை யுடைய திருப்பாற் கடலில் நித்திரை செய்யும் விண்டுவானவர் தேடிக் காண்பதற்கு முடியாதவராகிய, அண்ணாமலையர் தம் வெற்பில் - அண்ணா மலைப் பெருமானது மலையின் கண், நண் பாம் மயிலே - என்னிடத்தில் நட்புக்கொண்டிருந்த மயில் போன்றவளே!, வண்டுணா மரத்தில் - சண்பக மரத்தில், சிலை மலை கொண்டவன் - மலையை வில்லாக வளைத்த சிவபெரு மானது, சேய் மாதுதன் - பிள்ளையாகிய முருகக்கடவுளின் மாமனாகிய இந் திரனுடைய, தந்தை சேய்க்கு - தகப்பனாராகிய காசிபன் பிள்ளையாகிய சூரியனுக்கு, இரங்கா மலரினை - தலை யிறங்காத பூவாகிய தாமரைப் பூவினை, வைத்து அகன்றார் - தலைவர் வைத்துவிட்டுப் போயினார், அதி சயம் கண்டு உவந்தோம் - அந்தப் புதுமையைப் பார்த்து மனமகிழ்ந்தோம், எ - று.

182. ஒருமரக்காலிட் டொன்றிட்டுப் பத்திட் டுடனரைக்காற்
பரவுமெழுத்தினிற் பாதிமுன் பின்னிற் பகிர்ந்தமலர்
கருமுகி னேர்தரு மால்சென்னிபூபன் கனவரையில்
அரிமுன் னெழுபதி னாயிரஞ்சேர்மரத் தானதுவே.

உரை :—கருமுகில் நேர்தரு மால்சென்னி பூபன் கனவரையில் - கரிய மேகம்போன்ற திருமாலமிசமான சோழமன்னனது உயர்ந்த மலைமீது, ஒரு மரக்காலிட்டு - குறுணியைக் குறிக்கும் ங என்பதை வைத்து, ஒன்று இட்டு - ஒன்றைக் குறிக்கும் ககரத்தை யிட்டு, பத்திட்டு - அதற்குப் பின் பத்தைக் குறிக்கும் யகரத்தை யிட்டு, அரைக்காற் பரவும் எழுத்தினில் பாதி - அரைக்காலிற் பாதியாகிய வீசத்தைக் குறிக்கும் ப8 எழுத்து என் பதில், முன் பின்னிற் பகிர்ந்த மலர் - பகரத்தை முன்னாகவும் மகரத்தை யிறுதியிலும் வைக்க பங்கய மென்பது ஏற்படுவதால் அது குறிக்கும் தாமரை மலர், அரிமுன் - திருமாலமிசமான இராமர் முற்காலத்தில் எழுபதினாயிரம் சேர் - எழுபதினாயிரத்திற்குரிய எண்ணெழுத்துக்கள் சேர்ந்த அதாவது எய்த, மரத்தானதுவே - மராமரத்தின் மேலிருந்தது, எ - று.

குறிப்பு:—எழுபதினாயிரம் என்பதில் எழு - என்பதற்கு எகரமும் பது என்பதற்கு யகர மெய்யும், ஆயிர மென்பதற்குத் தகரமும் சேர்ந்து எய்த என்ற சொல் வருவது காண்க.

183. ஆம்பன் முகன்குகன் றம்மையளித்த வருட்கடலாம்
பாம்ப னடியைத் தொழுங்கந்தசாமி பனிவரையில்
காம்பரிவெண்மதி தோள்விழி வாண்முகக் கன்னிகையே
வேம்பன் புதல்வன் றலையுங்கலப்பையு மேந்தினனே.

உரை :—தம்மை அளித்த அருட்கடலாம் - ஆனைமுகக் கடவுளையும் குமாரக் கடவுளையும் பெற்ற கிருபா சமுத்திரமாகிய, பாம்பன் அடியைத் தொழும் கந்தசாமி பனிவரையில் - பாம்பை யணிந்த சிவபெருமானை வழிபடும் கந்தசாமி வள்ளலது குளிர்ந்த மலைமீது, காம்பு தோள் - மூங்கில் போன்ற தோளையும், அரி விழி - வண்டுபோன்ற கண்ணையும், வெண்மதி வாண் முகம் - வெள்ளிய திங்கள்போன்ற ஒளியுள்ள முகத்தையுமுடைய, கன்னிகையே - சிறு பெண்ணே !, வேம்பன் புதல்வன் - வேப்பமாலை யணிந்த பாண்டியனாகிய தென்னன்பிள்ளை அதாவது தென்னம்பிள்ளை, தலையும் கலப்பையும் ஏந்தினனே - கம் அலம் ஆகிய இரண்டையும் சேர்ந்ததாலாகிய கமலத்தைத் தாங்கினது, எ - று.

184. கட்டளையாகப் புவிராஜர் மெச்சக் கடியுலகைத்
திட்டமிட் டேபணி கொள்ளவல்லான்றிறை யாவரையும்
மட்டவிழ்சோலைத் திருமலைராய மகிபன் வெற்பில்
செட்டிபெண் டாட்டியை வண்ணாத்திசேரச் சுமந்தனளே.

உரை :—புவிராசர் மெச்ச - பூமியிலுள்ள அரசர்கள் புகழும்படி, கடியுலகை யாவரையும் - தனது காவலுடைய வுலகத்திலுள்ள எந்த மன்னரையும், கட்டளையாக - முறையாக, திட்டமிட்டு - உறுதியாக ஒழுங்குபடுத்தி, பணிதிறை கொள்ளவல்லான் - வேலை செய்விக்கவும் கப்பஞ் செலுத்துவிக்கவுஞ் செய்யுந் திறமை யுடையவனாகிய, மட்டவிழ் சோலைத் திருமலைராய மகிபன் வெற்பில் - தேனைச் சிந்தும் பொழில்கள் சூழ்ந்த திருமலைராய மன்னன் வரையில், செட்டி பெண்டாட்டியை - முருகன் தேவியின் பெயருடைய வள்ளிக் கொடியை, வண் ஆத்தி - வளப்பமான ஆத்தி மரம், சேரச் சுமந்தனளே - முற்றிலுந் தாங்கி யிருந்தது, (வள்ளிக் கொடியை ஆத்திமரம் தாங்கியிருந்த தென்பது கருதது), எ - று.

185. நறைமலர்ச் சோலை மலிதணிகாசல நாதன்வெற்பில்
நிறைமதி நேர்முக மாதேபுதுமை நிகழ்த்திடக்கேள்
பிறவிக்குருடன் மகன்றன் கொடியும் பெருமுனிவன்
தரையிற் புதைத்த கிரியுமேபுவி தாங்கியதே.

உரை :—நறை மலர்ச் சோலை மலிதணிகாசல நாதன் வெற்பில் - மணங் கமழும் பூம்பொழில் நிறைந்த தணிகாசல நாதனது மலையின்மீது, நிறைமதி நேர்முக மாதே - முழு மதியை யொத்த முகத்தையுடைய

பெண்ணே !, புதுமை நிகழ்த்திடக் கேள் - ஒரு வியப்பைக் கூறக் கேட்பாயாக!, பிறவிக் குருடன் மகன்றன் கொடியும் - திருதராட்டிரன் மகனாகிய துரியோதனன் கொடியாகிய அரவம், பெரு முனிவன் தரையிற் புதைத்த கிரியும் - பெரிய முனிவராகிய அகத்தியர் பூமிக்குள் போகும்படியாக அழுத்திய மலையாகிய விந்தமும் உண்டாகிய அரவிந்த மலரை, புலி-வேங்கை மரம், தாங்கியதே - தன்பால் கொண்டிருந்ததே, எ - று.

186. அடன்மிகு சூர்ப்பகை யாந்தணிகாசல வண்ணல்வெற்பில்
கடகரிமாவரி நற்றனங்கண் ணிடை யாகக் கொண்ட
மடமயிலேயென் புதுமைகண் டாயிந்த மாநிலத்தில்
தடவரவல்குல் வடத்தரு பூமியைத் தாங்கியதே.

உரை:—அடல் மிகு சூர்ப்பகையாந் தணிகாசல அண்ணல் வெற்பில்-மிகுந்த பலமுடைய சூரனுக்குச சத்துருவாகிய தணிகாசலப் பெருமானின் மலைமீது, கடகரி நற்றனம் - மதயானையைப்போன்ற பெரிய கொங்கையும், மாகண் - வண்டுபோன்ற கண்ணையும், அரி இடையாகக்கொண்ட - சிங்கம் போன்ற இடையையு முடைய, மடமயிலே - இள மயில்போன்றவளே !, தடஅர அல்குல் - விசாலமான பாம்பின் படத்தைப்போன்ற கடிதடத்தை யுடையவளே!, இந்த மாநிலத்தில் என் புதுமை கண்டாய் - இந்த பெரிய உலகத்தில் என்ன ஆச்சரியத்தைப் பார்த்தாய், வடத்தரு - ஆலமரம், பூமியைத் தாங்கியதே - குவலயம் அதாவது குவளை மலரைத் தாங்கிக் கொண்டிருந்தது, எ - று.

187. முக்கணன்வில் வெற்பை முறித்துவரி யிட்டகால்
முக்கணனை யப்பில்விழ மோதாதோ—முக்கணன்றன்
வேணிக்காகா மலர்வைத் தேகினான் மெல்லியலே
சாணிற் குறைந்தான் றலை.

உரை:—மெல்லியலே - மென்மைத் தன்மையுடைய தலைவியே!, முக்கணன் வில் வெற்பை முறித்து - மூன்று கண்ணையுடைய சிவனது வில்லாகிய மேரு மலையில் சிகரங்களைப் பிடுங்கி, உவரியிட்ட கால் - கடலிற் போட்ட காற்றானது, முக்கணனை - மூன்று கண்ணையுடைய தேங்காயை, அப்பில் விழ மோதாதோ - மரத்திலிருந்து குளத்துநீரில் விழும்படி தாக்காதா, முக்கணன்றன் வேணிக்காகா மலா - மூன்று கண்ணையுடைய சிவபெருமான் சடையில் வைக்கக்கூடாத தாழம்பூவை, சாணிற் குறைந்தான் தலை - சாணளவிற்குக் குறைந்த ஒட்டை அதாவது ஒட்டைச் செடியின் மீது, வைத்து ஏகினான் - வைத்துவிட்டுச் சென்றான், எ - று.

குறிப்பு:—தலைவியும் தோழியும் இரவுக்குறியில் அடைந்தபோது தண்ணீரில் தேங்காய் விழுந்த சத்தத்தைத் தலைவன் குறிப்பித்த ஒலியாகத் தலைவி கருத, அதை மறுத்துத் தோழி அது தேங்காய் விழுந்ததனு

லாய ஒலியே என்றும், தலைவன் வந்து போனதற்கு அடையாளம் அவன் ஒட்டைச்செடியில் வைத்துப்போன தாழம்பூ வென்றுங் கூறினள் என்பது கருத்து.

188. தினந்தினம் பாவலர் தம்மிடிதீர்ந்திடச் சேணுறையும்
கனந்தருநாணுங் கொடையாளன் வேலன் கனகிரிவாய்
அனந்தரு நன்னடைப் பாவைநல்லாயிவ் வதிசயங்கேள்
அனந்தன் குபேரன் வனமனையங்கி யமர்ந்தனனே.

உரை:—தினந்தினம் பாவலர் தம்மிடி தீர்ந்திட - ஒவ்வொரு நாளும் கவிஞர்களுடைய வறுமை தொலையும்படியாக, சேணுறையும் கனந்தரு நாணுங் கொடையாளன் - வானில் தங்கிய மேகமும் கற்பக தருவும் வெட்கப்படும்படியாகப் பரிசு கொடுக்கின்ற வள்ளலாகிய, வேலன் கனகிரி வாய் - வேலனென்பவனது உயர்ந்த மலையின்மீது, அனந்தரு நன்னடைப் பாவை நல்லாய் - அன்னத்தைப்போன்ற அழகிய நடையையுள்ள அழகிய மாதே!, இவ் வதிசயங்கேள் - இந்த வியப்பான செய்தியைக் கேட்பாயாக!, அனந்தன் குபேரன் வனம் - அரவு இந்து அம் ஆகிய மூன்றுஞ் சேர்ந்த பூவாகிய அரவிந்த மலர், மனை யங்கி - அகத்தியின்மீது, அமர்ந்தனனே - தங்கிற்று, எ - று.

குறிப்பு:—குபேரன் எனபது சந்திரன், வனம் என்பது நீர், அரவு+இந்து+அம் என்பன அரவிந்தமலா, அகத்தீ யென்பது அகத்தியென இறுதி குறுகிற்று.

189. பாலொத்த செஞ்சொ லளகேசசுந்தரன் பாலன்வெற்பில்
வேலொத்தகண் மடவீர்பின்பு வேறொன்று மில்லைகண்டீர்
காலற்ற போதுபின் வாலுமுண்டாய்ப்பின்பு காலுமுண்டாய்
வாலற்ற போதுதன் பேர்பெற்றபாவிசெய் வஞ்சனையே.

உரை:—பாலொத்த செஞ்சொல் அளகேச சுந்தரன் பாலன் வெற்பில் - பால்போன்ற இனிமையான நன்மொழியுடைய அளகேச சுந்தர பாலனது மலையில், வேலொத்த கண் மடவீர் - வேலைப்போலும் விழியை யுடைய மாதரே!, பின்பு வேறொன்று மில்லை கண்டீர் - ஆய்ந்து பார்த்த பின் தலைவன் வரவு யாதுமில்லை, காலற்றபோது பின் வாலு முண்டாய்-காலில்லாதபோது வாலுண்டாகப்பெற்று தலைப் பிரட்டையெனப் பேர் பெற்று, பின்பு காலு முண்டாய் வாலற்றபோது - கால் வளர்ந்து வால் ஒழிந்தபோது தவளை யென்ற பேர் பெற்ற தீய பிராணியின் கபடச் செயலே தலைவன் செயல்போலத் தோன்றிற்று, எ - று.

190. கருதுங்கயல்கடு வேல்கடல்வாளி கருவிளையைப்
பொருதும் விழியணங் கேதமிழாய்ந்த புலவருக்கு
விருதும் பலகையு மீந்தருள்கூட லிறைவர்வெற்பில்
எருதும்பசுவும் புலியுமோரானையி லேறியதே.

உரை :—கருதுங் கயல் கடு வேல் கடல் வாளி கருவிளையைப் பொருதும் விழியணங்கே - ஒப்பாக மதிக்கப்படும் கயல் மீனையும் கூறிய வேலையும கடலையும் அம்பையும் கருவிளைப் பூவையும் தனது அழகால்வென்ற கண்ணை யுடைய பெண்ணே!, தமிழாய்ந்த புலவருக்கு விருதும் பலகையும் ஈந்தருள் கூடல் இறைவர் வெற்பில் - தமிழிற் றேர்ச்சியடைந்த சஙகப்புலவர்க்கு வெற்றி யடையாளமாகச சங்கப் பலகையும் விருதும் கொடுத்த திருவால வாய்ப் பெருமான் வாழும் மலையிலே, எருதும் பசுவும் புலியும் - நந்தியும் ஆவும் வட்டையுஞ் சோந்துளதாகிய நந்தியா வட்டைப்பூ, ஓர் ஆனை ஏறியதே - ஒரு அத்தி மரத்தின்மேல் வைக்கப்பட்டிருந்தது, எ - று.

191. பாவேந்தர் மூவரின் பாக்கொண்டுபன்றிக் குருளைகொன்று
சேவேந்துபாலக் கணக்க ணிருந்திடு சீர்க்கிரிவாழ்
மாவேந்து கண்மட மானேயதிசய மானதுகேள்
பூவேந்தன் றாங்கினன் பொன்னேரியான்மனை புக்கிடமே.

உரை :—பாவேந்தர் மூவர்தம் பாக்கொண்டு - தலைமைப் பாவலராகிய மூவர் தேவாரப் பாக்களை யேற்றுக்கொண்டு, பன்றிக் குருளை கொன்று - பன்றிக் குட்டியை யழித்து, சேவேந்து - காளையாகிய நந்திக்கொடியை யுடைய, பாலக் கண் - நெற்றிக் கண்ணோடு கூடிய, நக்கன் - பரமசிவன், இருந்திடு சீர்க்கிரி வாழ் - விளங்கிடும் கீர்த்தியுடைய மலையில் வாழுகின்ற, மாவேந்து கண் மடமானே - வண்டுபோன்ற கண்ணையுடைய இளம் பெண்ணே!, அதிசயமானது கேள் - புதுமை யொன்று கேட்பாயாக, பூவேந்தன் - பூவரசமரம், பொன்னேரியான் - விண்டுவினுடைய, மனை - மனைவியாகிய இலக்குமி, புக்கிடமே - சென்று தங்குமிடமாகிய தாமரையை தாங்கினன் - சுமந்திருந்தது, எ - று.

192. நாகத்து வசனசனத் தினஞ்சிட நாரணன்றன்
தேகத்தி னோர்மயிர் வீழ்த்திடப்பாண்டவர் தேறினரால்
வாகொத்த மன்மதன் சிவிலிமாறன் வரையிடதகே
ஆகத் துணைமுலை யீர்குழலாலழி யாதுயிரே.

உரை :—வாகொத்த மன்மதன் சிவிலிமாறன் வரையிடத்தே - அழகால் மன்மதனை யொத்த சிவிலிமாற பாண்டியனது மலையின்மேல், ஆகத் துணை முலையீர் - உடம்பில் ஒத்த அமைப்புடைய இரு தனங்களையுடைய பெண்டிரே!, நாகத்துவசன் - அரவக் கொடியுடைய துரியோதரன், அசனத்தில் நஞ்சிட - சோற்றில் விஷத்தைக் கலந்து வைக்கவும், நாரணன்

தன் தேகத்தில் ஓர் மயிர் வீழ்ந்திட - கண்ணன் அதைக் குறிப்பதற்காகத் தன்னுடைய உடம்பிலிருந்து ஒரு உரோமத்தை விழும்படிசெய்ய, பாண்டவர் தேறினரால் - பண்டவர் உண்மையைத் தெரிந்துகொண்டனர், குழலால் அழியாது உயிரே - நீங்கள் புறங்காட்டிடக் கூந்தலைக் காட்டுவதனுல் எங்களுயிர் மாய்ந்துவிடாது, எ - று.

193\. வாகான கொன்றை மழவரங்கேசன்பொன் மால்வரையீர்
சோகாதிகந்தரு மோகவிகாரச் சுரந்தனக்கு
ஆகாதுபச்சைசை யிளநீரென் றுந்த னகத்தி லெண்ணித்
தாகாதி கத்திற்கு வெந்நீரளித்த தயவுநன்றே.

உரை :—வாகான கொன்றை மழவரங்கேசன் பொன்மால் வரையீர் - அழகிய கொன்றைப் பதியிலுள்ள மழவரங் கேசனென்னும் வள்ளலது பொன் விளையும் பெரிய மலையிலுள்ள மாதரே !, சோகாதிகம் தரும் மோக விகாரச சுரந்தனக்கு - மிகுந்த துயரத்தைத தரக்கூடிய ஆசை வேறு பாட்டா லுண்டாகிய வெப்ப நோய்க்கு, ஆகாது பசசை இளநீரென்று உந்தன் அகததில் எண்ணி - உமது மனதில் பசசை இளநீர்போனற தனஙகள் பொருந்தாதென வெண்ணி, தாகாதிகததிற்கு - தாக மிகுதியைத் தவிர்ப்பதற்கு, வெந்நீரளித்த தயவு நன்றே - முதுகை நீர் காட்டித் தந்தது அருட்செயலாக விருக்கிறது, எ - று.

194\. அக்கர வம்புனை யாரூர்த்தியாக ரணிவரையில்
இக்கினை வென்ற மொழியணங்கேபுறந் தானினிது
சக்கரையோர்புறங் கைப்பதுண்டோவது தானுமன்றி
அக்கரை யிக்கரை யென்பதுண்டோகங்கை யாடுதற்கே.

உரை :—அக்கு அரவம்புனை ஆரூர்த் தியாகர் அணிவரையில் - எலும்பு மாலையையும் பாம்பையும் தரித்த திருவாரூர்த தியாகராசப் பெருமானது அழகிய மலையின்மீது, இக்கினை வென்ற மொழியணஙகே - கரும்பினும் மேம்பட்ட இனிமையான சொல்லினையுடைய மாதே !, புறந்தான் இனிது - உன்னுடைய பின் பக்கமும் அழகாக விருக்கிறது, சர்க்கரை யோர்புறங கைப்பதுண்டோ - வெல்லக் கட்டியி னெல்லாப் பக்கமும் இனிப்பா யிருப் பது தவிர ஒரு பககங கசப்பா யிருக்குமா ?, அதுதானுமன்றி - அதுவு மல்லாமல், கஙகை யாடுதற்கே அக்கரை யிககரை யென்ப துண்டோ - கங்கை நதியில் முழுகுவதற்கு அந்தக்கரை இந்தக்கரை யென்று பார்கக வேண்டிய துண்டா ?, எ - று.

195\. நதியமர் வேணிக் கரனூர்வழித்துணை நாதன்வெற்பில்
மதிநுத லீரென்ன வாறுசெய்தீர்செவ் வாய்க்கினிய
அதிரச முங்கண்டத் தோசையுநற்பணி யாரமுங்கேட்
டெதிரடைந் தேனதைத் தாராமற்றேங்குழ லீந்தனையே.

உரை:—காரூர் - காரூரில் வீற்றிருக்கும், நதியமர் வேணி வழித்துணை நாதன் வெற்பில் - கங்கையைத் தரித்த சடையையுடைய மார்க்க சகாயநாதப் பெருமான் மலையிலுள்ள, மதி நுதலீர் - பிறைபோன்ற நெற்றியையுடைய பெண்டீர், என் செவ்வாய்க்கு இனிய அதிரசமும் - எனது நல்ல வாய்க்கு இனிமைதரும் அதர பானத்தையும், கண்டத்து ஓசையும் - தொண்டையி லெழும் இனிய குரலையும், நல் பணியாரமும்-நல்ல நகைகளையும் முத்துமாலையையும் தரித்த தனங்களையும், கேட்டு எதிரடைந்தேன் - வேண்டி யுமது முன்வந்து சேர்ந்தேன், அவை தாராமல் தேங்குழல் ஈந்தனையே - அவற்றைக் கொடாமல் இனிமை சூழ்கின்ற கூந்தலைக் காட்டினையே, என் அவாறு செய்தீர் - ஏன் அப்படிச செய்தீர்கள், எ - று.

196. தானே தனக்கொத்த சோணாசலேசர் தனைப்பணியு
மானே யெனுங்கொடைச் சமபந்தராய னணிவரையில்
மானே யரவின்றி வெற்பின்றிச் சூழ்ந்திடும் வாரியின்றி
நானேயமுது கடைந்தே னிதுமெத்த நாணயமே.

உரை:—தானே தனக்கொத்த சோணாசலேசா தனைப்பணியும் - தனக்குத் தன்னைத் தவிர பிறரை யொப்பாகச சொல்லப்படாத அண்ணாமலை நாதரை வழிபடுகின்ற ஆனே யெனுங் கொடைச சம்பந்தராயன் அணி வரையில் - காமதேனுக்கு உவமானமாகக் கூறக்கூடிய ஈகையுடைய சம்பந்தராயனது அழகிய மலையிலுள்ள, மானே - பெண்ணே !, அரவின்றி வெற்பின்றிச சூழ்ந்திடும் வாரியின்றி - அரவுபோன்ற அல்குலும் மலை போன்ற தனமும் சுற்றியுள்ள கடல்போன்ற கண்ணும் காட்டப்பெறாமல், நானே அமுதுகடைந்தேன் - நான் அழகிய முதுகைப் பார்க்கப் பெற்றேன், இது மெத்த நாணயமே - இது நல்ல முறையா யிருக்கிறது, எ - று.

197. சோமன்பதியுந் திருமால்பதியுந் துலங்கு கொன்றைத்
தாமன் பதியுநின் பங்கில்வைத்தாய்தமி யேன்புகழும
வீமன் புகழ்கொண்ட விக்ரமச்சோழன் வியன்சிலம்பில்
காமன்பகைவன் பதியோவென் பங்கின் கடைப்பிரிவே.

உரை :—தமியேன் புகழும் வீமன் புகழ்கொண்ட விக்ரமச சோழன் வியன் சிலம்பில் - அடியேன் துதிக்கின்ற கருடப்பறவையின் தலைவனுகிய திருமாலின் கீர்த்தியையுடைய விக்ரமச சோழனது பெரிய மலையில், சோமன்பதியும் திருமால்பதியும் - சந்திரனிடமாகிய முகத்தையும் திருமாலிருப்பிடமாகிய ஆலிலைபோன்ற வயிற்றையும், துலங்கு கொன்றைத் தாமன்பதியும் - விளங்குகின்ற கொன்றைமாலை யணிந்த சிவபெருமானது கயிலை மலைபோன்ற தனங்களையும், நின் பங்கில் வைத்தாய் - உன் பங்குக்காக மறைத்து வைத்துக்கொண்டாய், காமன் பகைவன் பதியோ - கற்பகக்

காவுக்குத் தலைவனாகிய இந்திரனுக்குப் பகைவனாகிய இந்திரசித்து தங்குமிடமாகிய மேகம்போன்ற கூந்தலோ, என் பங்கின் கடைப்பிரிவே - என் பங்குக்காக நீ பிரித்துவிட்ட முடிவான பகுதியாகும், எ - று.

198. சேலூரும் வயல்சூழு முமைபாகர் திருக்காமி
யீசர் நாட்டில்
பாலூறு மொழிமானே யுனக்குநல்ல வீர்ங்கலசப்
பாக்க மாச்சு
வேலூரு முனதாச்சுப் பெருங்கொண்டை யெமக்களித்தீர்
வேண்டாங் கண்டீர்
காலூரைப் பிடிப்பதற்கு விதப்பட்டே கொடுங்காணுங்
கடுகத் தானே.

உரை:—சேலூரும் வயல் சூழும் உமைபாகர் திருக்காமியீசர் நாட்டில் - சேல் மீன்கள் செல்கின்ற வயல்கள் சூழப்பெற்ற பார்வதி பங்கராகிய திருக்காமியீசருடைய தேசத்திலே உள்ள, பாலூறு மொழிமானே - பாலின் சுவை ததும்பும் சொல்லையுடைய பெண்ணே! உனக்கு நல்ல ஈர்ங் கலசப் பாக்கமாச்சு - உனக்கு அழகிய குளிர்ந்த கலசம்போன்ற முலையிருக்கு மிடம் உரியதாயிற்று, வேலூரும் உனதாச்சு - வேல்போன்ற கண்ணிருக்கின்ற பகுதியும் உன்னுடையதாயிற்று, பெருங் கொண்டை எமக் களித்தீர் வேண்டாங் கண்டீர் - உம்முடைய பெரிய கொண்டையை எமக்குக் கொடுத்தீர் அதுவே வேண்டியதில்லை, காலூரைப் பிடிப்பதற்கு - வண்டியின் உருள் போன்ற கடிதடமிருக்கு மிடத்தைப் பற்றுவதற்கு, விதப்பட்டே கொடுங்காணும் கடுகத்தானே - இணங்கியே இதமாக விரைவாக இடங்கொடும், எ - று.

199. மாகத்தைமேவும் புகழ்க்குன்றையூரன் மணிவரையில்
பாகொத்த மென்மொழிப் பாவைநல்லீ ரென்பருவிரக
தாகத்தைத் தீர்க்குநற் கும்பமுந்தாம்புந் தனிக்கிணறும்
ஆகத்திருக்கவிண் மேகத்தைக்காட்டுவ தன்பல்லவே.

உரை:—மாகத்தை மேவும் புகழ்க் குன்றையூரன் மணிவரையில் - வான்றாவும் புகழையுடைய திருக்குன்றையூரனது அழகிய மலைமீதுள்ள, பாகொத்த மென்மொழிப் பாவை நல்லீர் - தேன்பாகு போன்ற மெல்லிய சொற்களையுடைய அழகிய மாதர்களே!, என் பரு விரகதாபத்தைத் தீர்க்கும் - என்னுடைய பெரிய மோகவிடாயைத் தணிக்கக்கூடிய, நல் கும்பமும் தாம்பும் தனிக்கிணறும் ஆகத்திருக்க - நல்ல குடம்போன்ற தனமும் கயிறுபோன்ற உரோமமும் ஒப்பற்ற கிணறுபோன்ற கடிதடமும் உடம்பிலிருக்கும்போது, விண் மேகத்தைக் காட்டுவது அன்பல்லவே - ஆகாயத்தி

லிருக்கிற மேகம்போன்ற கூந்தலைக் காட்டுவது தயவுக் கடையாளமாகாது, எ - று.

200. மாகமதிக்கரன் பூம்பாவை வேலப்ப பூபனருள்
மோகன்குழந்தை குருநாதன் வெற்பினிந் மோடிவைத்துப்
பாகமொழிக் கவின்மாதே விரித்துப்பட மெடுக்கும்
நாகமறைத்துக் குழனமக்கீத னலமல்லவே.

உரை :—மாக மதிக்கரன் - மேகம்போன்ற ஈகையும் மதிபோன்ற குளிர்ச்சியுமுடைய கையையுடையவனுகிய, பூம்பாவை வேலப்ப பூபன் - பூம்பாவை வேலப்பபூபதி யென்பவன், அருள் மோகன் - பெற்ற காதலனுகிய, குழந்தை குருநாதன் வெற்பினில் - குழந்தைக் குருநாத வள்ளலது மலையின் மிசை, பாக மொழிக்கவின் மாதே - பண்பட்ட சொல்லையுடைய அழகிய பெண்ணே!, மோடி வைத்து - பிணக்கங்கொண்டு, விரித்துப் படமெடுக்கும் நாகமறைத்து - படத்தை விரித்துக் காட்டும் பாம்புபோன்ற அல்குலை மறைத்து, குழல் நமக்கீதல் நலமல்லவே - கூந்தலை நமக்குத் தருதல் நல்லதன்று, எ - று.

201. வண்டுமதுவுண் டிசைபாடுஞ் செந்திலின் மாரன்வரக்
கண்டுமிருந்தும் வடிவேலிரண்டுங் கருப்பு வில்லும்
குண்டுமருந்தும் பொற்றேருந் தராமற் குழலைத்தந்தால்
தண்டுகொண் டெப்படி வென்றிடலாமடி தார்குழலே.

உரை :—தார் குழலே - நீண்ட கூந்தலையுடைய பெண்ணே !, வண்டு மது உண்டு இசைபாடும் செந்திலில் - வண்டுகள் தேனைக் குடித்துவிட்டுப் பண்பாடுகின்ற திருசசெந்தூர்ப்பதியில், மாரன்வரக் கண்டிருந்தும் - காமக் கடவுள் வந்து தாக்குவதைத் தெரிந்திருந்தும், வடிவேலிரண்டும் கருப்பு வில்லும் - கூரிய வேல்போன்ற இரண்டு கண்களையும் கரும்பு வில்லுப் போன்ற புருவத்தையும், குண்டும் - திரண்ட கல்போன்ற தனத்தையும், மருந்தும் - அமுதமூறும் அதரத்தையும், பொற்றேரும் - அழகிய தேர் போன்ற அல்குலையும், தராமல் - காட்டாமல், குழலைத் தந்தால் - கூந்தலைக் காட்டினுல், தண்டுகொண்டு எப்படி வென்றிடலாம் - முதுகந்தண்டைக் கொண்டு எவ்வாறு காமனை செயிக்கக் கூடும் ?, எ - று

202. ஏழைக் கிரங்கிடும் வன்மீகநாத ரெழில்வரையில்
யாழைவருத்து மொழிமட வாய்நல் லனமிருக்க
வாழை வருக்கைக் கனியிரு பாற்குடம வைத்திருந்தும்
கூழையெனக்களித் தீர்மறு மாற்றங் கொடுத்திடுமே.

உரை :—ஏழைக்கிரங்கிடும் வன்மீக நாதர் எழில் வரையில் - எளியவர்களுக்கு அருள் செய்கின்ற புற்றிடங்கொண்ட பெருமானது அழகிய மலையி

னுள்ள, யாழை வருத்தும் மொழி மடவாய் - யாழினு மினிய குரலையுடைய இளமாதரே! நல்லன மிருக்க - அழகிய அன்னம்போன்ற நடையிருக்கவும், வாழை வருக்கைக் கனியிருபாற் குடம் வைத்திருந்தும் - வாழைத்தண்டு போன்ற தொடையையும் பலாக்கனிபோன்ற சொல்லையும் இரண்டு பாற் குடம் போன்ற தனங்களையு முடையவளாக விருந்தும், கூழை எனக் களித்தீர் - கூந்தலை யெனக்குக் கொடுத்தீர், மறுமாற்றங் கொடுத்திடுமே - அதற்குக் காரணமென்ன வென்று மறுமொழி சொல்வீராக, எ - று.

203\. அழலைத்தரித்த திருவிரிஞ்சேச ரணிவரையில்
மழலைச்சுரமெனு மந்த்ரோதயமு மணிமருந்தும்
தழலைப்பொருந்திய பாம்புங்குடமுந் தராமல்வெறும்
குழலைத்தந் தாலினிப் பாம்பாட்டுவதெங்ஙன் கூறுதிரே.

உரை :—அழலைத் தரித்த திருவிரிஞ்சேசர் அணிவரையில் - அங்கினியைத் தாங்கியிருக்கும் திருவிரிஞ்சைப் பெருமானுடைய அழகிய மலைமீது, மழலைச் சுரமெனும் மந்த்ரோதயமும் - மழலைச் சொல்லிசை யென்னும் மந்திரம் உதயமாகிற வாயையும், அணி மருந்து - அழகிய அதரபானத்தையும், தழலைப் பொருந்திய பாம்பும் குடமும் தராமல் - வெப்பமுடைய பாம்புபோன்ற அல்குலையும் குடம்போன்ற தனத்தையுங் காட்டாமல், வெறும் குழலைத் தந்தால் - பயனற்ற கூந்தலைக் காட்டினால், இனி பாம் பாட்டுவது எங்ஙன் கூறுதிரே - இனிமேல் புணர்வது எப்படி முடியு மென்று சொல்லும், எ - று.

204\. அறங்காட்டிய கரத்தைவே லசதி யணிவரையில்
நிறங்காட்டுங் கஞ்சத் திருவனையீர்முக நீண்டகுமிழ்த்
திறங்காட்டும்வேலுஞ்சிலையுங்கொல் யானையுந் தேருங்கொண்
புறங்காட்ட வுந்தகுமோசிலைக் காமன்றன் பூசலிலே. [டு

உரை :—அறங் காட்டிய கரத்து ஐவேல் அசதி அணிவரையில் - அறஞ் செய்யுங் கையையுடைய ஐவேலசதி யென்பவனது அழகிய மலையின்மீது, நிறங் காட்டுங் கஞ்சத் திருவனையீர் - ஒளி வீசுகின்ற தாமரையிலுள்ள இலக்குமி போன்றவளே!, முகம் நீண்ட குமிழ்த் திறம் காட்டும் வேலும் - முகத்தினிடம் பெரிய குமிழின தன்மையைக் காட்டுகின்ற வேல்போன்ற கண்ணையும், சிலையும் - வில்போன்ற புருவத்தையும், யானையும் - கொல்கின்ற யானைபோன்ற தனங்களையும், தேருங்கொண்டு - தேர்போன்ற அல்குலையும் முன்பக்கம் வைத்துக்கொண்டு, சிலைக்காமன் பூசலிலே - வில்லையுடைய மன்மதன் செய்யுஞ் சண்டை நேரத்திலே, புறங் காட்டவும் தகுமோ - பின் பக்கத்தைக் காட்டுவது தகுதியாகுமா?, எ - று.

205. மருப்பங் கயக்கண்ணன் றன்னுயர்பாடி வரதன்வெற்பில்
பொருப்பங் கயக்கொம்பு நேரிளங்கொங்கைபொன் பூப்பவுயர்
தருப்பங் கயனம் புதைத்துளம்வாடித் தயங்குமிந்தத்
திருப்பங் கயமென் பழிபூண்ட தோசொலுஞ் சேடியரே.

உரை:—மருப்பங் கயக்கண்ணன் தன்னுயர் பாடி வரதன் வெற்பில்- வாசனை வீசும் தாமரைபோன்ற கண்ணையுடைய கண்ணனும் குளிர்ந்த ஆயர் பாடியில் வசித்த வரத கொடுக்கும் பெருமானுமாகியவனது மலையில்; பொருப்பு அம் கயக் கொம்பு நேரிளங் கொஙகை - மலையையும் அழகிய யானைக் கொம்பையும்போன்ற மெல்லிய தனஙகளின், பொன் பூப்ப-பசலை படரும்படியாக, உயர்தருப் பங்கயன் அம்புதைத்து - உயர்வு தருகின்ற தாமரைப்பூவை அம்பாகவுடைய மன்மதன் கணைபட்டு, உளம்வாடித் தயங்கு மிந்த திரு - மனந்தளர்ந்து திகிலடைகின்ற இலக்குமிபோன்ற இந்தப் பெண்ணின், பஙகு - பாகத்தில், அயம் என்பழி பூண்டதோ - ஆடானது என்ன பழிசெயலை நிகழ்த்தியதோ, சேடியரே சொலும் - தோழியரே சொல்லுவீராக !, எ - று.

206. இரும்புழுத புண்ணுக் கிடுமருந்தைக் கொன்றால்
திரும்பவருந் தீராப் பழிதான்—வருமபழியைத்
தீரவருள் செய்கின்ற செல்வனரு ணாசலனைச்
சேரமனம் வைக்கநீ செப்பு

உரை:—இரும்பு உழுத புண்ணுக்கு இடு - இரும்பினாலாகிய எழுத் தாணியினா லெழுதப்பட்ட, ஓலை எழுததில் போடுகின்ற, மருந்து - மருந் தாகிய மையை அதாவது ஆட்டை, கொன்றால் - பலி யிட்டால், திரும்ப வரும் தீராப் பழிதான - நீஙகாத பழிதான் அதனா லேற்படும், வரும் பழி யைத் தீரவருள் செயகின்ற செல்வ னருணாசலனை - வரக்கூடிய பழி யாகிய தலைவி மரணததை நீக்குதற்குக் கிருபை செய்யக்கூடிய அருணாசல வள்ளலிடம், சேரமனம் வைக்க - தலைவி சேர்வதற் கிசையும்படி, நீ செப்பு- தோழியே நீ கூறுவாயாக !, எ - று.

207. திருத்த னுயிரைச் செழுங்கனலால் வாட்டா
ஒருத்த னுயிரு முடலும்—செருக்களத்துக்
கன்றினார்க் கண்டார் கரிகாலன் காவிரிநாட்
டொன்றினார் மாலையிலே யுண்டு.

உரை:—ஒருத்தன் உயிரும் உடலும் - ஆட்டினுடைய உயிரும் உடம் பும், திருத்தன் உயிரை - பெண்ணினுடைய உயிரை, செழுங்கனலால் வாட்டா - மிகுந்த வெப்பத்தால் துன்புறுத்த வில்லை, கரிகாலன் காவிரி நாட்டில் - கரிகாலச் சோழனது காவிரிபாயும் நாட்டினிலே, செருக்களத்

நக் கன்றினார் கண்டார் - போர்க்களத்தில் எதிர்ப்பவர்களை வென்று அடக்கினவராகிய, ஒன்றினார் மாலையிலே உண்டு - காதலாது மாலையிலே அதற்குப் பரிகார முண்டு?, எ - று.

208. கூப்பிட்டான் றன்மகனைக் கொன்றானைத் தாங்கிமலர்க்
காப்பிட்டாற் போகுங்காண் கன்னிக்கு—வாய்ப்பட்ட
மஞ்சளவு சோலை மருதவன நன்னாட்டிற்
பிஞ்சிட்டாற் போகாது பேய்.

உரை:—வாய்ப்பட்ட மஞ்சளவு சோலை மருதவன நன்னாட்டு - விரிந்த மேகங்களையுடைய பொழில்கள் சூழ்ந்த மருதவனப் பெருமானுடைய நல்ல தேசத்தில், கன்னிக்கு - இந்தச சிறு பெண்ணின் பொருட்டு, இல் பிஞ்சி - முதல் வீடு அதாவது முதல் ராசியாகிய மேடத்தை யல்லது ஆட்டை, இட்டால் - பலி யிட்டால், இப்பேய் போகாது -......, கூப்பிட்டான் தன் மகனை கொன்றானை - பூமியைப் பிளந்தவனாகிய பெருமாளின் மகனாகிய மன்மதனைக்கொன்ற சிவபெருமானை, தாஙகி - தாங்குகின்ற காளையின், மலக் காப்பிட்டால் - சாணத்தைத் தகிப்பதா லுண்டாகிய திரு நீற்றுக்காப்பினை, இட்டால் - பூசினால் போகும் - அப்பேய் நீங்கும், எ - று.

209. புள்ளா ரரும்பொழில் சூழ்தணிகேசன் புயத்திலணி
கள்ளார் கடப்பங் கொணர்ந்திடின் மாற்றுங் கருத்திற்சற்றும
உள்ளா வகையென் னவையோ விவட்கிங்ங னோங்கொருவு
தள்ளா விசனத்தை மாற்றுங்கொ லோசொலுந் தாழ்குழலே.

உரை:—தாழ்குழலே - நீண்ட கூந்தலையுடைய தோழியே! இவட்கு இஙஙன் ஓஙகு தள்ளாவிசனததை - இவளுக்கு இப்படி மிகுதிப்படுகின்ற தவிர்க்க முடியாத துயரத்தை, ஒருவு மாற்றுங கொலோ - ஆடானது நீக்கவல்லதோ, கருததில் சற்றும் உள்ளா வகை என்ன - இதைப்பற்றி உள்ளத்தில் ஒரு சிறிதும் யோசியாத முறைக்குக் காரணம் யாது, ஐயோ - பரிதாபம், புள்ளார் அரும்பொழில் சூழ் தணிகேசன் புயத்திலணி பறவைகள் தங்குகின்ற அருமையான சோலைகள் சூழ்ந்த திருத்தணிகைக் குத் தலைவனாகிய முருகப்பிரானது திருததோளில் அணியப்பெற்றுள்ள கள்ளார் கடப்பங் கொணர்ந்திடின் - தேன்நிறைந்த கடப்பம் பூமாலையைக் கொண்டுவந்தால், மாற்றும் - இவள் விசனத்தை அது நீக்கிவிடும், சொல் 'இதைக் கூறுவாயாக, எ - று.

நற்றா யிரங்கல்

210. தணிகாசலத்தி னமர்குகன் பாதந் தலைக்கணியும்
தணிகாசலத்தி னமீந்திடு கற் கத் தாருவொத்தோய்
தணிகாசலத்தி னலர்கொடு மாரன் வீசுந்தணலைத்
தணிகாசலத்தி னவிந்திடு மென்றன் றனிக்கொடிக்கே.

உரை :—தணிகாசலத்தில் அமர் குகன் பாதந் தலைக்கணியும் தணிகாசல - திருத்தணிகைக் குன்றி லெழுந்தருளி யிருக்கும் குமரக்கடவுள் திருப்பாதங்களைத் தன்னுடைய தலைக்கு அணியாகக் கொண்டுள்ள தணிகாசல வள்ளலே !, தினம் ஈந்திடு கற்பகத் தாரு ஒத்தோய் - யாசிப்பவருக்கு வேண்டியதை ஒவ்வொரு நாளும் கொடுக்கின்ற கற்பக மரம் போன்றவனே !, ஆசலதனின் அவிந்திடும் என்றன் தனிக்கொடிக்கே - துயரதினால் இறந்திடுகின்ற இணையற்ற பூங்கொடிபோன்ற என் மகள்மீது, தணிகா - தணியாத, சலத்தின் - சினத்தோடு, மாரன் - மன்மதன், அலா கொடு - பூங்கணையால், வீசும் தணலை - எறிகின்ற நெருப்பை, தணிக - அவிப்பாயாக, எ - று.

நாணிக்கண் புதைத்தல்

211. அரியைத் தரித்த மதுராபுரீச ரணிவரையில்
அரியைத் தரித்த குழன்மடவீரன் றரியெடுத்த
அரியைப் புதையு மரிபுதையாம லரிபுதைத்தீர்
அரியைச் சிரம்விட் டடிவால்பிடித்த வறிவொக்குமே.

உரை :—அரியைத் தரித்த மதுராபுரீசர் அணிவரையில் - சந்திரனை சூடிய திருவாலவாய்ப் பெருமானது அழகிய மலையில், அரியைத் தரித்த குழல் மடவீர் - வண்டுகளைச சுமந்த அளகத்தையுடைய பெண்டிரே !, அன்று அரியெடுத்த அரியைப் புதையும் - அக்காலத்திலே திருமாலமிச மான கண்ணன் எடுத்துப் பிடித்த மலைபோன்ற முலையை மறைபுங்கள், அரி புதையாமல் அரி புதைத்தீர் - மலையை மறையாமல் கடலாகிய கண்ணை மறைத்தீர், (அது) அரியைச சிரம் விட்டு அடிவால் பிடித்த அறிவு ஒக்குமே - பாம்பின் தலையைப் பிடியாமல் கீழ் வாலைப் பிடித்த புத்தி போல்வதாகும், எ - று.

நற்று யிரங்கல்

212. அருணை சலஞ்செய்யுங் கங்குலைவாட்டிநல் லாய்ந்தமொழி
அருணை சலமில்லை யென்றிந்தவேளையி லாயிழையே
அருணை சலமுலைப் பாரம்பொருளினி யார்மயிலை
அருணை சலமத வேளுக்கிதோடி யறிவிப்பையே.

உரை :—ஆயிழையே - தெரிந்தெடுத்த ஆபரணமணிந்த பாங்கியே !, இந்த வேளையில் - இந்த சமயத்தில், மயிலை அருணைசல மதவேளுக்கு ஓடி - திருமயிலையிலிருக்கும் அருணைசல வள்ளலிடம் ஓடிப்போய், அருணை - சூரியனே!, சலம் செய்யுங் கங்குலை வாட்டி - துன்பப்படுத்துகின்ற இராத்திரியைத் தொலைத்து, நல் ஆய்ந்த மொழி அருள் - இனிய தேர்ந்த வாசகங் கூறி யருள்வாயாக !, நாசல மில்லை - இப் பெண்ணின் நாவில் தண்ணீ

ரில்லை (நாவறண்டு போயிற்று), அருணாசல மூலைப்பாரம்பொருள் - சிவந்த மலை போன்ற தனங்களின் பளுவை இவள் தாங்க மாட்டாள், இனி யார் - இனிமேல் உன்னைத்தவிர வேறு யாறு துணை, என்று அறிவிப்பையே - என்று கூறி இதனைத் தெரிவிப்பாயாக !, எ - று.

213 ஆனையைத் தோய்ந்த குழலாள் கணவற் கசனமிட
ஆனையைக் கொண்டிரண் டானையைமூடியறு சுவையோடு
ஆனையைக் குத்தியொரு சட்டியாக வவித்திறக்கி
ஆனையைச் சாறுவைத்தாள் சத்திபூசைக் கணிபெறவே.

உரை :—ஆனையைத் தோய்ந்த குழலாள் - வண்டு தங்கிய கூந்தலையுடையவள், கணவற்கு அசனமிட - புருடனுக்கு உணவு பரிமாறுவதற்காக, ஆனையைக்கொண்டு - தனது ஆடையைக்கொண்டு, இரண்டானையை மூடி - இரண்டு யானை போன்ற முலைகளை மறைத்துக்கொண்டு, அறுசுவையோடு ஆனையைக் குத்தி - அறுசுவைக் கறிகளில் பசு நெய்யையூற்றி, ஒரு சட்டியாக அவித்திறக்கி - ஒரு பாத்திரத்தில் வேகவைத்திறக்கி, அணிபெறவே - அழகாக, சத்தி பூசைக்கு - அம்பாள் நிவேதனத்திற்கு, ஆனையைச் சாறு வைத்தாள் - அத்திக்காயைக் குழம்பிலிட்டு வைத்தாள், எ - று.

214. குதிரைக் கனியை நாகம்பறித்துக் கொண்டோடயிலே
குதிரை வரக்கண்டு நாகத்திலேறிடக் கூடவந்த
குதிரை யமட்டிட நாகமபயந்துபின் கூப்பிட்டதால்
குதிரை பறந்து தடாகத்திலானையைக் குத்தியதே.

உரை :—குதிரைக்கனியை - மாம்பழத்தை, நாகம் பறித்துக்கொண் டோடயிலே - குரங்கு பறித்துக்கொண்டு ஓடும்போது, குதிரை வரக கண்டு - செந்நாய் அதைப் பிடிக்க வருவதைப்பார்த்து, நாகத்திலேறிட - புன்னை மரத்தின்மேல் குரங்கு ஏறிட, கூட வந்த குதிரை யமட்டிட - பிடிக்க வந்த செந்நாய் அசசக்குர லெழுப்ப, நாகம் பயந்து பின் கூப்பிட்ட தால் - குரங்கு அஞ்சிக் கதறவே, குதிரை பறந்து - மரத்திலிருந்த கொக் கான்து பறந்து போய், தடாகத்தில் ஆனையைக் குத்தியதே - பொய்கையி லுள்ள களிற்று மீனைக் கொத்திற்று, எ - று.

215. அவதாரத்தாதி விழிமயி லேயங் கொருவரில்லை
அவதாரப்பாதிக் கரன்பதி யீந்திடு வல்லவென்றால்
அவதாரப்பாதிப் பின்பின்னோன் பின்சென்ற வதிசயங்கேள்
அவதாரத்தந்தக் கனியப்பில் வீழ்ந்த வதிசயமே.

உரை :—அவதாரத் தாதி விழி மயிலே - விண்டுவின் முதலவதார மாகிய மீனைப்போலுங் கண்ணையுடைய பெண்ணே!, அஙகொருவரில்லை - வீட்டில் வேறொருவரு மில்லை, அவதாரப் பாதிக்கு - பத்து அவதாரத்திற்

பாதியாகிய ஐந்தாவது அவதாரமாகிய வாமனன் அதாவது குழந்தைக்கு அரன்பதி யீந்திடு - கயிலை மலைபோன்ற மூலையின் பாலைக்கொடு, அல்ல வென்றால் - அது செய்யாமற் போனால், அவதாரப்பாதிப்பின் பின்னோன் பின் சென்ற - ஐந்தாவதற்குப் பிற்பட்ட ஆறாவதவதாரமாகிய சீராமனுக் குத் தம்பியாகிய இலக்குமணன் பின் அதாவது இலக்காகிய குறியினிடத் தில் நிகழ்ந்த, அதிசயங்கேள் - வியப்புச் செய்தியைக் கேட்பாயாக!, அவ தாரத் தந்தக்கனி - கடைசி அவதாரமாகிய குதிரை அதாவது மாவின் கனி மாம்பழம், அப்பில் வீழ்ந்த அதிசயமே - மரத்திலிருந்து தண்ணீரில் வீழ்ந்த வியப்புத்தான், எ - று.

216. ஒருநாகம் விட்டுயர் நாகத்தின்மீதினி லொண்டொடியாள்
ஒருநாகம் வைத்தே யொருசுனையாட வொருபுதுமை
ஒருநாகங் காட்ட வொருநாகம் பார்த்துட னோடையிலே
ஒருநாக நாகத்தி னுச்சியிலேறி யுறைகின்றதே.

உரை:—ஒண்டொடியாள் - ஒள்ளிய வளையலணிந்த ஒரு மாது, ஒரு நாகம் விட்டு - இணையற்ற மானத்தை விட்டு, உயர் நாகததின் மீதினில்- உயர்ந்த சுரபுன்னை விருட்சததின் மீது, ஒரு நாகம் வைததே - ஒரு சேலையை வைத்துவிட்டு ஒரு சுனையாட - ஒரு பொய்கையில் நீரா டவே, ஒரு புதுமை ஒரு நாகம் - வியக்கத்தக்கதாகக் கடிதடம் தோன்ற, ஒரு நாகம் பார்த்து உடன் ஓடையிலே-ஒரு பாம்பு பார்த்து ஓடியபோது, ஒரு நாகம்-(அதனைப் பார்த்து) ஒரு குரஙகானது நாகத்தின் உசசியிலேறி யுறைகின்றதே - மலையுசசியின்மீது சென்று தஙகிற்று, எ - று.

217. நாகத்தை நாகத்தி னாலேமறைத்தொரு நங்கைநல்லாள்
நாகத்தி லேறிமலர் கொய்யும் போதொரு நாகம்வந்து
நாகத்தை நாகமபிடித்துக்கொண் டேயொரு நாண்முழுதும்
நாகத்தை நாகமணுகக் கண்டஞ்சி நடுங்கினளே.

உரை:—நாகத்தை நாகத்தினாலே மறைத்தொரு நஙகை நல்லாள் - கடிதடத்தைத் துணியினாலே மறைத்துக்கொண்டு ஒரு பெண், நாகத்தி லேறி மலர் கொய்யும்போது - புன்னை மரத்திலேறிப் பூவெடுக்குஞ் சமயத் தில், ஒரு நாகம் வந்து - ஒரு பாம்பு வர, நாகத்தை நாகம் பிடித்துக் கொண்டே - உடையைக் குரங்கு பிடித்துக்கொள்ளவே, நாகததை நாகம் அணுகக்கண்டு-மாமிருக்கு மலையை ஒரு யானை நெருங்குவதைப் பார்த்து, ஒரு நாள் முழுதும் அஞ்சி நடுங்கினளே - ஒரு நாள் முற்றிலும் அசசத் தால் நடுநடுங்கினள், எ - று.

218. ஞாயிறுந் திங்களுஞ் சூடியநாத ரருணைவெற்பில்
ஞாயிறுந் திங்களு நாமருவோமந்த நாயகனார்
ஞாயிறுந் திங்களுங் கூடுமிடந்தனை நாடிநின்றால்
ஞாயிறுந் திங்களு மொன்றாயிருந்திடு நம்மளவே.

உரை:—ஞாயிறும் திங்களும் சூடிய நாதர் அருணை வெற்பில் - தமது இரு விழிகளாகப் பகலவனையும் மதியையும் தரித்துக்கொண்ட சிவபெருமானது அண்ணாமலைக் குன்றின்மீது, ஞாயிறும் திங்களும் நாமருவோம் - வெயிலுள்ள போதும் நிலவுள்ளபோதும் அதாவது பகலிலும் இராத்திரியிலும் நாம் தழுவி யிருப்பதில்லை, அந்த நாயகனார் - நம்மோடு கூடாத அந்தக் கணவர் ஞாயிறும் திங்களும் கூடுமிடந்தனை நாடி நின்றால் - ஞாயிறுந் திங்களுங் கூடிநின்ற மேலிடமாகிய பரம் அதாவது பரத்தையிடம் பிரியப் பட்டிருப்பாரானால், ஞாயிறுந் திங்களும் ஒன்றாயிருந்திடும் நம்மளவே - சூரியனும் சந்திரனும் ஒன்றுபோல நம்மளவில் துன்பத்தை யுண்டாக்கும், எ - று.

219. நாகஞ்சிறந்த மலர்க்காவிற் போய்வரு நன்னுதலே
நாகஞ்சரிந் திட்டவாறு சொல்லீர்நம னார்தமைப்போல்
நாகந்துரத்திய தாலேயென்மேனி நடுநடுங்கி
நாகஞ்சரிந்த தடியெனை யீன்றரு ணாயகமே

உரை:—நாகஞ் சிறந்த மயிர்க்காவிற் போய்வரும் நன்னுதலே - சுர புன்னை மரங்கள் நெருங்கிய பூம்பொழிலிற் சென்று திரும்புகின்ற அழகிய நெற்றியையுடைய மகளே!, நாகம் சரிந்திட்ட வாறு சொல்லீர் - உன் சேலை நழுவி யிருப்பதற்குக் காரண மென்னவென்று கேட்க, (மகள் சொல்லுவாள்) எனை யீன்றருள் நாயகமே - என்னைப் பெற்ற தயவுடைய அம்மையே!, நமனார் தமைப்போல் நாகந் துரத்தியதாலே - இயமனைப் போல ஒரு யானை என்னைத் துரத்தி வந்ததினாலே என் மேனி நடுநடுங்கி என்னுடம்பு அதிக நடுக்கத்தை யடைந்து, நாகம் சரிந்தது - இந்தச் சேலையானது கலைவதாயிற்று, அடி - விளிக்குறிப்பு, எ - று.

220. கண்டநந்தந்த மயிற்சாய லாள்செழுங் கைவனசம்
கண்டநந்தந்த மயில்செண் டரும்பு கனிமொழிகற்
கண்டநந்தந்த நடையாள் குறவள்ளி காதலனைக்
கண்டநந்தந்தரந் தண்டனிட் டேன்வினைக் கட்டறவே.

உரை:—கண்டம் நந்து - சங்குபோன்ற கழுத்தையும், அந்த மயில் சாயலால் - அழகிய மயில்போன்ற சாயலையுடைய மேனியையும், செழும் கை வனசம் - தாமரைப் பூப்போன்ற வளமான கையையும், கண் அயில் - வேல்போன்ற கண்ணையும், தனம் செண்டு - பூஞ்செண்டுபோன்ற தனத்தை

யும், தந்தம் அரும்பு - முல்லை யரும்புபோன்ற பல்லையும், கனி மொழி கற்கண்டு - கற்கண்டு போன்ற இனிய சொல்லையும், அனம் தந்த நடையாள் - அன்னம்போன்ற நடையுமுடையவளாகிய, குறவள்ளி காதலனை - குறமகளிராகிய வள்ளிநாயகியின் கணவனாகிய குமாரப்பெருமானை, கண்டு - தரிசித்து, வினைக் கட்டற - கரும பாசம் தொலையும்படியாக, அநந்தம் தரம் தண்டனிட்டேன் - அளவற்ற பலமுறை வணக்கஞ் செய்தேன், எ - று.

221. கனகா சலங்கரிக் கும்பூ ணிளமுலைக் கன்னியுன்மேல்
கனகா சலையுற் றனள்பார் கடைகட் கருணையமோ
கனகா சலதி முரசமதிக் குடைக் கன்னல்விலா
கனகா சலநிதித் தாண்டவமூர்த்தி கங்கா குலனே.

உரை :—அமோகனகா - அளவுக் கதிகமான ஒளியை யுடையவனே!, சலதி முரச மதிக்குடை கன்னல் விலா - கடலாகிய முரசையும் சந்திரனாகிய குடையையும் கரும்பாகிய வில்லையுமுடைய காமன் போன்றவனே!, கனகா - தேவகுரு போன்றவனே!, சலநிதித் தாண்டவமூர்த்தி - கடலலை போல நடனஞ் செய்கின்ற தாண்டவ மூர்த்தியே!, கங்காகுலனே - வேளாளகுலத்திற் பிறந்தவனே!, கனகாசு அலங்கரிக்கும் பூண் இள முலைக் கன்னி - மிகுந்த மணிகளால் இழைக்கப்பட்ட நகைகளை அழகாகத் தரித்துள்ள இளமைச் செவ்வியோடு கூடிய தனங்களையுடைய சிறு பெண்ணானவள், உன்மேல் - உன்னிடத்தில், கன காசலை யுற்றனள் - மிகுந்த மோகமுடையவ ளானாள், கருணை கடைக்கண் பார் - தயவுடனே உன் கடைக்கண்ணால் அவளைப் பார்ப்பாயாக!, எ - று.

222. மாதங்கமலை யிரண்டன கொங்கை மதர்விழிக்கு
மாதங்கமலை மருவரங் காகுல்லை மாலையருள்
மாதங்கமலை சற்றேனு முண்ணாள் வளருங் கங்குலோர்
மாதங்கமலை துரும்பாய் மெலிந்தனள் மாதரசே.

உரை :—அம் கமலை மாது மருவு அரங்கா - அழகிய இலக்குமிப்பெண் தழுவப்பெற்ற திருவரங்கப் பெருமானே!, மா தங்கமலை இரண்டென்ன கொங்கை - பெரிய பொன்மலைபோன்ற இரண்டு தனங்களையுடைய மாதரசே - பெண்கள் நாயகமாகிய இவள், அங்கு - வீடாகிய அவ்விடத்தில், மாது அமலை சற்றேனும் உண்ணாள் - நல்ல சோற்றைச் சிறிதும் அருந்தாதிருக்கிறாள், வளரும் கங்குல் ஓர் மாதம் - விடியாத இராத்திரி ஒரு மாத காலம்போல அவளுக்கிருக்கிறது, கம் அலை துரும்பாய் மெலிந்தனள் - நீரிலலைகின்ற துரும்புபோல ஒடுங்கிப் போனாள், மதர் விழிக்கு - மோகக்

குறிப்புடைய கண்களை புடையவளுக்கு, குல்லை மாலை யருள் - நீ துளசி மாலையைக் கொடுப்பாயாக !, எ - று.

223. பஞ்ச வனத்தத்தைக் காக்குந் தென்கூடற் பதிசுந்தரன்
பஞ்ச வனத்தத்தைப் பார்ப்பதிக் கீந்தவன் பாலனக்கால்
பஞ்ச வனத்தத்தை யாளுன் செந்தூரன் பதியிற்சென்று
பஞ்ச வனத்ததனை காள்சொல்லுவீரென் றன்பந்தத்தையே.

உரை:—பஞ்சவனத் தத்தைகாள் - ஐந்து வர்ணக்கிளிகளே !, பஞ்ச அனத்தத்தைக் காக்கும் - கருப்பினுலுண்டாகிய கேட்டைத் தடுக்கும், தென் கூடற்பதி சுந்தரன் பஞ்சவன் - அழகிய மதுரைத் தலத்தில் வீற்றிருக்கின்ற சோம சுந்தர பாண்டியனும், அதத்தைப் பார்ப்பதிக்கு ஈந்தவன் - பார்வதிக்குத் தன்னுடைய உடம்பிற் பாதியைக் கொடுத்தவனுமாகிய சிவபெருமானது, பாலன் - குமரனும், அக்கால் - அந்த நாளில், பஞ்ச வனத் தத்து ஐயாளுன் - ஐந்து தொழில் செய்யும் இறைவனது கையில் அழகாகத் தங்கி யிருந்தவனும், செந்தூரன் பதியிற் சென்று - திருசெந்தூரில் வீற்றிருப்பவனுமாகிய முருகப்பிரானிடததே போய், என்றன் பந்தத்தைச சொல்வீர் - என்னைப் பிணித்த காதலைத் தெரிவிப்பீர்களாக !, எ - று.

224. கச்சிக் குரங்கன் மனுநீதி வேந்தன் கனவரைமேல்
கச்சிக்குச் சொல்லி முலைபூணுமோசிறு கையிலளா
கச்சிக்கு வாரி முடித்திடுமோ வின்று காலைபின்னே
கச்சிக் கெனசசென் றிராமே சுரங்கண்ட காட்சிநன்றே.

உரை :—கசசிககு அரஙகன் மனுநீதி வேந்தன் கனவரைமேல் - கசசியிலிருக்கும் அரஙகனென்னும் வள்ளலாகிய மனு முறை நீதி செலுத்தும் மன்னனுடைய உயர்ந்த மலையின்மீதுள்ள, இக்குச சொல்லி - கரும்புச சுவையுடைய மொழியாளாகிய பெண, முலை கசசுப் பூணுமே - தனதின் வாரை யணிவாளோ, சிறு கையில் அளகச சிக்குவாரி முடித்திடுமோ - தனது சின்னக் கைகளால் தலை மயிரிலுள்ள சிக்கைக் கோதி முடித்துக் கொள்ளுவாளா, இன்றே காலை பின்னே - இககாலத்தில் ஒரு காதலன் பின்னே, கசசிக் கெனச சென்று - காஞ்சிபுரத்திற்குப் போகிறேனென்று சொல்லிப்போய, இராமேசுவரங் கண்ட காட்சி நன்றே - இராமேசுவரம் போய்த் தரிசனம் பணணினசெயல் பாாவைககு நன்ருயிருக்கிறது, எ-று.

225. கொக்கேறி வந்தவரசே யிருவருங் கூடவென்றால்
கொக்கே கணவனற் காவல்வைத் தானந்தக் கொக்கெழுந்து
கொக்கே சடித்திடுங் சோலே யருகுறுங் கொல்லையிலே
கொக்கே யிருக்கின்ற தங்கனம வந்திடிற் கூடுவனே.

உரை:—கொக்கேறி வந்த அரசே - குதிரையின்மே லேறிவந்த மன்னனே!, இருவருங்கூட வென்றால் - நாமிருவருங் கூட முயன்றால், கொக்கே கணவன் நற் காவல் வைத்தான் - செந்நாயைக் கணவன் தக்க காவலாக வைத்திருக்கிறான், அந்த கொக் கெழுந்து - அந்தச செந்நாயானது கிளம்பி, கொக்கே கடித்திடுங் கோவே - அரசனது குதிரையைக்கடித்து விடும், அருகுறும் கொல்லையிலே - பக்கத்திலிருக்கும் வீட்டுப் பின்புறத் தோட்டத்திலே, கொக்கே இருக்கின்றது-மாமர மிருக்கின்றது, அங்ஙனம் வந்திடில் கூடுவனே - அந்த விடத்திற்கு வந்தால் நான் உன்னோடு சேர்வேன், எ-று.

226. சந்தநந் தந்தர ளங்களந் தந்தஞ் சரங்கணம்பு
சந்தநந் தந்தர வானுசுப் பல்குன்மின் றந்தமெய்ப
சந்தநந் தந்தர சங்கசந் தம்பரஞ் சங்கிழந்து
சந்தநந் தந்தரஞ் சொன்னாள் வரச்சொல்லிச் சண்முகனே.

உரை :—சண்முகனே - ஆறுமுகப் பெருமானே !, சந்த நந்தகளம் - அழகிய சங்குபோன்ற கழுத்தும், அம் தாளம் தந்தம் - அழகிய முத்துப் போன்ற பல்லும், சரம் கண் - அம்புபோன்ற கணணும், அம்புசம் தனம - தாமரை மொட்டுப்போன்ற முலையும், தந்து நுசுப்பு - நூலிழைபோன்ற இடையும், அரவு அல்குல் - பாம்புப் படம்போன்ற கடிதடமும், மின் தந்த மெய் - மின்னல் போல ஒளி வீசுகின்ற உடம்பு முடைய பெண், பசந்து - காதலாற் பசலை படரப் பெற்று, அனம் தந்த ரசம் கசந்து - அன்னத்தோடு கூடிய ரசததை வெறுதது, அம்பரம் சஙகு இழந்து - ஆடையும் சஙக வளையலும் நழுவப்பெற்று, வரச சொல்லி - உன்னை வரும்படியாகச சொல்வதற்கு, அனந்தம் தரம் தூது சொன்னாள் - அளவற்ற தடவை என்னைத் தூது போகும்படி சொன்னாள், எ - று.

ஒரு வித்துவானின் ஆடையைப்பற்றிப் புகழ்ந்தது

227. நத்தையார் வயல்சூழ் பெரும்பாளய நகரில்
வாழுஞ்சிதமபர மன்னவா
நத்தைநோக்கி யரிபரந் தாமச ஞார்த்தன
வென்றழு மொருபெண்ணின்மா
நத்தையன் றளித்திட் டவன்போலென் மாநத்தை
யின்றளித்திட்டாயென் றுன்னிதா
நத்தையா லென்சொல் வேனிரண் டாயிர
நாவுடைப்பணி நல்லரசன்றியே.

உரை:—நத்தையார் வயல் சூழ் பெரும்பாளய நகரில் வாழும் சிதம்பர மன்ன - சங்குகள் நிறைந்த வயலகள் சூழ்ந்த பெரிய பாளையப்பதியில் வசிக்கும் சிதம்பரமென்னும் அரசனே!, வானத்தை நோக்கி அரி பரந்தாம

சனார்த்தனு வென்றழும் ஒரு பெண்ணின் - வானை நோக்கி அரி பரந்தாம சனார்த்தனு என்ற பெயர்களைச் சொல்லித் திருமாலை அழைத்த துரௌபதையின், மானத்தை அன்று அளித்திட்டவன்போல் என் மானத்தை இன்றளித்திட்டாய் - மானத்தைக் காப்பாற்றிய கடவுளைப்போல ஆடை தந்து எனக்குப் பெருமை கொடுத்தாய், உன் நிதானத்தை - உன்னுடைய உயர்ந்த தன்மையை இரண்டாயிர நாவுடைப் பணி நல்லரசன்றியே - இரண்டாயிரம் நாக்கையுடைய ஆதிசேடனாகிய பாம்பு மன்னனைத் தவிர, யான் என்னென்று சொல்வேன் - யான் எத்தகையது என்று சொல்ல வல்லேன், எ - று.

228. அந்தரங் கண்டிடத் தேயுநெல் லிரும்புபோ
லிப்போதகப் பட்டேன்யான்
அந்தரங்க வாழி முராசோ னமரிற்
படுந்துயர மகற்றுதற்கே
அந்தரங் கண்வள ரமலர் முனிவருக்கு
முனிவருக்கு மமுதையீந்த
அந்தரங்க மாயனையே யந்தரங்க
மாயனையே யழைப்பிப்பாயே.

உரை :—அனையே - தாயே !, அந்து அரம் கண்டிடத் தேயும் நெல் இரும்புபோல் இப்போது அகப்பட்டேன் யான் - அந்துப் பூச்சி படிந்த நெல்லுப் போலவும் அரத்திலராவிய இரும்பு போலவும நான் இப்போது பிரிவாற்றாத துயரிலகப்பட்டுக் கொண்டேன், அம் தரங்க ஆழி முராசோன் அமரிற் படும் துயர மகற்றுதற்கே - அழகிய அலையையுடைய கடலாகிய பேரிகையையுடைய மன்மதனது சண்டையினு லுண்டாகிற வருத்தத்தை ஒழிப்பதற்கு, அந்தரங் கண்வளர அமலர் முனிவருக்கும முனிவருக்கும் அமுதை யீந்த - விண்ணிடத்தே சிறப்பாக வாழ்கின்ற தேவர் முனிவர் மனித முனிவ ரென்பவர்களுக்குத் தேவாமிர்தத்தைக் கொடுத்த, அந்தரங்க மாயனையே - நுட்பப் பொருளாகிய திருமாலையே, அந்தரங்கமா யழைப்பிப்பாயே - மறைவா யழைத்து வரும்படி சொல்வாயாக, எ - று.

229. அன்னமது வீடென்றே குடியிருக்குங்
கொண்டைமுக மரவிந்தஞ்சீர்
அன்னமது கண்டஞ்சு நடைபந்து
கொங்கைகசு ரமுதந்தன்னை
அன்னமது ரமபோன்ற சொன்மாது
சீவாழி யரசேயென்றும
அன்னமது வேம்பாகி மயலாகு
னினிதாய்வர் தாளுவாயே.

உரை:—சிவாஜி அரசே - சிவாஜி மன்னனே', அல் நமது வீடென்றே குடி யிருக்கும் கொண்டை - இருளானது தனது சொந்த விடமென் றெண்ணித் தங்கும் கூந்தலையும், அரவிந்த முகம் - தாமரைப் பூப்போன்ற முகத்தையும், சீர் அன்னமது கண்டஞ்சு நடை - அழகிய அன்னம் பார்த்து நாணக்கூடிய நடையும், பந்து கொஙகை - பந்துபோன்ற தனமும், சுரர் அமுதந்தன்னை அன்ன மதுரம்போன்ற சொல் - தேவாமிர்தம்போலும் இனிமையான மொழியு முடைய என் பெண், என்றும் அன்னமது வேம் பாகி மயலானள் - எப்போதும் சோறு கசக்கப்பெற்று உன்பால் காதல் கொண்டாள், இனிதாய் வந்து ஆளுவாயே - விருப்பத்தோடு வந்து அவளை யாட்கொள்ளுவாயாக!, எ - று.

230. சென்னிமலை வேலருக்குச் சேர்ந்தகொம் பிரண்டுண்டு
கன்னிகுற வள்ளிக்குக் காலில்லை—முன்னமே
ஆட்டுக்குக் கொம்பில்லை ஆனைக்குக் காலில்லை
பாட்டுக்குள் ளாராய்ந்து பார்.

உரை:—சென்னிமலை வேலருக்கு சேர்ந்த கொம்பிரண்டு - சென்னி மலையிலிருக்கும் வேலாயுதப் பெருமானுக்கு அவரோடு கூடிய மனைவியர் இருவருளா, கன்னி குற வள்ளிக்குக் காலிலலை - குறச சிறு பெண்ணாகிய வள்ளியைக் குறிக்கும் பெயராகிய வள்ளியென்பது கொடியை யுணாததுங காலகொடிககுக் காலில்லை யென்பது தெளிவு, முன்னமே ஆட்டுககுக கொம்பிலலை யானைககுக் காலில்லை பாட்டுக்குள் ஆராய்ந்து பாா - ஆடு என்ற சொல்லிலும் ஆனை யென்ற சொலலிலும் கால் கொம்பு எனற எழுததுக் குறிகள் அவற்றிற்கு முன்னதாக இல்லை, எ - று

குறிப்பு:—கொண்டு கூட்டாக வெடுதது ஆட்டுககுக் காலிலலை! யானைககுக கொம்பில்லை என்றபொழுது ஆட்டத்திறகேற்ற காலமைப் பில்லை யென்றும், யானைக்குத் தலையில கொமபில்லை என்றுங கூறலாம்.

231. தார்க்கொன்றை தாவென்றேன் றேழி லொன்றென்றான்
ஊர்க்கஞ்சி யான்மூன்றி லொன்றென்றேன்—யார்க்கும
பொதுவென்றான் பூவென்றேன் போயினான் றோழி
இதுவோநம் மீச னியல்பு.

உரை:—தார்க் கொன்றை தா என்றேன் - நமது இறைவனைப் பாாத்துக் கொன்றை மாலையை கொடுவென்றேன், ஏழிலொன்று தா என்றான்- கன்னிக்கு ஏழாவது வீடாகிய கும்பம்போன்ற தனத்தைக கொடு என றான், ஊர்க்கஞ்சி நான் மூன்றில் ஒன்றென்றேன - ஊாககாரர்ககுப் பயப்பட்டு கன்னி மணப்பெண கைம் பெண் என்ற மூன்றில் முதலாவதாகிய கன்னி யென்றேன், யார்க்கும் பொது என்றான் - கன்னிகையை யாரும் நாடலாமென்றான், பூ என்றேன் - பூப்பென்று சொன்னேன்,

போயினான் - உடனே போய்விட்டான், தோழி இதுவே நம் மீசனியல் பாஙகி நம் மிறைவன தன்மை யிதுவோ, எ - று.

232. பறவைநாய் நாகம் பகைவிலங்கு பங்கம
செறியுமிரு ணாரஞ் சிதடன்—குறிகிழவன்
என்றுரைத்த வீரைந்து மேர்தண்டத திற்பண்பாய்
ஒன்று மெனவுரைப்ப ரால்.

உரை:—பறவை நாய் நாகம் பகைவிலங்கு பங்கம் - பட்சிகள் நாய்கள் பாம்புகள் சதத்ருக்கள் நாற்காற் பிராணிகள் சகதி, செறியும் இருள் - அடர்ந்த இருள், நாரம் - தண்ணீா, சிதடன் - கண் தெரியாதவன், குறி கிழவன் - வழி வருந்திக் காணும் வயோதிகன், என்றுரைத்த யீரைந்தும் - என்றுரைதத பத்துப் பேரால்வரும் கேடும், ஏர் தண்டததிற் பண்பாய் ஒன்றும் - அழகிய கோலின் பயனால் மாறி யொழியும், என வுரைப்பர் - என்று அறிஞர்கள் கூறுவாாகள், ஆல் - அசை, எ - று.

233. நக்கனார் சோணகிரி நாதனார் வேள்வியிலே
தக்கனா ரைத்தகர்த்த தக்கனார்—பொக்கைவாய்
ஆக்கினார் சூரியனை யமபுலியைத் தேய்த்தரியைத்
தாக்கினா ரோடோடத் தான்.

உரை:—நக்கனார் சோணகிரி நாதனார் - நிருவாணியாகிய அண்ணாமலைப் பெருமான், வேள்வியிலே தககனாரைத தகர்தத தக்கனா - தககன் யாகத்திலே தக்கனைத தாக்கி யடிதத தகுதி யுடையவர், சூரியனைப் பொக்கை வாய் ஆககினா - தக்கன் வேள்வியில் தக்கனைச சாாந்த சூரியனுடைய பற்களை யுடைத்தார், அம்புலியைத் தேயதது - சந்திரனை மிதிததழுத்தி, அரியை ஓடோடத் தாககினா - இந்திரனை யோட்டமெடுககும்படியாகத் துரத்தி யடிததார், எ - று.

234. ஓடினா னென்ப துணர்ந்து முனக்குச்சரியா
நாடினார்க் கென்ன நரகமோ—நீடியே
ஆலவிடந் தோன்றியபோ தம்பலவா ணாநெடிய
மாலவிடஞ் சஞ்சரியா தே.

உரை:—அம்பலவாணா - சபாநாதரே!, நீடியே - பெரியதாகவே, ஆலவிடம் தோன்றியபோது - ஆலகாலவிடம் திருப்பாறகடலில எழுந்தபோது, நெடியமால் அவவிடம் சஞ்சரியாது ஓடினான் என்பது உணாந்தும் - பெரிய திருமால் அநத விடததில் நில்லாமலோடிப் போய்விட்டா னென்பது தெரிந்தும், உனக்குச சரியா நாடினார்க்கு என்ன நரகமோ - உமக்கொப்பாக அவரைக் கருதுகிறவர்களுக்கு எவ்வகையான நரகம் கிடைக்குமோ, எ - று.

235. அசநமிளைப் பகற்று தன்னையே நம்பால்
வசநமிது தவறு வாய்மை—இசைநாகைச்
சின்னப்பால் வெண்மதியஞ் சேரிமையத் தேபிறந்த
அன்னப்பா லிங்குவந்தா லாம்.

உரை:—அன்னையே - அம்மையே !, அசம் நம் இளைப்பு அகற்றுது-ஆடு நம்முடைய தளர்ச்சியை நீக்காது, நம்பால் வசநம் இது தவறு வாய்மை - நாம் சொல்லுகின்ற இந்த வாக்குப் பிழையில்லாத வுண்மை யாகும், இசை நாகை - கீர்த்தியுடைய நாகைப்பதியி லுறைகின்ற, சின்னப்பால் வெணமதியஞ்சேர் - பால்போன்ற வெண்ணிறமுடைய இளம் பிறையை யணிந்த, இமயததே பிறந்த அன்னப்பால் - இமயமலையி லவ தரிதத அன்னம்போன்ற வுமையம்மையைப் பாகத்திலுடைய பெருமான், இங்கு வந்தாலாம் - இங்கே வந்தால் இளைப்புத் தீரும், எ - று.

236. சீர்கொண்ட வழகுமிகு மாரனது நாமமும்
தேவரம பையி னாமமும
திகழோரி ராகத்தி னாமமுஞ் சிவைநாமஞ்
செப்புமிப் புவி நாமமும
தார்கொண்ட சிறியநற் பெண்ணினா மமுமாகி
சார்ந்தவறு வகை மொழியினில்
தமதிடையி லுறைகின்ற தேவனது பெயர்கொண்டு
தங்குபுக ழோங்கு சுகுணா
கூர்கொண்ட கொமபிலா மாடுகொல் லாவேங்கை
குவியெள் ளடாத காணம
கூறுமுக மில்லாத வுடலுவரி யின்னிதியம
குமபிடாச் சாமி வெண்ணெய்
ஏர்கொண்ட தயிருண வரிமாதர் மார்புதனில்
இல்லா தன முலகினை
இன்பமுட னளாத செங்கோலை யீட்டவோர்
இனியதொழில் காட்டி யருளே.

உரை:—சீர்கொண்ட அழகு மிகு மாரனது நாமமும் - சிறப்பான அழகுடைய மன்மதனுடைய பெயரும் அதாவது மதன் என்ற சொல்லும், தேவரம்பையின் நாமமும் - விண்மாதரின் பெயராகிய உருவசி யென்ற சொல்லும், திகழ் ஓர் இராகத்தின் நாமமும் - விளங்குகின்ற ஒரு இராகத் தின் பெயரும் அதாவது இராமக்கிரியை யென்ற சொல்லும், சிவை நாமம்-சிவசத்தியின் பெயரும் அதாவது வாராகி யென்ற சொல்லும், செப்பு மிப் புவிநாமமும் - சொல்லுகின்ற இந்தப் பூமியின பெயரும் அதாவது அசல

மென்ற சொல்லும், தார்கொண்ட சிறிய நற்பெண்ணின் நாமமுமாகி - மாலைதரித்த சிறு பெண்ணின் பெயரும் அதாவது கன்னியென்ற சொல்லு மாகிய, சார்ந்து அறுவகை மொழியினில் தமநிடையி லுறைகின்ற தேவ னது பெயர்கொண்டு - ஆகிய ஆறு சொற்களிலும் நடுவில் நின்ற எழுத்துக் களினாலாகிய தருமராசன் என்ற கடவுளினது பெயரைப் பூண்டு, தங்கு புகழோங்கு சுகுணை - நிலைத்த புகழை யடையப்பெற்ற நற்குணவானே !, கூர்கொண்ட கொம்பிலா மாடு - கூர்மையதாகிய கொம்பில்லாத மாடு அதா வது செல்வம், கொல்லா வேங்கை-கொல்லாத வேங்கை அதாவது பொன், குவியெள்ளடாத காணம் - குவிந்த யெள்ளோடு சேராத காணம் அதாவது பொன், கூறு முகமில்லாத உடல் - முக முதலிய உறுப்பில்லாத உடல் அதாவது பொன், உவரி இல்நிதியம் - கடல் சார்பில்லாத நிதி அதாவது பொன், கும்பிடாச்சாமி - வணக்கப்படாத சாமி அதாவது பொன், வெண் ணெய் ஏர்கொண்டதயிருணு அரி - வெண்ணெய் அழகான தயிர் ஆகிய இவற்றை யுண்ணுத அரி அதாவது பொன், மாதர் மார்புதனில் இல்லாத தனம்-பெண்களது நெஞ்சில் இல்லாத தனம் அதாவது செல்வம், உலகினை இன்பமுடன் ஆளாத செங்கோலை - உலகினை இனிமையாய் ஆளுதற் கில்லாத செஙகோலை அதாவது பொன்னை, ஈட்டவோர் இனிய தொழில் காட்டி யருளே - பொருளைத் தேடுதற்குரிய ஒரு வழியை விளக்கியருள் வாயாக!, எ - று.

குறிப்பு:—மதன், உருவசி, இராமக்கிரியை, வராகி, அசலம், கன்னி என்ற ஆறு சொற்களிலுள்ள நடுவெழுத்துக்கள் சேர்ந்து தருமராசன் என்ற சொல்லாதல் காண்க, மாடு, வேங்கை, காணம், உடல், நிதி, சாமி, அரி, தனம், செங்கோல் என்னும் இந்த சொற்கள் பொன்னையும் செல்வத் தையுங குறிக்கும் பிறபெயர்க ளாதலோடு வேறு பொருளும் உடைமையால் அவவேறு பொருளைப் பிரிப்பதற்காக அடைமொழிகள் கொடுக்கப்பட்டன.

237. பேரான வீரெழுத்தை முடியி லேற்ருன்
பின்னைவந்த வீரெழுத்தை யிடக்கை யேற்ருன்
சீரான வீரெழுத்தை வலக்கை யேற்ருன்
சிறப்பான வீரெழுத்தி லேறிக்கொண்டான்
காரான வீரெழுத்தை மிடற்றிற் கொண்டான்
கருணைசெயு மீரெழுத்தைப் பாகங்கொண்டான்
ஆராகி லுமபொருளை யறிந்து சொல்லின்
அவர்கடமைப் புலவரென வறையலாமே.

உரை:—பேரான வீரெழுத்தை முடியிலேற்ருன் - இரண்டெழுத்தினு லாகிய மதியைச சிவபெருமான் சிரமே லணிந்தான், பின்னை வந்த வீரெழுதலை யிடக்கை யேற்ருன்-பிற்பாடு இரண்டெழுத்தினுலாகிய மான்

என்பதை இடது கரத்திற் றங்கினன், சீரான வீரெழுத்தை வலக்கை யேற்றான் - சிறப்பான விரண்டெழுத்தினலாகிய மழு என்பதை வலக் கரத்தினற் றங்கினன், சிறப்பான வீரெழுத்தி லேறிக்கொண்டான்-சிறப் புடைய விரண்டெழுத்தினலாகிய விடையின்மேல் ஏறிக்கொண்டான், காரான வீரெழுத்தை மிடற்றின் கொண்டான் - கருமையைக் குறிக்கும் இரண்டெழுத்தினலாகிய கடு என்பதைக் கண்டத்தில் வைத்தான், கருணை செயும் ஈரெழுத்தைப் பாகங் கொண்டான் - கிருபை செய்யும் உமையை இடப்பாகத்தில் வைத்தான், ஆராகிலும் பொருளை யறிந்து சொல்லின் அவர்கள் தமைப் புலவரென அறையலாமே - ......, எ - று.

238. சீரான பசுவின்பேர் சென்னிப் பேரும்
செகபுகழு மாதுலன்பேர் கன்னிப்பேரும்
பேரான மரத்தின்பேர் நிசத்தின் பேரும
பேசரிய விவ்வாறு மொன்றாச் சேர்த்து
ஏராக விவற்றினடு வொன்றாக் கூட்ட
இயல்பிரமன் சிவமெனவே யியம்பலாகும
வாரான வீராறின் முன் பின்னன
ஆறுமொழி யவர்க்காக வமைந்ததன்றே.

உரை:—சீரான பசுவின் பேர் - உயர்ந்த பசுவின் பெயராகிய கபிலை யென்ற சொல்லும், சென்னிப்பேரும் - தலையைக் குறிக்கும் பெயராகிய சிரசென்ற சொல்லும், செகம் புகழும் மாதுலன் பேர் - உலக மறிந்த மாதுலன் பெயராகிய மாமன் என்ற சொல்லும், கன்னிப்பேரும் - கன்னி யென்ற சொல்லும், பேரான மரத்தின் பேர் - பெரிய மரத்தைக் குறிக்கும் பெயராகிய ஆசினி யென்ற சொல்லும், நிசத்தின் பேரும் - மெய்யின் பெய ராகிய சாசுவதமென்ற சொல்லும், பேசரிய இவவாறும் ஒன்றாய்ச சேர்த்து - சொல்லுதற்கரிய இந்த ஆறு சொற்களையும் ஒன்றாய்ச சேர்த்து, ஏராக இவற்றினடு ஒன்றாகக்கூட்ட - அழகாக இவற்றின் நடுவெழுத்துக் களை யொன்றாய்ச சேர்த்தால், இயல் பிரமன் சிவமெனவே இயம்பலாகும்- பிரமன் சிவமென்ற இயற் பெயராக அமையும், வாரான ஈராறின் முன் பின்னன ஆறுமொழி யவர்க்காக அமைந்ததன்றோ-எஞ்சிய எழுத்துக்களி னலாகிய ஆறு மொழிகளும் அவர்க் கில்லாதவற்றைக் குறிப்பதாகும், எ - று.

குறிப்பு:—கபிலை, சிரசு, மாமன், கன்னி, ஆசினி, சாசுவதம் என்ற ஆறு சொற்களின் நடுவெழுததைச் சேர்த்தால் பிரமன் சிவ என்ற சொற்களமை யும், மற்ற எழுத்துக்களினலாகிய சொற்கள் கலை, சிசு, மான் (பெண்), கனி, ஆனி, சா+சுதம் என்பன கடவுளுக்கில்லை; அதாவது, (கலை -) ஆடையும், (சிசு -) குழந்தைத் தன்மையும், பெண்ணுடைமையும், (கனி -) முதிர்தலும், துன்பமும், இறப்பாகிய கேடும் இல்லை யென்பது கருதது.

239\. மாகமுறை யுடுக்களிரு பானேழ் தம்மின்
மன்னுமோ ருடுவதன் முன்னெழுத்தை நீக்கின்
சாகசமாம் அலையாகு மிடையைத் தள்ளின்
சலதரத்தை யடுமதிலாங் கடையைத் தள்ளின்
பாகமதி லொருமானுஞ் சிரத்தோர் மானும்
பாணியிலோர் மானுநா வதிலோர் மானும்
ஆகமதி லோர்மானுங் கொண்டோர் பேராம்
அதன்பெயரை யுரைப்பவரே புலவராமே.

உரை:—மாகமுறை யுடுக்களிரு பானேழ் தம்மின் மன்னுமோ ருடுவதன் முன்னெழுத்தை நீக்கின் சாகசமாம் அலையாகும் - ஆகாயத்திலுள்ள இருபத்தேழு நட்சத்திரங்களில் ஒன்றின் பெயராகிய நட்சத்திரத்தின் முதலெழுத்தை எடுத்துவிட்டால் எளிதான அலை யென்னும் பொருள் படும், இடையைத் தள்ளின் சலதரத்தை யடுமதிலாம் - அச சொல்லின் நடுவெழுத்தைத் தள்ளிவிட்டால் எஞ்சிய பகுதி மதிலென்று பொருள் படும், கடையைத் தள்ளின் - கடை யெழுத்தை நீக்கினால், பாகமதி லொருமானும் தமது இடப்பாகத்திலே பார்வதியாகிய பெண்ணையும், சிரத்தோர் மானும் - தலையிலே கங்கையாகிய பெண்ணையும், பாணியிலோர் மானும் - இடக்கையி லொரு மானும் கொண்டவருடைய பெயரும், நாவதிலோர் மானும் - நாவில் சரஸ்வதியாகிய பெண்ணை வைத்த பிரமாவின் பெயரும், ஆகமதி லோர் மானும் கொண்டோர் பேராம் - மார்பிலே ஒரு பெண்ணைத் தரித்த திருமாலின் பெயா ஆகும், அதன் பெயரை யுரைப்பவரே புலவராமே - அதனுடைய பெயர் சொல்பவர்களே அறிஞராவர் (அதன் பெயர் ஆதிரை யென்பது.)

குறிப்பு:—ஆதிரை, திரை - அலை, ஆரை - மதில், ஆதி - கடவுள் (இது மும்மூர்த்திகளையும் குறிப்பதாகும், சிவன், பிரமன், திருமால் )

240\. வீடுகோ கிலநீலி தமமின் மூன்றின்
விளங்குபெயர் நடுவெழுத்தா லூனநா டோறும
பீடுறுபா மாலைநாத னஞ்செய் தேத்தப்
பித்தனே திற்குழூ விரண்டெழுத்தில்
நீடுசடை தனில்வைதது மகங்க டோறும
நின்றேற்றுந் தொடையாகவே யணிந்தும
ஆடுடையாய் மாடுடையாய் நாடுமீச
வந்தருனை வந்தெனக்குத் தந்திடாயே.

உரை:—வீடு கோகிலம் நீலி தம்மின் மூன்றின் விளங்கு பெயர் - வீடு கோகிலம் நீலி யென்ற மூன்றையுங் குறிக்கும் அகம் பல்லி அலிரி யென்ற மூன்றின், நடு வெழுத்தால் ஊன நாடோறும் பீடுறு பாமாலை நாதனஞ்

செய்தேத்த - நடுவெழுத்தாலாகிய 'கல்வி' யால் பெருமை பொருந்திய கவிக் கோவைகளைப் புதிதுபுதிதாகச் செய்து வழிபட, பித்தனே - பித்த னென்ற பெயருடைய சிவபெருமானே !, நிற்கு மூவிரண்டெழுத்தில் - எஞ்சிய பகுதியில் முதற் சொல்லிலுள்ள அம் அதாவது நீர் என்பதை, நீடு சடைதனில் வைத்தும் - நீண்ட சடையினிடமாக வைத்தும், அகங் கள் தோறும் நின்று ஏற்றும் - இரண்டாவது சொல்லாகிய பலி அதாவது பிச்சைச் சோறு வீடுகள் தோறும் போய் வாங்கியும், தொடையாகவே அணிந்தும் - மூன்றாவது எஞ்சிய பகுதியாகிய அரியின் என்பினை மாலை யாக அணிந்தும், ஆடுடையாய் - கூத்துடையவனே!, மாடுடையாய் - காளை வாகன முடையவனே !, நாடும் ஈச - எல்லாருந் தேடுகின்ற ஈசனே !, வந்தருளை வந்தெனக்குத் தந்திடாயே - வெளிப்பட்டுவந்து உன்னருளைக் கொடுத்தருளவேண்டும், எ - று.

குறிப்பு :—அகம், பல்லி, அவிரியாகிய இவற்றின் நடுவெழுத்து கல்வி; இம்மூன்றின் தனித்தனி நடுவெழுத்தை நீக்கினால், அம - கங்கை, பலி - பிச்சை, அரி - விஷ்ணு என்றாகும்.

241. வாசமாளி கருமுகில் வண்ணனற்
பாசமாமபிர திப்பதந் தன்னிலே
ஓசைமுன்னடு வீறெழுத் தொக்குமே
தாசியான மனோன்மணி தங்கணே.

உரை :—வாசம் ஆளி கருமுகில் வண்ணன் - மணத்தையும் சிங்கத்தை யும் கரிய மேகம்போன்ற திருமாலைக் குறிக்கும், நற் பாசமாம் - நல்ல தன்மையுடைய, பிரதிபதம் தன்னிலே - முருகு, கோளரி, முராரி யென் னும் வேறு மூன்று சொற்களிலே, ஓசை முனனடு வீறெழுத்து - முதற் சொல்லின் முதலெழுத்தும், இரணடாஞ் சொல்லின நடு வெழுததும் மூன்றாஞ் சொல்லின் கடைசி யெழுததுமாகிய வற்றாலாகிய முளரி என்ற சொல்லின் பொருள், தாசி மனோன்மணி தஙகணே ஒக்கும - கடவுளடி மைப் பெண்ணாகிய மனோன்மணியினுடைய கண்ணைப்போலும், (அதாவது கண் தாமரையை யொக்குமென்பது கருத்து,) எ - று.

242. தலமபுகு பகைவர் மறையுமை நாவு
தருஞ்சினமாரன் றண்டிகையைச்
சாற்றுமேழ் பெயரில் வெற்றிநல் வாழ்வு
தண்ணருணிலைமிகு பொறுமை
பொலனுறு வடிவஞ் சாரிகொண் டிலங்கு
புனிதனே தலைகடை யெழுத்தைப்
புரத்துக் காவாடற் காவடிமைக்காப்
பூசைசெய் மார்க்கண்டனுக்கா

வலனுறு காளிக் காவுமை தனக்கா
மதியினுக்கா நகைத்துணர்ந்து
நடுவுறப் படுத்து வயதருள் செய்து
நடம்புரிந் துருக்கொடு முடித்துச்
சிலம்பொலி புலம்ப வருசபா பதியின்
திருவடி தொழுஞ்சபா பதியே
செப்புமூ வெழுத்தின் பெயரிடை யெழுத்தைச்
செய்குவாய் நின்மன மகிழ்ந்தே.

உரை :—தலம்புகு பகைவர் - நாட்டிற் புகக்கூடிய சத்துருவின் பெயராகிய எதிரி, மறை - மறையின் பெயராகிய சுருதி, உமை - உமையின் பெயராகிய பவானி, நாவு - நாககு, தருஞ்சினம் - வெகுளி, மாரன் - மதன், தண்டிகை - சிவிகை, ஆய் சாற்றும் எழு பெயரில் - ஆகிய எழுபெயரின் நடு வெழுத்தினுலாகிய திருவாக்குதவிகொண்டு வெற்றி நல்வாழ்வு தண்ணருள் நிலை மிகு பொறுமை பொலனுறு வடிவம் தார் கொண்டிலகு புனிதனே - ஜெயமும் நல்ல வாழ்க்கையும் அதிகமான சாந்தமும் பொன்போல அழகிய வடிவும் நடையுநகொண்டு விளங்குதற் கேதுவாகிய பரிசுத்தனே !, தலை கடையெழுத்தை - இந்த எழுசொற்களின் முதலெழுத்தும் ஈற்றெழுததுஞ் சேர்ந்துண்டாகியவற்றை எடுத்துக்கொண்டு, எரியென்பதனை புரத்துக்கா - திரிபுரத்தை யழிப்பதற்காகவும், ஆடற்கா - சுதியை நடனஞ்செய்வதற்காகவும், பணி அடிமைக்கா - பணியை அடியவர்ககாகவும், நாகு பூசைசெய் மார்க கண்டனுக்கா - இளமையை மார்க்கண்டனுக்காகவும், வளனுறு காளிக்கா - வெளியைத திறமையுறு காளிநடனஞ் செய்வதற்காகவும், மன் உமை தனக்கா - தலைமையை யுமையம்மைக்காகவும் மதியினுக்கா - சிகையைச் சந்திரன் வைப்பதற்காகவும், முறையே திரிபுரத்தைச சிரிததெரிந்தும், உணாந்தும் - சுதி யுணர்ந்தாடியும், நடுவுறப்படுததும் - பணியாகிய பாம்பை நடுவாக அமைதும், வயதருள் செய்து - மாாக்கண்டனுக்காக என்றும் இளைய வயதை யருளிசசெய்தும், நடம் புரிந்து - காளிக்காக நடனம் புரிந்தும், உருககொடு - உமையைத் திருமேனியின் பாகத்திற் கொண்டும், முடித்து - சந்திரனைச சடையில் முடித்தும், சிலம்பொலி புலம்ப வரு சபா பதியின் - வீரக்கழல் ஒலித்து அசைய நடனஞ்செய்து வருகின்ற நடராசப் பெருமானுடைய, திருவடி தொழும் சபாபதியே - திருப்பாதங்களை வழி படுகின்ற சபாபதி வள்ளலே !, நின் மனம் மகிழ்ந்து - உன்னுடைய உள்ளம் களிகூறும்படியாக, செப்பு மூவெழுத்தின் பெயரிடை எழுத்தை - கடைசியில் நின்ற வெகுளி மதன் சிவிகை என்ற மூன்று எழுததினுலாகிய உதவி என்பதை, செயகுவாய் - செய்தருளுவாயாக, எ - று.

குறிப்பு :—எழு பெயர் என்பன எதிரி, சுருதி, பவானி, நாக்கு, வெகுளி, மதன், சிவிகை, இவற்றின் நடுவெழுதது திருவாக்குதவி யென்று

முடியும். இவற்றின் நடுவெழுத்துப் போக எஞ்சி நின்ற பகுதிகள் எரி, சுதி, பணி, நாகு, வெளி, மன், சிகை என்பன.

243. அந்தமுள்ள புவியிலொரு மரத்தின்பேரும
அலைகடலில் வாழுமொரு சீவன்பேரும்
விந்தைபெறு பட்டணப்பேர் வெகுகாலப்பேர்
விளங்குமொரு பிள்ளைப்பேர் மெல்லியாள்பேர்
சந்ததமு மிந்தவகை யாறுங்கூட்டித்
தமிழெழுத்தி னடுவெழுத்தைச் சார்ந்துபார்க்கின்
சுந்தரஞ்சேர் வைகுந்தந் தன்னில்வாழும
துய்யரங்க நாதனென்றே சொல்லலாமே

உரை :—அந்தமுள்ள புவியிலொரு மரத்தின் பேரும்-உலகத்திலுள்ள அழகான ஒரு மரத்தின் பேராகிய அரசும, அலைகடலில் வாழுமொரு சீவன் பேரும் - அலையுடைய கடலில் வாழுகின்ற உயிரின் பேராகிய சஙகும், விந்தை பெறு பட்டணப்பேர் - ஆச்சரியப்படத்தக்க பட்டணத்தின் பேராகிய நகரமும், வெகுகாலப் பேர் - நீண்ட காலத்தின் பெயராகிய அநாதியும், விளஙகுமொரு பிள்ளைப் பேர் - விளஙகுகின்ற குழந்தையின் மறு பெயராகிய சுதனும், மெல்லியாள் பேர் - சிறு பெண்ணின் பெயராகிய கன்னியும், சந்ததமும இந்த வகை யாறுஙகூட்டி - எப்பொழுதும் இந்த ஆறு பெயரையும் ஒன்றாகச சேர்த்து, தமிழெழுத்தின் நடுவெழுத்தைச் சார்ந்து பார்க்கின் - இவற்றின் நடுவெழுத்தோடு தமிழின் முதல் எழுத்தாகிய அகரத்தைச சேர்ந்தால், சுந்தரஞ்சேர வைகுந்த தன்னில் வாழும துய்யரஙக நாதனென்று சொல்லலாம்-அழகிய வைகுண்டலோகத்தில் வீற்றிருக்கின்ற பரிசுத்தமான அரங்கநாதன் என்னும் பெயராகும், எ - று.

குறிப்பு :—இதில் குறிக்கப்பட்டுள்ள பெயர்கள் அரசு, சஙகு, நகர, அநாதி, சுதன், கன்னி; இவற்றின் நடுவெழுத்தைச சேர்த்தால் ரஙகநாதன், அரசு என்பதிலுள்ள முதல் எழுத்தையுஞ் சேர்த்துப் பார்த்தால் அரங்கநாதன் என வரும்.

244. கட்டோம் புதலெனக் காமாதி யாறுங் கரிசறுத்து
விட்டோம புதவு திறந்தின்ப வீடுபுக் குச்செறிந்தோம
சிட்டோம புதல்விமண் ணோருந் திகஞ்சந் தெளிவுமுன்பின்
விட்டோம புதவுறு நள்ளெழுத் தான்முலை மேவப்பெற்றே.

உரை :—சிட்டோம் - நல்லொழுக்க முடையவர்களாகிய நாஙகள், புதல்வி மண் ஓர் நதி கஞ்சம்தெளிவு - இவற்றின் பிரதி பதஙகளாகிய குமாரி காசினி பாலாறு தாமரை துணிவு என்பனவற்றின், முன்பின்விட்டு ஓம்ப உதவுறு நல்லெழுத்தாம் - முன்பின் எழுத்துக்களைத் தவிர்த்து நடுவெழுத்துக்களாலாகிய மாசிலாமணிநாதனது, முலை மேவப்பெற்றே - திரு

முல்லைவாயிலை யடையப்பெற்று, காமாதியாறும் புதமெனக் கட்டோம்- காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாற்சரியம் என்னும் ஆறு உட்பகைகளையும் செடித்தூறுகளைக் களைவதுபோல ஒழிததெறிந்தோம், களி சறுத்துவிட்டோம் - மலமாகிய குற்றம் நீங்கப் பெற்றோம், புதவு திறந்து இன்பவீடு புக்குச செறிந்தோம் - பேரின்பந்தரும் மோட்சத்தின் கதவு திறக்கப்பெற்று அதனுட் சென்று தங்கினோம், எ - று.

குறிப்பு:—குமாரி, காசினி, பாலாறு, தாமரை, துணிவு என்பவற்றின் நடுவெழுத்துக்களைச சேர்த்தால் மாசிலாமணி யென்றாகும்.

245. வேலாயுதவிழி பெட்டகமீது விறலரவைச்
சூலாயுதனை யனுமனைச் சண்பகத் தூய்மலரைப்
பாலாதரவால் வரித்தே கணவன்றன் பாங்கருய்த்தாள்
மாலாமதிப்புல வீரிதன்பாவம் வகுத்திடுமே.

உரை:—வேலாயுத விழி - வேற்படையைப் போன்ற கண்ணையுடைய பெண்ணானவள், பெட்டகமீது - ஒரு பெட்டியில் ஒன்றைவைத்து, விறலரவை - வலிமையுள்ள பாம்பையும், சூலாயுதனை-சூலமுடைய அரனையும் அனுமனை - அனுமானையும், சண்பகத் தூய் மலரை - பரிசுத்தமான சண்பகப்பூவையும், பாலாதரவால் வரித்தே - தெளிவான விசுவாசததோடு வரவழைததுப் பெட்டிககுக் காவல் வைத்து, கணவன்றன் பாஙகருய்த்தாள் - தனது நாயகனுக்கு அனுப்பினாள், மாலா மதிப்புலவீர இதன் பாவம் வகுததிடுமே - பேரறிவுடைய கல்விமான்களே !, இதன் நுட்பததைத தெரிந்து சொல்வீர்களாக!, (பெட்டியிலுள்ளது தாமரைப் பூவென்பது கருத்து), எ - று.

குறிப்பு:—தாமரைப் பூவின் வாசனையைக் காற்று கொண்டுபோகாமல் காற்றை யுண்ணும் பாம்பையும், மன்மதன் கணையாக எடுததுக கொள்ளாமல் அரனையும், பிரமன் இடமாகக் கைக்கொள்ளாமல் காப்பதற்கு அனுமானையும், வண்டு அணுகாம லிருப்பதற்குச சண்பகப் பூவையும் காவல் வைத்தா னென்பது குறிப்பாம்.

246. எண்ணான்குமுப்பத் திரண்டுபற்காட்டி யிசைவுடனே
பண்ணாகச் செந்தமிழ் பாடிவந்தாலுமிப் பாரிலுள்ளோர்
அண்ணாந்துகேட்ப ரழகழகென்ப ரதன்பிறகு
சுண்ணமபுபட்ட விலையுங்கொடார்கவி சொன்னவர்க்கே.

உரை:—எண்ணான்கு முப்பத்திரண்டு பற் காட்டி - எண்ணான்கு முப்பத்திரண்டாகிய தொகை கூறிய எல்லாப் பற்களையும் திறந்து காட்டி, இசைபுடனே பண்ணாகச செந்தமிழைப் பாடி வந்தாலும் - சஙகீத அமைதியுடையதாய் முறையாயுள்ள செந்தமிழ்ப் பாடல்களை இயற்றிக்கொண்டு வந்தாலும், இப்பாரிலுள்ளோர் - இந்தப் பூமியிலுள்ளவர்கள், அண்ணாந்து

கேட்பர் - மேலே தலையை யுயர்த்திக் கவனமாய்க் கேட்பார்கள், அழகு அழகு என்பர் - மிக அழகா யிருக்கிறதென்று புகழுவார்கள், அதன்பிறகு கவி சொன்னவர்க்குச் சுண்ணும்புபட்ட இலையுங் கொடார் - அதன் பிற் பாடு பாட்டியற்றிய புலவர்க்குச் சுண்ணும்பு இருந்த இலையைக்கூடக் கொடுக்க மாட்டார்கள், எ - று.

247. கலையள வெவ்வள வவ்வளவாம்விழி காமனுடைச்
சிலையள வெவ்வள வவ்வளவா நுதற் செந்திற்கந்தன்
மலையள வெவ்வள வவ்வளவாமுலை மாறுயிலால்
இலையள வெவ்வள வவ்வளவாம்வயி றேந்திழைக்கே.

உரை :—ஏந்திழைக்கே - ஆபரணங்களைத் தரித்த இம் மாதுக்கு, விழி கலையளவு எவ்வளவு அவவளவாம் - கண்ணனது மானின் கண் எத்தன்மை அளவுடையதோ அத்தன்மையும் அளவுமுடையதாம், நுதல் காமனுடைய சிலையளவு எவவளவு அவவளவாம் - நெற்றியானது மன்மதனுடைய வில்லி னளவு எவவளவோ அந்த அளவையுடையது, முலை செந்திற் கந்தன் மலை யளவு எவவளவு அவவளவாம் - தனமானது திருசசெந்திற் பெருமான் வீற்றிருக்கும் குன்றினளவு எவவளவோ அந்த அளவே யுடையது, வயிறு மால்துயில ஆல் இலையளவு எவவளவு அவவளவாம் - வயிறனது திருமால் படுத்துறஙகுகின்ற ஆலிலையி னளவு எவவளவோ அவவளவே யாம், எ - று.

248. சீரான வண்டரும் பேரானபூநெயைத் தின்றுலவுங்
காரானபாணி வளைவிரிஞ்சைப்பதி காக்குநரி
வாரான பன்றியைக் கூடியன்றீந்த வளர்மதலை
ஏரானபட்சி நாகத்தலைத்தேட வியம்புதிரே.

உரை :—சீரான அண்டரும் பேரான பூநெயைத் தின்றுலவும் - சிறப் பான தேவரும் பேறு பெற்ற தேவாமிர்ததததை யுண்டு திரிகின்ற, காரான பாணிவளை விரிஞ்சைப்பதி - கருநிறமுடைய ஆழ்மான நீருள்ள அகழி சூழப்பெற்ற விரிஞ்சைத் தலத்தினை, காத்து நரி - காககின்ற பெருமானு கிய சம்பு, வாரான பன்றியைக் கூடி - பெரிய வராகவதார மெடுத்த திரு மாலைப்புணர்ந்து, அன்று ஈந்த வளர் மதலை - அக்காலததிற் பெற்ற விருத் தியான பிள்ளையாகிய அரிகர புத்திரன், ஏரான பட்சி - அழகான பறவை போல, நா கத்தலை - நாவினுல் கத்துவதை, தேடவியம் புதிரே - இன்ன தென்றறிந்து சொல்லுங்கள், எ - று.

குறிப்பு :—நாகத்த லென்பது வேத மோதுதல்.

249. பாலொத்த மென்மொழி தாண்டவ பூபனிப் பாரினிலக்
காலத்தில் வந்துதித் தாலாதிசேடனுங் காற்றுண்பனோ
மாலத்தரையை விழுங்குவ னோசிவன் வாய்வைப்பனோ
ஆலத்தி லக்கட னீருண்பனோசொ லகத்தியனே.

உரை :—பாலொத்த மென்மொழி தாண்டவ பூபன் - பால் போன்ற இனிய சுவையையுடைய சொல்லினுலாகிய தாண்டவபூபதி யென்னும் வள்ளல், இப்பாரினில் அக்காலத்தில் வந்திருந்தால் - இந்தப் பூமியில் அந்த நாளிற் பிறந்திருந்தால் (கொடையாளி யில்லாமல்), ஆதிசேடனும் காற்றுண்பனோ - ஆதிசேடன் காற்றை உணவாகக் கொள்வானோ, மால் இத் தரையை விழுங்குவனோ - விண்டுவானவர் மண்ணையுட்கொள்வாரோ, சிவன் ஆலத்தில் வாய் வைப்பனோ - சிவபெருமான் விடத்தை வாயிற் போட்டுக் கொள்வாரோ, அகத்தியன் அக்கடல் நீர் உண்பனோ - அகத்திய முனிவன் உப்புக்கடல் நீரைக் குடிப்பனோ, சொல் - கூறுவாயாக!, எ - று.

250. உண்ணு விருந்து முதவிகொள்ளாத வுறவினர்பொன்
எண்ணுக் கணிகை யுடன்புல வோர்கணல் லேவலரும்
தண்ணாம் புல்லருந் தாமாவுங் காலுணுஞ் சற்குருவும்
கண்ணாக் காணின் மகிழ்வார்கள் செல்வக் கயவர்களே.

உரை :—உண்ணு விருந்தும் - உணவு கொள்ளாத விருந்தினரும், உதவி கொள்ளாத உறவினர் - பிறர்பால் உபகாரம் யாதும் வேண்டாத சுற்றத்தாரும், பொன் எண்ணுக் கணிகையுடன் புலவோர்கள் நல் ஏவலரும் - பொருளை நாடாத விலை மகளிரும் நல்ல கல்விமான்களும் தக்க தொழிலாளிகளும், தண் ஆர் அம்புல் அருந்த மாவும் - குளிர்ந்த அழகிய புல்லைத் தின்ணாத குதிரையும், கால் உணும் சற்குருவும் - காற்றை உணவாகக்கொள்ளும் நல்ல ஆசாரியனும், கண்ணாககாணின் - ஆகிய இத்தனை பேரையும் கண் குளிரக காணப்பெற்றால், செல்வக் கயவர்கள் மகிழ்வார்கள் - பொருளுடைய அற்பர்கள் களிப்படைவார்கள், எ - று.

251. காயுங் கடுஞ்சுர மீதென்று காட்டிய கையுஞ்சொன்ன
வாயும் புகையெழும பாலையுள் ளேவணங் கார்மவுலி
தோயுங் கழற்பத சுந்தர பாண்டியன் றோகைவெற்பில்
தாயுந் தருமமில் லாதவர்போலத தவித்தனளே.

உரை :—கடுஞ்சுரம் ஈதென்று காட்டிய கையும் காயும் - கொடிய பாலைவனமென்று சுட்டிக் காட்டிய கைகூட வெப்பமா யிருக்கும், சொன்ன வாயும் புகை யெழும் - அங்ஙனம் சொல்லிய வாயிற்கூட புகை யுண்டாகும், பாலை யுள்ளே - அத்தகைய கடுஞ் சுரததிலே, வணஙகார் மவுலி தோயும் கழற்பத சுந்தர பாண்டியன் தோகை வெற்பில் - பகைவருடைய முடிகள்

பதிகின்ற சிலம்பு தரித்த பாதங்களையுடைய சுந்தர பாண்டிய மன்னனுடைய மலையில், தாயும் தமரும் இல்லாதவர் போலத் தவித்தனளே - அன்னையும் உறவினரு மில்லாதவள்போல அகப்பட்டு வருந்தினாள், எ - று.

252. வாதாம் பலகலை கற்றுவந் தாலுமிவ் வையந்தன்னில்
ஏதாம் பொருணல மில்லா னெனிலவ் விடமுந்தந்து
மீதாம் பரற்கொரு பெண்டந்த பாற்கடல் பின்புவந்த
வேதாந்த வித்தெனுங் கல்லாம்பரற்கு விடந்தந்ததே.

உரை:—வாதாம் பலகலை கற்றுவந்தாலும் - வாது செய்தற்குரிய பல கல்வித் துறைகளில் பயின்றுவரினும், இவ்வையந்தன்னில் - இந்த உலகத்தில், பொருள் நலம் இல்லான் எனில் ஏதாம்-செல்வத்தின் நன்மை சேரப் பெறுவிடில் என்ன பயனைத்தரும், மீதாம்பரற்கு நல்லிடமும் தந்து ஒரு பெண் தந்த பாற்கடல் பொன்னுடை தரித்த திருமாலுக்குத் தன்னிடத்தே இருக்க நல்ல இடமும் மணந்துகொள்ளத் திருமகளையும் உதவிய பாற்கடல், பின்பு வந்த வேதாந்த வித்தெனும் கல்லாம்பரற்கு - பிற்பாடு வந்த வேத முடிவின் கூறப்படும் உண்மைப் பொருளுக்கு மூலமென்று சொல்லப்படும் காவியுடை தரித்த சிவபெருமானுக்கு, விடம் தந்ததே - நஞ்சைக் கொடுத்தது, எ - று.

253. தேமன் சுதனுக் கிளையோன் பிதாவைத் திகிரியினால்
கோமன் மறைத்து விசயனுயிரைக் கொடுத்ததுபோல்
காமன் பகைவன் றென்கூடற் சொக்கேசன் கனகிரிமேல்
வீமன் சுடரொளி நீக்கிநம மாருயிர் மீட்டதுவே.

உரை :—தேமன் சுதனுக்கு இளையோன் பிதாவை - தேவர்களுக்கு அரசனாகிய இந்திரனுடைய மகனாகிய வாலியின் தம்பியாகிய சுக்கிரீவனுக்குத் தந்தையாகிய சூரியனை, திகிரியினால் கோமன் மறைத்து விசயனுயிரை கொடுத்ததுபோல் - சக்கராயுதத்தினால் கோபாலன் மறைத்து அர்ச்சுனனுடைய உயிரைக் காப்பாற்றிக் கொடுத்ததுபோல, காமன் பகைவன் தென்கூடல் சொக்கேசன் கனகிரிமேல் - மன்மதனுக் கெதிரியாகிய அழகிய மதுரைப்பதியி லுறையும் சொக்கலிங்கப் பெருமானது உயர்ந்த மலையின்மீது, வீமன - வண்டானது, சுடரொளி நீக்கி - தீபத்தின் பிரகாசத்தை யொளித்து, நம்மாருயிர் மீட்டதுவே - பெறுதற்கரிய நம்முடைய வுயிரை மீள வுய்வித்தது, எ - று.

254. பாலான மென்மொழி தாண்டவ பூபன் பனிவரையில்
மாலான வஞ்சியை நீபிரிந் தாற்கண்கள் வாரிதியாம்
சேலா மறுமுகன் வேலாந் தமிழ்தெரி தென்னவன்றன்
காலாங் குறுமுனி கையாமிம மங்கை கனதனமே.

உரை:—பாலான மென்மொழி தாண்டவபூபன் பணிவரையில் - பால் போன்ற சொல்லையுடைய தாண்டவமன்னனது குளிர்ச்சியிருந்த மலைமேல், மாலான வஞ்சியை நீ பிரிந்தால் - உன்பால் மோகங்கொண்ட பெண்ணை நீ விட்டுப் பிரிந்துபோனால், கண்கள் வாரிதியாம் - கண்கள் கடல்போல நீரைச் சொரியும், சேலாம் - நீரினின்றெடுத்த மீன்போலாகும், அறுமுகன் வேலாம் - அறுமுகக் கடவுளுடைய வேல்போல ராவப்படும், இம் மஙகை கனதனமே-இம் மாதின் உயர்ந்த முலைகள், தமிழ்தெரி தென்னவன்றன் காலாம் - தமிழ் தெரிந்த உக்கிரகுமார பாண்டியனது காலிலும், குறுமுனி கையாம் - அகத்தியர் கையிலும், வாரிதியாம் - அகப்பட்ட கடல்போல ஒடுங்கிப்போம், எ - று.

255. பாலாறு பாய்தென் பழனாபுரீசர் பணிவரைமேல்
மேலாறு பாய்ந்திட நின்றனள்கா ணந்திவேளை தனில்
காலா லரைப்பண மோரானைக் கீந்து கடைபுகுந்து
நாலாறி யானையைக் கொண்டே கைவீசி நடந்தனளே.

உரை:—பாலாறு பாய் தென்பழனாபுரீசர் பணிவரைமேல் - பாலாறு அறுகிற் செல்லுகின்ற தென்பழனாபுரியில் வீற்றிருக்கும் குளிர்ந்த மலையின் மீது, மேலாறு பாய்ந்திட நின்றனள் - அருவி தன்மேல் விழும்படியாக நின்ற பெண்ணானவள், அந்தி வேளைதனில் - மாலைப் பொழுதில், கடை புகுந்து-கடைத்தெருவிற் சென்று, ஓர் யானைக்கு - ஒரு களிற்று மீனுக்கு, காலாலரைப் பணம் ஈந்து - அரைக்காற் பணம் கொடுத்துவிட்டு, நாலாறி யானையைக் கைக்கொண்டு - கையிலிரண்டு கடகத்தைப் போட்டுக்கொண்டு, வீசி நடந்தனளே - கைவீசிச் சென்றாள், எ - று.

256. கடுவளைக்குங் கண்ணி காரென்ற போதினிற் கைகழன்று
விடுவளைக்குள்ள விசையிலை யேமிதி லைச்சிலையே
நடுவளைக் குங்கொண்ட னாரணன் கேரள நாட்டிலண்டத்
தொடுவளைக் குமபரித் தேர்வல வாநம தூர்பரிக்கே.

உரை:—மிதிலைச் சிலையே - மிதிலையிலிருந்த வில்லை, நடுவளைக்குங் கொண்டல் நாரணன் - நடுவிற் பிடித்து வளைத்து ஒடித்த மேகம்போன்ற நிறமுடைய திருமாலின், கேரள நாட்டில் - சேரதேசத்திலுள்ள, அண்டத் தொடு வளைக்கும் பரித்தேர் வலவா - உலகத்தைச் சுற்றிவரும் குதிரை பூட்டிய தேரைச் செலுத்துபவனே!, கடுவளைக்குங் கண்ணி - நஞ்சின் றன்மையைத் தன்பாற் கொண்ட கண்ணையுடைய தலைவி, காரென்ற போதினில் - காரென்று சொன்ன அளவிலே, கைகழன்று விடுவளைக் குள்ள விசை-கையிலிருந்து நழுவவிடுகின்ற வளையலுக்குண்டான வேகம், நமது ஊர்பரிக்கு இலையே - நாம் செலுத்துகின்ற குதிரைக்கில்லையே, எ - று.

257. பவள விதழ்ச்சிவெண் ணீறென்ற போதினிற் பைந்தரளத்
தவள வடத்தணி நீறுதந்தா ளிளஞ் சாலிகளோங்
குவள வயற்குழந் தாபுரி வேலவர் கோலவெற்பில்
இவள வுனக்கில்லையோ வலவாபரி யேகுதற்கே.

உரை:—இளஞ் சாலிகளோங்கு வளவயற் குழந்தாபுரி வேலவர் கோல வெற்பில் - மெல்லிய நெற்கதிர்கள் வளர்கின்ற செழிப்பான வயல்கள் சூழ்ந்த குழந்தாபுரி வேலவர் சூழ்ந்த அழகிய மலைமீது, வலவா - தேரப் பாகனே!, பவள விதழ்சசி வெண்ணீறென்ற போதினில் - பவளம்போன்ற உதட்டினையுடைய தலைவி வெள்ளிய திருநீறு என்று சொன்ன அளவில், பைந்தரளத தவளவடத் தணிநீறு தந்தாள் - புதிய வெள்ளிய முத்து மாலை காம வெப்பததால் பொரிந்துபோனதா லுண்டாகிய பொடியை விரைவாக எடுததுக கொடுத்தால், பரி ஏகுதற்கே இவளவு உனக கிலலையோ - குதிரையைச செலுத்துதற்கு இவ்வளவு விரைவு உனக்கு ஏற படவில்லை போலும், எ - று.

258. அக்காண்டி யக்கை யணிவாண்டியாடை யவிழ்க்கச் சற்றும்
வெக்காண்டி மாமறைமீதிருப் பாண்டிநம் வீட்டில்வந்து
சிக்காண்டி தேடித் திரிவாண்டி கேளிந்தத் தென்மதுரைச்
சொக்காண்டி நாளைவரு வாண்டியேண்டி துயருனக்கே.

உரை :—கேள் - நான் சொல்வதைக் கேட்பாயாக!, இந்த தென் மதுரைச சொக்காண்டி - இந்த அழகிய மதுரைப்பதியி லுறையும் சொகக நாதராகிய துறவி, அக்காணடி - எலும்பை யணிந்த துறவி, அக்கையணி வாணடி - உருத்திராக்க மணியைத தரிததுக் கொள்வான், ஆடை யவிழ்க் கச சற்றும் வெககாண்டி - உடையை யவிழ்ததுப் போடுதற்குச சிறிதும் நாணப்படாதவன் (அதாவது திகமபரன), மாமறை மீதிருப்பாண்டி - உயர்ந்த ஞான நூல்களின முடிவிலிருப்பவன், நம் வீட்டில வந்து சிக காண்டி - நமது வீடாகிய மோட்சததில வந்து அகப்படுவான், தேடித் திரிவாண்டி - பககுவர்களுககு அருள்செயய அவாகளை நாடியலைவான, நாளை வருவாண்டி - நாளைக்கு உனனை நாடி வருவான், துயா உனககு ஏண்டி - உனக்கென்ன கவலையடி, எ - று.

259. ஆடுஞ் சிதமபர னம்பலவாண னணிவரையில்
நீடுங் கயற்கண்ணி யாடந்த மோக நிறையவெங்கும்
கோடுங் குளமுங் குளத்தருகே நின்ற குன்றுகளும்
காடுஞ் செடியு மவளாகத் தோன்றுதென் கண்ணிணைக்கே.

உரை :— ஆடுஞ் சிதம்பரன் அம்பலவாணன் அணிவரையில் - நிருததஞ் செய்கின்ற சிதம்பரத்திலுறையும் பெருமானுராகிய சபாநாயகரது அழகிய

மலைமீதுள்ள, நீடும் கயற்கண்ணியாள் - நீண்ட கயல்மீன்போன்ற கண்ணை யுடைய மாது, தந்த மோகம் நிறைய - எழுப்பிய காதலானது உள்ளத்தில் நிறைந்திருப்பதால், என்றும் - எப்போதும், என் கண்ணிணைகளே - ......, கோடும் குளமும் குளததருகே நின்ற குன்றுகளும் காடும் செடியும் - குளத்தின் கரையும் குளமும் குளத்திற்குப் பக்கத்திலிருந்த மலைகளும் அவற்றின் மேலுள்ள பெருமரங்களும் சிறு செடிபுமாகிய எல்லாவற்றி லும், அவளாகத் தோன்றும் - அவளுடைய உருவெளித் தோற்றமே காணப்படுகின்றன, எ - று.

260. இந்திரன் மைந்தன் பகைவனுக்குப் பகை யேய்ந்தநகர்
வெந்தண லாக்கினவன் றந்தைமைந்தன் பின்னேன்றன்முன்
வந்தவ னுண்ண மறையோர்களோட மயங்கு நஞ்சிற் [னே
சிந்தின நஞ்சின் பகைவன்றன் சேவைக்குச் சென்றனனே.

உரை :—இந்திரன் மைந்தன் பகைவனுக்குப் பகை யேய்ந்த நகர் - இந்திரன் மகனாகிய வாலியின் எதிரியாகிய இராமனுக்குப் பகையாகிய இராவணன் தங்கிய இலங்கை நகரை, வெந்தணலாக்கினவன் தந்தை மைந்தன் - கொடிய தீக்கிரையாக்கிய அனுமானின் தந்தையாகிய வாயு வின் புதல்வனாகிய வீமனுக்கு, பின் தோன்றல் முன்னே வந்தவன் - தம்பி யாகிய அர்ச்சுனன்முன் எழுந்தருளின சிவபெருமான், உண்ண - உட் கொள்ளவும், மறையோர்கள் ஓட - மயங்கு நஞ்சில் - தேவர்கள் ஓடவும் அச்சம் விளைத்த விடத்திலே, சிந்தின நஞ்சின் - சிதறிய விடத்திற் கொண்டுள்ள பாம்பின், பகைவன்தன் சேவைக்குச் சென்றனனே - பகைவ னாகிய கருடனைக் கும்பிடுதற்கு நான் போனேன், எ - று.

261. ஒருகா லெழுதி முன்மாக்கொம் பெழுதி யுரைத்தவஞ்சி
இருகா லெழுத மறந்தனளோ விந்த வெண்டிசையும
தருகாம சுந்தரன் காளத்தி வாணன் றடங்கிரியில்
உருகாத வஞ்சியர்க் கென்றே யெழுத முயனண்பனே.

உரை :—இந்த எண்டிசையும் தருகாம சுந்தரன் - இந்த எட்டுத் திசையிலுள்ளாரும் விருமபுகின்ற அழகனாகிய, காளத்திவாணன் தடங்கிரி யில் - காளத்திவாண வள்ளலது பெரிய மலையில், உருகாத வஞ்சியர்க்கு என்றே எழுத முயல் நண்பனே - மனமிளகாத பெணகளுககென்றே கடித மெழுத முயல்கின்ற சிநேகிதனே!, ஒருகால் எழுதி - எழுத்தாகிய காலை (ா) எழுதி, முன்மாக் கொம்பு எழுதி - மகரத்திற்கு முன்னாகிய பகரத்தையும் அதற்கு முற்பட்ட கொம்பையுமெழுதி அதாவது போவென் றெழுதி, உரைத்த வஞ்சி - போவென்று கூறிய பெண்ணானவள், இரு கால் எழுத மறந்தனளோ - ஒருகா லுறுப்பையும் கால் என்கின்ற

என் பகுதியைக் குறிக்கும் வகரத்தையும் அதாவது வா என்பதை எழுத மறந்து விட்டாரோ, எ - று.

குறிப்பு:—ஒருகால் 'ா' முன்மா என்பது 'ப' கொம்பு என்பது 'ே' ஆகிய இம் மூன்றுஞ் சேர்ந்தால் 'போ' என்றாகும் இருகா லென்பதில் வகரம் ஒருகால், உறுப்பு ஒருகால் ஆகிய விரண்டுஞ் சேர்ந்து 'வா' என்றாகும்.

262. பேயோ வெயின ரமுதலா யத்திற் பிறந்தவுன்னை
ஏயோ தினைப்புனங் காவல்வைத் தாரெழு பாரையுண்ட
மாயோன் றிருவுந்தி வந்தோ னரங்கன் வரையிடத்தே
ஆயோ வெனுங் குரலேயோ புனத்தை யழிக்கின்றதே.

உரை:—ஏழுயிரை யுண்ட மாயோன் - ஏழுலகத்தையும் வயிற்றினுட் கொண்ட வாயை யுடையவனும், திருவுந்தி வந்தோன் - அழகிய உந்திக் கமலம் பூக்கப்பெற்றவனும் அரங்கன் - திருவரங்கப் பெருமானுமாகிய வனது, வரை யிடத்தே - மலையில், எயினர் அமுதாலயத்திற் பிறந்த உன்னை ஏயோதினைப் புனங்காவல் வைத்தார் - வேடர்கள் திருப்பாற்கடலி லவதரித்த உன்னையா தினைவிளையும் காட்டைக் காக்கும்படி நிய மித்தார்கள், பேயோ - அவர்கள் பேயத் தன்மையுடையவர்களோ, ஆயோ வெனும் குரலேயோ புனத்தை யழிக்கின்றதே - ஆயோ வென்று நீ கூவு கின்ற குரலைக்கேட்டுக் கிளிகள் தன்னினமென்று உன்னைக் கருதி அச்ச மில்லாது தினைப்பயிரைக் கொள்ளை அளிக்கின்றன, எ - று.

263. போரேற்று வந்த மதன்படைக் கஞ்சிப் புகுந்தவென்னைக்
காரேற்றி நீலக் கருங்கட லேற்றிக் கனத்தகொங்கை
மேரேற்றி யுந்திச் சுழியாற்றி லேற்றி விரகவல்குல்
தேரேற்றி வைக்கின்ற மாதையெப் போகண்டு சேருவதே.

உரை:—போரேற்று வந்த மதன்படைக் கஞ்சிப் புகுந்த என்னை-சண்டை செய்வதற்கு எதிர்த்து வந்த காமன் கணைகளுக்குப் பயந்து தன்பால் சேர்ந்த என்னை, காரேற்று - மேகம்போன்ற கூந்தலை என்மீது சார்த்தி, நீலக் கருங்கடலேற்றி - நீல நிறமாகிய பெரிய கடல்போன்ற கண்ணினால் பிரியமாகப் பார்த்து, கனத்த கொங்கை மேரேற்றி - பருத்த தனங்க ளென்னும் மேருமலை மேலேறச் செய்து, உந்திச் சுழியாற்றி லேற்றி - கொப்புளாகிய சுழியையுடைய உரோம ஒழுங்கில் சார்த்தி, விரத அல்குல் தேரேற்றி - மோகத்தைத் தணிக்கும் கடிதடமாகிய தேரிலேற்றுவித்து, வைக்கின்ற மாதை எப்போது கண்டு சேருவதே - என்னை ஆதரிக்கின்ற பெண்ணை எப்போது நான் பார்த்துக் கூடுவது, எ - று.

264. மதிசூடிய தில்லை யம்பலவாணர் வரையிடத்தே
அதிசயமான வதிசயமே யரன் வீதிவரத்
துதிசெய்து மூவெட்டுத் தும்பியுங்கொண்டு துவண்டொரு
எதிர்நின் றிரண்டுமரங் கரத்தேபிடித் தேகினளே. [பெண்

உரை:—மதி சூடிய தில்லையம்பல வாணர் வரையிடத்தே - திங்களைத் தரித்த தில்லைச் சபாநாதருடைய மலையிடத்தில், அதிசயமான அதிசயமே- வியப்பினுமிக்க வியப்பு யாதெனில், அரன் வீதிவர - சிவபெருமான் வீதியில் பவனிவருங் காலத்தில், ஒரு பெண் துதி செய்து - ஒரு பெண் தோத்திரஞ் செய்து, மூவெட்டு தும்பியுங் கொண்டு - இருபத்து நான்கு யானையும் அதாவது இரண்டு கடகமுந் தரித்துக்கொண்டு, துவண்டு- அசைந்து, எதிர் நின்று-சுவாமிக்கு எதிரே போய், இரண்டு மரம் கரத்தே பிடித் தேகினளே - ஆல் அத்தி (ஆலத்தி) இரண்டு கையினாலும் பிடித்துக் காட்டிவிட்டுப் போயினள், எ - று.

265. பூமன் சிரங்கொய்த வண்ணாமலையர் பொருப்பிடத்தே
காமன் கணையுண் டவைவரக் கண்கிலன் கந்தனிட
மாமன் மறைத்தவன் மைந்தன் பகைக்கொடித் தந்தைவந்
நாமுங் கலந்திடலாங் காமனார்பத நாணிடவே. [தால்

உரை:—பூமன் சிரங்கொய்த அண்ணாமலையர் பொருப்பிடத்தே - தாமரைப் பூவுக்குத் தலைவனாகிய பிரமனது தலையைக் கிள்ளிய அண்ணாமலைப் பெருமானது மலையினிடத்தே, காமன் கணையுண்ட அவைவரக் காண்கிலேன் - காமனது அம்பாகிய ஐவகைப் பூக்களும், பூக்கின்ற காலம் வருவதை நான் பார்க்கவில்லை, கந்தனுக்கு மாமன் - முருகப்பெருமானுக்கு மாமனாகிய திருமால், மறைத்தவன - சக்கராயுதத்தால் மறைக்கப்பட்டவனாகிய சூரியனது, மைந்தன் பகை - மகனாகிய கர்னனின் எதிரியாகிய அர்ச்சுனனுடைய, கொடித் தந்தை - கொடியாகிய அனுமானின் தந்தையாகிய வாயு அல்லது தென்றல், வந்தால் - வருமானால், காமனார் பதம் நாணிடவே - கற்பகச் சோலைக்குத் தலைவனாகிய இந்திரனுடைய பதவியும் வெட்கப் படும்படியாக, நாமுங் கலந்திடலாம் - நாமும் ஒன்று சேரலாம், எ - று.

266 செவ்வந்திமாலை சிவந்ததென் றாடிங்கள் வந்ததென்றாள்
கைவந்தவண்டு கழன்றதென் றாள்கலை சோர்ந்ததென்றாள்
மைவந்த கண்ணி திருவொற்றியூரை மதுரை யென்றாள்
எவ்வந்தி யோவறியே னிவள்சொன்ன விடுவந்தியே.

உரை:—செவ்வந்தி மாலை சிவந்த தென்றாள் - வானம் சிவந்திருக்கும் மாலைக் காலம் கோபித்ததென்று கூறினாள், திங்கள் வந்த தென்றாள் -

சந்திரன் உதய மாயிற்றென்றாள், கைவந்த வண்டு கழன்றதென்றாள் - கையிலே வந்த வளையல் நழுவிற்றென்றாள், கலை சோர்ந்தது என்றாள் - உடை நெகிழ்ந்ததென்றாள், மைவந்த கண்ணி திருவொற்றியூரை மதுரை யென்றாள் - மை தீட்டிய கண்ணையுடைய பெண்ணானவள் திருவொற்றி யூரைக் கூட லென்றாள் அதாவது கூடுமிட மென்றாள், இவள் சொன்ன இடுவந்தி எவ்வந்தியோ - இவள் சொன்ன அந்தியானது எந்த மாலையோ வென்று, அறியேன் - தெரியவில்லை, எ - று

267. அலைகுளிர்ப் பாட்டுஞ் சலராசி வெள்ள மடங்கவுண்டு [வேற்
மலைகுளிர்ப்பாட்ட வருங்கொண்டல் காடெவ்வர்மார்பில்வெவ்
கொலைகுளிர்ப்பாட்டுங் குலசேகரன்கொற்கைக்கொம்பின்கண்
முலைகுளிர்ப்பாட்டவன் றோவெமமை நீர்விட்டுமுந்தியதே [ணீர்

உரை :—அலை குளிர்ப்பாட்டுஞ் சலராசி வெள்ளம் அடங்க வுண்டு - அலைகளை முழுகச செய்து வீசுகின்ற கடலேழு முற்றிலும் பருகி, மலை குளிரப்பாட்ட வரும் கொண்டல் காள் - மலைகளைக் குளிரச் செய்ய வருகின்ற மேகங்களே!, தெவ்வர் மார்பில வெவவேற் கொலை குளிர்ப் பாட்டும் - பகைவர்களுடைய நெஞ்சிற் கொடிய வேல்கள் பதிந்து கொல் விக்கக்கூடிய, குலசேகரன் கொற்கை - குலசேகர பாண்டியனது கொற் கைப் பட்டினத்திலுள்ள, கொம்பின் கண்ணீர் முலை குளிரப்பாட்ட அன்றோ - தலைவி கார்காலமானது வந்தும் தாம் வரவில்லையே என்று விடும் கண்ணீரானது அவள் தனங்களை முழுதுவிக்கும்படியாக வல்லவா, எம்மை நீவிட்டு முந்தியதே - எங்களைப் பின் விட்டு நீங்கள் முன் செல்வதாகும், எ - று.

குறிப்பு :—கார் காலத்திற் போர் முடிதது மீள்கின்ற தலைவன் அக் காலத்து மேகங்களைப் பார்ததுக் கூறியது.

268. குடக்கோடக் கொற்றக் குடைநீரிலோடக் கொடித்தடந்தேர்
வடக்கோட வாரியின் வாயோட வின்மத னோடமைமாத்
தடக்கோ டணியுஞ் சிவகயிலாயத்துத் தையலர்வாய்
இடக்கோட நம்மன்பர் தேரோடிவந்த திளங்கொடியே.

உரை :—இளங் கொடியே - மெல்லிய கொடிபோன்ற தலைவியே, குடக் கோடு அக கொற்றக் குடைநீரி லோட - மேலை மலையில் உதிக்கின்ற சந்திரனாகிய மன்மதனது வெற்றிக்குடை சமுத்திரத்திற்போ யொழியும், கொடித தடந்தேர் வடக்கோட - கொடி கட்டிய விசாலமாகிய தென்றல் வட திசையை நோக்கி ஓடிப்போகவும், வாரியின் வாயோட - கடலின் முழக்க மடங்கவும், வில் மதனோட - வில்லையுடைய மன்மதனோடிப் போக வும், தையலர் வாய் இடக்கோட - பெண்கள் பேசுகின்ற வம்பு மொழி,

யொழியவும், மை மாத்தடக் கோடு அணியும் சிவ கயிலாயத்து - மேகங்கள் பெரிய மரக்கிளைகளிலே அழகாகத் தங்கக்கூடிய சிவ கயிலாயமலைக் கருகில், நம் அன்பர் தேர் ஓடி வந்தது - நமது தலைவர் தேர் உருண்டு வந்தது, எ - று.

269. அத்திக்கொம் பாலை மிகநம்பினுலு மணிதாளப்
பத்திக்குவேறு பழுதுவந்தாலும் பழுதுபடாப்
புத்திக்கு யூகிநந் தாண்டவபூபன் பொருப்பின் மன்னு
எத்திக்குமில்லை யுன்றிக்கு மல்லா லென்ற னேந்திழைக்கே.

உரை :—பழுது படாப் புத்திக்கு யூகி நம் தாண்டவ பூபன் பொருப்பின் மன்னு - குற்றமற்ற அறிவோடுகூடிய யூகத்தில் வல்லவனுகிய நமது தாண்டவ பூபதியின் மலையின்மீதுள்ள அரசனே!, என்றன் ஏந்திழைக்கு ஆபரணமணிந்த என் மாதுக்கு, அத்திக் கொம்பு ஆலை மிக நம்பினுலும் - யானைக் கொம்புபோன்ற முலையானது ஆலிலைபோன்ற வயிற்றிற் போய் அதிகமாகப் படிந்தாலும், அணி தாளப் பத்திக்கு வேறு பழுதுவந்தாலும் - அழகிய முததுப்போன்ற பல்லுக்கு ஏதாவது கெடுதி வந்தாலும், உன் திசகுமல்லால் எதிக்கு மில்லை - நீயே கதியல்லாமல் வேறு கதியில்லை, எ - று

270. தென்னன் பொருனைத் துறைவாசன் விக்ரமச் சிங்கன்வெற்பில்
பொன்னம்புரிசை யுறையூர்நின் ருர்க்குமிப் போதிரவின்
மன்னன்பிறந்த மதுராபுரிக்குநென் மாநகர்க்கும
என்னன்ப ரானவர் காவிரிப்பூம் பட்டண மணங்கே.

உரை :—தென்னன் பொருனைத துறைவாசன் விக்ரமசசிங்கன் வெற்பில் - பாண்டியன் தாமிரபரணிக் கரையில் வசிப்பவனுமாகிய விக்கிரம சிஙகன் மலையில், பொன்னம்புரிசை யுறையூர் நின்ருர்கும் இப்போது இரவின் - அழகிய பொன்மதில் சூழ்ந்த உறையூர் அதாவது கோழி நின்று கூவுகின்ற இரவு நேரத்தில், மன்னன் பிறந்த மதுராபுரிக்கு - அரசன் பிறந்த கூடல் அதாவது கூடுதற்கு, நென்மாநகர்க்கும் - நெல் வளமுடைய அரண்மனைகரும், அணஙகே - பாஙகியே !, என் அன்பரானவர் காவிரிப்பூம் பட்டணம் - எனனுடைய காதலர் புகார் அதாவது வந்து சேரமாட்டார், எ - று.

271. வில்லும பிறையுந் திறைபிடுவாணுதன் மெல்லியலாய்
எல்லுங் குமுத மலருங்கண் டாயிரு கோங்கரும்பும
வல்லும பொருதும் வனமுலைக்கான மணியதன்பேர்
சொல்லும பொழுது பிரமனு மாலுந் தொழத்தகுமே.

உரை:—வில்லும் பிறையும் இறையிடுவாணுதல் மெல்லியலாய் - வில்லும் பிறைச் சந்திரனும் அழகில் தோற்றுக் கப்பங் கட்டக்கூடிய பிரகாசமுடைய நெற்றியையுடைய இளமாதே !, எல்லும் குமுதம் அலரும் கண்டாய் - பகலிலும் அல்லிப்பூ விரிவதுண்டு, இருகோங்கு அரும்பும் - இரண்டு கோங்கு முகைகளையொத்த காம்பு உடைய, வல்லும் பொருதும் வனமுலைக்கான மணி - சொக்கட்டான் காயொத்த அழகிய தனங்களுக்கு மணிபோல்வார், அதாவது அழகிய திருமுல்லைவாயிலுக்குரிய மாசிலாமணியீசர், அதன் பேர் சொல்லும் பொழுது - அந்த மாசிலாமணியின் நாமத்தைக் கூறுங் காலத்தில், பிரமனும் மாலும் தொழத்தகுமோ - அது அயனும் அரியும் கும்பிடும்படியான தகுதியுடையது, எ - று.

272. அலையாழி நஞ்சை யமுதா வருந்தி யமரரெல்லாம்
நலியாமற் காத்த வருணாசலேசர்தன் னல்வரைமேல்
நிலையா யிருக்கும் விலைமாத ரேயென்னை நீகொடுபோய்ப்
புலியூரைக் காட்டிக் கலையூரிற் சேர்த்திடிற் புண்ணியமே.

உரை:—அலையாழி நஞ்சை - அலைகளையுடைய திருப்பாற்கடலி லெழுந்த விடத்தை, அமுதா அருந்தி யமரர் எல்லாம் நலியாமல் காத்த அருணாசலேசர்தன் நல்வரைமேல் - அமுதம்போல வுட்கொண்டு தேவர்களை யெல்லாம் அழியாமற் காப்பாற்றிய அண்ணாமலை நாதருடைய அழகிய மலை மீது, நிலையாயிருக்கும் விலை மாதரே - உறுதியாகக் குடியிருக்கின்ற வேசையரே !, என்னை நீர் கொடுபோய் - என்னை நீங்கள் அழைத்துக்கொண்டு போய், புலியூரைக் காட்டி - குசமாகிய தனங்களைக் காட்டி, கலையூரில் - ஆடை தங்குமிடமாகிய கடிதடத்தில், சேர்த்திடில் - சேரும்படி செய்தால், புண்ணியமே - நன்மையாகும், எ - று.

273. தானோர் வலையினுந் தாழ்வுபடாமற் சகலரையும
வானோரை யுங்கொண்டு வாரிக்கு ளாலித்து வானரத்தின்
கோனோ டெழுபது வெள்ளத்தி லேவந்து கொக்கைக்கொன்ற
மீனோ திருவல்லிக் கேணிக்குள் ளேவந்து மேவியதே.

உரை:—தானோர் வலையினும் தாழ்வு படாமல - மச்சாவதார மெடுத்தும் தான் ஒரு வலையினும் சிக்கிக் கொள்ளாமல், சகலரையும் வானோரையும் கொண்டு-மக்களி லெல்லாரையும் தேவர்களையும் அழைத்துக்கொண்டு, வாரிக்குள் ஆலித்து - கடலில் ஆரவாரமாய்க் கலக்கி, வானரத்தின் கோனோடு எழுபது வெள்ளத்திலே வந்து - குரங்கு மன்னனாகிய சுக்கிரீவனோடு எழுபது வெள்ளம் குரங்குகளைச் சேர்த்து வந்து, கொக்கைக் கொன்ற - மூலநட்சத்திரத்திற் றோன்றிய அரக்கரை யழித்த, மீனோ - மச்சாவதாரப் பெருமாளோ திருவல்லிக்கேணிக்குள்ளே வந்து மேவியது - திருவல்லிக்கேணியில் வந்து விரும்பித் தங்கியது, எ - று.

274. கிழக்கோ தந்தெற்கி லிளந்தென்றன் மேற்கினிற் கீற்றுப்பிறை
அழற்கோலு முத்தா திக்கினில் வாடையதுவு மன்றிக்
குழற்கோகிலமென் குலக்கோகி லத்தைக் கொடுமைசெய்ய
வழக்கோசொல் சண்பக மாறுமதுரை வரோதயனே.

உரை:—சண்பக மாறு மதுரை வரோதயனே - சண்பக மாற பாண்டியனே!, மதுரையில் வரத்தினால் பிறந்தவனே!, கிழக்கு ஓதம் - கிழக்கே உள்ள கடலும், தெற்கில் இளந்தென்றல் - தெற்கேயுள்ள இளந் தென்றற் காற்றும், மேற்கினில் கீற்றுப்பிறை அழற்கோலும் - மேற்குத் திசையிற் பிறைச சந்திரனாகிய நெருப்புக் கம்பியும், உத்தர திக்கினில் வாடை-வடதிசையில் வாடைக் காற்றும், அதுவும் அன்றி - அதுவுமல்லாமலும், குழல் கோகிலம் - வேய்ங்குழலும் குயிலும், என் குலக் கோகிலத்தைக் கொடுமை செய்ய வழக்கோ - என் குடும்பத்திற் பிறந்த குயில்போன்ற குரலையுடைய என் மகளுக்கு வருத்தத்தை விளைத்தல் நியாயமாகுமா ?, சொல் - கூறுவாயாக !, எ - று.

275. காவியனந்த மெடுத்தான்மதன் கைக்கரும் பெடுத்தான்
மேவியனந்த வனம்புகுந் தானினி வேட்டஞ்செய்வான்
ஆவியனந்த முண்டோ வுயிர்தான் விட்டகலுமுன்னே
தேவியனந்திக் கெதிரோடி விண்ணப்பஞ் செய்பவரார்.

உரை :—மதன் கைக்கரும்பு எடுத்தான் - மன்மதன் தன் கையிலுள்ள கரும்பு வில்லை எடுத்து வளைத்தான், காவி யனந்தம் எடுத்தான் - குவளைப் பூ பல எய்வதற்காக எடுத்துக்கொண்டான், இயல் மேவு நந்தவனம் புகுந்தான் - அழகு பொருந்திய பூங்காவில் நுழைந்தான், இனி வேட்டஞ் செய்வான் - இனிமேல் வேட்டை யாடுவான், ஆவி யனந்தமுண்டோ - என் மகளுக்கு உயிர் பலவுளவோ, உயிர்தான் விட்டு அகலு முன்னே - இருக்கின்ற ஒரு உயிர்விட்டு நீங்குவதற்கு முன்னே, தேவியல் நந்திக்கு எதிரோடு - தெய்வத்தன்மை பொருந்திய சோதியாகிய சிவபெருமானுக்கு முன் விரைந்து சென்று, விண்ணப்பஞ் செய்பவரார் - ......, எ - று.

276. ஒன்றைவிட் டொன்றைவிட்
டொன்றுவிட்டான் மதனொன்றுவிட்டான்
நின்றைந்தி லொன்றெடுத் தேவநின்
றனெடுத் தேவுமுன்னே
குன்றையில் வாழ்க்கைத் தளவாகுமார
நற்சாமி முன்செங்
குன்றையிற் சென்றொரு காலிரு
காற்சொலுங் கோதையரே.

உரை :—கோதையரே - பாவைமாரே !, மதன் - மன்மதன், ஒன்றை விட்டு - தாமரைப் பூவாகிய ஒரு கணையைச் செலுத்தி, ஒன்றை விட்டு - மாம்பூவாகிய கணையை மறுபடியும் செலுத்தி, ஒன்று விட்டான் - முல்லைப் பூவையுஞ் செலுத்தினன், ஒன்று விட்டான் - அசோக மலரையும் செலுத்தினன், நின்று ஐந்தில் ஒன்று எடுத்து ஏவ நின்றான் - எஞ்சிய குவளை மலரை யெடுத்துச் செலுத்த நின்றான், எடுத்து ஏவு முன்னே - அதனைச் செலுத்துவதற்கு முன்பாக, செங்குன்றையில் - திருச்செங்குன்றூரிலிருக்கும், குன்றையில் வாழ்க்கைத் தளவா குமார நற்சாமி முன்சென்று - குறைவற்ற வாழ்க்கை நலங்களையுடைய தளவாய் குமாரசாமி வள்ளலிடம் போய், ஒருகால் இருகால் சொலும் - மூன்றுதரம் முறையிடுவீர்களாக !, எ - று.

277. தண்டுஞ் சிவிகையுஞ் சிங்காதனமுந் தமிழ்க்குதவும்
கண்டன் புகார்வரைக் காரிகையேகழு நீரதனின்
உண்டுண் டெனக்குறி காட்டியவேந்தர் குயிரளித்த
வண்டின் றுமிழ்ந்ததன்றோ மடவீரிந்த வையகமே.

உரை :—தண்டும் சிவிகையும் சிங்காதனமும் தமிழ்க்குதவும் கண்டன் புகார்வரைக் காரிகையே - கோலும் பல்லக்கும் அரியணையும் தமிழ்வாணருக்குப் பரிசாக ஈயும் சோழனது காவிரிப்பூம் பட்டினத்தைச் சார்ந்த மலையிலுள்ள பெண்ணே !, கழுநீரதனில் உண்டுண்டெனக் குறிகாட்டி - துரியோதனன் மறைவாகக் கழுக்கள் நாட்டிய தண்ணீர்க்குள் தீங்கு உண்டென்று அடையாளங் காட்டி, அவ் வேந்தர்க்கு உயிரளித்த வண்டு - வீமனாகிய அந்த அரசனுக்கு உயிரைத் தப்பித்துக் கொடுத்த வண்டாகிய திருமால், உண்டு உமிழ்ந்ததன்றோ மடவீரிந்த வையகமே - உட்கொண்டு வெளிப்படுத்திய எச்சிலல்லவா இந்த வுலகமென்று தெரியாதவர்களில்லை, எ - று.

278. கைத்தலந் தன்னிற் பசும்பொன் வளையல் கலகலெனச்
சத்த மொலித்திட நூபுரம்பாதச் சதங்கை கொஞ்சத்
தத்திமி றென்று நடஞ்செய்சம் பீசர்தஞ் சந்நிதிப்பெண்
செத்த குரங்கைத் தலைமேற் சுமந்து திரிந்தனளே.

உரை :—கைத்தலம் தன்னில் பசும்பொன் வளையல் கலகலெனச் சத்தம் ஒலித்திட - கைகளிலிட்ட புதிய தங்க வளையல்கள் கலகலவென்று ஓசை செய்யவும், நூபுரம் பாதச் சதங்கை கொஞ்ச - காலிலிட்ட சிலம்பும் கிங்கிணியும் மெதுவாய் ஓசை செய்யவும், தத்திமி யென்று நடஞ்செய - தத்திம் என்ற ஓசையோடு திருத்தஞ் செய்கின்ற, சம்பீசர்தம் சந்நிதிப் பெண் - சம்புகேசரப் பெருமானது சந்நிதிக்குரிய மாது, செத்தக் குரங

கைத் தலைமேற் சுமந்து திரிந்தனளே - சாமந்திப் பூவைத் தலையில் வைத்துக்கொண்டு திரிந்தாள், எ - று.

குறிப்பு :—சா+மந்தி செத்த குரங்கு

279. பரிக்கொம்பு போலப் பகவான் சரிதை பகர்ந்திடினும்
உரிக்கம்ப தாயினு மீயார் கடனுட னோடிச்சென்று
கரிக்கொம்பு போன்முலை மின்னாருக் கீவரக் கன்னியர்கை
நரிக்கொம்பு தானுமுண்டோ வேங்கடாசல நாயகனே.

உரை :—வேங்கடாசல நாயகனே - வேங்கடாசல நாயகனென்னும் வள்ளலே!, பரிக்கொம்புபோலப் பகவான் சரிதை பகர்ந்திடினும் - குதிரைக் கொம்புபோல அருமையான தெய்வ வரலாறுகளை யெடுத்துக் கூறினாலும், உரிக் கம்பதாயினும் ஈயார் - அரைப்படி கம்பம்புல்கூட கொடுக்காதவர்கள், கடனுடன் ஓடிச்சென்று - கடன்வாங்குகிற பணத்தோடு ஓடிப்போய், கரிக்கொம்பு போல் முலை மின்னாருக்கு ஈவார் - யானைக் கொம்புபோன்ற தனங்களையுடைய வேசையர்க்குக் கொடுப்பார்கள், அக்கன்னியர் கைநரிக் கொம்புதானு முண்டோ - அந்தப் பெண்கள் கையில் காரியசித்தி பெறுதற்குரிய நரிக்கொம்பாவது இருக்கிறதா?, எ - று.

280. கேளந்த நாளையின் மைந்தா நின் னையரைக் கிட்டிமத
வேள்வந்து பூச லிடமதிகாய வெருண்டெனது [ன
தாள்வந்து பற்றிமுன் வாய்புதைத் தேநின்று தாழ்மைசொன்
னாளந்த நாளல்ல வேயிந்த நாளந்த நாயகர்க்கே.

உரை :—மைந்தா - புதல்வனே!, கேள் - கேட்பாயாக!, அந்த நாளையில் - அந்தக் காலத்தில், மதவேள் நினையரைக் கிட்டிவந்து பூசலிட - மன்மதன் உன் தகப்பனுருக்கு அருகே போய்ச் சண்டையிடவும், மதிகாய - சந்திரன் வெப்பந்தரவும், வெருண்டு - அத் துன்பங்களுக்கு அஞ்சி, எனது தாள் வந்து பற்றி - என்னிடம் வந்து என் காலைப் பிடித்துக்கொண்டு, முன் வாய் புதைத்தே நின்று தாழ்மை சொன்ன நாள் - முன் வாயைப் பொத்திக்கொண்டு எனக்கு உபசாரம் சொல்லிய காலமாகிய, அந்த நாள் - அந்தக் காலம், அந்த நாயகர்க்கு இந்த நாள் அல்ல - அந்தக் கணவருக்கு இந்தக் காலமாயில்லை, எ - று.

281. பக்குவமாகக் கவிநூறு செய்து பரிசுபெற
முக்கரணம மெதிர் பல்காலும போட்டு முயன்றிடினும்
அக்கட போவெனும லோபரைப்பாடி யலுத்துவந்த
ளுக்கனை யாண்டருள் வில்வவனத்துக் குயிலம்மையே.

உரை :—வில்வ வனத்துக் குயிலம்மையே - வில்வாரண்யத் தலத்திலுறையும் குயிலம்மை யென்னும் பெயருடைய தாயே!, பரிசு பெற

வெகுமதி வாங்குவதற்காக, பக்குவமாக கவிநூறு செய்து - நல்ல முறை யில் நூறு பாட்டுப் பாடிக்கொண்டுபோய், மூக்கரணம் எதிர் பல் காலும் போட்டு முயன்றிடினும் - பல முறை மூன்று கரணம் போட்டு முன்னே நின்று வேண்டினாலும், அக்கடை போவெனும் லோபரைப் பாடி யலுத்து வந்த - அப்பாற் செல்லுகவெனக் கடிந்து கூறும் லோபிகளைப் புகழ்ந்து போற்றித் தளர்ந்து வந்த, குக்கனை யாண்டருள் - நாயினேனை யருள்செய்து ஆட்கொள்வாயாக!, எ - று.

282. பொல்லா மதப்பய லேங்நேரமுஞ் செயும் போருமெனைக்
கொல்லாமற் கொல்லு மதியுங்கடலுங் குயிலுமிவை
எல்லாந் தொலைந்ததென் றெண்ணினன் பாவிப்போதுன்மன
கல்லா யிருக்குமென் றெவ்வள வேணு முன் கண்டிலனே. [ம

உரை:—பொல்லாத மதப்பயல் - கொடிய மன்மதச் சிறுவன், எந்நேர முஞ் செயும் போரும் - எப்போதும் போடுகின்ற சண்டையும், எனைக் கொல்லாமற் கொல்லு மதியும் - என்னை உயிரினைப் போககாமல வருததுகின்ற சந்திரனும், கடலும் குயிலும் - சமுத்திரமும் குயிற் பறவையும், இவை யெல்லாம் தொலைந்தது என்று எண்ணினன் - ஆகிய இவைகளெல்லாம் ஒழிந்தனவென்று நினைத்தேன், பாவி இப்போது உன் மனம் கல்லா யிருக்குமென்று எவ்வளவேனு முன் கண்டிலனே - பாவிப் பெண்ணே! உன்னுடைய நெஞ்சம் என்மீது இரக்கம் வையாது கல்லுபோலக் கடி மையா யிருக்குமென்று ஒரு சிறிதும் முன்னே நான் தெரிந்துகொள்ள வில்லையே, எ - று.

283. காலையுபாதி மலஞ்சல மாமன்றிக் கட்டுச்சியிற்
சாலவுபாதி பசிதாக மாகுமுற் சஞ்சிதமாம்
மாலையுபாதி துயில்காம மாமிவை மாற்றிவிட்டே
ஆலமுகந்தரு ளம்பல வாவென்னை யாண்டருளே.

உரை:—காலை யுபாதிமலம் சலமாம் - காலை நேரததிற்றுன்பந் தருவது மலங் கழித்தலும் நீர் கழித்தலும் பற்றியாகும், அன்றி இக்கட்டு உச்சியில் சாலவுபாதி பசிதாக மாகும் - வெயில் துன்பமுள்ள மததியான நேரததில் மிகுந்த வருததந்தருவது பசியும் தாகமுமாகும், முற் சஞ்சிதமாம் மாலை யுபாதி துயில் காமமுமாம் - முன் வினைப்பயனால் வருகினற மாலைக்காலத்துத் துன்பங்கள் தூக்கத்தையும் பெண்ணிச்சையையும் பற்றியவே, ஆல முகந்தருள் அம்பலவா - விடததை விரும்பி யுண்டு அருள் செய்த சபா நாதரே!, இவை மாற்றிவிட்டே என்னை யாண்டருளே - இததுன்பங்களைத் தொலைத்து என்னை யாட்கொள்வாயாக!, எ - று.

284. நாலடி வள்ளுவ ராமேயிப்பாலை நடந்தபெருங்
காலடி மேலடி மானடியேகட் டுரலிற்பட்டும
பாலடிசில் வெண்ணெயுண்டோ னரங்கன் பனிவரையில்
வேலடி முள்ளுக் குபாயமிட் டேகும் விரகுநன்றே.

உரை :—கட்டுரலிற் பட்டும் பாலடிசில் வெண்ணெ யுண்டோன் அரங்கன் பனி வரையில் - ஆய்ச்சியரால் உரலில் வெண்ணெய் தின்பதற்காகக் கட்டப்பட்டாலும் பாற்சோறும் வெண்ணெயும் அருந்திய திருவரங்கப் பெருமானது குளிர்ந்த மலைமீது, நாலடி வள்ளுவ ராமே - தலைவன் தலைவி இருவருடைய நான்கு அடிச் சுவடுகள் இரண்டடிச் சுவடுகளாகக் காணப் படுகின்றன, இப் பாலை நடந்த பெரும் காலடி மேலடி மானடியே - இச் சுரத்தில் நடந்ததாலுண்டாகிய பெரிய இரண்டு அடிச் சுவடுக்கு மேலுள்ள சிற்றடிச் சுவடு என் பெண்ணின் அடிச் சுவடே, வேலடி முள்ளுக்கு உபாயமிட் டேகும் விரகு நன்றே - கருவேல மரத்தடியிலுள்ள முள்ளு பெண்ணின் காலிற் படாதபடி முதலிற்றன் கால் வைத்துத் தன் காலடிச் சுவட்டில் அவள் மிதித்து வரும்படித் தந்திரஞ்செய்து போகின்ற தலைவர் காதல் மிகவும் இனிதா யிருக்கிறது, எ - று.

285. அரியெச்சில் செய்யு மரவெச்சி லும்மை யரியெச்சிலும்
எரியெச்சி லோடுமுனி யெச்சிலுமபொர வேந்திழையாள்
கரியெச்சி லாயினள் விக்ரமச்சோழன் கனத்த குன்றின்
புரியெச்சி லுண்ட வரியெச்சி னாளும் புரப்பவனே.

உரை :—விக்கிரமச் சோழன் கனத்த குன்றின் - விக்கிரமச் சோழனுடைய உயர்ந்த மலைமீது, புரியெச்சிலுண்ட அரி யெச்சில் நாளும் புரப்பவனே - (நந்தகோபனது மனையில) கயிற்றுத் துண்டா லடியுண்ட திருமாலின் எச்சிலாகிய உலகத்தைத் தினந்தோறும் காக்கின்றவனே!, அரி எச்சில் செய்யும் அர எச்சிலும் - காற்றை எச்சில் செய்கின்ற பாம்பின் எச்சிலாகிய தென்றலும், மை அரி எச்சிலும - கரிய வண்டின் ஒலியும், எரி எச்சிலோடு - வெப்பத்தில் மிச்சப்பட்ட கோளமாகிய சந்திரனும், முனி எச்சிலும் - அகத்திய முனிவருடைய உச்சிட்டமாகிய கடலும், பொர - சண்டை யிடுவதால், ஏந்திழையாள் - ஆபரணமணிந்த என் மகளானவள், கரி எச்சியிலாயினள் - ஆனையுண்ட விளாங்கனிபோலச் சத்தற்றுப் போயினள், எ - று.

### நாணிக்கண் புதைத்தல்

286. ஒருமானைச் சிலை பிடிக்கறியாம லுலகளந்த
பெருமானை மானைப் பிடியுமென்றேபிடி யாமற்கொல்ல
வருமானை யேந்தி யலைகத்தலத்தார் திருவல்லைவெற்பில்
இருமானைச் சேர்ந்தொரு கையாற்பிடித்தது மெவ்வணமே.

உரை :—ஒரு மானைச் சீதை பிடிக் கறியாமல் - சீதா பிராட்டியார் மாரீசனும் வந்த மானைப் பிடிக்கத் தெரியாமல், உலகளந்த பெருமானை மானைப் பிடியு மென்றே - உலகத்தை யளந்த திருமாலின் அமிசமான இராமபிரானை அந்த மானைப்பிடிக்கும்படி கூற, பிடியாமற் கொல்ல - அந்த ராமபிரான் அதனைப் பிடிக்க முடியாமற் கொன்று விடவும், வருமானை யேந்திய கைத்தலத்தார் திருவல்லை வெற்பில் - முனிவர்கள் செய்த வேள்வியில் வந்த மானைப் பிடித்துத் தமது இடக்கையில் வைத்துக்கொண்ட சிவனாரது திருவல்லை மலையில், இருமானைச் சேர்த்தொரு கையிற் பிடித்தது எவவணமே - (கண்களாகிய) இரண்டு மானையுஞ் சேர்த்து ஒரு கையினால் மூடிக்கொண்டது எவ்வாறென்று தெரியவில்லை, எ - று.

இதுவுமது

287\. கங்கையந் தாளுடை யானரங்கேசன் கனகிரிமேல்
மங்கையென் னுவிகொல் கூற்றங்கொ லோமற்றுங் கன்னல்வி
துங்கையன் றானே தெரியாத சோகஞ்செய் சூதமுல்லை [லேந்
பங்கையம் விட்டிங்ங னேமுழு நீலங்கைப் பற்றியதே.

உரை :—கஙகையந் தாளுடையான் அரங்கேசன் கனகிரிமேல் - கங்கையை அழகிய தமது திருப்பாதத்தி லுடையவராகிய திருவரங்கப் பெருமானது உயர்ந்த மலையின்மீதுள்ள, மங்கை - பெண்ணானவள், அசோகஞ்செய் சூதம் முல்லை பங்கயம் விட்டு-அசோக மலர் சிவந்தமாம்பூ முல்லைப்பூ தாமரைப்பூ என்பவற்றை விடுத்து, இஙஙனே முழுநீலம் கைப்பற்றியதே- இவ்வாறு கண்ணாகிய முழுக்குவளைப் பூவைப் பிடித்ததால், அவள் என்னுவி கொல் கூற்றங கொலோ - என்னுயிரைக் கொல்லும் எமனோ, மறறுங கன்னல்வில்லேந்துங கையன் தானோ தெரியாது - அல்லது கருப்பு வில்லைத் தரித்த கையினனாகிய காமன் தானோ தெரியவில்லை, எ - று.

இதுவுமது

288\. விண்டீ ரிருவர்க்கு வேதப்பொருளைமெல் லாலடிக்கீழ்ப்
பண்டீரங் கொண்டு பகர்பிரமீசர் பனிவரையிற்
கண்டீரவமெனு நுண்ணிடை யீரிந்தக் காவியங்கை
கொண்டீ ரருத்தமுஞ் செப்பிடினீரென் குலகுருவே.

உரை :—ஈரிருவர்க்கு வேதப் பொருளை - சனகா முதலிய நான்கு முனிவர்களுக்கு மறைக் கருத்தை, மெல்லா லடிக்கீழ் - மென்மையான கல்லால மர நிழலின் கண்ணே தங்கி யிருந்து, பண்டு - ஆதிக்காலத்தில், ஈரம் கொண்டு - முனிவர்கள்மீது இரக்கம் வைத்து, விண்டு பகர் - வெளிப்படையாகக் கூறிய, பிரமீசர் பனி வரையில் - பிரமீசரது குளிர்ந்த மலைமீதுள்ள, கண்டிரவ மெனும் நுண்ணிடையீர் - சிஙகம்போலும் நுட்பம்

போன்ற இடையையுடைய மாதரே', இந்தக் காவியங் கைக் கொண்டீர் - குவளைபோன்ற கண்ணைக் கையினால் பற்றினீர், அருத்தமும் செப்பிடில்- அதற்குப் பொருள் அதாவது காரணத்தைக் கூறுவீர்களானால், நீரே என் குலகுருவே - நீர் எங்கள் பரம்பரையா சாரியராவீர், எ - று.

289. எறிக்கும் புகழ்க்கச்சி யேகாம்பரசம்ப னெண்டிசையும்
பொறிக்கும புலியான் புயம்வேட்ட பின்னிந்தப்பூவையன்னாள்
வெறிக்குங் குமக்கொங்கை மீதேவிழிசொரி வெள்ளந்துள்ளித்
தெறிக்குந் திவலை யழிக்குஞ் சிந்தூர திலகத்தையே.

உரை :—எறிக்கும் புகழ்க்கச்சி ஏகாம்பர சம்பன் - எங்கும் பரவிய கீர்த்தியையுடைய ஏகாம்பர சம்ப னென்பவன், எண்டிசையும் பொறிக்கும் புலியான் - எட்டுத் திக்கிலும் வரைந்த புலிக்கொடியை யுடையவன், இந்தப் பூவை இந்நாள் புயம் வேட்ட பின் - நாகண வாய்ப்புள்போன்ற பேச சுடைய இந்தப் பெண்ணானவள் அவன் தோளினைத்தழுவ ஆசைகொண்ட பின், வெறிக் குங்குமக் கொங்கை மீதே - மணமான குங்குமப்பூக் கலந்த சந்தனம் பூசிய அவள் தனத்தின்மேல், விழி சொரி வெள்ளம் - அவள் கண் சிந்துகின்ற நீர்ப்பெருக்கு, துள்ளித் தெளிக்கும் திவலை - குதித்துப் பாய்வ தால் கிளம்புகின்ற துளியானது, சிந்தூர திலகத்தையே அழிக்கும் - அவள் நெற்றியிலுள்ள செங்குங்குமப் பொட்டினை யில்லாமற் செய்கின்றது; எ-று.

290. நேற்றினுமின்று மிகுந்ததுகாத னிலவெனுங்கூன்
கூற்றினுமன்னை கொடியள்கண்டாய் மள்ளர் கொன்றபழஞ்
சேற்றினுமேதிக் குளம்பா னெருக்குண்ட செங்கருப்பஞ்
சாற்றினுஞ்சங்கம தவழுங் கொல்லாபுரிச் சந்திரனே.

உரை:—மள்ளர் கொன்ற பழஞ் சேற்றினும் - வயலி லுழுகின்றவர் கள் மிதித்து உழக்கிய நாட்பட்ட சகதியிலும், மேதிக் குளம்பால நெருக் குண்ட செங்கருப்பஞ் சாற்றினும் - எருமைகளின் காற் குளம்பு பட்டு நெரிந்து பரவிய சிவப்பான கருப்பஞ் சாற்றினும், சங்கம் தவழும்- சங்குகள் நிலவப்பெற்ற, கொல்லா புரிச சந்திரனே - கொல்லா புரியில் வசிக்கும் சந்திரனென்னும் வள்ளலே!, நேற்றினும் இன்று காதல் மிகுந் தது-நேற்றைவிட இன்றைக்கு மோகம் மிகுதிப்பட்டது, நிலவெனும் கூன் கூற்றினும் அன்னை கொடியவள் - பிறைச் சந்திர னென்கிற வளைந்த வடிவுடைய காலனைப் பார்க்கிலும் தாய் பொல்லாதவளா யிருக்கிறாள், எ - று.

291. நீரகங்கொண்ட வயித்திய நாதர் நெடுங்கிரிவாய்
சீரகங்கண்டுநற் காஞ்சித்தலத்தையுஞ் சேவைசெய்து
வாரகங்கொண்ட வடமலைமாலை மனத்தடக்கித்
தீரகங்கொண்ட நமமன்பனைப்போலச் செகத்தில்லையே.

உரை :—நீரகங் கொண்ட வயித்திய நாதர் நெடுங்கிரிவாய் - நீர் வளத்தைத் தன்னிடத்தே யுடைய வயித்தியநாதப் பெருமானது உயர்ந்த மலையின்மீதுள்ள, சீரகங் கண்டு - புகழ்பெற்ற விடங்களைத் தரிசித்து அல்லது அழகிய உடம்புடைய பெண்ணைப் பார்த்து, நற் காஞ்சித் தலத்தையும் சேவைசெய்து - நல்ல காஞ்சிபுரமாகிய திருப்பதியையும் வழிபட்டு அல்லது காஞ்சி யென்னும் மேகலை தங்குதற்கிடமாகிய கடிதடத்தையும் பார்த்து, வாரகங் கொண்ட வடமலை மாலை மனத்தடக்கி - நீட்சி பொருந்திய திருவேங்கட மலையிலுள்ள திருமாலை மனத்தில் வைத்து அல்லது கச்சணிந்த முத்துமாலை யலைகின்ற தனத்தின்மீதுள்ள வேட்கையை யுள்ளத்திலடக்கிக்கொண்டு, தீரகங்கொண்ட - தைரியத்தையுடைய, நம் அன்பனைப் போலச் செகத்திலையே - நம்மிடத்தில் அன்புள்ள தலைவனைப்போல இந்த உலகத்தில் யாருமில்லை, எ - று.

குறிப்பு :—இது தலைவனைப் பாங்கன் வியந்தது.

292. புலியைக் கொடுத்துப் பசுவாங்கி யோர்புலிப் பூங்குழலாள்
புலியைப் பசுதின்ன விட்டுப்புலியைத் திறுதகற்றிப்
புலியை யரைத்துப் பலகாரஞ்செய்து பொருந்துமுகப்
புலியைக் களிப்புடன் சாறுவைத்தாடன் புருஷனுக்கே.

உரை :—புலியைக் கொடுத்துப் பசு வாங்கி - வேங்கை யதாவது பொன்னைக் கொடுத்துப் பசுவைப் பெற்று, ஓர் புலிப் பூங்குழலாள் - ஒப்பற்ற மயிர்சசாந்து பூசிய அழகிய கூந்தலுடைய பெண், புலியைப் பசுத்தின்ன விட்டு - பசு புல்லைத தின்னும்படியாக அதனைவிட்டு, புலியைத் திறுதகற்றி - புலியானது பசுவைத் தினறுதபடி விலங்கி விட்டு (பசுவின் பாலுடன்) புலியை அரைத்து - நெல்லினின்றெடுத்த அரிசியை யரைதது, பலகாரஞ் செய்து - பலவகைப் பண்டஙகளையுஞ்சமைத்து, முகப்புலியைப் பொருந்து களிப்புடன் - முகத்தாமரையைப் பொருந்திய மகிழ்சசியுடன், தன் புருஷனுககே சாறு வைததாள் - தன்னுயிரானுக்கு விருந்து செயதாள், எ - று.

குறிப்பு :—புலி என்ற சொல் பொன், மயிர்ச சாந்து, புல், புலி, ஒருவகை நெல், தாமரை என்னும் பொருள்களில் பாட்டில் உபயோகப்பட்டுளது.

பாலனைப் பழித்தல்

293. வேளாமழகன் றுலைசீதக் காதியென் வீட்டிலொரு
நாளாகி லும்வரக் காண்கில னேயெந்த நாளுமவன்
தோளா லணையுஞ் சுகவாலிபத்தைத் துணிக்கவொரு
வாளாப் பிறந்தனையே மைந்தனே யென்ன வாயுனக்கே.

உரை :—மைந்தனே - பாலனே !, வேளாமழகன் துரை சீதக்காதி - மன்மதன்போன்ற வனப்புடையவனுகிய சீதக்காதி எஜமான், என் வீட்டில் ஒரு நாளாகிலும் வரக் காண்கிலனே - ......, எந்நாளும் அவன் தோளால் அணையும் சுகவாலிபத்தை - எந்நாளிலும் அவன் புயத்தைத் தழுவுவதா லுண்டாகிய இன்பத்திற்குரிய இளமையை, துணிக்க ஒரு வாளாப் பிறந்தனையே - வெட்டித் தொலைப்பதற்கு ஒரு வாளாயுதம்போலத் தோன்றினையே, என்ன வாயுனக்கு - நீ ஏன் வீணாய்க் கதறுகிறாய், எ - று.

294. நடந்தா ளொருகன்னி மாராசகேசரி நாட்டிற்கொங்கைக்
குடந்தா னசைய வொயிலா யதுகண்டு கொற்றவரும்
தொடர்ந்தார் சந்நியாசிகள் யோகம்விட்டார்சுத்தசைவரெல்லா
மடந்தா னடைத்துச் சிவபூசை யுங்கட்டி வைத்தனரே. [ம்

உரை:—மாராசகேசரி நாட்டில் - பெரிய ராசகேசரி யென்பவனுடைய தேசத்தில், ஒரு கன்னி - ஒரு சிறு பெண், கொங்கைக் குடந்தா னசைய - தனங்களாகிய குடங்க ளசையும்படி, ஒயிலாய் நடந்தாள் - கெம்பீரமாக நடந்து சென்றாள், அதுகண்டு கொற்றவரும் தொடர்ந்தார - அதைக் கண்ட மன்னரும் அவளைப் பின் தொடர்ந்தார்கள், சன்னியாசிகள் யோகம் விட்டார் - துறவிகள் யோக முயற்சியைக் கைவிட்டு மயங்கினார்கள், சுத்தசைவரெல்லாம் - தூய வொழுக்கமுடைய சைவர்கள் யாவரும் மயக்கத்தால், மடந்தானடைத்துச சிவபூசையுங கட்டி வைத்தனரே - ......, எ - று.

295. நாலா கலைதெரி யேகமபவாணனன் னாட்டில்வளர்
சேலாகக் கண்கள் படைத்த பெண்ணேநின் றிகழுமவயி
றாலாகவு மல்குற் பாமபாகவுமவ் வணையின்மிசை
மாலாக யான்பள்ளி கொள்ளவந் தேனுன்றன் மாளிகைக்கே.

உரை:—நாலா கலைதெரி யேகம்பவாணன் நன்னாட்டில் - பலவகையான கலைகளைக்கற்ற ஏகம்பவாணனது நல்ல தேசததில், வளர்ச சேலாகக் கண்கள் படைத்த பெண்ணே - வளாகின்ற சேல்மீன்கள் போன்ற கண்களுடைய பெண்ணே !, நின் திகழும் வயிறு ஆலாகவும் - அழகிய உன்னுடைய வயிறு ஆலிலைபோல விளஙகவும், அல்குல் பாம்பாகவும் - கடிதடம் பாம்புபோலிருக்கவும், அவவணையின் மிசை - அத்தகைய படுக்கையின் மேல், மாலாக யான் பள்ளிகொள்ள - திருமாலைப்போல யான் படுத்துறஙக, உன் மாளிகைக்கே வந்தேன் - உன்னுடைய பெரிய வீட்டிற்கு வந்தேன், எ - று.

296. அரவிந்த நண்பன் சுதன்றமபி மைத்துன னண்ணன்கையில்
வரமுந்தி யாயுதம் பூண்டவன் காணுமற் றங்கவனே
பரமன் றிகிரியை யேந்தினன் மைந்தன் பகைவன்வெற்பை
உரமொன்றெடுத்தவன் மாற்றான்றன் சேவகனெண்டொடியே.

உரை:—அரவிந்த நண்பன் - தாமரைக்குச் சிநேகிதனாகிய சூரிய னது, சுதன் தம்பி மைத்துனன் - புதல்வனாகிய கர்ணனின் தம்பியாகிய அர்ச்சுனனின் மைத்துனனாகிய கண்ணனுடைய, அண்ணன் கையில் - சகோதரனாகிய பலராமன் கையில், வர முந்திய ஆயுதம் - ஆயுதமாக வரு வதற்கு முன்னே இருந்த கலப்பையை, பூண்டவன் காணும - கழுத்திற் கொண்ட எருமைக்கடா போன்றவனவன் (என்று ஒரு வேசி தன்னிடம் வந்த காமுகனைப்பற்றி மற்றொரு வேசிக்குக் கூற அவள் கூறுவதாவது) ஒண்டொடியே - ஒள்ளிய வளையலணிந்த நண்பியே!, பரமன் கிரியை ஏந்தினன் - அரனளித்த சக்கராயுதத்தைக் கொண்டவனாகிய திருமாலின், மைந்தன் பகைவன் - புதல்வனாகிய காமக்கடவுளின் எதிரியாகிய சிவனது வெற்பை உரமொன்று எடுத்தவன் - கயிலை மலையைத் தன் முழுப்பலத் தோடு எடுத்தவனாகிய ராவணனது, மாற்றான் தன் சேவகன் - சத்துரு வாகிய இராமனுடைய தொண்டனாகிய அனுமான் (என்பால் வந்தவனென் றாள்), எ - று.

297. சங்கரன்றேவி தமயன்மனைவி தனக்குமுன்னும்
மங்கையரேறிய வாகனங் காணுமற் றங்கவளோ
கொங்கைகளீரைந் துடையவளாயிக் குவலயத்தில்
எங்குந்திரியும் வயிரவ ரூர்தியென் றேநினையே.

உரை:—சங்கரன் தேவி தமையன் மனைவி - சிவபெருமான் தேவி யாகிய பார்வதியின் தமையனாகிய திருமாலின் மனைவியாகிய இலக்குமிக்கு முன்னும் மங்கையர் - முன் றோன்றியவளாகிய மூதேவி, ஏறிய வாகனங் காணும் - ஏறிய ஊர்தியாகிய கழுதை யென்று ஒருவன் கூற, (மற்றொரு வன் கூறுவான்) அங்கு அவளோ - என்னிடம் அங்கே வந்தவள் எப்படி எனில், கொங்கைகள் ஈரைந்து உடையவளாய் - பத்துத் தனங்களோடு கூடி, இக் குவலயத்தில் எங்கும் திரியும் - இப் பூமிமீது எவ்விடத்திலும் திரிகின்ற, வயிரவர் ஊர்தி யென்றே நினையே - வயிரவக் கடவுளேறும் வாகனமாகிய நாய் என்றே கருதுக வென்றான், எ - று.

298. மாத்தானைப் பித்தனை மாடேறுவானை மதகரித்தோல்
போர்த்தானை வேதப் பொடிபூசுவானையிப் பூதலத்தென்
ஆத்தா னுடனெதிர்த் தம்பலத்தேயென்று மாடிநிற்கும்
கூத்தாடிப் பையலுக் கோமகளேமயல் கொண்டனையே.

உரை:—மகளே - ......, மாத்தானைப் பிததனை - பெரியபூத சேனை யுடைய பிததனெனப்படுபவனை, மாடேறுவானை - காளையை வாகனமாக வுடையவனை, மதகரிதோல் போர்த்தானை - (வேள்வியில் வந்த) மத யானையினுடைய தோலை யுரித்துப் போர்வையாக அணிந்தவனை, வேதப் பொடி பூசுவானை - வேதத்திற் சிறப்பாகப் பேசப்பட்ட திருநீற்றினைத்

தரித்தவனே, இப் பூதலத்து என் ஆத்தாளுடனெதிர்த்து - இப் பூமியின் கண் எனது அன்னையாகிய காளியோடு போட்டிபோட்டு, அம்பலததே என்றும் ஆடி நிற்கும் கூத்தாடிப் பையலுக்கோ - சபையிலே எப்போதும் கூததாடிக் கொண்டிருக்கிற ஆண்மகனிடமோ, மயல் கொண்டனை - நீ ஆசை யுடையவளாகினை, எ - று.

299. கானவர் தான்றினை கொய்தனரோ கண்ட கண்ணலவோ
தேனமர் வண்டினங் காள்கிள்ளை காள்செழுங் கானைவிட்டுப்
போனவன் றானல்லவோ நெடுங்கானிப் புனமல்லவோ
நானவன் றானல்லவோ சொல்லவேண்டு நடுக்கண்டதே.

உரை:—தேனமர் வண்டினங்காள் கிள்ளைகாள் - தேனை விரும்பிச் செல்லுகின்ற வண்டுக் கூட்டங்களே ! கிளிகளே !; கானவர் தான் தினை கொயதனரோ - (நான் முன் தலைவியைக் கண்ட இந்த விடத்தில் தான்) வேடர்கள் தினைப் பயிரை யறுததெடுத்தார்களோ, கண்ட கண அலவோ - நான் முன்னே கண்ட கண்களிவை யல்லவோ, செழுங்கானை விட்டுப் போனவன்றானல்லவோ - இந்த வளமான காட்டைவிட்டு முன் போனவன் நானல்லனோ, நெடும் கான் இப் புனமல்லவோ - நான் முன்னே தலைவியைக் கண்ட பெரிய காடு இது அலலவோ, நான் அவன்றானல் லவோ - அவளைக் கண்டவன் நானல்லனோ, நடுக்கண்டதே சொல்ல வேணடும் - நியாயமாக நீஙகள் பார்த்ததையே கூறும்படியாக வேண்டு கிறேன, எ - று.

300. தாராள னெங்கடிரு நின்றைச்சேஷன் சயிலத்தின்பால்
நீரார் முகிற்குழற் பெண்பேதை யைவிட்டு நீபிரிந்தால்
சீராம னில்லை யமுதில்லை யஞ்சனைச் செல்வனில்லை
காரார் பொழில்வளர் காழிப்பிரா னில்லை காப்பதற்கே.

உரை:—தாராளன் எங்கள் திருநின்றைச சேஷன் சயிலத்தின்பால் - திருநின்றையூரி லிருக்கும் எஙகள் வள்ளலாகிய சேஷனென்னும் பிரபு வின் மலையினமீது, நீரார் முகில் குழல் பெண் பேதையைவிட்டு நீ பிரிந் தால் - மழை மேகம்போலக கருத்த கூந்தலையுடைய பேதைப் பருவத்துச் சிறு பெண்ணைவிட்டு நீ யகல்வாயானால், காப்பதற்கே - அவளை யிறவாமற் காப்பாற்றுவதற்கு, சீராமனில்லை - கல்லைப் பெண்ணாக்கிய இராமபிரா னிஙகே இல்லை, அமுதில்லை - சாவை நீக்கக்கூடிய மருநதாகிய தேவாமுத மிஙகே இல்லை, அஞ்சனைச செல்வனில்லை - சஞ்சீவி மலையைக் கொணர்ந்த அஞ்சனையின் புதல்வனாகிய அனுமா னிங்கில்லை, காரார் பொழில் வளர் காழிப்பிரானில்லை - மேகந் தங்கிய சோலைகள் வளர்ந்தோங்கும் சீகாழியி லவதரிதத திருஞான சம்பந்தரிஙகே இல்லை, எ - று.

301. அம்பள வெவ்வள வவ்வளவே விழியார்ந்த கொவ்வைச்
செம்பள மெவ்வள வவ்வளவேயிதழ் சீர்கொள் வஞ்சிக்
கொம்பள வெவ்வள வவ்வளவேயிடை கூறெலுமிச்
சம்பள மெவ்வள வவ்வளவேதனந் தையலுக்கே.

உரை :—தையலுக்கே - இம் மாதுக்கு, விழி அம்பளவு எவ்வளவு அவ்வளவே - கண்ணனது அம்பின் தன்மையினளவு எத்துணையோ அத்துணையே உளது, இதழ் ஆழ்ந்த கொவ்வைச் செம்பவளம் எவ்வளவு அவ்வளவே - உதடானது சிவப்பான முழு கொவ்வைக்கனி எத்தன்மையதோ அத்தன்மையதே, இடை சீர் கொள் வஞ்சிக் கொம்பளவு எவ்வளவு அவ்வளவே - இடையானது அழகுள்ள வஞ்சிக்கொடி எத்தன்மையதோ அத்தன்மையதே, தனம் கூறு எலுமிச்சம்பளம் எவ்வளவு அவ்வளவே - முலையானது எல்லாரும் புகழ்ந்து சொல்லும் எலுமிச்சம் பழம் எந்த அளவிலிருக்கின்றதோ அந்த அளவிலிருக்கின்றது, எ - று.

302. நச்சணிகண்டத்த ராரூர்த் தியாகர் நளினவெற்பில்
கச்சணியுமமுலை மாதேயிதுவென்ன காரணமோ
அச்சுதனுமத் திரண்டாமெழுத்தி லரையெழுத்தில்
வச்சிரபாணி மனையாள்பகைவந்து வாய்த்ததுவே.

உரை :—நச்சணி கண்டத்தர் ஆரூர்த் தியாகர் நளின வெற்பில் - விஷத்தையணிந்த கழுத்தை யுடையவராகிய திருவாரூர்த் தியாகராசப் பெருமானது தாமரைச் சுனைகள் நிறைந்த மலையின்மீது, கச்சணியும் முலை மாதே - வார் அணிகின்ற தனங்களையுடைய பெண்ணே!, அச்சுதன் நாமத்து இரண்டாம் எழுத்தில் - விண்டுவின் பெயராகிய அரி யென்பதின் இரண்டாவது எழுத்தாகிய ரி யென்பதில், அரையெழுத்தில் - பாதிரியில், வச்சிரபாணி மனையாள் பகை - வச்சிராயுதத்தைக் கையி லுடையவனாகிய இந்திரனது மனைவியாகிய சசி அதாவது சந்திரனுடைய விரோதியாகிய தாமரை, வந்து வாய்த்ததுவே - வந்து பொருந்தி யிருந்தது, இது என்ன காரணமோ - இது என்ன காரணத்தினாலோ, எ - று.

303. போமேபொழுது வருமேமதியம் புரண்டெனங்கம்
வேமேமதனன் சரந்தைக்குமேதைத்த புண்வழியிற்
பூமேவு தென்றல் புகுமேயென் பெண்புத்தி போய்விடுமே '
கோமேதகப் புயலே மழவாபள்ளி கொண்டவனே.

உரை :—கோமேதகப் புயலே - கோமேதக ரத்தினம்போலக் கருநிறமும் பளபளப்புமுள்ள மழை மேகம் போன்றவனே!, மழவா - மழவராயனே!, பள்ளிகொண்டவனே - பள்ளிகொண்டான் என்னும் வள்ளலே!, பொழுது போமே - பகல் நேரம் கழிந்துவிடுமே, மதியம் வருமே - சந்திரன்

உதித்துவிடுமே, என் அங்கம் புரண்டு வேமே - என்னுடைய தேகம் புரளுவதுடன் வெப்ப மடையுமே, மதனன் சரம் தைக்குமே - காமனது கணைகள் பாய்ந்து அழுத்துமே, தைத்த புண் வழியே - அக் கணைகள் அழுந்திய காயத்தினூடு, பூமேவு தென்றல் புகுமே - பூக்களிற் பட்டு வரும் தென்றற் காற்றானது உட்புகுந்து செல்லுமே, என் பெண் புத்தி போய் விடுமே - பெண் தன்மைக்குரிய எனது நல்லறிவு ஒழிந்துபோகும், எ - று.

304. பாலினுமின்சொற் குயிலினுமென்மொழிப் பாவைநல்லாள்
மேலினுங்காமன் சரந்தைக்குமேவட வேங்கடம்விட்
டாலினுமவேலை நடுவினும்பாம்பினு மாத்துரத்தும்
கோலினுங்கண்வளர் வாய்மழுவாபள்ளி கொண்டவனே.

உரை :—வட வேங்கடம் விட்டு - வடக்கே யுள்ள திருவேங்கட மலையை விட்டு நீங்கி, ஆலினும் - ஆலிலைமீதும், வேலை நடுவில் - திருப்பாற் கடல் மத்தியிலும், பாம்பினும் - அனந்த சயனத்திலும், ஆத்துரத்தும் கோலினும் - பசுக்களை யோட்டுகின்ற தண்டின்மேலும், கண் வளர்வாய் - துயில்கின்ற திருமாலமிச மானவனே !, மழுவா பள்ளிகொண்டவனே - மழுவராயனே பள்ளிகொண்டா னென்னும் வள்ளலே!, பாலினும் இன் சொல் குயிலினும் மென்மொழி - பாலைப் பார்க்கிலும் இனிமையான வாக்கும் குயிலைப் பார்க்கிலும் மெல்லிய குரலுமுடைய, பாவை நல்லாள் மேலினும் காமன் சரம் தைக்குமே - பதுமைபோன்ற அழகிய பெண்ணின் உடம்பிலும் மன்மதனுடைய கணையானது அழுந்துமே, எ - று.

305. மெய்யினுநல்லவ ரீனமபொறார்மயிர் வீழ்தொடக்கம்
செய்யினுமானக் கவரியுய்யாசிற்றினக் கயவர்
வய்யினுமவாழ்வர் தகரையக்காது மயிருமொக்கக்
கொய்யினும பின்செலுமே மழுவாபள்ளி கொண்டவனே.

உரை :—மழுவா பள்ளி கொண்டவனே - மழுவ ராயனே ! பள்ளி கொண்டானென்னும் வள்ளலே !, மயிர் வீழ் தொடக்கம் செயயினு மானக் கவரி யுய்யா - தன்னுடம்பிலுள்ள உரோமமானது கீழே விழ ஆரம்பித்தாலும் மான மிகுந்த கவரிமானானது உயிர் வாழாது சாகும், (அதுபோல) நல்லவர் மெய்யினும் ஈனம் பொறார் - நல்ல வியல்புடையவர்கள் உடம்பிற்கூட ஏதாவது குறை யேற்பட்டால் தாங்கமாட்டார், தகரை அக்காது மயிரும் ஒக்கக் கொய்யினும் பின் செலுமே - ஆட்டினது செவியையும் உரோமத்தையும் ஒருங்கறுத்தாலும் அங்ஙனஞ் செய்தவருடைய புறத்தே செல்லும் (அதுபோல) சிற்றினக் கயவர் வய்யினும் வாழ்வர் - கீழ் மக்கள் கூட்டத்தைச் சார்ந்த அற்பர் ஒருவர் தம்மை யேசினாலும் மான மிலலாமல் சுகமா யிருப்பார், எ - று.

## பாலனைப் பழித்தல்

306. மாலாக்கியென்னைப் பெருவயதாக்கியென் மார்பின்முலைப்
பாலாக்கியங்கம் பசுநரம்பாக்கி யப்பாவையரை [தும்
மேலாக்கிச்சிக்கு விளக்கெண்ணெ யாக்கியென் மேனியெங்
தோலாக்கவோமகனே பிள்ளையாய்வந்து தோன்றினையே

உரை:—மகனே -......, என்னை மாலாக்கி - உன்னைப் பெறுங்கால் அறிவு மயக்க முடையவளாக்கி, பெருவயதாக்கி - பின்னைப் பல வினத்தால் என்னை வயோதிக முடையவளாகச் செய்து, என் மார்பில் முலைப் பாலாக்கி - என் னெஞ்சிலுள்ள தனங்களைப் பால்மயமாகசசெய்து, அங்கம் பசு நரம்பாகி - உறுப்புகளெல்லாம் பசிய நரம்பு தோன்றும்படி செய்து, அப்பாவையரை மேலாக்கி-தலைவன் விரும்புகின்ற அந்தப் பெண்களை என் னிலும் அழகிற் சிறந்தவளாகத் தோன்றும்படி செய்து, விளக்கெண்ணெய்ச சிக்காக்கி -......, என் மேனி யெங்கும் தோலாக்கவோ - என்னுடம் பெங் கும் தசை யில்லாமற் செய்வதற்கோ, பிள்ளையாய் வந்து தோன்றினையே- நீ குழந்தையாய் வந்து உதித்தாய், எ - று.

307. சதிராயிருந்தரதி மாமிமன்மதன் சற்பனைசெய்
தெதிராளியாயைங் கணைதூவவானத் திருந்துகனல்
மதிவாரி வீசவினைவைமறந்து மதிமயங்கிப்
பதினுயிரங்கொட்டைப் பாக்காயிருந்தனள் பைங்கொடியே.

உரை :—ரதிமாமி - இலக்குமிபோல, சதுரமாயிருந்த பைஙகொடியே- அழகோடு விளங்கிய புதிய கொடிபோன்ற என் பெண்ணானவள், மன்மதன் சற்பனை செய்து - காமன் கபடமாய்த்தோன்றி, எதிராளியாய் ஐஙகணை தூவ - சததுருவாய் ஐந்து பூ அம்புகளை அவன்மீது விடுக்கவும், வானத்தி லிருந்து மதி கனல்வாரி வீச - விண்ணிலிருந்து சந்திரனவன் தீயை மிகுதியாய் எறியவும், மதி மயஙகி - அறிவுகெட்டு, வினைவை மறந்து-ஏதாவது கேட்பதற்குக்கூட நினைவில்லாமல், பதினுயிரங கொட்டைப்பாக்காயிருந்தனள் - அம்மணமாய் அதாவது உடையற் றிருந்தாள், எ - று.

308. அன்பட்ட திக்கெங்கும் போற்றுந்தென் கோட்டுக்கதிபதியாய்
பொன்பட்டஞ்சூடும ரகுநாதபூபவிப் பூதலத்தே [ப்
நின்பட்டமேபட்ட நீயேதுரைமற்றிந் நீணிலதமேதார்
தன்பட்டமென்பட்டந் தோலாலடிபடுந் தம்பட்டமே.

உரை:—அன்பு அட்ட திக்கெங்கும் போற்றும் தென் கோட்டுக் கதிபதியாய் - அன்போடு எட்டுத திசையிலும் எவவிடததிலும் உள்ளவர் களும் புகழ்கின்ற தென் கோட்டூர்க்குத் தலைவனுய், பொனபட்டஞ் சூடும் ரகுநாதபூப - தஙகக் கிரீடம் தரித்த ரகுநாத மன்னனே ! இப்பூதலததே -

இந்த உலகத்திலே, நின் பட்டமே பட்டம் - உன்னுடைய அரசே தக்க அரசாகும், நீயே துரை - நீயே தக்க எஜமான், மற்றிந் நீணிலத்தோர் தன் பட்டம் என் பட்டம் - மற்றப்படி இந்த அகன்ற பூமியிலுள்ள பிற அரசர்களின் விருதுகள் எவ்வகையான வெற்றி யுடையாளமாம், தோலால் அடிபடும் தன் பட்டமே - அவைகள் அடிக்கப்படுகிற தோற் பறைகள் போல்வனவே, எ - று.

309. சேமன்புதல்வன் செழுங்குன்றவேலன் செழுங்கிரியில்
காமன்பகைவன் கரிமுந்துமாயினங் கைவலவா
பூமன்கணைபு மதியுமிவ்வாடையும் பூசலிட
மாமன்றமையன் றகப்பனென்றேவஞ்சி வாடுவளே.

உரை:—வலவா - தேர்ப்பாகனே !, சேமன்-காலைக்கு அதிபதியாகிய சிவபெருமானது, புதல்வன் செழுங்குன்ற வேலன் செழுஙகிரியில்-குமாரனாகிய திருசசெழுங் குன்றத்தில் வீற்றிருக்கும் வேலாயுதப் பெருமானது வளமான குன்றினிடத்தே, காமன் கரிவன் பகைமுந்து மாகில் - கற்பகச சோலைக்கு அதிபதியாகிய இந்திரன் யானையெனப் படும் திறமையான நமது சதுருவாகிய மேகமானது நமக்கு முற்பட்டுப் போகுமானால், வஞ்சி நங்கை - கொடிபோன்ற தலைவி, பூமன் கணையும் மதியும் இவவாடையும் பூசலிட - மன்மதனுடைய அம்பும் சந்திரனும் இந்த வாடைக்காற்றும் அவளோடு சண்டை யிடவே, மாமன் - குதிரைக்கு வல்லவனாகிய நகுலனுடைய, தமையன் - மூத்த சகோதரனாகிய தருமனுடைய தநதையாகிய எமனென்றே, அஞ்சி - பயந்து, வாடுவளே - தளாசசி யடைவாள், எ - று.

குறிப்பு:—மேகத்திற்கு முன் தேரைச் செலுத்த வேண்டுமென்று பாகனுககுக் குறிததவாறு.

310. சூலேறிச்சங்க மடவார்குடையுந் துறைக்கொதுங்கி
வேலேறுங்கண்ணியர் கைக்குடநீரபுகரு மீண்டுழும்
சாலேறிமுத்தந் தனையீனுந்தண்வய லூரனம்பால்
மாலேறுவான்பரி மாவேறினனடி மாமயிலே.

உரை:—அடி மாமயிலே - அழகிய மயில்போலும் சாயலுடைய தலைவியே!, சங்கம் - சங்குகள், சூலேறி - நன்றாகக் கருக்கொண்டு, மடவார் குடையும் துறைக்கு ஒதுங்கி - பெண்கள் ஸ்நானஞ் செயகின்ற படித்துறையிற் போய்ச சேர்ந்து, வேலேறுங் கணணியர் கைக்குட நீர்புக்கு - வேல் போன்ற கண்ணையுடைய பெண்களது கையிலுள்ள தண்ணீர்க் குடத்திற் குட் சென்று, மீண்டும்-திரும்பவும், உழும் சாலேறி - கலப்பை யுழுத விடங்களில் தங்கி, முத்தந்தனை யீனும் - முத்துக்களைச சொரிகின்ற, தண் வயலூரன் - குளிர்ந்த வயலையுடைய தலைவன், நம்பால் மால் ஏறுவான் -

நம்மிடத்தில் மயக்க முடையவனாய், பரிமாவேறினன் - குதிரைமேல் ஏறி வந்தான், எ - று.

311. எறிக்கு மதிச்சடை யண்ணாமலைய ரெழிற்கிரியில்
பறிக்கின்றபூவை மிதிக்கப் பொருளந்தப் பாதத்தினால்
பொறிக்கண் பிசாசக ணெற்களைத்தூவிப் பொரிபொரித்துக்
கொறிக்கின்ற பாலையி லெப்படிப்போயினள் கோமளமே.

உரை:—எறிக்கு மதிச்சடை யண்ணாமலையர் எழிற்கிரியில் - நிலவு வீசுகின்ற திங்களைத் தரித்த சடைமுடியையுடைய திருவண்ணாமலைப் பெருமானது அழகிய மலைமீது, கோமளம் - இளங் கன்னியாகிய மகள், பறிக்கின்ற பூவை மிதிக்கப் பொருள் - கொய்கின்ற பூக்களைக் காலினால் மிதித்தாலும் அதைத் தாங்க முடியாமல் கால் நோகுமென்பாள், அந்தப் பாதத்தினால் - ......, பொறிக்கண் பிசாசுகள் - தீப் பொறிகளைச் சிதறுகின்ற கண்ணையுடைய பேய்கள், நெற்களைத் தூவிப் பொரி பொரித்துக் கொறிக்கின்ற பாலையில் - நெற்களைப் பரப்பிக் கீழுள்ள வெப்பத்தினால் அவை பொரியாகிவிட அவற்றை ஒவ்வொன்றாய் எடுத்துத் தின்னுதற்குரிய அவ்வளவு கொடிய வெப்பமுடைய பாலை வழியில், எப்படிப் போயினள் - எவ்வாறு சென்றாள், எ - று.

312. திரைகட லோடித் திரவியந் தேடென்று செப்புமௌவை
உரைபழு தன்றெனச் சோர்ந்தாள் கழுக்குன்றத் தோர்மடமா
அரைபனிநீர் சந்தனங் கொண்டுபாங்கிய ராற்றியபின் [ன்
இரைகடல் போய்வர வெத்தனைநாளென் றெழுந்தனளே.

உரை:—திரைகடலோடித் திரவியம் தேடென்று செப்பும் ஔவை உரை பழுது அன்று என - அலையுடைய கடலின்மீது கப்பலிற் சென்றாவது பொருள் சம்பாதிக்க வேண்டுமென்று சொன்ன ஔவையார் வாக்குக் குற்றமற்றது என்று சொன்னவுடனே, கழுக்குன்றதது ஓர் மடமான் சோர்ந்தாள் - திருக்கழுக்குன்றத்திலுள்ள ஓர் இளம் பெண் (நாயகன் தன்னைப் பிரிந்து கடல் யாத்திரை செய்யப்போகிறான் என்றெண்ணி) மூர்சசித்து மயக்க மடைந்தாள், பாங்கியர் - அவளது தோழிகள், அரை பனி நீர் சந்தனங் கொண்டு ஆற்றிய பின் - அரைத்த சந்தனத்தோடு சேர்ந்த பன்னீரைத் தெளித்து மூர்ச்சையின் வேகத்தைத் தணித்த பின், இரை கடல் போய்வர எத்தனை நாள் என்று எழுந்தனளே - முழங்குகின்ற கடலின்மீது யாத்திரையை முடித்துக்கொண்டு வருவதற்கு எத்தனை நாளாகுமென்று மூர்ச்சை தெளிந்தெழுந்தாள், எ - று.

## கன்னிக் காட்சி

313. மேகம்பிறைசிலை வேல்குமிழ் வள்ளைவெண் முத்தந்தொண்டை
பூகம்பசுங்கழை தேனுமிழ் காந்தள்வெற் பாலிலைநூல்
நாகங்கதலி யலவன்வரானன் னளினமுண்டு
மாகம் பொழிற்றிருத் தில்லையிலேயொரு வல்லியிலே.

உரை :—மாகம் பொழில் திருத் தில்லையிலே - வானளாவிய சோலை சூழ்ந்துள்ள தில்லைப்பதியிலே, ஒரு வல்லியிலே - ஒரு கொடியிலே (ஒரு மாதினிடத்தே), மேகம் - மேகம்போன்ற கூந்தலும், பிறை - பிறை போன்ற நெற்றியும், சிலை - வில்போன்ற புருவமும், வேல் - வேல்போன்ற கண்ணும், குமிழ் - குமிழ மலரபோன்ற மூக்கும், வள்ளை - வள்ளைத்தண்டு போன்ற காதும், வெண் முத்தம் - வெள்ளிய முத்துபபோன்ற பல்லும், தொண்டை - கொவவைக கனிபோன்ற உதடும், பூகம் - கமுகுபோன்ற கழுத்தும், பசும் கழை - இள மூஙகில்போன்ற தோளும், தேனுமிழ் காந் தள் - தேனைச சிந்துகின்ற காநதட் பூப்போன்ற கையும், வெற்பு - மலை போன்ற தனமும், ஆலிலை - ஆலிலைபோன்ற வயிறும், நூல் - நூலிடை போன்ற இடையும், நாகம் - பாம்பின் படம்போன்ற அல்குலும், கதலி - வாழைத்தண்டுபோன்ற துடையும், அலவன் - நண்டுபோன்ற முழங்காலும், வரால் - வரால் மீன்போன்ற கணைக்காலும், நல் நளினம் - அழகிய தாமரை போன்ற அடியும், உண்டு - உள்ளன, எ - று.

## கிளிவிடு தூது

314. இளந்தத்தையேநல் லமுதத்தை யேபுசித் தென்கரத்தில்
வளர்ந்தத்தையாது முணர்ந்திலை யேமய லாகிமனம
தளர்ந்தத்தை யேயென் றிருவரங்கேசற்குச் சாற்றச்சொன்னால்
அளந்தத்தை யேயளந் தாப்பின்னையாது மளந்திலையே.

உரை :—இளந் தத்தையே - மடக்கிளியே !, நல் அமுதததையே புசித்து என் கரததில் வளாந் ததனதை - வளமான பாலுணவையே உண்டு என் கையில் வளர்க்கப்பெற்றதை, யாதும் உணர்ந்திலையே - கொஞ்சமும் நீ அறியவில்லையே, மயலாகி மனம் தளாந் தத்தையே - காதல் மயக்கங் கொண்டு உள்ளம் தளர்சசியுற்றதை, என் திருவரங கேசர்க்குச சாற்றச சொன்னால் - என் காதலராகிய சீரங்கப் பெருமானுக்குத தெரிவிக்கும்படி ஏவினால், அளந் ததனதயே அளந்தாய் - சொன்னதையே திருப்பித் திருப் பிச் சொல்லுகிறாய், பின்னை யாதும் அளநதிலையே - வேறொன்றையும் நன்றாகப் பேசத் தெரியவில்லையே, எ - று.

315. ஆயத்துறையிற் பிறந்துவந் தந்தணர் பால்குடித்து
மாயக்கண்வேசை யிடத்தே வளர்ந்துவண் ணானொருநாள்
ஏயப்புலவ ரிடத்தெட்டு நாள்செட்டி யேனென்றுபின்
போயக்கசாலை புகுந்தனள் காணந்தப் பொய்ம்மகளே.

உரை:—அந்தப் பொய் மகளே - பொய் யென்கின்ற அந்த மாதானவள், ஆயத் துறையிற் பிறந்து - சூதாடுகைகளத்தி லவதரித்து, வந்து அந்தணர் பால் குடித்து - பார்ப்பாரிடத்திற் போய்ப் பாலைப்பருகி, மாயக்கண் வேசை யிடத்தே வளர்ந்து - தந்திரப் பார்வையுடைய விலைமகளி ரிடத்திலே வளர்ச்சி யடைந்து, வண்ணான் ஒருநாள் ஏய - வண்ணானிடத்தில் ஒருநாள் தங்கி, புலவ ரிடத்தே எட்டு நாள் - பாவலரிடத்தில் எட்டுநாளிருந்து, செட்டி ஏனென்று பின் போய - வியாபாரியை என்னவென்று வினவிக்கொண்டு அவனைத் தொடர்ந்துபோய, அக்க சாலை புகுந்தனள் - தட்டார் பணி செய்யு மிடத்திற் சென்றுறைந்தனள், காண்-அசை, எ - று.

316. பூச்சிலைக் கன்னற்கைச் சேஷாசலேந்ரன் பொருப்பிடத்தே
காய்ச்சியபாலைக் குடிபோவென் றேனந்தக் காரிகையும்
பேச்சிலெத் துக்கள்ளி பின்கைகைராமற்கு முன்சொன்னதா
வாய்ச்சுதென் றேநடந் தாள்பாலையான வனந்தனிலே.

உரை:—பூச்சிலைக் கன்னல் கை சேஷா சலேந்திரன் பொருப்பிடத்தே - கரும்பாகிய வில்லையும் கை நிறைந்த பூவையு முடைய மன்மதன்போன்ற சேஷா சலேந்திரனுடைய மலையிடத்தே, காய்ச்சிய பாலை குடி போ என்றேன் - சுட வைத்த பாலைக் குடிக்கும்படி போகச் சொன்னேன், அந்தக் காரிகையும் - அந்தப் பெண்ணாகிய என் மகளும், பேச்சில் எத்துக் கள்ளி - சொல்லுகின்ற சொல்லுக்குப் பொருள் வேறு கொண்டு ஏமாற்றுகின்ற திருட்டுக் குணமுடையவ ளாதலால், கைகை ராமற்கு முன் சொன்னதா வாய்ச்சுது என்று - கைகேசி இராமபிரானுக்குக் காட்டுக்குப் போகும்படி சொன்னதுபோலத் தனக்கும் என் பேச்சு பொருத்தமானதென்றெண்ணி, பாலையான வனந்தனிலே பின் நடந்தாள் - சுரநெறியிலே தலைவன் பின் சென்றாள், எ - று.

குறிப்பு:—பாலைக் குடிபோ வென்றதை தலைவனோடு பாலையிற்போய்க் குடி யிருக்கும்படி தாய் சொல்லியதாக மகள் கருதியது.

317. அணியார் கரிக்கை நறுந்தும்பை கங்கை யறுகுடனே
பணியார் சடாடவிக் கச்சாலைநாதர் பனிவரையில்
தணியாத மாமதப் பேய்பிடித் தாடுமித் தையலுக்கு
மணியாட்டி னால்விடுமோ சொல்லுவீ ரிந்த மாநிலத்தே.

உரை :—அணியார் கடுக்கை நறுந்தும்பை யறுகுடனே - அழகான கொன்றைப்பூ வாசனையுள்ள தும்பைப்பூ கங்கை அறுகென்னு மிவற்ருேடு, பணியார் - பாம்பும் சேர்ந்து தங்கும், சடாடவி - காடுபோன்ற சடையையுடைய, கசசாலை நாதர் பனி வரையில் - கச்சாலேசுவரருடைய குளிர்ந்த குன்றின்மேல், தணியாத மாமதப் பேய் பிடித்தாடும் இத் தையலுக்கு - தீராத பெரிய மோகப் பிசாசின் வசப்பட்டு வருந்தும் இப்பெண்ணுக்கு, மணியாட்டிஞல் - அதர் தொங்கும் கழுத்தையுடைய ஆட்டுப் பலியிஞல், விடுமோ - அப்பேய் நீங்குமோ, இந்த மாநிலத்தே சொல்லுவீர் - இந்த உலகத்தி லுள்ளவர்களே சொல்லுவீர்களாக!, எ - று.

318. பாதாதிகேச முதலா யிவளைப் படைத்தமலர்
வேதாமருங்குல் வெளிவைப்ப ஞேவிரி பூதலத்துன்
ஆதாரமினறி யிரண்டிளநீரந் தரநிறகுமோ
ஏதாகிலுஞ்சற்றங் கில்லா திராதிடை யேந்திழைக்கே.

உரை :—மலர் வேதா - தாமரைப் பூவிலிருக்கும் அயன், இவளைப் பர்தாதி கேச முதலாய்ப் படைத்து - இவளுக்கு அடிமுதல் முடிவரையெல்லா வுறுப்புக்களையு முண்டாக்கி, மருஙகுல் வெளி வைப்பஞே - இடையை ஆகாசமாக ஒன்று மில்லாமல் வைத்து விடுவஞே, விரி பூதலத்துள்-அகன்ற பூவுலகத்தின்கண், ஆதார மின்றி இரண்டு இளநீர் அந்தரம் நிற்குமோ - கீழே தாங்குவது யாது மில்லாமல் இரண்டு இளநீர் போன்ற தனஙகள் ஆகாசத்தில் நிலை பெறுமோ, ஏந்திழைக்கே - ஆபரண மணிந்த இப்பெண்ணுக்கு, இடை ஏதாகிலும் சற்று அஙகில்லாது இராது - இடையானது ஏதாவது ஒரு சிறிது அது இருக்கவேண்டிய விடத்தில் இருநதே தீரும், எ - று.

319. குணமிருந்தாலுங் குலமிருந்தாலுங் கொழுந்தமிழின்
மணமிருந்தாலு மதியிருந்தாலும வழுத்திடுவங்
கணமிருந்தாலு மொர்காசும பெருதுசிங் காரவரைப்
பணமிருந்தாலவர்க் கெல்லாரு மஞ்சலி பண்ணுவரே.

உரை :—குண மிருந்தாலும் - நல்ல பண்பு ஒருவனிடத்தி லிருந்தாலும், குல மிருந்தாலும் - உயாந்த குலத்திற் பிறந்திருந்தாலும், கொடுந்தமிழின் மண மிருந்தாலும் - வளமான தமிழ் வாசனையோடு கூடிய கல்வியிருநதாலும், மதி யிருந்தாலும் - இயற்கை யறிவு இருந்தாலும், வழுததிடுவஙகண மிருந்தாலும் - யாவரும் பாராட்டும் நட்புத் தனமை யிருந்தாலும், ஒரு காசும் பெருது - அவைகள் சமயததில் ஒரு காசு அளவுகூட மதிப்புத் தர மாட்டாது, சிஙகார அரைப்பண மிருந்தால் - பார்ப்பதற்கு அழகாகிய அரைப்பணக் காசு மாத்திரம் ஒருவனிடமிருந்தால், எல்லாரும் அஞ்சலி பண்ணுவர் - அக் காசுடையவர்களை யெல்லாரும் வணங்குவர், எ - று.

குறிப்பு :—அரைப்பணம் என்பதற்கு அரையிடத்துள்ள பாம்புப் படம் போன்ற அல்குலென்று பொருள்கொண்டு, அதனையுடைய மாதரை யெல்லாரும் மதிப்பா என்று பொருள் கூறுவாருமுளர்.

320. உரகத்தி லேகிடப் பான்சக்ரபாணி யுயர்ந்தகும்பக்
கரகத்தி லேகிடப் பான்குறு மாமுனி கன்னியர்கள்
விரகத்தி லேகிடப் பான்காம ராசன் மிகுந்தவெழு
நரகத்தி லேகிடப் பான்கொழு மூர்முத்து நாகப்பனே.

உரை :—சக்ரபாணி உரகத்திலே கிடப்பான் - சக்கராயுதத்தைக் கையிலேந்திய திருமால் பாம்பணையின்மேற் பள்ளிகொள்ளுவார், குறுமாமுனி யுயர்ந்த கும்பக் கரகத்திலே கிடப்பான் - அகத்தியர் உயர்ந்த குடமபோன்ற கலசம் அல்லது கமண்டலத்திற்கருகே பள்ளிகொள்ளுவார், காமராசன் கன்னியர்கள் விரகத்திலே கிடப்பான் - மன்மத மன்னன் சிறு பெண்களுடைய மயலிலே தோய்வான், கொழுமூர் முத்து நாகப்பன் மிகுந்த எழு நரகத்திலே கிடப்பான் - கொழுமூரிலுள்ள முத்து நாகப்பனென்பவன் கொடுமையான எழு நரகங்களிலுங் கிடந்து வருந்துவான், எ - று.

321. சேய்க்கறியுண்ட சிவன்மேலன் பற்றவன் சீசீயவன்
வாய்க்கறியாத விடக்கா னதுமில்லை மாக்கறியும்
காய்க்கறி யென்பதுவும் வேண்டான்சம்பாரங் கனக்கவிட்ட
நாய்க்கறி யும்புசிப் பான்கொழு மூர்முத்து நாகப்பனே.

உரை :—கொழுமூர் முத்து நாகப்பன் - கொழுமூரிலுள்ள முத்து நாகப்பனென்பவன், சேய்க்கறியுண்ட சிவன்மேல் அன்பற்றவன் - பிள்ளைக் கறி யருந்திய சிவபெருமானிடத்தே பக்தியில்லாதவன், சீசீ அவன் வாய்க் கறியாத விடக்கானதுமில்லை - அருவருக்கத்தக்க அவனுடைய நாவினால் சுவை பார்க்கப்படாத ஊன் யாதுமில்லை, மாக்கறியும் காயக்கறி யென்பதும் வேண்டான் - மாவினால செய்த பண்டங்களும் காய்களினால் சமைத்த துணை யுணவுகளும் அவன் விரும்புவதில்லை, சம்பாரங் கனக்க விட்ட நாய்க் கறியும் புசிப்பான் - மசாலை மிகுதியாகக் கலந்த நாயின் மாமிசத்தையும் அவன் உட்கொள்ளுவான், எ - று.

322. தருமிகரான கரன்செல்வ நாளுந் தழைக்கும் புல்லூர்ப்
பெருவயனுடு தனிலெலனைப் போலெலார் பிடாரன்வந்தே
ஒருகுடங் கொண்டொரு பாம்பாட் டினனிவ் வுலகினுள்ளே
இருகுடங்கொண்டரைப்பாம்பாட்டுவதென்னவேந்திழையே

உரை :—ஏந்திழையே - நகையணிந்த மாதே!, தருமிகரான கரன் - கற்பகத் தருப்போன்ற வண்மையுள்ள கரனென்பவனுடைய, செல்வம் நாளும் தழைக்கும் - ஐசுவரியம் ஒவ்வொரு நாளும் ஓங்கி வளர்கின்ற,

புல்லூர்ப் பெருவயல் நாடுதனில் - புல்லூரைச சார்ந்த பெரிய வயல்களை யுடைய நாட்டுப்புறத்தில், என்னைப்போல ஒரு பிடாரன் வந்து - என்னைப் போல ஓர் பாம்பாட்டி போய் ஒரு குடம் கொண்டு ஒரு பாம்பு ஆட்டினன் - ஒரு குடதனதை வைத்துககொண்டு அதிலுள்ள பாம்பை விளையாடச செயு தான், இவ்வுலகிலுள்ளோர் இரு குடம் கொண்டு அரைப் பாம்பு ஆட்டுவது என்ன - இந்தப் பூமியின்கண் இரண்டு குடத்தை வைத்துக்கொண்டு அரைப் பாம்பை யாட்டுவது என்ன? (அதாவது குடம்போன்ற இரண்டு தனங்களை வைததுக்கொண்டு அரைப் பக்கததிலுள்ள பாம்புபோன்ற அல்குலை நீ அசைப்பது) என்ன அதிசயம், எ - று.

323. தேனூட்டு முல்லைத் தொடைரகுநாதன் செழித்தகழல்
பூநாட்டு மனனர் தொழாம லிரார்மணிப் பூணணிந்த
வானூட்ட ரமபையர் மண்ணூட்டரசர் மணததினுக்குக்
கானூட்டு வரிவன் கைநாட்டும் வேலினைக் கண்டுகொண்டே.

உரை:—தேனூட்டு முல்லைத் தொடை ரகுநாதன் - தேன் நிலையாகத தஙகிய முல்லைப் பூமாலையைத் தரித்த ரகுநாத மன்னனது, செழித்த கழல் - மிகுதியான வீரத்தை, பூ நாட்டு மன்னர் தொழாமல் இரார் - உலகத்திலுள்ள பல தேசத்து வேந்தாகள் போற்றாதிருக்க மாட்டார்கள், இவன் கை நாட்டும் வேலினைக் கண்டு கொண்டே - இவன் பகைவரை வெல்லுதற்குக் கையில் நிலையாகத தரிக்கின்ற வேலாயுதத்தைப் பாாதது, வான் நாட்டு அரம்பையா - தெய்வலோக மாதர்கள், மண்ணூட்டு அரசர் மணததினுககுக் கால நாட்டுவர் - பூவுலக மன்னர் அவன் வேலினாலிறந்து வீரசுவாககம வருஙகால் அவர்களை மணந்து கொள்வதற்குத் தொடக்கமாக மணத் தூண் நிறுத்தவர், எ - று.

324. ஞாயிறு போய்விழத் திங்கள்வந் தெய்திட நண்ணியசெவ்
வாயனல் தூவப் புதனமபு காயநல் வியாழம்வர
மேயிரு வெள்ளிக் கலைசோர நானுன்னை மேவுதற்குத்
தாய்சனி யாயின ளேரகுநாத தளசிங்கமே.

உரை :—ரகுநாத தளசிஙகமே - ரகுநாத னென்னும் பெயருடைய சிஙகம்போன்ற சேனை தலைவனே!, ஞாயிறு போய விழ - சூரியன் அஸ்த மிக்கவும், திஙகள் வந்து எய்திட - சந்திரனுதயமாய், நண்ணிய செவவாய் அனல் தூவ - நெருஙகிய செவவாயானது நெருப்பைச் சிதற அல்லது நெருஙகிச சிவப்பு நிறமுடைய நெருப்பைத் திஙகள் தூவ, புதன் அம்பு காய - அதனையறிநத மன்மதன் வெப்பமுண்டாக்கவும், நல் வியாழன் வர - நல்ல வியாழ நோக்கேற்பட அல்லது நல்ல பொன் வந்து சேர, மேயிரு வெள்ளிக் கலைசோர - விரும்பத்தக்க பெரிய வெள்ளிய சேலை நழுவவும்,

நான் உன்னை மேவுதற்கே - நான் உன்னோடு புணர்வதற்கு, தாய் சனியாயி னளே - தாய் சனியன்போல இடைஞ்சல் செய்பவளானாள், எ-று.

325. ஆடியநாகஞ் சரோருகம் பானுநல் லம்புலியும்
சூடியநாதர் நயனமு மாலம்புஞ் சொற்பனுவல்
பாடியபாலனு மாய்வந்த தால்வெண் பணிலவயல்
கோடிய கோன்சிவந் தான்றிருமார்பிற் குளிர்தொங்கலே.

உரை :—வெண் பணில வயல் கோடிய கோன் - வெள்ளைச் சங்குகள் வயல்களிலே விளைந்த செல்வப்பெற்ற நிலத்ததிபதியாகிய, சிவந்தான் திரு மார்பில குளிர் தொஙகலே - சிவந்தானென்ற பிரபுவின் அழகிய மார்பில் தரித்த தண்ணிய மாலையானது, ஆடிய நாகம் சரோருகம் பானு நல்லம்புலி யும் சூடிய நாதர் நயனமும் - ஆடிய பாம்பையும் தாமரைப் பூவையும் திரு மார்பினமேலும் சூரியனையும் அழகிய சந்திரனையும் திருக் கண்களாகவும் அணிந்துடைய மன்மதனை யெரித்த சிவனது கண் போலவும், மால் அம் பும் - சேதுபந்தனத்தில் கடலை யடைத்த இராமபிரானது அம்புபோலவும், சொற்பனுவல் பாடிய பாலனுமாய் - சிறந்த அருட்பதிகங்களை எலும்பைப் பெண்ணாகும் பொருட்டுப் பாடிய திருஞானசம்பந்தர் போலவும், வநதது - கிடைகப்பெற்றது, ஆல் - அசை, எ - று.

326. முருகார் முளரியு முள்ளியு முண்டக மூரியரம்
பொருகா ரிரும்புங் கனகமும் பொன்பொரித் தாரகையும்
குருகாருங் கெண்டையு மீனெனல் போலென் குரிசிலுக்கு
வருகாத லேதந்த மங்கையுநானு மடந்தையரே.

உரை :—முருகார் முளரியு முள்ளியு முண்டக மெனல்போல் - வாசனை நிறைந்த தாமரையும் முள்ளிப் பூவும் முண்டகமென்று சொல்லப்படுதல் போலவும், மூரி யரம் பொருகார் இரும்பும் கனகமும் பொன என்போல் - வலிமையான அரததினால் தேய்க்கப்படுகின்ற கருநிறமான இரும்பும் தங்க மும் பொன்னென்று பேசப்படுதல் போலவும், பொரித தாரகையும குருகா ருங கெண்டையும் மீனெனல் போல் - ஒளிப்புள்ளியாகத தோனறும் நட்சத் திரஙகளும் நாரையைத தின்னும் கெண்டைமீனும மீனென்ற பெயர்பெற் றதுபோலும், என்குரிசலுக்கு வருகாதலே தநத மஙகையும் நானும - என் கணவனுககுப் புதிய மோகத்தை விளைவித்த பரத்தையும அவன மனைவி யாகிய நானும், மடந்தையரே - ஒரு தனமையான பெணகளாவோம், எ - று.

இரப்பா ரியல்பு

327. எண்சாணுக மிடியனுக்கிங் கிரத்தலுனிலேழ் நடையாறும்
கண்காணுமுன் னைந்தாகுங் காணினான்காங் கையேந்தில்
தண்கார்நிதியேயெனவோதிற்றவர்போன்மூன்றுமிரண்டாகும்
நண்பாவித லில்லையென்றான் மன்பாலாம்பொன் பாலுயிரே.

உரை :—இங்கு - இப்பூமியில், மிடியனுக்கு - வறியனுக்கு, எண் சாண் ஆகம் - எட்டுச சாண் உயரமுள்ள தேகமானது, இரத்தல் எனில் ஏழ் - பிச்சை யேற்பதைக் கருதிய மாத்திரத்தில் ஏழு சாணுகக் குறுகும், நடை ஆறும் - பிசைக்குச் செல்வதால் அது ஆறு சாணுகும், கண் காணுமுன் ஐந்தாகும் - ஈபவனை நேரிற் பார்ப்பதற்கு முன் அது ஐந்து சாணுகும், காணில நான்கும் - அவனைப் பார்த்தால் நான்கு சாணளவிற் குறுகும், கையேந்தில் தவர்போல் மூன்றும் - கையை நீட்டினல் தவவேடம் பூண்ட வாமனன்போன்ற மூன்று சாணுயரமாகும், தண் கார் நிதியே என ஓதில் - குளிர்ந்த மேகம்போன்ற செல்வனே யென்று புகழுங்கால், இரண்டாகும் - இரண்டு சாணுயரமாகும், நண்பா ஈதல் இலை என்றால-பிரியமாயப் பரிசளிப் பது ஒன்றுமில்லை யென்றால், பொன் பால் உயிர் - பொன்னினமே லாசை வைத்த அவனுயிரானது, நமன் பாலாம் - காலன் கைப்படும், எ - று.

வாழ்வு நிலையாமையின் அறத்தை விரைந்து செய்க வென்பது

328. இன்றருணே தயங்கண்டோ முயர்ககன
முகட்டின்மிசை யிந்தப் பானு
சென்றடைய நாங்காண்ப தையமதைக்
காண்கினுமேற் றிசையி ருக்குங்
குன்றடையு மளவுநா முயிர்வாழ்வ
தரிததன்முன் குறுகுங் கூற்றம்
என்றச்சத் துடன்மனமே மறவாம
லறவழியி லேகுவாயே.

உரை :—மனமே - உள்ளமே !, இன்று அருண உதயம் கண்டோம் - இப்போது சூரிய னுதித்ததை நாம் பார்த்தோம், உயர் ககன முகட்டின் மிசை இந்தப் பானு சென்றடைய நாம் காண்பது ஐயம் - உயர்ந்த வானத் தின் உசசிமீது இந்தச சூரியன் வருவதை நாம் பார்ப்பது சந்தேகம், அதைக் காணகினும் - சூரியன் உசசியில் வருவதைப் பார்க்கக் கிடைத்தா லும், மேற்றிசையிருககும் குன்றடையும் அளவும் நாம் உயிர் வாழ்வது அரிது - மேலைத் திககிலுள்ள அத்தமன கிரியை யது சேரும்வரை நாம் பிழைத்திருப்பது கடினமாகும், அதன் முன் குறுகும் கூற்றம் - அந்நேரத் திற்கு முன்னே நம்பால் எமன் வரக் கூடும், என்று அச்சத்துடன் மறவா

மல் அறவழியில் ஏகுவாயே - என்று நினைந்து இலையாமையை அஞ்சி மறதியில்லாமல் தருமநெறியில் நடப்பாயாக !, எ - று.

## விருந்தோம்பு முறை

329. விருந்தின ஞக வொருவன்வந் தெதிரின்
வியத்தனன் மொழியினி துரைத்தல்
திருந்துற நோக்கல் வருகென வுரைத்த
லெழுதல்முன் மகிழ்வன செப்பல்
பொருந்துமற் றவன்றனருகுற விருத்தல்
போமெனிற் பின்செல்வ தாதல்
பரிந்துநன் முகமன் வழங்கலிவ் வொன்பா
னொழுக்கமும் வழிபடும் பண்பே.

உரை:—விருந்தினனுக ஒருவன் வந்தெதிரின் - ஒருவர் புதிய அதிதியாக எதிர்ப்பட்டால், வியத்தல் - அவரைக் கண்டதுபற்றிப் புது மகிழ்சசி காட்டுதல், நன்மொழி இனிதுரைத்தல் - உபசாரச சொற்களை மென்மையாகப் பேசுதல், திருந்துற நோக்கல் நல்ல விருப்பத்தோடு பார்த்தல், வருகென வுரைத்தல் - (வீட்டிற்கு வந்தால்) வாருங்களென்று வரவேற்றல், எழுதல் - இருக்கையிலிருந்தால் எழுந்து வரவேற்றல், முன் மகிழ்வன செப்பல் - மகிழ்ச்சி விளைக்கத்தக்கனவற்றைக் கூறுதல், பொருந்துமற்று அவன்றன் அருகுற விருத்தல் - விருந்தாளிக்குத் தகுந்த முறையிலிருக்கவேண்டிய நெருக்கத்தி லிருத்தல், போமெனிற் பின் செல்வதாதல் - விருந்தாளி செல்லக் கருதினுல் அவர் பின்னே சிறிது தூரம் செல்லுதல், பரிந்து நன்முகமன் வழங்கல் - பிரியமாய் உபசார வார்த்தை சொல்லி வெற்றிலை பாக்கு சிற்றுண்டி முதலியன கொடுத்தல், இவ வொன்பான் ஒழுக்கமும் வழிபடும் பண்பே - ஆகிய இவ்வொன்பது வகைச செயல்களும் விருந்தினரைப் போற்றும் நன்முறை யாகும், எ - று.

## பொருளாசைப் பல தீமைகளை விளைவிக்கு மென்பது

330. எவரை யும்மனந் திரிப்பது மீன்றவர் தமக்குத்
தவறி ழைத்திடப் புரிவதுந் தையலார் தங்கள்
கவறில் கற்பினை யொழிப்பதுங் கற்குநூல் கலைகள்
அவையெ லாங்கெடக் கெடுப்பதும பொருள்விருப் பன்றே.

உரை:—எவரையும் மனம் திரிப்பதும் - எத்தன்மையருடைய வுள்ளத்தையும் நல்லியற்கைக்கு மாருகச் செய்வதும், ஈன்றவர் தமக்குத் தவறிழைத்திடப் புரிவதும் - பெற்றோர்களுக்குக் கெடுதி செய்யும்படி தூண்டுவதும், தையலார் தங்கள் கவறில் கற்பினை யொழிப்பதும் - பெண்களு

டைய பிளவுபடாத கற்பு நிலையை மாற்றுவதும், கற்கு நூல்களை அவை யெலாம் கெடக் கெடுப்பதும் - படிக்கின்ற இலக்கியங்களுக்குச் சபைகளி லெங்கும் தவறாகப் பொருள் கூறிக் கெடுப்பதும், பொருள் விருப்பு - பொரு ளிடத்துக் கொண்ட பேராசையே ஆகும் அன்றே - அசை, எ - று.

## சந்ததியற்ற இல்வாழ்க்கை பயனற்றது

331. உந்து நீர்க்கட லுடுத்தபார் முழுவது மொருங்கே
வந்து தாடொழு மரசியல் வளமெலாம் பெறினும்
இந்தி ராதிபர் பெரும்பதத் திருக்கையெய் திடினும்
மைந்த ரின்றியே வாழ்வது வாழ்வுமற் றன்றே.

உரை:—உந்து நீர்க்கடலுடுத்த பார் முழுவதும் - அலைகள் வீசுகின்ற சமுத்திரத்தை யுடையாகக் கொண்ட பூமியிலுள்ள மனித ரெல்லாரும் ஒருங்கே வந்து தாள் தொழும் - ஏகமனதாய் நெருங்கித் தனது அடிகளைக் கும்பிடக்கூடிய, அரசியல் வளமெலாம் பெறினும் - இராஜபதவியின் செழிப்பெல்லாம் ஒருவன் பெற்றாலும், இந்திராதிபர் பெரும்பதவி இருக்கை எய்திடினும் - இந்திரன் முதலிய தெய்வத் தலைவர்களுடைய உயர்ந்த பதவிகளில் போய் இருக்கும் பேற்றினைப் பெற்றாலும், மைந்தர் இன்றியே வாழ்வது வாழ்வு மற்றன்றே - பிள்ளைகளின்றி வாழ்கின்ற வாழ்க்கை இனிமையான வாழ்க்கையாகாது, எ - று.

## வியபிசாரியின் செய்கை பூனையின் செய்கை

332. ஒருவரு மறிகிலா ரெனவோ ரொண்ணுதல்
கரவினிற் குமரரைக் கலத்தல் பூசைதன்
இருவிழி மூடிமற் றெவர்கள் பார்வையும்
தெரிகிலா தெனப்பயன் திருட லொக்குமே.

உரை:—ஓர் ஒண்ணுதல் - ஒளியுடைய நெற்றியுடைய ஒரு பெண்ணா னவள், ஒருவரு மறிகிலாரென - தன் செய்கை யுலகத்தில் பிற ஒருவருக் கும் தெரியாதென்று எண்ணிக்கொண்டு, கரவினில் குமரரைக் கலத்தல் - ஒளிப்பாக இளைஞரோடு புணர்தல், பூசை தன் இருவிழி மூடி - பூனை யானது தனது இரண்டு கண்ணையும் மூடிக்கொண்டு, மற்று எவர்கள் பார் வையும் தெரிகிலாது என - தனக்கு உலகம் இருட்டாய் இருப்பதுபோலப் பிற யாருக்கும் கண் தெரியாதென்று எண்ணிக்கொண்டு, பயன் திருடல் ஒக்குமே - பாலைக் கள்ளத்தனமாய்க் குடிப்பது போலாகும், எ - று.

## பெரியோர் எத்தொழிலைச் செய்யினும் கடவுளையே நினைத்துக்கொண்டிருப்பர்

333. சோரமனை யாட்டிமிகச் சோரபிரான் மேன்மனதாச்
சேரத் தொழில்செய்யுந் திட்டம்போல்—பேர்பெரியர்
அத்தனடி மேன்மனத்தை யானது வைத்துகந்தே
எத்தொழிலுஞ் செய்வ ரிசைந்து.

உரை :—சோர மனையாட்டி மிகச சோர பிரான் மேல்மனதாய் - வியபிசாரஞ் செய்யும் கள்ளத் தனமையுடைய ஒருவன் மனைவி உண்மை நாயகனைப் பார்க்கிலும் கள்ளப் புருடன்மீது தன் உள்ளம் அதிகமாய்த் தாவும்படி, சேரத தொழில் செய்யும் திட்டம்போல் - அவனைத தான் போய அடைவதற்கு வேலைகளைச செய்யும் உறுதியைப்போல, பேர் பெரியா - மிக வுயர்ந்த பெரியோர்கள், அத்தன் அடிமேல் மனத்தே ஆனது வைத்து உவந்தே - கடவுளுடைய திருப்பாதத்தை தங்கள் நெஞ்சில் நீங்காமல் வைத்து மகிழ்ந்து கொண்டே, இசைந்து எத்தொழிலும் செய்வர் - அவன் கருணைக்குப் பொருத்தமாகவே இசைந்து எந்தத் தொழிலையும் நிகழ்த்துவர், எ - று.

## உழுதொழிலின் சிறப்பு •

334. அலகில்லா மறைவிளங்கு மந்தணரா குதிவிளங்கும்
பலகலையாந் தொகைவிளங்கும பாவலர்தம பாவிளங்கும
மலர்குலாந் திருவிளங்கு மழைவிளங்கு மனுவிளங்கும
உலகெலா மொளிவிளங்கு முழவருழு முழவாலே.

உரை :—உலகெலாம் ஒளி விளங்கும் உழவர் உழும் உழவாலே - உலகத்திலுள்ளார் எல்லாரும் புகழும்படியாக உழவர்கள் செய்யும் உழவு தொழிலினாலே, அலகில்லா மறை விளங்கும் - எல்லையற்ற நுட்பமான சமயநூல்கள் பிரகாசத்தை யடையும், அந்தணர் ஆவுதி விளங்கும் - பிராமணர் செய்கின்ற (குற்றமற்ற) வேள்விகள் நடைபெறும், பலகலையாம் தொகை விளங்கும் - பல நூல்களின் பயிற்சி யனைத்தும் விளக்க மடையும், பாவலர்கள் பா விளங்கும் - புலவர்களுடைய பாடல்கள் சிறப்பாகப் பாடப்பெறும், மலர் குலாம் திரு விளங்கும் - தாமரைப் பூவில் வதியும் இலக்குமியின் கடாட்சம் எங்கும் ஏற்படும், மழை விளங்கும் - மேகங்கள் நன்கு மழை பெய்யும், மனுவிளங்கும் - அரசனது நீதிமுறை தழைத்தோங்கும், எ - று.

## திரவியத்தை நல்வழியிற் செலவிடாவிடின் அது விருத்தியாகாது

335. திரவியம் வந்தபோது சேர்ந்தபல் லோர்க்கு மீந்தால்
வரவர வளரு மந்த வகைசெயா விடிற்கெட் டேகும்
ஒருகலிங் கினைவிட் டக்கா லோதநீர் போக்குப் போகப்
பெருகுறு மேரி யில்லா விடினடு வணையைப் போக்கும்.

உரை :—திரவியம் வந்தபோது சேர்ந்த பல்லோர்க்கும் ஈந்தால் - செல்வங் கிடைத்தபோது அதனைத் தன்பால் வந்தடைந்த உறவினர்க்கும் இரவலர்க்கும் நன்கு கொடுத்தால், வரவர வளரும் - அது நாளுக்கு நாள் விருத்தியடையும், அந்த வகை செய்யாவிடில் கெட்டேகும் - அந்த முறையாக அதனை வழங்காமற் போனால் அது அழிந்தொழியும் (அது எப்படி எனில்), ஒரு கலிங்கினை விட்டக்கால் - ஒரு ஏரியின் மதகுகளில் ஒன்றைத் திறந்துவிட்டால், ஓதநீர் போக்குப் போக - பெரிய வெள்ளமானது தன் போக்கிலே செல்ல, பெருகுறும் ஏரி - பெரிய குளமானது பெருகிக் கொண்டிருக்கும், இல்லாவிடின் - போக்கு இல்லாவிட்டால் நடு அணையைப் போக்கும் - அதன் மத்தியிலுள்ள கரையை உடைத்து ஏரியில் நீரில்லாமற் போகும், எ - று.

## இன்ன காரியங்களால் வியாதி தோன்றுமெனல்

336. தன்னைத்தான் பேணு தாலுஞ் சரீரத்தின் தண்டிப்பாலும்
பின்னுற்ற விசாரத் தாலும் பின்சல மலத்தி னாலும்
அன்னத்தை யொறுப்ப தாலு மரையுடன் முழுக லாலும்
தன்மத்தை யிகழ்வ தாலுஞ் சரீரத்தில் வியாதி தோன்றும்.

உரை :—தன்னைத்தான் பேணுதாலும் - ஒருவன் தன்னுடைய வுடம்பைத தக்க உணவு முதலியவைகளால் காப்பாற்றாவிட்டாலும், சரீரத்தின் தண்டிப்பாலும் - உடம்பை மிகுந்த வேலை முதலியவற்றால் துன்புறுத்துவதனாலும், பின்னுற்ற விசாரத்தாலும் - அறிவு நன்றாக வுதித்த பின்னேற்பட்ட கவலையினாலும், பின் சல மலத்தினாலும் - மல சலங்கள் சரியாகக் கழியாமல் உடம்பிற் றங்குவதினாலும், அன்னத்தை ஒறுப்பதாலும் - உணவை வெறுத்துத் தள்ளுவதினாலும், அரை உடல் முழுகலாலும் - பாதி யுடம்பை மாத்திரம் நனைத்து முழுகுவதாலும், தன்மத்தை இகழ்வதாலும் - அறச செய்கையை அவமதிப்பதாலும், சரீரத்தில் வியாதி தோன்றும் - உடம்பிலே நோயுண்டாகும், எ - று.

## பகைக்கத் தகாதவர்கள்

337. மன்னவன் கணக்கன் பார்ப்பான் வலுவுள்ளோன் மந்திரவாதி
பொன்னுள வன்கு ருக்கள் புலவன்பண் டிதனமைச்சன்
அன்னஞ்செய் திடுவோ னெங்கு மடங்காத துட்ட னிப்
பன்னிரு பேரோ டென்றும் பகைகன விலுங்கூ டாதே.

உரை:—மன்னவன் - வேந்தன், கணக்கன் - ஊர்க்கணக்கன், பார்ப்பான் - முனிவனுயிருப்பவன், வலுவுள்ளவன் - திறமையுள்ளவன், மந்திரவாதி - மந்திர நூலுணர்ந்தவன், பொன்னுளவன் - செல்வவான், குருக்கள்- ஆசாரியன், புலவன் - கற்றவன், பண்டிதன் - மருத்துவன், அமைசசன் - மந்திரி, அன்னஞ் செய்திடுவோன் - பரிசாரகன் அல்லது சமையற்காரன், எங்கும் அடஙகாத துட்டன் - யாவரும் அடக்க முடியாத குறும்புககாரன், ஆம் இப் பன்னிரு பேரோடு என்றும் பகை கனவிலும் கூடாது - என்ற இந்தப் பன்னிரண்டு பேர்களோடும் சொப்பனத்திலுங் கூட விரோதங் கூடாது, எ - று.

## பொருட்பற்றின் இழிவு

338. என்பொருளென் பொருளென்று சீவன்விடு மனமேயொன்
றியம்பக் கேளாய்
உன்பொருளா னலதன்மே லுன்னமம் வரைந்துளதோ
வுன்ற னோடும்
முன்பிறந்து வளர்ந்ததுகொ லினியுனைவிட் டகலாதோ
முதிர்ந்த நீதான்
பின்பிறக்கும் போததுவுங் கூடவிறந் திடுங்கொல்லோ
பேசு வாயே.

உரை:—என் பொருள் என் பொருள் என்று சீவன் விடும் மனமே - என்னுடையது என்னுடையதென்று செல்வத்தில் மிகுந்த பற்று வைத்து உயிரைப் போக்குகின்ற நெஞ்சமே !, ஒன்று இயம்பக் கேளாய் - நான் சொல்லுகின்ற ஒரு காரியத்தை நீ கேட்பாயாக!, உன் பொருளானல் அதன்மேல் உன் நாமம் வரைந்துளதோ - உனக்குரிய சொத்தானல் உன் பெயர் அதன்மேல் இயற்கையாக எழுதப்பட்டுளதோ?, உன்றனோடும் முன் பிறந்து வளர்ந்தது கொல் - உனக்குச் சகோதரன்போல முன்னே பிறந்து வளர்ந்ததோ ?, இனியுனை விட்டகலாதோ - இனிமேல் உன்னை விட்டு இந்த வாழ்க்கையில் நீங்காதிருக்குமா ?, முதிர்ந்து நீதான் பின்பு இறக்கும் போது அதுவும் கூட இறந்திடுங் கொல்லோ - வயோதிகம் அடைந்து சாகும்போது அது உன்னோடு சாகுமா ?, பேசுவாயே - இவற்றிற்குப் பதில் கூறுவாயாக !, எ - று.

## வியபிசாரத்தின் கேடுகள்

339. மற்றொரு வனைச்சேர் மாதிறந் தாலும்
வசைநிற்கு முலகமுள் ளளவும
சுற்றமும வாழ்வுந் துணையுமே நீங்குஞ்
சோரநா யகனுமே மதியான்
பெற்றசந் ததியு மிழிவுறு மாண்ட
பின்னுறுங் கொடுவெறி நரகம்
சற்றுநே ரங்கொள் சுகத்தினால் விளையுந்
தன்மையீ தரிவையீ ருணர்வீர்.

உரை:—மற்றொருவனைச சேர்மாது இறந்தாலும் - தன் நாயகனன்றிப்பிற நாயகனைச சேருகின்ற பெண் செத்தாலும், உலகம் உள்ளளவும் வசை நிற்கும் - உலகமுள்ள காலமெல்லாம் அவளுடைய அபகீர்த்தி நிலைபெறும், சுற்றமும் வாழ்வும துணையுமே நீங்கும் - உறவினரும் சிநேகிதரும் நீங்குவதால் மனதிற்குத் திருப்தியான வாழ்க்கை தொலைந்துபோம், சோரநாயகனுமே மதியான - கள்ளப்புருடன் கூட அவளை நன்கு மதிக்கமாட்டான், பெற்ற சந்ததியும் இழிவுறும் - பெற்ற பிள்ளைக்கும் தாழ்வான பெயரேற்படும், மாண்டபின் கொடுவெறி நரகம் உறும் - இறந்த பின்னும் கொடிய அஞ்சத்தக்க நரகதுன்ப முண்டாகும், சற்றுநேரங் கொள் சுகத்தினால் விளையும் தன்மை இது-சிறிது பொழுது அனுபவிக்கின்ற இன்பத்தினால் அடையும் பயன் இவ்வியல்பாகும், அரிவையீர் உணர்வீர் - பெண்களே இதனை அறியக் கடவீர்களாக!, எ - று.

## எல்லார்க்கும் கவலை ஒரு தன்மைத்தே யென்பது

340. பாலுக்குச் சர்க்கரை யில்லையென் பார்க்கும் பருக்கையற்ற
கூழுக்குப் போடவுப் பில்லையென் பார்க்குமுட் குத்தித்தைத்த
காலுக்குத் தோற்செருப் பில்லையென் பார்க்குங் கனகதண்டி
மேலுக்குப் பஞ்சணை யில்லையென் பார்க்கும் விசனமொன்றே.

உரை:—பாலுககுச சர்க்கரை இல்லை யென்பார்க்கும் - பாலுணவு கொள்ளும் செல்வர்களுள் அதற்கு இனிமையை மிகுதிப் படுத்தக்கூடிய சர்க்கரை கிடையாது என்று வருந்துகிறவர்களுக்கும், பருக்கையற்ற கூழுக்குப் போட உப்பு இல்லை என்பார்க்கும்-சோற்று அவிழ்தயில்லாமல் அரிசி வெந்து கரைந்துபோன கஞ்சிக்குச் சேர்த்துக் கொள்வதற்கு உப்பில்லை என்று வருந்துகின்றவர்களுக்கும், முள் குத்தித் தைத்த காலுக்குத் தோல் செருப்பில்லை என்பார்க்கும் - காலில் முள் அழுந்தி வருந்துகின்ற பாதத்தில் போடுவதற்கு தோலினாலாகிய மிதியடி கிடையாமல் வருந்துகின்றவர்களுக்கும், கனகதண்டி மேலுக்குப் பஞ்சணை யில்லை என்பார்க்

கும் - பொன் கட்டில்மேலே போடுவதற்குப் பஞ்சு மெத்தை கிடையாது வருந்துகின்றவர்களுக்கும், விசனம் ஒன்றே - கவலை யொரு தன்மைத்தா யிருப்பது, எ - று.

### புத்திரர்க்குக் கல்வி புகட்டாமையால் வரும் தீங்கு

341. மாலினு லிருவரு மருவி மாசிலாப்
பாலனைப் பயந்தபின் படிப்பி யாதுயர்
தாலமேற் செல்வமா வளர்த்தல் தங்கட்கோர்
காலனை வளர்க்கின்ற காட்சி போலுமால்.

உரை:—மாலினுல் இருவரும் மருவி - காம மயக்கத்தினுல் ஒரு ஆணும் ஒரு பெண்ணும் கூடி, மாசிலாப் பாலனைப் பயந்தபின் - குற்றமற்ற குமாரனைப் பெற்ற பிற்பாடு, படிப்பியாது உயர் தாலமேல் செல்வமா வளர்த்தல் - அக் குமாரனுக்குக் கல்வி கற்பியாது பயன்பெறக்கூடிய உயர்ந்த வுலகத்தில் தாட்சண்யமாகப் பிள்ளையை அவன் மனம்போனபடி போகவிட்டு வளர்ப்பது, தங்கட்கு ஓர் காலனை வளர்க்கின்ற காட்சிபோலும் - தஙகளுக்கு அவமானத்தையும் துன்பத்தையும் தருகின்ற எமன்போன்ற ஒருவனைப் பேணுகின்ற தோற்றத்தை யுடையதாகும், எ - று.

### சார்ந்தவர்கள் சத்துருக்களா யிருத்தல்

342. கடன்படு பிதாவு மென்றுங் கற்பினிற் றவறித் தீங்கிற்
குடன்படு மன்னை தானு முயர்ந்திடு மழகு தானே
அடர்ந்திடும பாரி வித்தை யறிந்துகல் லாத பிள்ளை
தடங்கட லுலகுள் ளோர்க்குச் சார்ந்தசத் துருக்க ளன்றே.

உரை :—கடன்படு பிதாவும் - கடன் மிகுதியாக வாஙகித் துன்பப்படுகின்ற தகப்பனும், என்றும் கற்பினில் தவறித் தீஙகிற்கு உடன்படும் அன்னை தானும் - எப்போதும் மகள் கற்புநிலை தவறிச செயயும் ஒழுக்கக் கேட்டிற்கு ஒத்திருக்கின்றதாயும், உயர்ந்திடும் அழகுதானே அடாந்திடும் பாரி - பிறர் உள்ளத்தைக் கவரத்தக்க மிகுந்த அழகுடைய மனைவியும், வித்தை யறிந்து கல்லாத பிள்ளை - கல்வியைச சரியாக ஆராய்ந்து படியாத மக்களும், தடஙகடலுலகுள்ளோர்க்கு - அகன்ற சமுததிரஞ் சூழநத வுலகத்திலுள்ள மனிதர்களுககு சாாந்த சத்துருக்களன்றே - குடும்பத்திலேற் படும் பகைவர்களாகும், எ - று.

### மனிதப் பிறவியில் வரும் இன்பமும் இடைஞ்சல்களும்

343. அடுகரி தொடர வீழ வைந்தலை நாகங் காண
விடிகிணற் றறுகின் வேறைப் பற்றிநான் றிடவவ் வேரைக்
கடுகவோ ரெலியும் வந்து கறித்திட வதினின் றேனுக்
கிடைதுளித் தேனக் கின்பம் போலுமிப் பிறவியின்பம்.

உரை :—அடுகரி தொடர - ஒரு வனத்தில் கொல்ல வருகின்ற யானை யானது ஒருவனைப் பின்றொடர்ந்து துரத்த, இடிகிணற்றின் அறுகின் வேரைப்பற்றி - இடிந்து விழும் நிலையிலிருக்கின்ற கிணற்றின் பக்கத்தில் முளைத்த அறுகம் புல்லின் வேரைப் பிடித்துக்கொண்டு, வீழ - உள்ளே குதிக்கப்போன சமயத்தில், ஐந்தலை நாகம் காண - ஐந்து தலையுடைய பாம்பு கிணற்றிற் கிடப்பது தோன்றியதால், நான்றிட - அவ் வேரைப் பற்றிய படியே தொங்கிக்கொண்டிருக்கும்போது, அவ்வேரைக் கடுக ஓர் எலியும் வந்து கறித்திட - அந்த வேரை விரைவாக ஒரு எலி வந்து கடித்துக் கொண்டிருக்கும் நேரத்தில், அதில் நின்றோனுக்கு இடை - அப்படி நின்ற ஒருவனுக்கு இத்தனை அபாயங்களுக் கிடையில், துளித் தேன் நக்கு இன்பம் - மேலே இருக்கும் தேன் கூட்டிலிருந்து சிதறிய ஒரு தேன் துளியை நக்குகின்ற இன்பத்தை, இப்பிறவி இன்பம் போலும் - இப் பிறவியிற் கிடைக்கும் அற்ப இன்பமொக்கும், எ - று.

## கொடியனுக்கு அரச பதவியளித்தல் தகாதெனல்

344. துற்சனன் றனக்கு மேலாந் துரைத்தனங் கொடுத்தலென்றும்
சற்பனை துரோகங் கேடு தரணியின் மிகவே செய்வான்
மற்கடந் தனக்கு நீண்ட வாலிலே தேனுங் கொட்ட
உற்றிடங் கொள்ளி யீந்தா லூரெலாங் கொளுத்து மன்றே.

உரை :—துற்சனன் தனக்கு மேலாம் துரைத்தனங் கொடுத்தால் - குறும்பு செய்கின்ற தீயவனுக்கு உயர்ந்த அதிகாரம் அளித்தால், என்றும் சர்ப்பனை - எப்போதும் சதியாலோசனையும், துரோகம் - நன்றி மறந்த செயல்களும், கேடு - நட்டம் விளைக்கக்கூடிய செயல்களும், தரணியின் மிகவே செய்வான் - உலகத்தில் அளவுக்கு மிஞ்சி யியற்றுவான் (அது எப்படி எனில்), மற்கடம் தனக்கு நீண்ட வாலிலே தேனும் கொட்ட - சேட்டைகள் செய்யும் தன்மையுடைய குரங்குக்கு அதன் நீளமான வாலில் தேன் கொட்டிவிட, உற்றிடம் கொள்ளி யீய்ந்தால் - அது பொருந்த மாகப் பிடிக்கக்கூடிய கையில் கொள்ளிக் கட்டையையுங் கொடுத்துவிட் டால், ஊரெலாம் கொளுத்துமன்றே - நகர முழுவதையும் அது தீகிரை யாக்கி விடுமல்லவா ?, எ - று.

## தரித்திரத்தின் கொடுமை

345. தரித்திர மிக்க வனப்பினை யொடுக்கிச்
சரீரத்தை யுலர்தர வாட்டும்
தரித்திரமளவாச் சோம்பலை யெழுப்புஞ்
சாற்றரு முலோபத்தை மிகுக்கும்

தரித்திரந் தலைவன் றலைவியர்க் கிடையே
தடுப்பருங் கலாம்பல விளைக்கும்
தரித்திர மவமா னம்பொய்பே ராசை
தருமிதிற் கொடியதொன் றிலையே.

உரை:—தரித்திரம் மிக்க வனப்பினை யொடுக்கிச் சரீரத்தை யுலர்தர வாட்டும்-வறுமையானது உடம்பின் மிகுந்த அழகைக் குறைத்து இரத்தம் வற்றும்படியாகச் செய்யும், தரித்திரம் அளவாச சோம்பலை எழுப்பும்-வறுமையானது மிகுந்த வேலை செய்யும் சக்தியைக் குறைத்துச சோம்பலை யுண்டாக்கும், சாற்றரும் உலோபத்தை மிகுக்கும் - சொல்லுதற்கு முடியாத செட்டுத் தன்மையை அதிகப்படுத்தும், தரித்திரம் தலைவன் தலைவியர்க்கு இடையே தடுப்பருங் கலாம்பல விளைக்கும் - வறுமையானது கணவன் மனைவியர்களுக்குள் தடுக்க முடியாத சண்டையை யுண்டாக்கும், தரித்திரம் அவமானம் பொய் பேராசை தரும் - வறுமையானது மதிப்புக் குறைவை யும் பொய் சொல்லும் தன்மையையும் அளவுக்கு மிஞ்சிய ஆசையையும் கொடுக்கும், இதில் கொடியது ஒன்று இலையே - இந்த வறுமையைப் பார்கிலும் பொல்லாதது வேறொன்றில்லை, எ - று.

இதுவுமது

346. தரித்திரங் களிப்பாங் கடலுக்கோர் வடவை
சாற்றுமெண் ணங்கள்வா ழிடமாம
தரித்திரம் பற்ப றுக்கமுந் தோன்றத்
தக்கபே ராகர மென்ப
தரித்திர நன்மை சாலொழுங் கென்னுந்
தழைவனந் தனக்கழ லெனலாந்
தரித்திரங் கொடிய வெவற்றினுங் கொடிதத்
தகையதை யொழித்தனன் றுமே.

உரை:—தரித்திரம் களிப்பாம் கடலுக்கோர் வடவை - வறுமையானது மகிழ்ச்சியாகிய கடலை யுறிஞ்சுகின்ற வடவாமு காக்கினிபோலும், சாற்றும் எண்ணங்கள் வாழிடமாம் - பேசப்பட்ட கெட்ட நினைவுகள் குடியிருக்கின்ற விடமாகும், தரித்திரம் பல் பல் துக்கமுந் தோன்றத் தக்க பேராகரம் என்ப - வறுமையானது பலப்பல துயரங்களும் தோன்றுவதற்குரிய களஞ்சியம் போல்வது, தரிததிரம் நன்மை சால் ஒழுஙகென்னும் தழை வனம் தனக்கு அனல் எனலாம் - வறுமையானது நன்மை உயர்வு முறை யென்பவை வளர்ந்தோங்குஞ் சோலையைச சுட்டெரிக்கின்ற தீயாகும், தரிததிரம் கொடிய எவற்றினும் கொடிது - வறுமையானது பொல்லாத எக்காரியத்திலும் தீயதாதலினல், அதை யொழிததல் நன்றுமே- அதனை நீக்குதல் பெரிய நன்மையாகும், எ - று.

டம்பக்காரனை மன்னர் முதலியோர் மதித்தல்

347. பொருணனி யுளனென் றியாரும் புகழுமோர்
வார்த்தை வேண்டும்
இருகையுங் கடகம் வேண்டு மிலங்குகுண்
டலங்கள் வேண்டும்
வருவிர லாழி வேண்டு மார்பிடை
மதாணி வேண்டும்
உருவமுத் தாரம் வேண்டு முயர்ந்தபட்
டாடை வேண்டும்.

உரை:—பொருள் நனி யுளனன்றி யாரும் புகழுமோர் வார்த்தை வேண்டும் - செல்வம் மிகுதி யுள்ளவனென்று பலரும் பாராட்டிப் பேசுகின்ற சொல் லேற்படவேண்டும், இரு கையும் கடகம் வேண்டும் - இரண்டு கைகளிலும் பொற் காப்புக்க ளணியப் பெற்றிருத்தல் வேண்டும், இலங்கு குண்டலஙகள் வேண்டும் - காதலில் ஒளி விடுகின்ற கடுக்கன்போன்ற அணிகள் வேண்டும், வருவிர லாழி வேண்டும் - விரல்களில் மோதிர மணிந்திருக்க வேண்டும், மார்பிடை மதாணி வேண்டும் - மார்பின்மீது பதக்க மணியப்படல் வேண்டும், உருவ முத்தாரம் வேண்டும் - கழுத்தி லழகிய முத்து மாலை யிட்டிருக்கவேண்டும், உயர்ந்த பட்டாடை வேண்டும் - அரையில் நயமான பட்டுடை தரித்திருக்கவேண்டும், எ - று.

இதுவுமது

348. சிவிகைமுன் னூர்தி வேண்டுஞ் செழும்பொருட்
செலவு வேண்டும்
குவிகையே வலரும் வேண்டுங் கோலமார்ந்
திருக்க வேண்டும்
கவிகைதாங் குநரும் வேண்டுங் கையுறை
சிறப்ப வேண்டும்
அவிகையில் விளக்கம் வேண்டு மரசவை
குறுகு வார்க்கே.

உரை:—சிவிகை முன் ஊர்தி வேண்டும் - பல்லக்கு முதலிய வாகனங்கள் வேண்டும், செழும் பொருட் செலவு வேண்டும் - வாகனஞ் சுமப்பவர் முதலிய பரிசனஙகளுக்கு மிகுந்த பொருளைச செலவு செய்வதாய்த் தெரிதல் வேண்டும், குவிகை ஏவலரும் வேண்டும் - தன்னைக் கும்பிட்டுக் கொண்டு வருகிற கையையுடைய வேலையாட்களும் வேண்டும், கோல மார்ந்திருக்க வேண்டும் - தோற்றப் பொலிவு பொருந்தி யிருக்கவேண்டும், கவி தாங்குனரும் வேுண்டும் - குடை பிடிக்கின்றவர்களும் வேண்டும், கையுறை

சிறப்ப வேண்டும் - காணிக்கையாகக் கொடுக்கும் பொருள்கள் வளமா யிருத்தல்வேண்டும், அவிகையில் விளக்கும் வேண்டும் - அணைந்து போகாத தீவர்த்தி முதலிய விளக்குகள் வேண்டும், அரசவை குறுகுவார்க்கே - இவை யெல்லாம் வேந்தனது சபையை விரும்பி யடைகின்றவர்களுக்கு வேண்டத்தக்கன, எ - று.

## தள்ளக் கூடாதவை

349. செந்தமி ழுடைகாய் நீறு சிவிகைபொன் னார மாடை
சுந்தர மான தோகை துலங்குமிவ் வகைக ளேழும்
வந்தபோ திருகை யேந்தி வாங்கலக் குமியுஞ் சேர்வள்
அந்தநா ளாகா வென்று லவனைவிட் டகலுவாளே.

உரை :—செந்தமிழ் - செந்தமிழ் நூல் அல்லது பாடலெழுதிய வேடு, அடைகாய் - வெற்றிலைபாக்கு, நீறு - திருநீறு, சிவிகை - பல்லக்கு, பொன்னாரம் - பொன் மாலை, ஆடை - உடை, சுந்தரமான தோகை - அழகிய கன்னி, துலங்கும் இவ் வகைகள் ஏழும் - சிறந்த இந்த ஏழு வகைப் பொருட்களும், வந்த போது இரு கை ஏந்தி வாங்க - ஒருவன் முயலாமல் அவனுக்குக் கிடைத்தபோது இரண்டு கைகளையும் நீட்டிப் பெற்றுக்கொண்டால், இலக்குமியும் சேர்வள் - திருமகள் வாங்கினவனை வந்தடைவாள், அந்த நாள் ஆகா என்றால் - இவை வந்த நாளில் அவற்றை வேண்டா மென்று கூறினால், அவனை விட்டு அகலுவாளே - திருமகள் அவனிடத்தி லிருந்து மகன்று செல்லுவாள், எ - று.

## பொருளை நல்வழியிற் செலவிடு முறை

350. கைப்பொருள் பெற்ற ஞான்றே கடவுளா லயத்திற் கீந்து
மெய்ப்படு புராண நூல்கள் விருப்பொடு கேட்டு வந்து
வைப்பென விரப்போர்க் கீந்து வருபவ ருளரேற் கூற்ற
மொய்ப்புயத் தண்டந் தப்பி முன்னவ னின்பத் தாழ்வார்.

உரை :—கைப் பொருள் பெற்ற ஞான்றே - ஒருவன் தன் கைக்கு வரக்கூடிய செல்வம் கிடைக்கப்பெற்ற அன்றே, கடவுள் ஆலயத்திற்கு ஈந்து - தெய்வததிருக் கோயிலுக்கு ஒரு பகுதியைக் கொடுத்து, மெய்ப் படு புராண நூல்கள் விருப்பொடு கேட்டு வந்து - உண்மை யன்பா வர லாறு முதலிய அற நூல்களைப் பக்தியோடு கேட்டு மகிழ்ந்து, வைப்பென இரப்போர்க்கு ஈந்து - தஞ்சமென வந்த யாசகர்களுக்கு இயன்றதைக் கொடுத்து, வருபவர் உளரேல் - இவற்றை நியதியாக செய்து வருபவராக விருப்பாராஞல், (அவர்கள்) கூற்றம் மொய்ப் புயம் தண்டம் தப்பி - ஏமனுடைய வலிய தோளிற் சாற்றப்பெற்ற தண்டாயுதத்தினின்றும்

பிழைத்து, முன்னவன் இன்பத்தில் ஆழ்வார் - முதல்வனாகிய கடவுளுடைய பேரின்பத்தி லாழ்வார்கள், எ - று.

## காலத்தில் அறஞ்செய வேண்டுமெனல்

351. பசிமிகுந்த பின்னெல்லை விதைப்பதுபோல்
வீட்டிடைத்தீப் பற்றிக் கொண்டு
நசியும்போ தவையவிக்க வாறுவெட்டல்
போலும்போர் நடக்குங் காலை
விசிகநூல் கற்கமுயல் வதுபோலுங்
கபமிஞ்சி விக்கிச் சிக்கி
இசிவுகொண்டு சாங்காலத் தெப்படிநீ
யறம்புரிவா ரிதயப் பேயே.

உரை :—பசி மிகுந்த பின் நெல்லை விதைப்பதுபோல் - பசி யொருவனுக்கு அதிகப்பட்ட பின சோற்றுக்கு வேண்டிய அரிசியைப் பெறுவதற்கு நெல் விதையை வயலில் விதைப்பது போலவும், வீட்டிடைத் தீப்பற்றிக் கொண்டு நசியும்போது - குடி யிருக்கும் வீட்டில் தீப்பிடித்து எல்லாரும் இறந்துகொண் டிருககும்போது, அவை அவிக்க ஆறு வெட்டல் போலும் அந்நெருப்பை யணைத்தற்கு வேண்டிய தண்ணீர்க்காக ஆற்றில் ஊற்றினைத் தோண்டுதல் போலவும், போர நடக்கும் காலை - சண்டை நடக்குஞ் சமயத்தில், விசிக நூல் கற்க முயல்வது போலும் - அம்புவிடும் வித்தையைப் படிப்பதற்கு முயற்சி செய்தல் போலவும், கபம் மிஞ்சி விககிச சிககி இசிவு கொண்டு சாயகாலத்தில - தொணடையில் கோழை மிகுந்து விக்கலும் தடுமாற்றமும் ஏற்பட்டு நரம்புகளுக்கு இழுப்புண்டாகி இறக்கும் தருணததில், இதயப் பேயே நீ எப்படி அறம் புரிவாய் - மனமென்னும் பிசாசே நீ எவவாறு தருமம் செய்யக்கூடும்?, எ - று.

குறிப்பு:—முன் கூறிய செயல்கள் வேண்டிய பயனைக் கொடாமை போல வாழ்நாள் எல்லாம் சும்மாயிருந்து மரணகாலத்தில் தருமஞ் செய்ய முயலுதல் உரிய பயனைத் தாராது என்பது கருத்து.

## பெண் கொடுத்தற்கு உரியவரல்லாதார்

352. முத்தியில் விருப்ப முடையவன் மிடியன்
மூர்க்கன்சேண் டேயத்தி லுள்ளோன்
புத்தியில் வயிரம் பொருந்திய சூரன்
புதல்விதன் வயதின்மும் மடங்கு

தத்திய வயது ளோனினுர் தமக்குத்
தரணியி லொருவரு முள்ள
நத்திரன் மகளைத் தரத்தகா தென்றுக்
கணிதநூல் நவின்றிடு மன்னே.

உரை:—முத்தியில் விருப்பம் உடையவன் - மோட்ச மடைவதிலேயே ஆசையுடையவன், மிடியன் - வறியவன், மூர்க்கன்-பிடிவாதமுள்ள மூடன், சேண் தேயததிலுள்ளோன் - தூரமா யிருக்கும் நாட்டிலிருப்பவன், புத்தியில் வயிரம் பொருந்திய சூரன் - ஞாபகத்தில் செய்த தீமையை அழுதத மாக வைத்துக்கொண்டு தீமை செய்யக் கருதும் உறுதியுடைய வீரன், புதல்விதன் வயதின் மும்மடங்கு தத்திய வயதுளோன் - மணமகளின் வயதைப் பார்ககிலும் மூன்று மடங்கு அதிகமான வயதுடையவன், இனோ தமக்கு - இப்படிப்பட்டவர்களுக்கு, தரணியில் ஒருவரும் உள்ளம் நதந்தி- பூமியில யாரும் மனமிசைந்து, நன்மகளைத தரததகாது இன்று - நல்ல பெண்ணைக் கொடுக்ககூடாது என்று, கணித நூல் நவின்றிடினும் - சோதிட நூல் கூறும், மன், ஒ - அசை, எ - று.

## பெண்ணை மணத்தற் குரியவராவார்

353. புரைதபு குணனுஞ் சீலமும் வனப்பும்
பூரண வாயுளுந் துப்புங்
கரையில்விற் பனமும் பாலனம புரியுங்
கத்தருங் குறைவிலா தாக
விரவுசெல் வமுமா மெண்வகை யுடைய
வாடவர் விருப்புறு வண்ணம
பரவினின் றவர்க்கு மகட்கொடை யுதவல்
பருணிதர் கடமைய தாமால்.

உரை:—புரைதபு குணனும் - குற்றமில்லாத நற்பண்பும், சீலமும் - சிறந்த வொழுக்கமும், வனப்பும் - அழகும், பூரண ஆயுளும் - நூலிற் கூறப் பட்ட முழு ஆயுசும், துப்பும் - வலிமையும், கரையில் விற்பனமும் - அள வில்லாத கல்வியும், பாலனம் புரியும் கருத்து - தன்னைச் சேர்ந்தவரைக் காப்பாற்றுகின்ற நோக்கமும், அரும் குறைவிலாதாகவிரவு செல்வமும் - குற்றமில்லாத வழியிற் கிடைத்த அருமையான ஐசுவரியமும், ஆம் எண் வகையுடைய ஆடவர் - ஆகிய எட்டுவகை நலன்களையுடைய ஆண்மக்கள், விருப்புற்று வண்ணம் பரவி நின்று - விரும்புகின்ற முறையில் அவர்களைத் துதித்து, அவர்க்கு மகள் கொடை யுதவல்-அவர்களுக்குக் கன்னிகாதானஞ் செய்தல், பருணிதர் கடமையதாம் - அறிஞரது கடமையாகும், ஆல் - அசை, எ - று.

### ஈசனுக் காட்படலி னருமை

354. மக்க ளாக்கையிற் பிறத்தலே யரிதுமற் றதிலுந்
துக்க கூன்குரு டூமையைத் துறத்தலு மரிது
நற்கு லத்திடை வருதலு மரிதுஞா னத்தான்
முக்க ணீசனுக் காட்படல் முற்றிலு மரிதே.

உரை:—மக்கள் ஆக்கையில் பிறத்தலே அரிது - (விலங்கு, பறவை முதலிய பிற வுயிர்களாகப் பிறவாமல்) மனித வுடம்பெடுத்துப் பிறப்பது மிகவும் அரிய செயலாகும், அதிலும் - அப்படி மனிதராய்ப் பிறப்பதிலும், துக்க கூன் குருடு ஊமையைத் துறத்தலும் அரிது-துயரந்தரும் கோணல், கண் தெரியாமை, வாய் பேசாமை முதலிய குற்றங்களினின்று நீங்குதல் மிக அருமையாகும், நற்குலத்திடை வருதலும் அரிது - உயர்ந்த குடியிற் பிறத்தல் அதனினும் அருமையானதாகும், ஞானத்தால் முக்கண் ஈசனுக்கு ஆட்படல் முற்றிலும் அரிதே - அதனோடு தக்க அறிவு பெற்று மூன்று கண்களையுடைய சிவபெருமானுக்கு ஆளாதல் எல்லாவற்றிலும் அரிய செயலாகும், ஏ - று.

### காமத்தின் தீமை

355. காமத்தா லிந்திரன் கலக்க மெய்தினன்
காமத்தா லிராவணன் கருத்த ழிந்தனன்
காமத்தாற் கீசகன் கவலை யுற்றனன்
காமத்தா லிறந்தவர் கணக்கி லார்களே.

உரை :—காமத்தால் இந்திரன் கலக்க மெய்தினன் - பெண் மோகத்தால் விண்ணவர்க்கு அதிபதியாகிய இந்திரன் கவுதமர் மனைவியாகிய அகலிகையைக் காதலித்து மனக் கலக்கத்திற் கேதுவாகிய சாபத்தைப் பெற்றான், காமத்தால் இராவணன் கருத்து அழிந்தனன் - பெண் மயலால் இராவணன் சீதாபிராட்டியைக் கவர்ந்தும் தன் எண்ணம் நிறைவேறப் பெறாம லழிந்தான், காமத்தால் கீசகன் கவலையுற்றனன் - பெண் வேட்கையால் விராடன் மைத்துனனாகிய கீசகனென்பவன் துரௌபதையை விரும்பிப் பெறாது கவலைப்பட்டிறந்தான், காமத்தால் இறந்தவர் கணக்கிலார்களே - இவர்களைப்போலத் தவறான பெண்காதல் காரணமாக உயிரிழந்தவர்கள் அளவில்லாதவர்கள், எ - று.

### சினத்தின் தீமை

356. மூங்கிலிற் பிறந்த முழங்குதீ மூங்கின்
முதலற முருக்குமா போலத்
தாங்கருஞ் சினத்தீ தன்னுளே பிறந்து
தன்னுறு கிளையெலாஞ் சாய்க்கும்

ஆங்கதன் வெம்மை யறிந்தவர் கமையா
லதனையுள் ளடக்கவு மடங்கா
தோங்கிய கோபத் தீயினை யொக்கு
முட்பகை யுலகில்வே றுண்டோ.

உரை :—மூங்கிலில் பிறந்த முழங்கு தீ - மூங்கி லுராய்தலினால் தோன்றி யோசையோடு விளக்கமாய் எரியும் சுவாலையானது, மூங்கில் முதலற முருக்குமாபோல - அந்த மூஙகில்களையே வேரறும்படியாக முற்றிலும் அழித்து விடுதல் போலும், தாங்கரும் சினத்தீ தன்னுளே பிறந்து - பொறுக்க முடியாத கோபத் தீயானது ஒருவனது உள்ளத்திலேயே தோன்றி, தன்னுறு கிளையெலாம் சாய்க்கும் - கோபப்பட்டவனை யழிப்பதோடு அவனுடைய நெருஙகிய உறவினரை யெல்லாம் மாய்விக்கும், ஆங்கதன் வெம்மை யறிந்தவர் - அப்படிப்பட்ட அதன் கொடுமையை யுணர்ந்தவர்கள், கமையாலதனை உள்ளடக்கவும் - சாந்தமாய் அதனை மனத்திலேயே அடக்க முயன்றாலும், அடஙகாது - அது எளிதி லடஙகமாட்டாது, ஓஙகிய கோபத்தீயினை யொக்கும் உட்பகை யுலகில் வேறுண்டோ - மிகுதிப்பட்ட சீற்றமாகிய நெருப்புப்போல ஒருவனுக்கு அகச சதுரு வேறு யாருமிலலை, எ - று.

## தலைவைத்துப் படுக்கு முறை

357. இணையிறன திலிலொருவன் கீழ்த்திசையிற்
றலைவைக்க வினிய மாமன்
மணிதிகழ்பொன் னெடுமாடத் துறைந்திடிற்றென்
றிசையதனில் வைக்க வேண்டும்
அணிபெறுவேற் றாருறையிற் குடதிசையிற்
சாரவைக்க வடுத்தெப் போதும்
உணர்வின்றி யுத்தரத்தே தலைவைத்துத்
துயில்புரித லொண்ணு தாமால்.

உரை :—இணையில் தனது இலில் ஒருவன் கீழ்த்திசையில் தலைவைக்க - ஒப்பற்ற தன்னுடைய வீட்டில் ஒருவன் படுக்கும்போது கீழ்த்திசையில் அவன் தலைவைதது படுத்தல் வேண்டும், இனிய மாமன் மணி திகழ் பொன் நெடுமாடத்து உறந்திடில் - நல்ல மாமனாது இரததினஙகள் விளஙகும் பொன்னினால் அலஙகரிக்கப்பெற்ற உயர்ந்த மாளிகையில் தஙகினால் தென்றிசை யதனில் வைக்கவேண்டும் - படுககுஙகால் தெற்குத திக்கில் தலைவைத்தல் வேண்டும், அணிபெறு வேற்றூர் உறையில் குடதிசையில் சார வைக்க - அழகான அயலூரிற் றங்குமிடத்தில் மேலைத் திசையில் தலையை வைத்துக்கொள்க, எப்போதும் - எக்காலத்திலும், உணர்வு

இன்றி - ஞாபகமில்லாமல், அடுத்து உத்தரத்தே தலைவைத்துத் துயில் புரிதல் - அடிக்கடி வடதிசையில் தலைவைத்துத் தூங்குதல், ஒண்ணுதாம் - சுகத்திற்குப் பொருத்தமில்லாத செயலாகும், ஆல் - அசை, எ - று.

## கடவுள் பக்தியினின்றி யமையாமை

358. அன்பிலா நெஞ்ச மரும்பிணி யெனவு
மளவிலாப் பகைநமக் கெனவுந்
துன்பமார் சோக மோகமே முதலாந்
துயரெலாம் விளைநில மெனவும்
இன்பவீ டெய்தி டற்கிடை யூறு
மிருளுமென் றியம்புவர் பெரியோர்
துன்பிலா விறைவர்க் கன்பிலா நெஞ்சே
துணையிலை துணையிலை யெனக்கே.

உரை :—அன்பிலா நெஞ்சம் அரும் பிணியெனவும் - கடவுளிடத்தில் பக்தியில்லாத உள்ளமானது தீரா நோய் போல்வதென்றும், அளவிலா பகை நமக்கெனவும் - எல்லையற்ற விரோதத்தை நமக்கு விளைக்கக்கூடிய தெனவும், துன்பமார் சோக மோகமே முதலாம் துயரெலாம் விளை நில மெனவும் - துன்பத்தைத் தரக்கூடிய கவலைகள் ஆசைகள் முதலிய இடைஞ்சல்களுக்கெல்லாம் அது உற்பத்தி யிடமெனவும், இன்ப வீடு எய்திடற்கு இடையூறும் இருளும் என்று - நிலைத்த இன்பத்தைத் தரக்கூடிய மோட்சத்தை யடைவதற்குத் தடையாயுள்ள அறியாமைக்கும் அது இடமாமென்றும், பெரியோர் இயம்புவர் - பெரியோர்கள் கூறுவார்களாதலால், துன்பிலா இறைவர்க்கு அன்பிலா நெஞ்சே - யாதொரு துன்பமும் அணுகப் பெறாத கடவுளிடத்தில் பக்தியில்லாத மனமே!, துணை இலை துணை இலை எனக்கே - கேடு விளைப்பதினாலும் நன்மை செய்யாமையினாலும் நீ எவ விதத்திலும் எனக்கு உதவியில்லாதவனா யிருக்கிறாய், எ - று.

## தொழில் முயற்சியின் அவசியம்

359. கடவுளீ குவனென் றெண்ணிநித் தியமுங்
கருதுறு முயற்சிசெய் யானேல்
அடலுறு செல்வ மடைகுவ னேகொ
லருங்கலத திட்டபா லடிசில்
மிடலுறு கரத்தா லெடுத்தது தெங்ஙன்
வீங்குமவெம பசிப்பிணி யொழிப்பன்
உடல்பவந் தனக்கோ ராகர மாமென்
றுடனனி வாட்டுமெய்த் தவத்தோய்.

உரை :—உடல் பவம் தனக்கோர் ஆகரமாம் என்று - உடம்பு பிறவிகளின் வித்துக்கோ ரிருப்பிடமென்று எண்ணி, உடல்நனி வாட்டும் மெய்த்தவத்தோய் - அவ் வுடம்பை மிகவும் விரதங்களால் தளர்விக்கின்ற உடற்சார்பான தவ முயற்சி யுடையவனே !, கடவுள் ஈகுவனென்று எண்ணி - முயற்சி செய்யாவிட்டாலும் கடவுள் வேண்டியதை அளிப்பா ரென்று நினைத்துக்கொண்டு, நித்தியமும் கருதுறு முயற்சி செய்யானேல் - தினந்தோறும் ஒருவன் ஆலோசித்துச் செய்யக்கூடிய தொழிலைச் செய்யாம லிருந்தால், அடலுறு செல்வம் அடைகுவனோ கொல்-திறமை பொருந்திய ஐசுவரியத்தை யொருவன் பெற்று விடுவானோ ?, அருங்கலத்திட்ட பாலடிசில் - அருமையான உணவு பாத்திரத்திலிட்ட பாலுணவை, மிடலுறு கரத்தால் எடுத்துணாது - வலிமையுள்ள தன் கையாலெடுத்து ஒருவன் உட்கொள்ளாது, எவ்வன் வீங்கும் வெம்பசிப்பிணி யொழிப்பன் - எவ்வாறு மிகுதியாய் வளர்கின்ற கொடிய பசிநோயைத் தீர்க்கக் கூடும் ? எ - று.

## தங்கள் தாழ்வை யறியாதவர்கள்

360. மங்கையர் விருந்தினர் வயித்திய ரிரப்போர்
பங்குபிணி யாளரொடு பாலகர் விருத்தர்
அங்கமறை வேதியரு மந்தகரு மன்னர்
தங்கள்குறை யால்வருமோர் தாழ்வுமறி யாரே.

உரை :—மங்கையர் - மங்கைப் பருவமாகிய யௌவன மடைந்த மாதரும், விருந்தினர் - விருந்துண்ண வந்திருப்பவர்களும், வைத்தியர் - மருத்துவத் தொழில் செய்பவர்களும், இரப்போர் - பிச்சை யெடுப்பவர்களும், பங்கு - நொண்டிகளும், பிணியாளரொடு - நோயாளிகளும், பாலகர் விருத்தர் - குழந்தைகளும் வயோதிகர்களும், அங்கமறை வேதியரும் - ஆறங்க நூல்களை யோதுகின்ற பிராமணரும், அந்தகரும் - குருடரும், மன்னர் - வேந்தரும், தங்கள் குறையால் வருமோர் தாழ்வு மறியாரே - தங்களுடைய குற்றத்தால் வருகின்ற கேவலத்தை யுணரமாட்டார்கள், எ - று.

## திருமகள் பிரியக் காரணம்

361. காலை மாலை யுறங்குவர் காரிகை
கோல மேனி குலைந்தபின் கூடுவர்
சாலி ராத்தயிர் சாதமோ டுண்பவர்
மாலை நேரினு மாது பிரிவளே.

உரை :—காலை மாலை உறங்குவார் - காலைப் பொழுதிலும் மாலைப் பொழுதிலும் தூங்குகின்றவர்களும், காரிகை கோல மேனி குலைந்த பின் கூடுவர் - பெண்கள் மணக் கோலங் குலைந்து விதவையான பின் அவர்களைப் புணர்கின்றவர்களும், சால் இராத் தயிர் சாதமோ டுண்பவர் - தெளி

வான இராத்திரிநேரத்தில் அன்னத்தோடு தயிரைக் கலந்து புசிப்பவர்களும், மாலே நேரினும் - அவர்கள் திருமாலைப் போன்ற சிறப்புடையவர்களாயிருந்தாலும், மாது பிரிவளே - திருமகள் அவர்களை விட்டு அகலுவாள், எ - று.

## ஞானத்தின் தனிச் சிறப்பு

362. வெள்ளத்தே போகாது வெந்தணலில் வேகாது
கொள்ளத்தான் போகாது கொடுத்தாலும் குறையாது
கள்ளருக்கு மெட்டாது காவலுக்கு ளமையாது
உள்ளத்தே பொருளிருக்க வூரிலுழைத் துழல்வானேன்.

உரை:—வெள்ளத்தே போகாது - ஆற்றுநீர்ப் பெருக்கிலே அடித்துக் கொண்டு போகப்படாமல், வெம் தணலில் வேகாது - கொடிய நெருப்பில் வெந்து சாம்பலாகாமலும், கொள்ளததான் போகாது - ஒருவரால் எடுக்கப் பட்டு ஒழிந்து போகாமலும், கொடுததாலும் குறையாது - ஒருவருக்குக் கொடுத்தால் குறைவுபடாமலும், கள்ளருக்கும் எட்டாது - திருடர்களுடைய கைக்கு எட்டாமலும், காவலுக்குள் அமையாது - ஒருவரால் சிறைப்படுத்தக் கூடாமலும், உள்ளத்தே பொருளிருக்க - நெஞ்சிலே ஞானமாகிய ஐசுவரிய மிருக்குங் காலத்தில், ஊரில் உழைத்து உழல்வானேன் - அதனால் பெறக் கூடிய பேரின்பத்தைப் பெறாமல் செல்வத்திற்காக நாட்டிலே முயன்று திரிவது எதற்காக, எ - று

## மூதேவி வருவதற்குக் காரணம்

363. இஞ்சி நெல்லி யிலைக்கறி பாவற்காய்
கஞ்சி வெண்டயிர் கங்கு லருந்திடில்
பொங்கு பூமகள் போயுடன் மூத்தவள்
கொஞ்சிக் கொஞ்சிக் குலாவி நடிப்பளே.

உரை:—இஞ்சி நெல்லி இலைக்கறி பாகற்காய் - இஞ்சியையும் நெல்லிக் காயையும் கீரை யுணவுகளையும் பாகற்காய்க் கறியையும், கஞ்சி வெண்தயிர் - கஞ்சியையும் வெண்மையான தயிரையும், கங்குல் அருந்திடில் - இராத்திரியிற் புசித்தால், பொங்கு பூமகள் போய் - பொங்கி விளங்குகின்ற தாமரைப்பூத் தேவியாகிய இலக்குமி யகன்றுவிட, உடன் மூத்தவள் - உடனே அவளுக்கு மூத்தவளாகிய மூதேவி, கொஞ்சிக் கொஞ்சி குலாவி நடிப்பளே - மெல்ல மெல்ல வந்து நட்பாகி நடனம் புரிவாள், எ - று.

அடா என்பது இன்சொ லாகுமிடம்

364. கடாவி டுஞ்சமர்க் களத்தினு மடந்தைய ரிடத்தும
விடாம லோதிய கவிதைபா ராட்டிய விடத்தும்
நடாவி டுஞ்சிறு பிள்ளைக ணவிலுமவ் விடத்தும
அடாவெ னுஞ்சொலை யின்சொலா மதிப்பர்கற் றறிந்தோர்.

உரை:—கடாவிடுஞ் சமர்க்களத்தினும் - கொழுத்த வீரப் படைகளைச செலுத்தும் யுத்தகளத்திலும், மடந்தையரிடத்தும் - காதல் வைத்துள்ள பெண்களோடு பழகுமிடத்திலும், விடாமலோதிய கவிதை பாராட்டிய விடததும் - நயஙகளைத் தவறவிடாமல் இயற்றிய பாடல்களைப் புகழ்நது கூறுமிடததும், நடாவிடும் சிறுபிள்ளைகள் நவிலும் அவவிடத்தும் - ஓடி யாடி நடக்கும் சிறு குழந்தைகள் மழலைச சொல் பேசுகின்ற விடத்திலும், அடாவெனும் சொலை - (வீரர் பெண்டிா கற்றவர் குழந்தைகள் என்பவர் உபயோகிக்கும்) அடாவென்ற வார்த்தையை, கற்றறிந்தோர் இன்சொலா மதிப்பர் - உலக நடை தெரிந்த அறிஞா இனிய மொழியாகக் கருதுவா, எ - று.

அடக்கமிலா மனைவியின் தன்மை

365. அடுத்தமனை தொறுந்திரிவாள் கணவனுக்கு
முன்னுண்பா ளடக்க மில்லாள்
கடுத்தமொழி பேசிடுவாள் சிறுதனந்தே
டுவளிவளைக் கலந்து வாழ்தல்
எடுத்தவிடைக் கொடியாரே தண்டலையா
ரேயெவர்க்கு மின்ப மாகக்
குடித்தனமே செயவேண்டிப் பிடாரிதனைப்
பெண்வைத்துக் கொண்ட தாமே.

உரை:—எடுத்த விடைக் கொடியாரே தண்டலையாரே - உயர்வாக எடுக்கப்பட்ட நந்திக் கொடியையுடைய பெருமானே !, தண்டலைப் பதியில் வீற்றிருக்கும் பெருமானே !, அடுத்த மனைதொறும் திரிவாள் - பக்கத்து வீடுகளெங்குஞ்சென்று வீண் பொழுது போக்குபவளும், கணவனுக்கு முன் உண்பாள் - சுவை நயமாகப் புருஷனுக்கு முன்னே உணவு கொள்பவளும், அடக்கமில்லாள் - சாந்த மில்லாதவளும், கடுத்தமொழி பேசிடுவாள் - பிறரை வருத்தக் கூடிய கோபச் சொல் கூறுபவளும், சிறுதனம் தேடு வாள்-வீட்டிலுள்ளவற்றிற் சிறு பகுதியைத்திருடித தனக்குரிய சொத்தாக வைத்துக் கொள்பவளும், இவளைக் கலந்து வாழ்தல் - ஆகிய தன்மையுடை யவளோடு கூடி இல்லற வாழ்க்கை நடத்துதல், எவர்க்கும் இன்பமாகக் குடித்தனமே செயவேண்டி - எல்லார்க்கும் நன்மை தரக்கூடிய இல்லற

வாழ்க்கை நடத்த விரும்பி பிடாரிதனைப் பெண் வைத்துக் கொண்ட தாமே - பெரும் பேயொன்றை மனையாளாகக் கட்டிக்கொண்ட தொக்கும், எ - று.

## பயனற்றவை

366. மாடில்லான் வாழ்வு மதியில்லான் வாணிபமும்
நாடில்லான் செங்கோ னடாத்துவதுங்—கூடுங்
குருவில்லா வித்தை குணமில்லாப் பெண்டும்
விருந்தில்லான் வீடும் விழல்.

உரை :—மாடு இல்லான் வாழ்வும் - செல்வ மில்லாதவனுடைய குடும்ப வாழ்க்கையும், மதியில்லான் வாணிபமும் - அறிவில்லாதவன் செய்யும் வர்த்தகமும், நாடு இல்லான் செங்கோல் நடாத்துவதும் - தனக்கெனத் தேசமில்லாத மன்னன் நீதி செலுததுவதும், கூடும் குரு வில்லா வித்தை - பொருத்தமான ஆசாரியனில்லாத கல்வியும் குணமில்லாப் பெண்டும் - நற்பண்பில்லாத மகளிரும், விருந்தில்லான் வீடும் - விருந்தினரை உபசரியாத குடி யிருப்பும், விழல் - விழற் புல்லைப்போல பயனற்றவையாகும், எ - று.

## பிறரிடத்து வெளிப்படுத்தத் தக்கவை

367. தகுதிகொள் கடனக் கடன்றனைத் தீர்த்த
றன்பொருள் கோடல்பின் பகர்தல்
மகளிரைக் கொடுத்தல் தன்னுடை யொழுக்க
மரபினிற் புரிந்ததன் பாவம்
புகலரு மயலோர் நற்குண மென்னப்
புகன்றவிவ் வொன்பது மெவர்க்கு
மிகலற மறையா துரைத்திட லொழுக்கத்
தியல்பென மொழிவர்நன் குணர்ந்தோர்.

உரை:—தகுதி - தகுதியைத் தெரியாதவனிடத்தில் அதனைக் கூறுதலும், கொள் கடன் - கொண்ட கடனைத் தெரிவித்தலும், அக் கடன்தனைத் தீர்த்தல் - அந்தக் கடனைத் தீர்க்கும் வழியைக் கூறுதலும், தான் பொருள் கோடல் - வியாபாரத்திற்கு வேண்டிய பொருளை இன்னவென்று தெரிவித்து வாங்கிக்கொள்ளுதலும், பின் பகர்தல் - பிற்பாடு விலைகூறி விற்றலும், மகளிரைக் கொடுத்தல் - பெண்ணைக் கொடுத்து மணம்புரிவிததலும், தன்னுடைய ஒழுக்கம் - தன்னுடைய வழக்கத்தைக் கூறுதலும், மரபினில் புரிந்ததன் பாவம் - வழக்கம்பற்றித் தான் செய்த குற்றம் கூறுதலும், புகலரும் அயலோர் நற்குணம் - சொல்லுதற்கரிய பிறருடைய நல்ல குணங்கள், என்னப் புகன்ற இவ்வொன்பதும் - என்று கூறப்பட்ட

இந்த ஒன்பதினையும், எவர்க்கும் இகலற மறையாது உரைத்திட - யாவருக்கும் விரோத மில்லாமல் வெளிப்படக் கூறுதல், ஒழுக்கத் தியல்பென நன் குணர்ந்தோர் மொழிவர் - நல்லொழுக்கத்தின் தன்மையாகுமென்று செவ விதி னறிந்தவர் கூறுவார்கள், எ - று.

## பேய்த்தன்மை யுடையவர்கள்

368. தன்னைப் புகழ்வானுஞ் சாட்சிசொல்லி நிற்பானும
பொன்னைமிகத் தேடிப் புதைப்பானும்—ஒன்னலர்தம்
நண்புத்தி கேட்பானு நாணமில் லாதானும்
பெண்புத்தி கேட்பானும் பேய்.

உரை :—தன்னைப் புகழ்வானும் - செருக்கினால் தன்னைப் பெரியவனாகப் பாராட்டிப் பேசுகின்றவனும், சாட்சி சொல்லி நிற்பானும் - பொய்ச சாட்சி வழக்கமாகச சொல்லி வருபவனும், பொன்னை மிகத் தேடிப் புதைப்பானும் - பொருளை அதிகமாகத் தேடித் தனக்கும் பிறர்க்கும் பயன் படுத தாமல் அதனை மண்ணிற் புதைத்து வைக்கின்றவனும், ஒன்னலர் தம் நண் புத்தி கேட்பானும் - பகைவர்களுடைய நட்பாய்த் தோன்றும் பொய்யான புத்திமதியை ஏற்றுக்கொள்பவனும், நாணம் இல்லாதானும் - தீய காரியங்கள் செய்வதில் கூசசமில்லாதவனும், பெண்புத்தி கேட்பானும் - காம மயக்கத்தால் பெண்கள் கூறும் தவறான வுரையைக் கேட்டு நடப்பவனும், பேய் - பேய்த்தன்மை யுடையவராவர், எ - று.

## மனைவியின் சிறப்பியல்புகள்

369. அன்னை தயையு மடியாள் பணியுமலர்ப்
பொன்னி னழகும் புவிப்பொறையும்—வன்னமுறும
வேசி துயிலும் விறன்மந் திரிமதியும்
பேசி லிவையுடையாள் பெண்.

உரை :—அன்னை தயையும் - கணவனைப் பேணுவதில் தாய்போன்ற கருணையும், அடியாள் பணியும் - ஏவல் கேட்பதில் அடிமைபோன்ற தாழ்மையும், மலர் பொன்னின் அழகும் - தாமரைப் பூவிலுறையும் இலக்குமியின் வனப்பும், புவிப்பொறையும் - பூமாதேவிபோன்ற பொறுமையும், வன்ன முறும் வேசி துயிலும் - நயங்கள் பொருந்திய விலைமாதர்போல இன்பம் விளைத்தத தூங்கு மியல்பும், விறல் மந்திரி மதியும் - தைரியமான அமைச்சர்க்குள்ள அறிவும், பேசில் இவை யுடையாள் பெண் - சிறப்பாகக் கூறுமிடத்து ஆகிய இத்தன்மைகளை யுடையவள் உத்தமமான மனைவியாவாள், எ - று.

### இன்னவர் தாய்மாரெனல்

370. தன்னை யளித்தா ளுமையன் மனைகுருவின்
பன்னி யரசன் பயில்தேவி—தன்மனையைப்
பெற்றா ளிவரையே பேசி லெவருக்கும்
நற்றாய ரென்றே நவில்.

உரை :—பேசில் - ஆராய்ந்து கூறுமிடத்து, எவர்க்கும் - எல்லார்க்கும், தன்னை அளித்தாள் - தன்னைப் பெற்றவள், தமையன் மனை - மூத்த சகோதரனது மனைவி, குருவின் பன்னி - ஆசாரியனது பத்தினி, அரசன் பயில் தேவி - மன்னனது பட்டத்துத் தேவி, தன் மனையைப் பெற்றாள் - தன் மனைவியின் தாயாகிய மாமி, இவரையே - என்னும் இவர்களையே, நல் தாயர் என்றே நவில் - நல்ல தாய்மார்கள் என்று கூறுக, எ - று.

### பொருளின் சிறப்பு

371. நற்பொரு ளறத்தை யின்ப நலத்தைஞா னத்தை மிக்க
பற்பல ருறவைப் பொல்லாப் பகைதவிர்த் திடுந்தி றத்தைச்
சொற்பெரும புகழை யென்றுந் துகளிலாப் பெருமை தன்னைப்
பொற்புறுங் கதியை வாய்ந்த பொருளலாற் பெறுவ தின்றே.

உரை :—நற் பொருள் - நல்ல உடைமைகளையும், அறத்தை - தருமத்தையும், இன்ப நலத்தை - இன்பந்தரும் நன்மையையும், ஞானத்தை - அறிவையும், மிக்க பற்பலர் உறவை - பலவகைப்பட்டவர்களுடைய மிகுந்த நட்பையும், பொல்லாப் பகை தவிர்த்திடும் திறத்தை - கொடிய பகைகளை யொழிக்கும் வகைகளையும், சொல் பெரும் புகழை - உயர்வாகப் பேசப்படுகின்ற பெரிய கீர்த்தியையும், துகளிலாப் பெருமை தன்னை - குற்றமற்ற சால்பையும், பொற்புறும் கதியை - சிறப்பு மிக்க நல்ல மார்க்கத்தையும், வாய்ந்த பொருள் அலால பெறுவதின்றே - அவ்வவற்றிற்கு வேண்டிய பொருளில்லாமல் தேடிப் பெறுவது இயலாததாகும், எ - று.

### வெளியிடக் கூடாதவைகள்

372. மந்திரந் தன்னைப் பிறரவ மதித்தல்
மகளிரைச் சேர்தல்வஞ் சனைதன்
நந்தலி லாயுள் பிறந்தநா ளில்லி
னண்ணிய குற்றநீ ணிதியும்
முந்திய கற்பின் மனைவிதன் குணங்கண்
மொழிந்தவிவ் வொன்பது மாவி
சிந்துற வரினும் பிறரொடு மொழித
றீதென வுரைப்பரே தெளிந்தோர்.

உரை:—மந்திரம் - இரகசியமாய் உபதேசித்த மந்திரத்தையும், தன்னைப் பிறர் அவமதித்தல் - தன்னைப் பிறர்கள் இகழ்வதையும், மகளிரை சேர்தல் - பெண்டிர் தொடர்பையும், வஞ்சனை - எதிரிக்குச் செய்யும் கபடத்தையும் தன் நரதலில் ஆயுள் - குன்றக் கூடாத வயதையும், பிறந்த நாள் - சென்ம நட்சத்திரத்தையும், இல்லில் நண்ணிய குற்றம் - வீட்டில் நிகழ்ந்த குறைகளையும், நீள் நிதியும் - தனக்குள்ள பெருஞ் சொத்தையும், முந்திய கற்பின்மனைவி தன் குணங்கள் - இல்லாளின் கற்பு முதலிய சிறந்த தன்மைகளையும், மொழிந்த இவ்வொன்பதும் - சொல்லப்பட்ட இவ்வொன்பது காரியங்களையும், ஆவி சிந்தற வரினும் - உயிர்போகும் தருணமா யிருந்தாலும், பிறரொடு மொழிதல் தீதென - பிறரிடத்திற் கூறுதல் தீமைக் கேதுவாமென்று, தெளிந்தோர் உரைப்பரே - அறிஞர் செப்புவாரகள், எ - று.

## பொய் மிகுதியாய் இருக்குமிடம்

373. பூசாரி பொய்யும் புலவோ ருரைத்தபொய்யுங்
காசாசை வேசியர்கள் கற்றபொய்யுங்—கூசாமல்
தட்டா ருரைத்த பொய்யுஞ் சவுளிக் கடைப்பொய்க்குக்
கட்டாவே கால்வாசி காண்.

உரை:—பூசாரி பொய்யும் - சிறு தெய்வக் கோயில்களில் பூசனை புரிகின்ற குருக்கள் கூறிய பொய்யும், புலவோர் உரைத்த பொய்யும் - பாவலர்கள் கற்பனையாகக் கூறிய பொயயும், காசாசை வேசியர்கள் கற்ற பொய்யும் - பொருளில் ஆசை மிகுந்த விலைமகளிர் படிததுக் கூறிய பொய்யும், கூசாமல் தட்டார் உரைத்த பொய்யும்-வெட்க மில்லாமல் நகை செயகின்ற தட்டார்கள் கூறிய பொய்யும், சவுளிக்கடை பொய்க்கு - சவுளிக்கடைக் காரர்கள் கூறும் பொய்க்கு, கால்வாசி கட்டாவே - காற்பங்களவு கூட ஈடாக மாட்டா, காண - அசை, எ - று.

## செல்வன் மதிக்கப்படுதலும் வறியவன் மதிக்கப் படாமையும்

374. கோதறு கல்வி சாலூர்க் குடியிருந் தறியா னேனும்
ஓதருஞ் செல்வ மிக்கோ னொருவனே சிறந்தோ னவன்
காதலின் வேத முன்னுக் கலைகள்கற் றுணர்ந்தா னேனுந்
தீதலை மிடிய னயிற் சிறந்திடான் வேத்த வைக்கே.

உரை:—வேத்த வைக்கே - அரசனுடைய சபைக்கு, கோதறு கல்வி சால்லூர் குடியிருந்து அறியானேனும் - குற்றமற்ற கல்வி மிகுதியாகவுள்ள ஊரில் ஒருவன் வசித்திருந்துகூட யாதும் தெரியாமலிருந்தாலும், ஓதரும் செல்வம் மிக்கோன் ஒருவனே சிறந்தோனவன் - சொல்ல முடியாத பொருள் மிகுதியாகவுடைய ஐசுவரியவான் ஒருவனே உயர்ந்தவனாக

மதிக்கப்படுவான், காதலின் வேதம் முன்னூன் கதைகள் கற்றுணர்ந்தானேனும் - ஆசையோடு வேத முதலாகவுள்ள பலகலை நூல்களையும் ஒருவன் படித்தறிந்திருந்தாலும், தீதமை மிடியனேயின் - கெடுதி விளைக்கும் தரித்திர முடையவனுயின், சிறந்திடான் - அவன் சிறப்பாக மதிக்கப் படமாட்டான், எ - று.

முயற்சியின் பயன்

375. செயத்தகு முயற்சி செய்திடில் செயிர்தீர்
செய்யவள் மணாளனும இரங்கி
வியத்தக வேண்டும் யாவையும அளிப்பன்
விளம்புறு முயற்சிசெய் யாமேல்
நயத்தகு போகம் அளித்திடான் என்று
நானிலத் தறிஞர்நன் குரைப்பர்
உயத்தகு நெறிமா லடிஉன லென்றே
ஓர்ந்தமா தவப்பெருங் கடலே.

உரை:—உயத்தகு நெறிமா லடிஉனல் என்றே ஓர்ந்தமா தவப்பெருங் கடலே-நல்ல கதிப்பெற்றுப் பிழைப்பதற்கு உரிய வழி பெருமாளின் திருவடியைத் தியானித்தல் ஒன்றே யாகுமென ஆய்ந்து தெளிந்த பெருந்தவ வடிவமாகிய பெரிய சமுத்திரம் போன்றவரே!, செயத்தகு முயற்சி செய்திடில் - ஒவ்வொருவரும் தாஙகள் செய்வதற்கேற்ற தொழிலைச செய்து முடித்தால், செயிர்தீர் செய்யவள் மணாளனும் - குற்றமற்ற இலக்குமி கணவனுகிய திருமாலும், இரஙகி - கருணை கூர்ந்து, வியததக வேண்டும் யாவையும் அளிப்பன் - ஆசசரியப்படக் கூடியதாய் நாம் விரும்புகின்ற எல்லாவற்றையுஙு கொடுத்தருளுவன், விளம்புறு முயற்சி செய்யாமேல் - சொல்லப்படுகின்ற அவனவன் தொழிலைச செய்யா விட்டால், நயத்தகு போகம் அளித்திடான் என்று - பாராட்டத்தக்க அனுபவப் பொருள்களை இறைவன் தரமாட்டானென்று, நானிலத் தறிஞர் நன்குரைப்பர் - உலகிலுள்ள கல்விமான்கள் தெளிவாகக் கூறுவார்கள், எ - று.

புத்திரப் பேற்றின் றுன்பம்

376. மதலையைப் பெறுநாள் துன்பம் வளர்த்திடு நாளும் துன்பம்
விதலைநோய் அடையில் துன்பம் வியன்பரு வத்தும் துன்பம
கதமுறு காலர் வந்து கைப்பற்றில் கணக்கில் துன்பம
இதமுறல் எந்நாள் சேயால் எற்றைக்கும் துன்ப மாமேல்

உரை :—மதலையைப் பெறுநாள் துன்பம் - பிள்ளையைப்பெறுங்காலத்தில் பெறுகின்ற தாய்க்கும் அவள் சுகத்தைப்பற்றிக் கவலைப்படுகின்ற உறவினர்க்கும் பிறக்கின்ற குழந்தைக்கும் துன்பம் நேர்கின்றது, வளர்த்

திடு நாளும் துன்பம் - பிள்ளை பிறந்தபின் அதற்கு நோயாலும் பிறராலும் இடையூறு நிகழாதபடி அதனை வளர்த்திடுங் காலத்திலும் துன்பம் ஏற்படுகின்றது, விதலை நோய் அடையில் துன்பம் - நோவு செய்கின்ற வியாதி பிள்ளைக்கு வந்து சேர்ந்தால் அப்போதும் துன்பமே ஏற்படுகின்றது, வியன் பருவத்தும் துன்பம் - வளர்ந்து தக்க பிராயம் வந்தபோதும் குழந்தையின் நல்வாழ்வைபற்றிக் கவலைப்படக்கூடிய துன்பம் நேர்கின்றது, கதமுறு காலர் வந்து கைப்பற்றில் கணக்கில் துன்பம் - கோபப்படுகின்ற எமதூதர் வந்து குழந்தையின் உயிரைக் கைப்பற்றிக் கொண்டுபோனல் அளவற்ற மனவருத்தம் அதனாலுண்டாகிறது, சேயால் இதமுறல் என்னாள் - குழந்தையால் இன்பமடைதல் எந்நாளில் ஏற்படுகின்றது, எற்றைக்கும் துன்பமானல் - எந்த நாளிலும் துன்பம் வருவதானல் ஒரு நாளும் குழந்தைப்பேற்றால் சுகமடைவதில்லை, எ - று.

## நல்லொழுக்கம்

377. கொல்லான் கொலைபுரியான் பொய்யான் பிறர்பொருண்மேல்
செல்லான் சிறியார் இனஞ் சேரான்—பல்லார்
மறையிற் செவியிலன் தீச்சொற்கண் மூங்கை
இறையிற் பெரியார்க் கிறை.

உரை :—கொல்லான் - உயிர்களை யுடம்பினின்று பிரியாதிருப்பவனும், கொலைபுரியான் - உயிர்களுக்கு வருத்தம் விளைவியாதவனும், பொய்யான் - பொய் கூறாதவனும், பிறர் பொருள்மேல் செல்லான் - மற்றவர்களுடைய உடைமையைக் கவர்ந்து கொள்ளும் எண்ணத்தோடு அவற்றை யணுகாதவனும், சிறியார் இனஞ் சேரான் - கீழ்மக்களுடைய கூட்டத்திற் சேர்ந்து பழகாதவனும், பல்லார் மறையில் செவியிலன் - பல பேர்களுடைய விரகசியங்களைக் கேட்க விருப்பமில்லாது அவை சம்பந்தமாகச் செவிடாய இருப்பவனும், தீசசொற்கண் மூங்கை - கொடிய சொற்கள் கூறுவதில் ஊமையனும், இறையில் - இருப்பானாயின் அவன், பெரியார்க்கு இறை - பெரியோர்களுக்குத் தலைவனாவான், எ - று.

## ஆராய்ச்சியில் நடுவு நிலைமை

378. காய்தல் உவத்தல் அகற்றி ஒருபொருட்கண்
ஆய்தல் அறிவுடையார் கண்ணதே—காய்வதன்கண்
உற்ற குணந்தோன்றா தாகும் உவப்பதன்கண்
குற்றமுந் தோன்றாக் கெடும.

உரை :—காய்தல் உவத்தல் அகற்றி - வெறுப்பையும் விருப்பத்தையும் நீக்கிவிட்டு, ஒரு பொருட்கண் ஆய்தல் அறிவுடையார் கண்ணதே - ஒரு பொருளினிடத்தே ஆராய்ச்சி செய்தல் தக்க புலவரிடத்துக் காணப்படும்,

காய்வதன்கண் உற்ற குணம் தோன்றாதாகும் - ஒரு பொருளை வெறுப்பதானால் அதன்பால் பொருந்திய நல்லியல்பு நமக்குப் புலனாகாது, உவப்பதன்கண் குற்றமும் தோன்றாக் கெடும் - அவ்வாறே ஒரு பொருளை ஆராயுமிடத்து அதன்கண் பிரியம் வைப்பதானால் அதனுடைய குறைபாடு நமக்குத் தோன்றாமல் மறைந்துபோகும், எ - று.

### நகைப்புக் குரியன

379. நாணிலான் சால்பும் நடையிலான் நல்நோன்பும்
ஊணிலான் செய்யும் உதாரதையும்—ஏணிலான்
சேவகமும் செந்தமிழ் தேற்றான் கவிசெயலும்
நாவகமே நாடின் நகை.

உரை :—நாணிலான் சால்பும் - மானக்கேட்டிற்கும் தீயவை செய்தற்கும் கூசாதவனுடைய உயர்வும், நடையிலான் நல் நோன்பும் - ஒழுக்கமில்லாதவனுடைய நல்ல விரதமும், ஊணிலான் செயும் உதாரதையும் - சாப்பாட்டிற்கில்லாதவன் செய்யும் தாராளச செயலும், ஏணிலான் சேவகமும் - வலிமையிலாதவனுடைய வீரசசெயலும், செந்தமிழ் தேற்றான் கவி செயலும் - செவ்விய தமிழைக் கற்றுத தெளிவு பெறாதவன் பாட்டியற்றுதலும், நாடின் - நினைத்துப் பார்த்தால், நாவகமே நகை - வாயிலும் நெஞ்சத்திலும் சிரிப்புண்டாதற்கு ஏதுவாகும், எ - று.

### ஒரு பொய் பல பொய்க்கிடனாதல்

380. முன்னமோர் பொய்யுரைக்க அப்பொய்வெளி
ஆகாமல் மூடும் வண்ணம
பின்னுமோர் பொய்யுரைக்க அதையுந்நிலை
நிறுத்திடவோர் பெரும்பொய் சொல்ல
இன்னவகை கைதவம்ஒன் றிருநூறு
கைதவத்துக் கிடமாம வாய்மை
தன்னையே முன்பகரில் சங்கடமொன்
றிலைஅதுவே தகைமை நெஞ்சே.

உரை :—நெஞ்சே - மனமே!, முன்னம் ஓர் பொய்யுரைக்க - முதலில் ஒரு பொய் சொன்னால், அப் பொய் வெளியாகாமல் மூடும்வண்ணம் - அது பொய்யென்பது மற்றவர்களுக்குத தெரியாதபடி மறைப்பதற்காக, பின்னும் ஓர் பொய்யுரைக்க - இன்னொரு பொய் கூறும்படி நேரவே, அதையும் நிலை நிறுத்திட ஓர பெரும் பொய் சொல்ல - இரண்டாவது கூறிய பொய்யை யுண்மையென்று சாதிககத் திரும்பவும் ஒரு பெரிய பொய்யைக்கூற, இன்னவகை கைதவம் ஒன்று இருநூறு கைதவத்திற்கு இடமாம் - இந்த முறையாக வஞ்சகம் ஒன்று செய்தால் அது இருநூறு வஞ்சகச செயலுக்குக்

காரணமாகும், வாய்மை தன்னையே முன் பகரில் - உண்மையை முதலிற் சொல்லிவிட்டால், சங்கடம் ஒன்று இலை - இடைஞ்சல் யாது மில்லை, அதுவே தகைமை - அதுவே தக்க செயலாகும், எ - று.

## தழை வியத்தல்

381\. கத்தனூர் மகிழ்ந்த கச்சிவெற் புடையாய்
காமனும மயங்குறு கவினூர்
அத்தநீ அளித்த மாந்தழை அரிவைக்
காருயிர் அளித்தகா ரணத்தால்
சுத்தனும் அனுமன் சானகிக் களித்த
துணையமை யாழியோ இந்த்ர
சித்தனுன் மடிந்த கவிக்குலம் பிழைப்பச்
செய்தசஞ் சீவியோ தானே.

உரை:—கத்தனூர் மகிழ்ந்த கசசி வெற்புடையாய்-இறைவர் மகிழ்ந்து தங்கும் காஞ்சிப்பதியை சார்ந்த மலையை யுடையவனே !, காமனும் மயங்குறு கவினூர் அத்த - மன்மதனும் பார்த்து மயக்கங் கொள்வதற் கேது வாகிய அழகு நிறைந்த இறைவனே !, நீ அளிதத மாந்தழை - நீ கொடுதத மாந்தளிரினு லமைத்த ஆடை, அரிவைக்கு ஆருயிா அளிதத காரணத்தால் - தலைவிக்கு அருமையான உயிரைக காப்பாற்றின காரணததினுலே, சுத்தனும் அனுமன் சானகிக்களித்த துணையமை யாழியோ - புனிதனுகிய பிரம சரிய வாழ்க்கை நடத்திய அனுமான சீதையை அசோகவனத்திற் கண்ட போது கொடுதத அவள் உயிர்ததுணையாயப் பொருந்திய மோதிரம் போன் றதோ அது அல்லது, இந்திரசித்தனுல் மடிநத கவிகுலம் பிழைப்பச செய்த சஞ்சீவியோதானே - இராவணன் மகனுகிய இந்திரசித்து விடுதத நாகாஸ்திரத்தால் மூர்சசையுற்ற குரங்குக் கூட்டங்களெல்லாம் மீளவும் மயக்கம் தெளிந்து எழும்படி அனுமான் கொணர்ந்த சஞ்சீவி மலை போல் வதோ அது ?, எ - று.

குறிப்பு:—இது தலைவிக்குத் தலைவன் கொடுத்த தழையுடையை வியந்து பாங்கி தலைவனுக்குக் கூறியது.

## தவம் பழித்தல்

382\. தேருது வனம்போய் வெள்வனும் போனீர்
சிறுகிழங்கைக் கொண்டுபெருங் கிழங்கைக் கொண்
டீருத பலஞ்சுவைத்தோர் பலமுங் காணீர் [டீர்
இலைமேய்ந்தும் பேறிலையே இதுவோ யோகம

மாறுது சருகுதின்று சருகுபட்டீர்
வாயுநுகர்ந் தீர்வாயும் மௌன மானீர்
ஆறுத தீயில்நிற்பீர் தீயரே நும்
அருந்தவமே தவம்அழகர்க் காட்ப டீரே.

உரை:—தேறுது வனம் போய் யௌவனமும் போனீர் - காட்டிற் கடுந்தவஞ் செய்யும் தவசிகளே ! வீட்டிற்கு உபாயத்தை தெளிவாக அறிந்து கொள்ளாது காட்டுக்குப் போய் இளமையையும் இழந்தீர்கள், சிறு கிழங்கைக் கொண்டு பெருங் கிழங்கைக் கொண்டீர் - சிறிய கிழங்குகளை யுணவாகக் கொண்டு பெரிய வயோதிகத் தன்மையை யடைந்தீர்கள், ஏறுத பலம் சுவைததோர் பலமுங் காணீர் - ஏறியெடாமல் கீழே விழுந்து கிடந்த கனிகளை யருந்தியும் ஒரு பயனையும் நீங்கள் கண்டதில்லை, இலை மேய்ந்தும் பேறிலையே - தளிர்களைத் தின்றும் ஊதியம் ஒன்றும் நீங்கள் பெறவில்லையே, இதுவோ யோகம் - இதுவோ யோக முயற்சியாகும், மாறுது சருகுதின்று சருகுபட்டீர் - காய்ந்துபோன நிலைமை மாறுத சருகு களைத தின்று சருகுபோல வாடிப்போயினீர், வாயு நுகர்ந்தீர் - காற்றை யும் புசித்தீர்கள், வாயும் மௌனமானீர் - பேசா நிலைமையு மடைந்தீர்கள், ஆறுத தீயில் நிற்பீர் - அணைந்து போகாமல் எப்போதும் எரிந்து கொண் டிருக்கும் நெருப்பு மத்தியில் நிற்பீர்கள், தீயரே - உடலை வருத்துகின்ற கொடியவர்களே !, நும் அருந்தவம் ஏது அவம் - நீங்கள் செய்யும் தவம் தவமா அவமேயாகும், அழகர்க் காட்படீரே - இவை யெல்லாம் செயது வருந்துவதற்குப் பதிலாகப் (பெரும் பயன் பெறவேண்டுமானுல்) அழக ராகிய பெருமானுக்கு அடிமையாய்த தொண்டு செய்யுங்கள், எ - று.

நிலையாமை

383. மண்ணுடு மன்னவரும் அவர்தனமும்
மாண்டனநுண் மணலை யொக்கும்
விண்ணுடும் இந்திரரும் அவர்வாழ்வும்
போயினவிண் மீனை யொக்கும்
எண்ணுடும் பிரமருமண் டமும்பூதங்
களுமிறந்த எல்லை இல்லை
கண்ணுடும அவையெங்கே நின்வாழ்க்கை
நிலையென்னே கவலும் நெஞ்சே.

உரை :—கவலும் நெஞ்சே - கவலைப்படுகின்ற மனமே !, மண்ணுடு மன்னவரும் அவர் தனமும் - உலக ஆட்சியை விரும்பிய மன்னரும் அவர் களுடைய செல்வமும், மாண்டன நுண் மணலை யொக்கும் - அழிந்து போயினவற்றைக் கணக்கிட்டால் நுட்பமான மணலை எண்ணினுற்போலும்,

விண்ணுடும் இந்திரரும் அவர் வாழ்வும் - வானுலக வாழ்வை நாடிய இந்திர பதவியி லிருந்தவர்களும் அவர்களுடைய செல்வமும், போயின வின்மீனை யொக்கும் - இல்லாது ஒழிந்தவற்றைக் கணக்கிட்டால் வானத்திலுள்ள நட்சத்திரங்களை எண்ணுவது போலாகும், எண்ணுடும் பிரமரும் அண்டமும் பூதங்களு மிறந்த எல்லை இல்லை - எண் மிகுதியான தேவர்களும் பிரம பதவியி லிருந்தவர்களும் பூதங்களா யிருந்தவர்களும் அழிந்து போனவற்றைக் கணக்கிட்டால் அதற்கு வரம்பு இல்லை, கண்ணுடும் அவை எங்கே - கண்ணினுற் பார்க்கப்பட்ட அவைகளெல்லாம் எங்கேயோ போயினவென்றால், நின் வாழ்க்கை நிலை என்னே - நின் வாழ்க்கையின் தன்மை யென்னவாகும் ?, எ - று.

## நிலையாமையை யுணராமை

384. தழுவுறு கிளைஞர் தந்தை தாய்முதல் எவரும் நாளில்
கழிவது கண்டுங் கண்டுங் கண்டிலார் போல வாழ்வார்
ஒழிவற உள்ளத் துள்ளே உறைபரஞ் சுடரை ஓரார்
விழைவென நின்ற துன்ப வித்தினை விளைப்பா ரம்மா.

உரை :—விழைவென நின்ற துன்ப வித்தினை விளைப்பார் - துன்பத்திற்கு மூலவித்தாகிய ஆசை யென்பதை விளைக்கின்றவர்கள், தழுவுறு கிளைஞர் தந்தை தாய்முதல் எவரும் - தழுவப்படுகின்ற சுற்றததோா பெற்றோர் முதலிய எல்லோரும், நாளில் கழிவதும் கண்டும் கண்டும் - அவரவாக்குரிய நாட்களின் முடிவில் மாண்டுபோவதைப் பலமுறை பாாத்திருந்தும், கண்டிலார்போல வாழ்வார் - அதனைப் பாராதவர்கள்போல யாக்கை நிலையாமையை மறந்து தங்கள் வாழ்க்கையை நடத்துவார்கள், ஒழிவற உள்ளத்துள்ளே உறைபரஞ் சுடரை ஓரார் - நீக்கமற நெஞ்சில் நிறைந்து நிற்கும் மேலான பரஞ்சோதியை ஆய்ந்துணர மாட்டார், அம்மா - அவர் தன்மை யதிசயத்தை விளைப்பதாகும், எ - று.

## சிவபெருமானைப் பாடியதன் காரணம்

385. செப்பரிய தமிழ்களெல்லாம் அரியயனே முதலான
தேவர்க் கோதி
ஒப்புவிக்க அறியாமல் அரனிடத்தே வளைத்துவளைத்
துரையா நின்றேன்
மைப்பரவை தருவிடமும் ஆடரவும் நீறும் என்பும்
அன்பாய்க் கொண்டார்
அப்பெருமை உடையவரென் புன்கவியும் பொறுப்பரென
அறிந்து தானே.

உரை :—செப்பரிய தமிழ்களெல்லாம் - இயற்றுதற்கு அருமையான தமிழ்ப் பாடல்களை யெல்லாம், அரி அயனே முதலான தேவர்க்கோதி ஒப்புவிகக அறியாமல் - பிரமா விஷ்ணு முதலிய கடவுளர்களைப் பாடி அவர்களுக்குச் சமர்ப்பிக்கத தெரியாமல், அரனிடத்தே வளைத்து வளைத்து உரையாநின்றேன் - சிவபெருமானிடத்தே சுற்றிச சுற்றி அவற்றை யோதுவதாயினேன் (ஏனெனில்), மைப்பரவை தருவிடமும் ஆடரவும் நீறும் என்பும் அன்பாய்க கொண்டார் - கருங்கடல் கொடுத்த நஞ்சையும் ஆடுகின்ற பாம்பையும் சாம்பலாகிய திருநீற்றையும் இழிவான எலும்பு மாலையையும் விருப்பமாயக் கொண்டவராகிய, அப் பெருமை யுடையவர் என் புன்கவியும் பொறுப்பரென அறிந்துதானே - அவ்வளவு பெருந் தன்மையுடைய பெருமான் எனது இழிவான பாட்டையும் அமைதியாய் ஏற்றுக்கொள்வர் என்னும் கருத்துப்பற்றியே என்க.

## உயர்ந்தோர் மனம்

386. ஓடும் பொன்னும் உறவும பகையுமோர்
கேடுஞ் செல்வமுங் கீர்த்தியும நிந்தையும
வீடுங் கானமும வேறற நோக்குதல்
கூடுந் தன்மை கொளுமனம் நன்மனம்

உரை :—ஓடும் பொன்னும் - ஓட்டையும் பொன்னையும், உறவும் பகையும் - நட்பினையும எதிர்ப்பையும், ஓர கேடும் செல்வமும - நிகரற்ற வறுமையையும் ஐசுவரியததையும், கீர்த்தியும் நிந்தையும் - புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும், வீடும் கானமும் - வீட்டையும் காட்டையும், வேறற நோக்குதல் - வித்தியாச மில்லாமற் சமமாக எண்ணுதலும், கூடும் தன்மை கொளு மனம் - பொருந்திய இயல்புடைய உள்ளமானது, நன் மனம் - நல்ல வுள்ளமாகும், எ - று.

## கீரத்தி னியல்பு

387. எண்ணிலாக் கல்வியாலும் இலங்கிய கேள்வியாலும
திண்ணிதா மதியினாலும் தெளியவா ராதுகீரம்
நண்ணிய ஞானிதானே நயந்தன்பு செய்யில்ஞானக்
கண்ணினாற் காணலாகுங் கரத்திலா மலகம்போல.

உரை :—எண்ணிலாக் கல்வியாலும் - அளவற்ற கல்விப் பயிற்சியாலும், இலஙகிய கேள்வியாலும் - கற்றவர்களிடம் விளக்கமாய் உண்மைகளைக கேட்டுத தெரிந்ததனாலும், திண்ணிதா மதியினாலும் - உறுதியான இயற்கை அறிவினாலும், தெளிய வாராது - தெளிவாகக் கைவரமாட்டாது, நண்ணிய ஞானிதானே நயந்தன்பு செய்யில் - பிரம்ம ஞானத்தை யடைந்தவன் விரும்பி பக்தி செலுத்துவானானால், கரதலா மலகம்போல ஞானக் கண்ணி

ஞற் காணலாகும் - உள்ளங்கை நெல்லிக்கனிபோல ஞான அனுபவத்தில் அது கைவரப் பெறும், எ - று.

## சீவன் முத்தரியல்பு

388\. சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன்
நின்றது புசிப்பார் வெய்யில் நிலவாய்விண் விழுது வீழ்ந்து
பொன்றின சவம்வாழ்ந் தாலும் புதுமையா ஒன்றும பாரார்
நன்றுதீ தென்னுர் சாட்சி நடுவான சீவன் முத்தர்.

உரை:—சாட்சி நடுவான சீவன் முத்தர் - எல்லாவற்றையும் பார்க்கின்ற கடவுளை யுள்ளத்திற் கண்டு முத்தி நிலையை உடம்புள்ளபோதே யடைந்தவர், சென்றது கருதார் - போனதைப்பற்றி வருத்தப்பட மாட்டார்கள், நாளைச சேர்வது நினையார் - பின்னுளில் வரப்போவதைப்பற்றி கவலைப்படமாட்டார்கள், கண் முன் நின்றது புசிப்பார் - தமக்கு நேரே கிடைத்ததை யுட்கொள்வார்கள், வெய்யில் நிலவாய் - வெய்யிலானது நில வாறுலும், விண் விழுது வீழ்ந்து - ஆகாயத்திலிருந்து அமுதம் நில வுலகத்தில் வீழ்ந்து, பொன்றின சவம் வாழ்ந்தாலும் - இறந்துபோன பிணம் உயிர்தெழுந்து வாழினும், புதுமையாய் ஒன்றும் பாரார் - அதிசயமாக எதனையும கருதமாட்டார்கள், நன்று தீது என்னுர் - இது நல்லது இது தீயது என்று சொல்லமாட்டார்கள், எ - று.

## கல்வியின் பயன்

389\. இருவிழிகள் வாண்முகத்தில் இருந்தாலும்
வானிரவி எழுந்தா லன்றிக்
கருதுநிலப் பல்பொருளுங் காண்டல்அரி
தாமஉலகில் கண்போல் யாரும
பெருகியசெல் வமும்அறிவும் பெற்றாலும
நூற்கேள்வி பெறுவார்க் கன்றித்
திருவளர்புண் ணியபாவம் இமமைமறு
மையுமவீடுந் தெரியா வன்றே.

உரை:—இருவிழிகள் வான் முகத்தி லிருந்தாலும் - இரண்டு கண்கள் ஒளியுள்ள முகததி லிருப்பதாலும், வான் இரவி எழுந்தாலன்று - ஆகாயத்திற் சூரியனுதிததாலல்லாமல், உலகில் - இப்பூமியினமீது, கருது நிலப்பல் பொருளும் காண்டலரிதாம் - மதிககப்படுகினற நில முதலாகிய பல பொருள்களையும் பார்ப்பதற்கு இயலாததாகும், கண்போல் பெருகிய செல்வமும் அறிவும் பெற்றாலும் - கண்களைப் போன்ற மிகுநத பொருளும் இயற்கை யறிவும் பெற்றிருந்தாலும், நூற் கேள்வி பெறுவாாக்கனறி - நூல்களைக் கற்றல் கேட்டல் உடையவர்களுக் கல்லாமல், திருவளர் புண்

ணிய பாவம் - நற்கதி யோம்புதற் கேதுவாகிய புண்ணியமும் அதற்கு மாறாகிய பாவமும் இன்ன என்பதும், இம்மை மறுமையும் வீடும் - இப் பிறவி மறுபிறவி முத்தி யென்பனவற்றி னியல்பும், தெரியா அன்றே - தெரியமாட்டாதனவாகும், எ - று.

இராஜராஜேசுவரி துதி

390. ஆரிய முதற்கலைகள் பலவுணர்ந் தாலும்என்
ஆகம புராண விதிகள்
அநேகமுறை கற்றறிந் தாலும்என் அரசராய்
அனைவரும் தொழுது போற்றப்
பார்புகழ் தனித்திகிரி கொண்டவனி ஆளில்என்
பரிமேத மேசெயினும் என்
பலசால வகைதெரிந் துலகமுழுதும் தமது
பணிசெயும் பெருமைபெறின் என்
நேர்புரிதல் யாவுநற் பயனாக எளிமையினில்
நிறுவுநின் மலரடி தனின்
நீடுமன் பில்லாத மூடர்கள் செயுங்கருமம்
நிந்தையல தொன்று தருமோ
சீரிய மறைக்குமுடி யாயிலகும் அன்னையே
சிராஜ ராஜேசு வரீ
திகழ்செழிய கழனிசூழ் முகவைவள நகரில்வாழ்
தேவி திரிசூலி யுமையே.

உரை:—சீரிய மறைக்கு முடியா யிலகும் அன்னையே - சிறந்த நுட்பமான ஞான நூல்களுக்குக் கிரீடம்போல் விளங்கும் தாயே !, சிராச ராசேசுவரி - அரசர்க்கு அரசியாகிய திருமுதல்வியே !, திகழ் செழிய கழனி சூழ் - விளங்குகின்ற வளமான வயல்கள் சூழ்ந்த, முகவை வளநகரில் வாழ்- இராமநாதபுரமென்னும் செல்வப்பதியில் வீற்றிருக்கும், தேவி திரிசூலி யுமையே - தேவியே! முத்தலைச் சூலமுடைய வுமையம்மையே !, ஆரிய முதற் கலைகள் பல உணர்ந்தாலும் என் - உயர்ந்த முதல் நூல்கள் பலவற்றைக் கற்றாலும் என்ன பயன், ஆகம புராண விதிகள் அநேக முறை கற்றறிந்தாலும் என் - ஆகமங்களிலும் புராணங்களிலும் கூறப்பட்ட சமயாசார ஒழுங்கு முறைகளைப் பலமுறை படித்துத் தேர்ந்தாலும் என்ன பயன், அரசராய் அனைவரும் தொழுது போற்ற - வேந்தராய் வீறறிருந்து எல்லாரும் வணங்கித் துதிக்கவும், பார் புகழ் தனித் திகிரி கொண்டு - உலகம் போற்றுகின்ற ஏக சக்ராதிபத்தியம் உடையவனாய், அவனியாளில் என் - பூமியை ஆண்டாலுமென்ன, பரிமேதமே செய்யினும் என் - அசுவமேத யாகஞ் செய்தாலுமென்ன, பல சால வகை தெரிந்து - பல வகையான இந்

திர சாலவித்தைகளை யறிந்து, உலக முழுதும் தமது பணிசெயும் பெருமை பெறின் என் - உலகத்தார் எல்லாரும் தான் ஏவியதைச் செய்யும் மேன்மை யைப் பெற்றாலு மென்ன, சேர் புரிதல் யாவும் நற்பயனாக - உன்னை முன் னாகக் கொண்டு செய்யும் எவற்றையும் நல்ல பிரயோசன முடையனவாக, எளிமையினில் நிறுவும் - எளிதாக நிலைநாட்ட வல்ல, நின்மலாடி தன்னில் - உன்னுடைய திருவடித் தாமரையின் கண்ணே, நீடும் அன்பில்லாத மூடர்கள் செயும் கருமம் - நீடித்த பக்தியில்லாத அறிவிலிகள் செய்கின்ற முயற்சியானது, நிந்தையலது ஒன்று தருமோ - இகழ்ச்சியை யன்றி வேறொரு பயனையும் தராது, எ - று

## முருகன் துதி

391\. சந்தனமும் செந்தமிழும் தவமும்அர
மகளிர்குழற் சவரிக் காடும்
அந்தகனை வென்றசித்தர் ஆகமுமதோய்
தருசிறுகால் அதனை யேவி
மைந்தருடற் பிணிமுழுதும் ஆற்றிவட
கடற்பருகும் வடவைத தீயை
எந்தமலை அவிப்பதுவோ அந்தமலை
சொந்தமலை எமக்கு மாதோ.

உரை:—சந்தனமும் செந்தமிழும் - சந்தனக் காவிலும் செந்தமிழிடத்திலும், தவமும் - தவதினரிடத்திலும், அரமகளிர குழல் சவரிக்காடும் - தேவ மாதர்களின் கூந்தலாகிய சாமரவனததிலும், அந்தகனை வென்ற சிதத்ர் ஆகமும் - எமனைச செயித்த சிததர்களின உடம்பிலும், தோயதரு சிறுகால் அதனை ஏவி - படிகின்ற தனது சிறிய திருவடிகளை விடுதது, மைந்தா உடல் பிணி முழுதும் ஆற்றி - மனிதர்களது உடலிலுள்ள நோய் எல்லாவற்றையும் நீக்கி, வடகடல் பருகும் வடவைததீயே - வடக்குச சமுத்திரத்தி லிருந்து அதனை வற்றச செய்யும் வடவாமுகாக்கினியை, எந்த மலை அவிப்பதுவோ அந்த மலை - எந்த மலைத தலைவன் அணைக்கின்றானோ அந்தமலைத் தலைவனாகிய முருகன், எமக்குச சொந்த மலை மாதோ-எமக்குச சொந்தமான மலைபோல்பவனானவன் அல்லது எனககு மாததிரம் உரிததாயில்லாமல் எல்லார்க்கும் உரியவனே, எ - று.

குறிப்பு:—சொந்த மலை என்பதற்குச் சொந்தமலை எனவும், சொந்தம்+அலை எனவும் பிரித்தும் பொருள் கொள்ளலாம்.

## அருகன் துதி

392. இருட்பார வினைநீக்கி எவ்வுயிர்க்குங் காவலெனா
அருட்பாரந் தனிசுமந்த அன்றுமுத லின்றளவும்
மதுவொன்று மலரடிக்கீழ் வந்தடைந்தோர் யாவர்க்கும்
பொதுவன்றி நினக்குரித்தோ புண்ணியநின் திருமேனி.

உரை:—இருட்பார வினை நீக்கி - அறியாமை காரணமாக வருகின்ற கருமச சுமைகளைத் தொலைத்து, எவவுயிர்க்குங காவலெனா - எல்லா வுயிர்களையும் காக்கின்ற கடவுள்போல, அருள் பாரம் தனி சுமந்த - கிருபையாகிய சுமையைத் தமக்கே உரியதென்று மேற்கொண்ட, அன்றுமுதல் இன்றளவும் - அந்தக் காலமுதல் இற்றைநாள் வரைக்கும், மதுவொன்று மலரடிக் கீழ் வந்தடைந்தோர் யாவர்க்கும் - தேன் பொருந்திய தாமரைப் பூப்போன்ற உன்னுடைய திருவடிக்கீழ் வந்து சரண்புகுந்த எல்லார்க்கும், புண்ணிய நின் திருமேனி - நன்மை நிறைந்த உன்னுடைய புனித வுடம்பானது, பொதுவன்றி நினககு உரிததோ - எல்லார்க்கும் பொதுவில் பயன் படுவதன்றி உனக்கு மாத்திரம் உரியதல்லவே, எ - று.

## பொருளி னின்றியாமை

393. பொருளிலார்க் கின்பம் இல்லை புண்ணியம் இல்லை என்றும
மருவுறு கீர்த்தி யில்லை மாந்தருட் பெருமை யில்லை
கருதிய கருமம இல்லை கதிபெறு வழியும இல்லை
பெருநிலத் திடைந டக்கும பிணமெனப் படுவ ரன்றே.

உரை :—பொருளில்லார்க்கு இன்பம் இல்லை - ஐசுவரிய மில்லாதவர்களுக்கு சுகமில்லை, புண்ணியம் இல்லை - நன்மை விளைவதில்லை, என்றும் மருவுறு கீர்த்தி இல்லை - எப்பொழுதும் பொருந்தக்கூடிய புகழ் எற்படாது, மாந்தருள் பெருமை இல்லை - மனிதர்கள் நடுவே மதிப்பில்லை, கருதிய கருமம் இல்லை - நினைதத காரியத்தை முடிப்பதியலாது, கதி பெறு வழியும் இல்லை - நல்ல கதியை யடைவதற்குரிய சாதனமும் அமையாது, பெருநிலததிடை நடக்கும் பிணமெனப் படுவரன்றே - பெரிய பூமியின் கண் நடப்பிணமாக வறியவர் கருதப்படுவா, எ - று.

## திருமால் வழிபாட்டின் பயன்

394 மாளாத வினையனைத்தும் மாள நாம்போய்
வானேறி மலர்மகளார் அன்பு பூணும்
தோளாத மாமணிக்குத் தொண்டு பூண்டு
தொழுதுகந்து தோத்திரங்கள் பாடியாடிக்

கேளாத பழமறையின் கீதங் கேட்டுக்
கிடையாத பேரின்பம் பெருக நாளும்
மீளாத பேரடிமைக் கன்பு பெற்றோம்
மேதினியில் இருக்கின்றோம விதியி னாலே.

உரை :—மாளாத வினையனைத்தும் மாள - பிறவழியில் தீராத கர்மங்களெல்லாம் ஒழியும்படி, நாம் போய வானெறி - நாம் சென்று பிண்டத்தினுள்ள வைகுந்த லோக நிலையை யடைந்து, மலா மகளாா அன்பு பூணும் - திருமகளார் காதலை யேற்றுக்கொள்ளும், தோளாத மாமணிக்குத் தொண்டு பூண்டு - துளைக்கப்படாத பெரிய விரதினம்போன்ற திருமாலுக்குப் பணிவிடை செய்து, தொழுதுகந்து தோத்திரங்கள் பாடியாடி - வணங்கி விருப்புடன் புகழ்ப் பாடல்களைப் பாடி யானந்தக கூத்தாடி, கேளாத பழமறையின் கீதம் கேட்டு - உலகத்திற் கேட்கப்படாத பழமையான வேதங்களின் இசையினை செவி மடுத்து, நாளும் கிடையாத பேரின்பம் பெருக - நாள்தோறும் பெறுதற்கரிய பேரின்பமானது நமக்கு மிகும்படியாக, மீளாத பேரடிமைக்கு அன்பு பெற்றோம் - என்றும் நிலைபெற்ற பெரிய அடியார்களாயிருப்பதற்குரிய பக்தியை யுடையவரானோம், விதியினாலே மேதினியில் இருக்கின்றோம் - ஊழின் வலியினாலே இந்த வுலகத்திலே நாம் வாழ்ந்திருக்கின்றோம், (ஊழ்வினை யனுபவ முடிந்தால் முத்தியடைவோ மென்பது கருத்து, எ - று.

## கந்தப்பெருமான் வணக்கம்

396. ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவுகல வாமை வேண்டும்
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண்டும பொய்மை
பேசாதி ருக்க வேண்டும
பெருநெறி பிடித்தொழுக வேண்டுமமத மானபேய்
பிடியாதி ருக்க வேண்டும
மருவுபெண் ணாசையை மறக்கவே வேண்டுமஉனை
மறவாதி ருக்க வேண்டும்
மதிவேண்டும நின்கருணை நிதிவேண்டும நோயற்ற
வாழ்வினான் வாழ வேண்டும
தருமமிகு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

உரை :—தருமமிகு சென்னையில் - அறச் செயல்கள் அதிகப்பட்ட சென்னைமா நகரில், கந்தகோட்டத்துள் வளர் தலமோங்கு கந்தவேளே - கந்தாாலயமென்னு மிடத்தில் சென்னைப்பதி தழைத்தோங்கும் பொருட்டு வீற்றிருக்கும் குமாரப் பெருமானாகிய வள்ளலே !, தண்முகத் துய்யமணி - குளிர்ந்த கருணையையுடைய பரிசுத்த விரத்தினம் போன்றவனே !, உண்முகச சைவமணி - அகத்தி லொளிர்கின்ற சைவ விரத்தினமே!, சண்முகத் தெய்வமணியே - ஆறுமுகக கடவுளாகிய விரத்தினமே !, ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமாதம் உறவு வேண்டும் - ஒரே நினைவுடன் உன்னுடைய பாத தாமரையைத் தியானிக்கின்ற முதல் தரமான குணமுடையவரது சினேக மெனக்குக் கிடைக்க வேண்டும், உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும் - மனதில் ஒரு கருததை வைத்துக்கொண்டு வெளியே அதற்கு மாறான தொன்றைப் பேசுகின்ற வஞ்சகரின் இணககம் இல்லாதிருத்தல் வேண்டும், பெருமை பெறு நினது புகழ் பேசவேணடும் - மாட்சிமையுடைய உன்னுடைய கீர்த்தியையே எப்பொழுதும எடுத்துச சொல்லும் பேறு எனக்குக் கிடைக்க வேண்டும், பொயமை பேசாதிருக்க வேண்டும் - அசததியத்தை எப்பொழுதும் சொல்லாதிருக்குங குணம் வேணடும், பெரு நெறி பிடிதது ஒழுக வேண்டும் - நற்கதிககுரிய பெரிய வழியில் இடைவிடாது நான் செல்ல வேண்டும், மதமான பேய் பிடியாதிருகக வேண்டும் - தவறான சமயப் பற்றென்கின்ற பிசாசானது என்னைப் பற்றாதிருக்க வேண்டும், மருவு பெண்ணாசையை மறக்கவே வேணடும் - மாதரைச சேர்வதற் கேதுவாகிய மோகததை முற்றிலும் மறத்தல் வேண்டும், உனை மறவாதிருகக வேண்டும் - உன்னை எப்போதும் நினைததுககொண்டிருக்க வேணடும், மதி வேண்டும் - நல்லறிவு வேண்டும், நின் கருணை நிதி வேண்டும் - உனது திருவையாகிய செல்வம் எனக்குக் கிடைகக வேண்டும், நோயற்ற வாழ்வினை வாழ வேணடும் - வியாதியில்லாத சுக வாழ்வை நான் அனுபவிக்க வேண்டும், எ - று.

## திருமாலைப் பிரார்த்தித்தல்

396. உலகெனும் கொடுவெங் கானில்
உணர்வெனும் அணிகோட் பட்டே
அலைசெய்கா மாதி வேடர்க்
கடிமையாய் அலக்க ணுற்றேன்
நிலையுணர்ந் தெனைமீட் கில்லாய்
நினக்கன்றோ அடிமை பூண்டேன்
பலர்புகழ் அல்லிக் கேணி
பார்த்தசா ரதியம் மானே.

உரை :—பலர் புகழ் அல்லிக்கேணி பார்த்தசாரதி யம்மானே - எல்லா ரும் துதிக்கின்ற திருவல்லிக்கேணியில் வீற்றிருக்கும் பார்த்தசாரதி சுவாமி யென்னும் அழகிய பெரியோனே!, உலகெனும் கொடு வெங்கானில் உணா வெனும் அணிகோட்பட்டே - உலகமாகிய கொடிய காட்டிலே உலகாநுபவ மென்னும் அழகிய மரகக்கிளையிற் சிக்கி, அலைசெய் காமாதி வேடர்க்கு அடி மையாய் அலக்கணுற்றேன் - துன்பத்தைத் தருகின்ற காமம் வெகுளி மயக்கமென்னும் வேடர்களுக்கு ஆட்பட்டு மிகுந்த வருத்தத்தை யனுபவித் தேன், நினக்கன்றோ அடிமை பூண்டேன் - உனக்கல்லவா தொண்டனு யிருப்பதற்குரியேனு னை, நிலை யுணர்ந்து எனை மீட்கில்லாய - என்னுடைய பரிதாப நிலையைத் தெரிந்து அதினின்று தப்பி மீளும்படியாக நீ செய்ய வேண்டும்; எ - று.

## சிவபெருமானைத் திரிகரணங்களால் வழிபடுதல்

397. சிந்தனை செய்ய மனமமைத் தேன்செப்ப நாவமைத்தேன்
வந்தனை செய்யத் தலையமைத் தேன்கை தொழுவமைத்தேன்
பந்தனை செய்வதற் கன்பமைத் தேன்மெய் யரும்ப வைத்தேன்
வெந்தவெண் ணீறணி யீசற் கிவையான் விதித்தனவே.

உரை :—சிந்தனை செய்ய மனம் அமைத்தேன் - தியானத்தையே செய்துகொண்டிருப்பதற்கு எனது நெஞ்சத்தைத் தயார் செய்தேன், செப்ப நாவமைத்தேன் - துதிசெய்வதற் கெனறே நாவினை வைத்துக்கொண் டேன், வந்தனை செய்யத் தலை யமைத்தேன் - வணக்கஞ் செய்வதை என் தலையின் கடமையாக நியமித்தேன், கை தொழ அமைத்தேன் - என்னு டைய கரத்தினைக் கும்பிடுவதற்கெனவே வைத்தேன், பந்தனை செய்வ தற்கு அன்பு அமைத்தேன் - மனத்தினில் இறைவனைக் கட்டுப்படுத்து வதற்கு அவனைப்பற்றிப் பக்தி செலுத்தினேன், மெய் அரும்பு வைத்தேன் - அந்த பக்தியினால் உடம்பு மயிர் சிலிர்க்கப்பெற்றேன், வெந்த வெண்ணீறு அணி யீசாக்கு இவை யான் விதித்தனவே - பற்பமாகிய வெள்ளிய திரு நீற்றினை யணிந்த சிவபெருமான் பொருட்டு இம் முறைகளை யான் வகுத் துக் கொண்டேன் எ - று.

## முதற்பொரு ளொன்றே யென்பது

398. பண்ணியிடும் பணிபலவே பொன்னொன் றேயாம்
பாண்டத்தின் பேர்பலவே மண்ணொன் றேயாம்
வண்ணமிகும் பசுபலவே பாலொன் றேயாம
வகையேழின் உடல்பலவே சிவனொன்றும்

நண்ணுமறு சமயங்கள் பேர்வே றல்லால்
நாதன்நீ ஒருவனே அவர்கள் தம்மை
எண்ணியே செயுந்தொண்டர் பூசைக்கெல்லாம
இரங்கிவரந் தருகின்றாய் எம்பிரானே.

உரை:—எம்பிரானே - எனது தலைவனே!, பண்ணியிடும் பணிபலவே பொன் ஒன்றேயாம் - செய்யப்படுகின்ற ஆபரணம் பலவகை யானாலும் அவற்றிற்கு ஆதாரமான தங்கம் ஒரே பொருளாகும், பாண்டத்தின் பேர் பலவே மண ஒன்றேயாம் - பானை முதலிய பாத்திரங்கள் பலவகையானாலும் அவற்றிற்கு முதற் காரணமாகிய மண் ஒன்றே யாகும், வண்ண மிகும் பசு பலவே பால் ஒன்றேயாம் - பசுக்கள் நிறஙகள் பலவகைப் பட்டாலும் அவற்றின் பால் ஒரு நிறமுடைய வெண்மையாகும், வகை யேழின் உடல் பலவே சீவன் ஒன்றும் - எழுவகைப் பிறவி வெவவேறாயினும் அவற்றை இயககும் உயிரின் தன்மை யொன்றே யாகும், நண்ணுமறு சமயஙகள் பேர் வேறல்லால் நாதன் நீ ஒருவனே - சனஙகள் போயடையும மதஙகள் ஆறானாலும் அவற்றில் வழிபடக்கூடிய தெய்வம் நீ ஒருவனே ஆகும், அவா கள் தம்மை எணணியே செயுந் தொண்டா பூசைககெல்லாம் இரஙகி வரந் தருகினறாய - அவ வறுசமயததோா செய்கினற வழிபாட்டிற் கெல்லாம் இருபைவைத்து அவர்கள் விரும்பியவற்றை யளிக்கின்றாய், எ - று.

## அகிலாண்ட நாயகி துதி

399. பொன்னே வருக மூவுலகும் பூத்தாய் வருக நாயேனைப்
புரந்தாய் வருக வழுதியர்கோன் புதல்வி வருக முதற்கிளைய
மின்னே வருக மெய்ஞ்ஞான விளக்கே வருக மறைநான்கின்
விரிவே வருக பேரின்ப விளைவே வருக மிகுங்கருணை
அன்னே வருக அகநெகுவார்க் கணியாய் வருக அலர்மடவார்க்
கரசே வருக உரைப்பருஞ்சீர் அமமே வருக அழற்கரத்து
மன்னோர் உடலம பகிர்ந்தவிள மயிலே வருக வருகவே
மதமா தங்க வனத்துமட மானே வருகவே.

உரை :—பொன்னே வருக - பொன் போன்ற தூயவளே வருக !, மூவுலகும் பூத்தாய் வருக - மேல் கீழ் நடு வென்னும் மூன்றுலகங்களையும் படைத்தவளே வருக, நாயேனைப் புரந்தாய் வருக - நாய் போன்ற அடியேனைக் காப்பாற்றியவளே வருக, வழுதியர் கோன் புதல்வி வருக-பாண்டியர் தலைவரின் மகளே வருக, முதற்கு இளையு மின்னே வருக - முதற் பொருளாகிய பரம்பொருளுக்கு இளமையான மாதே வருக, மெய்ஞ்ஞான விளக்கே வருக-உண்மை யறிவு வடிவமான ஒளியே வருக, மறை நான்கின் விரிவே வருக - நான்கு வேதங்களின் விரிந்த பொருள் வடிவானவளே

வருக, பேரின்ப விளைவே வருக - பேரின்பம் விளைதற்குக் காரணமாகிய வளே வருக, மிகுங் கருணை அன்னே வருக - மிகுந்த தயையுடைய தாயே வருக, அகம் நெகு வார்க்கு அணியாய் வருக-உள்ள முருகுகின்றவர்களுக்கு நெருக்கமாய்ப் பிரசன்னமாகும் தாயே வருக, அலர் மடவார்க்கு அரசே வருக - பூவில் வீற்றிருக்கின்ற திருமகட்குத் தலைவியே வருக, உரைப்பருஞ் சீர் அம்மே வருக-சொல்லுதற்கு முடியாத சிறப்புடைய அன்னையே வருக, அழற் கரத்து மன்னோர் உடலம் பகிர்ந்த விளமயிலே வருக வருகவே - நெருப்பைத் திருக்கையிற் கொண்ட சிவபெருமானது திருமேனியி லொரு பாகங் கொண்ட மெல்லிய மயில் போன்றவளே வருக வருகவே, மதமா தங்க வனத்து மடமானே வருக வருகவே - திருவானைக் காவிலுறையும் இளம் மான்போன்ற அம்மையே வருக வருகவே, எ - று.

## கடவுளுக்கு விண்ணப்பம்

400. பலர்பல பெயரால் பணிபரம் பொருளே
உலகில் ஓர் அணுவும உனையலா தசையா
தென்னும உரைகினைந் துன்னைவேண் டுவல்இது
முன்னைநாள் இளமையும முடிவிலா வாழ்வும்
உதவினை சிலர்க்கென ஓதுவர் ஒருகதை
இதமுற அவ்வரன் எனக்குநீ உதவினும்
கொள்ளேன் தள்ளொணுச் சள்ளையே கொடுக்குமால்
செல்வமும இன்பமும செல்கினச் செருக்கும
நல்குளன நயவேன் நன்மைதீர் வறுமையும்
பலப்பல இன்னலும் விலக்குளனப் பணிகிலேன்
நன்றே வருகினும தீதே விளைகினும
ஒன்றே எனமதித் தேற்கும் என்உள்ளம
வேண்டிலேன் கீர்த்தி ஈண்டது நிகர்க்கும
வறியபேய்த் தேர்என அறிவேன் மற்றியான்.

உன்னை இன்று இரப்ப தென்னை யெனின் கேள் :—

என்னின் எளியவர்க் கென்னால் இயன்றதை
மன்னுமஎன் அகஒளி காட்டும வழியினில்
உன்னி உழைக்க உகந்தருள் அதன்பொருட்
டிந்தஎன் உடலம் இருக்குநாள் மட்டும்
நொந்துநோ வாதருள் நோய்வரு மாயினும்
மனமும் அறிவும் மயங்கிவிடா தருள்

தினமும் இதுவே செய்யும் அவா அருள்
உடல்வலி ஓயுமேல் உளவலி சாயுமேல்
உடனே உயிர்ஒழிந் துலக
நடனசாலையைநான் நழுவிட அருள்கவே.

உரை:—பலர் பல பெயரால் பணிபரம் பொருளே - பல சமயத்தாரும் பல் வேறு பெயர்களைக் கூறி வழிபடுகின்ற மேலான கடவுளே !, உலகில் ஓர் அணுவும் உனையலாது அசையாது - இந்த உலகத்தில் மிகச சிறிய பொருளுங்கூட நீ அசைக்காமல் அசைவதில்லை, என்னும் உரை நினைந்து உன்னை வேண்டுவல் இது - என்கின்ற வாக்கியத்தை மனத்தில் வைத்துக் கொண்டு உனக்கு இந்தப் பிரார்த்தனையைச் செய்கின்றேன், முன்னை நாள் இளமையும் முடிவிலா வாழ்வும் - முந்திய காலத்திலே வாலிபத்தையும் அழிவிலா வாழ்க்கையையும், உதவினை சிலர்க்கு என ஓதுவர் ஒரு கதை- சில மக்களுக்கு நீ கொடுத்தாயென்று ஒரு கதை சொல்வதுண்டு, இகமுற அவ்வரன் எனக்கு நீ உதவினும் - இனிமையாக அந்த வரத்தை எனக்கு நீ கொடுத்தாலும், கொள்ளேன் - அது எனக்கு வேண்டாம், (ஏனெனில்) தன்னொரஞ்ச சன்னையே கொடுக்குமால் - நீக்க முடியாத துன்பத்தையே அது தருவதாகும், செல்வமும் இன்பமும் - பொருளையும் சிற்றின்பத்தையும், செல் சினச் செருக்கும் - கோபத்தைச செலுத்தக்கூடிய அகந்தையும, நல்கு என நயவேன் - நீர் கொடுக்கவேண்டுமென்று நான் வேண்டமாட்டேன், நன்மைதீர் வறுமையும் - நலமில்லாத தரித்திரத்தையும், பலப் பல இன்னலும் விலக்கு - அநேக விதமான துன்பங்களையும் நீக்கிவிடு, எனப் பணிகிலேன் - என்று வேண்டி உன்னை நான் வணஙகவில்லை, நன்றே வருகினும் தீதே விளைகினும் - நன்மையே வந்தாலும் தீமையே யுண்டானாலும், ஒன்றே என மகிழ்ந்து ஏற்கும் என் உள்ளம் - அவை யொரு தன்மையனவே என்றெண்ணி என் மனம் அவற்றை யேற்றுக் கொள்ளும், வேண்டிலேன் கீர்த்தி - புகழை நான் விரும்பவில்லை (ஏனெனில்), ஈண்டு அது வறிய பேய்த்தேர் நிகாக்கும் என அறிவேன்- இவவுலகத்திலது பயனற்ற கானலைப் போல்வதென்பது எனக்குத் தெரியும் மற்று யான் உன்னை இன்று இரப்பது என்ன வெனில் - இவை யெல்லாம் ஒரு புறமிருக்க உன்னிடம் இப்போது யாசிப்பது யாது எனில், கேள் - கேட்டருள்வாயாக !, என்னின் எளியவர்க்கு என்னால் இயன்றதை - என்னைப் பார்க்கிலும் ஏழையா யிருப்பவர்களுக்கு என்னலாகக் கூடியதை, மன்னும் என் அக ஒளி காட்டும் வழியினில் - நிலைபெற்ற எனது உள்ளறிவு தெரிவிக்கின்ற முறையில், உன்னி யுழைக்க உகந்தருள்- விரும்பி யுழைக்கும்படி நீ தயவுசெய் தருள்வாயாக!, அதன் பொருட்டு - அஙஙனம் உழைப்பதற்காக, இந்த என் உடலம் இருக்கு நாள் மட்டும் - இந்த என்னுடைய உடம்பானது உலகத்தில் வாழ்ந்திருக்கும் நாள் வரை,

நொந்து நோவதருள் - நோய்ப்பட்டு வருத்தப்படாம லிருக்கும்படி அருள் செய்வாயாக!, நோய் வருமாயினும் - வியாதி நேர்ந்தாலும், மனமும் அறிவும் மயங்கி விடாது அருள் - உணர்ச்சியும் ஆராய்ச்சியும் மறைந்து போகாமல் அருள் செய்வாயாக!, தினமும் இதுவே செய்யும் அவா அருள் - நாள்தோறும் இக்கடமையே செய்கின்ற விருப்பத்தைக் கொடுப்பாயாக!, உடல் வலி யோயுமேல் - தேக பல முடிவடையுமானல், உள வலி சாயுமேல் - மனோ வலி நிலைபெறு விடில், உடனே உயிர் ஒழிந்து - உடனே உயிரானது உடம்பைவிட்டு நீங்க, உலக நடனசாலையை நான் நழுவிட அருள்கவே - உலகமாகிய நாடகசாலையை விட்டு நான் தப்பி மறையும்படி யருள் புரிவாயாக !, எ - று.

எல்லாம் ஈசன் செயல்

401. வைதிடினும் வாழ்த்திடினும் இன்பதுன்பம்
வந்திடினும் வம்பு கோடி
செய்திடினும் தண்டலைநீள் நெறியார்தஞ்
செயலென்றே தெளிவ தல்லால்
மெய்தவிர அவர்செய்தார் இவர்செய்தார்
எனநாடி வெறுக்க லாமோ
எய்தவர்தம் மருகிருக்க அம்பைநொந்த
கருமமென்ன இயம்பு வீரே.

உரை :—வைதிடினும் - ஒருவர் ஏசினுலும், வாழ்த்திடினும் - நம்மைத் துதித்தாலும், இன்ப துன்பம் வந்திடினும் - இன்பத்தைக் கொடுத்தாலும் துன்பத்தைக் கொடுத்தாலும், வம்பு கோடி செய்திடினும் - சேட்டைகள் அளவில்லாதன செய்தாலும், தண்டலை நீள் நெறியார் தம் செயல் என்றே தெளிவதல்லால் - அவை யெல்லாம் தண்டலை நீள் நெறியிலிருக்கின்ற கடவுளது திருவருட் செயலென்றே எண்ணித தோசியடைவதல்லாமல், மெய் தவிர அவர் செய்தார் இவர் செய்தார் என நாடி வெறுக்கலாமோ - உண்மைக்கு மாறாக அவர் செய்தார் இவர் செய்தார் என்றெண்ணிச் செய்தவர்களைப் பகைத்தல் பொருத்தமா?, எய்தவர்தம் மருகிருக்க அம்பைநொந்த கருமமென்ன - அம்பினுல் எய்தவர் பக்கத்தி லிருக்கும்பொழுது அவரிடம் நம் வருத்தத்தைக் கூறாமல் அம்பைக் குறைகூறுவதால் பயனென்ன ?. இயம்புவீரே - சொல்வீராக !, எ - று.

எல்லாம் கடவுளே எனல்

402. அறக்கடல் நீயே அருட்கடல் நீயே அருங்கருணாகரன் நீயே
திறக்கடல் நீயே திருக்கடல் நீயே திருந்துளமம ஒளிபட ஞான
நிறக்கடல் நீயே நிகர்கடந் துலகில் நிலையுநீ உயிருநீ நிலைநான்
பெறக்கடல்நீயேதாயுநீ எனக்குப்பிதாவுநீ அனைத்துநீயன்றே.

உரை :—அறக்கடல் நீயே - தருமமாகிய சமுத்திரம் நீயே ஆவாய், அருட்கடல் நீயே - கிருபா சமுத்திரம் நீயே ஆவாய், அரும் கருணாகரன் நீயே - செய்வதற்கரிய அருட் செயல்களுக்கெல்லாம் இருப்பிடம் நீயே ஆவாய், திறக்கடல் நீயே - வலிமைக்குச் சமுத்திரம் போன்றவன் நீயே ஆவாய், திருக்கடல் நீயே - செல்வக்கடலும் நீயே ஆவாய், திருந்துளம் ஒளிபட ஞான நிறக்கடல் நீயே - திருத்தமடைகின்ற மக்களுடைய மனத்தில் அறிவுண்டாகும்படி ஞானம் பிரகாசிக்கின்ற கடல் நீயே ஆவாய், நிகர் கடந்து உலகில் நிலையும் நீ - ஒப்பில்லாதவனாய் உலகத்தில் நிலைபெறுபவனும் நீயே, உயிரும் நீ - ஆத்மாவும் நீயே, நான் நிலைபெற அக்கடல் நீயே - நான் நிலையாக இருத்தற்கு இடமாகிய பேரின்பக்கடலும் நீயே, எனக்குத் தாயும் நீ பிதாவும் நீ - எனக்கு அன்னையும் அப்பனுமாகிய பெற்றோர் நீயே, அனைத்தும் நீ யன்றோ - எல்லாம் நீயே அல்லவா ?, எ - று.

## கடவுள் வாழ்த்து

403. வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே.

உரை:—வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி - அண்டத்திலுள்ள ஆகாயம் நிலம் காற்று தீ முதலிய ஐம்பூதவடிவங்களுமாகி, ஊனாகிஉயிராகி-பிண்டத்திலுள்ள உடம்பும் உயிரும தன் வடிவமேயாகக் கொண்டு, உண்மையுமாய இன்மையுமாய் - அருளாளர்க்குத தோன்றியும அலலாதவர்க்கு மறைந்தும் நின்று, கோனாகி - எல்லாவற்றிற்குந் தலைவனுமாகி, யான் எனது என்று அவரவரைக் கூத்தாட்டுவானாகி - தன் தலைமையை மறந்து அகங்கார மமகாரத்தோடு நடககின்ற உயிர்களை உள் நின்றியற்றுகின்ற முதல்வனுமாகி, நின்றாயை என் சொல்லி வாழ்ததுவனே - நிற்கின்ற உன்னை யான் என்ன சொல்லி வாழ்த்துதல் கூடும், எ - று

## தாய்க் கூற்று

404. உற்றா யென்னும உன்னையன்றி மற்றொன்
றுணரேன் என்னும உணர்வுகள் கலக்கப்
பெற்றாய ஐந்தெழுத்தும் பிதற்றிப் பிணிதீர
வெண்ணீ றிடப்பெற்றேன் என்னும்
சுற்றாய சோதி மகேந்திரஞ்சூழ் மனத்திருள்
வாங்கிச் சூழாத நெஞ்சிற்
குற்றாய் என்னும குணக்குன்றே யென்னும
குலாத்தில்லை அம்பலக் கூத்தனையே.

உரை :—(என் மகள்) குலாத் தில்லை யம்பலக் கூத்தனையே - தில்லைப் பதியில் விளங்கும் திருச சபையிலாடும் நடேசப்பெருமானை, உற்ற யென் னும் - நெருங்கிய நண்பனே என்று கூறுவாள், உன்னையன்றி மற்றொன்று உணரேன் என்னும் - உன்னைத் தவிர நான் வேறொன்றையும் அறிய மாட்டே னென்று சொல்வாள், உணர்வுகள கலக்கப்பெற்று - ஐம்பொறி யறிவுகளில் நீ வந்து சாரப்பெற்று, ஆய ஐந்தெழுத்தும் பிதற்றி - உன்னை யடைதற் கேதுவாகிய பஞ்சாட்சர மந்திரத்தைக் கூறிச் செபித்து, பிணி தீர வெண்ணீறு இடப்பெற்றேன் என்னும் - நோய் நீங்கும்படி வெள்ளிய விபூதி தரிககப் பெற்றேனென்பாள், மகேந்திரஞ் சூழ் சுற்றிய சோதி - மகேந்திர மலைமீது சூழ்ந்து நின்று எங்கும் விளங்கிய அறிவொளியான பெருமானே!, மனத்திருள் வாங்கிச சூழாத நெஞ்சிற்கு உற்றாய் என்னும் - உன்னை நினையாத நெஞ்சில் நிலைபெற்ற இருளைத் தொலைத்து நீ அங்கே பொருந்தினாய் என்பாள், குணக்குன்றே என்னும் - நற்குண மலையே என்பாள், எ - று.

## நீதியின் சிறப்பு

405. நடுவுநின் றார்க்கன்றி ஞானமு மில்லை
நடுவுநின் றார்க்கு நரகமு மில்லை
நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர்
நடுவுநின் றார்வழி நானுநின் றேனே.

உரை:—நடுவு நின்றாக்கன்றி ஞானமுமில்லை-ஒரு பக்கமுஞ் சாராமல் நடுவு நிலையில நீதியாயிருப்பவாக்கல்லது உயார்த அறிவு உணடாகாது, நடுவு நின்றார்க்கு நரகமுமில்லை - நீதியாயிருப்பவாகளுக்கு நரகத துன்பங் கிடையாது, நடுவு நின்றா நல்ல தேவருமாவா - நீதியாளர்கள் நன்மையிற் சிறந்த தேவ பதவியடைவார்கள், நடுவு நின்றார் வழி நானும் நின்றேனே- நீதியாளர் நெறியில் நானும் நிற்பேனாயினேன், எ - று.

## பஞ்சாட்சரத்தை யோதெனல்

406. மற்றும் பலபிதற்ற வேண்டா மடநெஞ்சே
கற்றைச் சடையண்ணல் காளத்தி—நெற்றிக்கண்
ஆரா வமுதின் திருநாமம அஞ்செழுத்துஞ்
சோராமல் எப்பொழுதுஞ் சொல்.

உரை:—மட நெஞ்சே - மூட மனமே!, மற்றும் பல பிதற்ற வேண்டாம் - இறைவனுக்கு வேறாகிய பல பொருள்களைப்பற்றி நினைத்துப்பேச வேண்டாம், கற்றைச சடையண்ணல் - தொகுதியான சடை முடியை யுடைய பெருமானாகிய, காளததி - திருக்காளததியி லிருக்கும், நெற்றிக் கண் ஆரா அமுதின் - நெற்றிக் கண்ணையுடைய தெவிட்டாத அமுதம்

போன்றவனின், திருநாமம் அஞ்செழுத்தும் - பெருமையை யுணர்த்தும் திருமந்திரமாகிய பஞ்சாட்சரத்தை, சோராமல் எப்பொழுதும் சொல் - தளர்ச்சி யடையாமல் ஊக்கமாக எப்போதும் ஓதிக் கொண்டிருப்பாயாக!, எ - று.

## பக்தியி னுயர்வு

407. சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவா ரவர்செல்வம் மதிப்போ மல்லோம
மாதேவர்க் கேகாந்த ரல்ல ராகில்
அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில்
அவர்கண்டீர் நாம் வணங்குங் கடவு ளாரே.

உரை:—சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து - சங்குவடிவான தெய்வ நிதியையும் தாமரை வடிவான தெய்வ நிதியையு முடையவர்களாய், தரணியொடு வான் ஆளத் தருவரேனும் - பூவுலகத்தையும் வானுலகத்தையும் ஆளக்கூடிய அதிகாரம் பெற்றவர்களாயிருந்தாலும், மாதேவாக்கு ஏகாந்தர் அல்லர் ஆகில் - பெருங் கடவுளாகிய சிவபெருமானிடத்தில் ஒருமையோடு கூடிய பக்தி யுடையவர்கள் அல்லரானல், மங்குவார் அவா செல்வம் மதிப்போம் அல்லோம் - மறந்து போகக்கூடிய அவர்களுடைய பெருஞ் செல்வதனை நாம் பொருட்படுத்த மாட்டோம், அங்கமெலாம் குறைநதழுகு தொழு நோயராய் - உறுப்புக்களெல்லாம் குறுகி யழுகி யொழுகுவதற் கேதுவாகிய குட்ட நோயுடையாராய், ஆவுரிததுத தின்றுழலும புலைய ரேனும் - பசுவினுடலை யுரிதது அதன் ஊனைத் தின்று திரிகின்ற கீழ்க் குல மக்களா யிருந்தாலும், கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில் - கங்கையை நீண்ட சடையில் அடக்கி வைத்தற்குரிய சிவபெருமானுக்கு அவர்கள் பக்தர்களா யிருப்பார்களானல், அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளரே - அவர்கள் நாம் வணங்கும தெய்வமென்றறிக, எ - று.

## இதுவுமது

408. பாதியா யழுகியகால் கைய ரேனும்
பழிதொழிலும் இழிகுலமும படைத்தா ரேனும்
ஆதியாய் அரவணையாய் என்ப ராகில்
அவரன்றோ யாம்வணங்கும் அடிக ளாவார்

சாதியால் ஒழுக்கத்தால் மிக்கோ ரேனும்
சதுர்மறையால் வேள்வியால் தக்கோ ரேனும்
போதினான் முகன்பணியப் பள்ளி கொள்வான்
பொன்னரங்கம் போற்றாதார் புலையர் தாமே.

உரை :—பாதியா யழுகிய கால் கையரேனும் - குட்ட நோயினால் கை கால்கள் பாதியாகக் குறையப்பெற்று அவை யழுகப்பெற்றவரா யிருந்தாலும், பழிதொழிலும் இழிகுலமும் படைத்தாரேனும் - பாவச் செயலும் தாழ்ந்த குடிப்பிறப்பு முடையவராயிருந்தாலும், ஆதியாய் அரவணையாய் என்பராகில் - ஆதிமூலமே! ஆதிசேடன்மீது பள்ளிகொண்டவரே! என்று பக்தியாயக கூறித் திருமாலை வழிபடுவராயின், அவரன்றோ யாம் வணஙகும் அடிகளாவார் - அவரல்லவா நாம் வழிபடுகின்ற சுவாமிகளாவார், சாதியால் ஒழுக்கத்தால் மிக்கோரேனும் - குலததாலும் நடையினாலும் சிறந்தவரா யிருந்தாலும், சதுர்மறையால் வேள்வியால் தக்கோரேனும் - நான்கு வேதப் பயிற்சியினாலும் யாகஙகள் செய்வதனாலும் தகுதியுடையவர்களாக மதிககப் பட்டாலும், போதில் நான்முகன் பணியப் பள்ளிகொள்வான் - தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பிரமன் வணங்குகின்ற திருப்பாற்கடலிற் பள்ளி கொண்ட பெருமானுடைய, பொன்னரஙகம் போற்றாதார் புலையர் தாமே - சீரங்கத்தைத் துதியாதவர்கள் கீழ்மக்களேயாவார், எ - று.

மெய்யறிவி னருமை

409\. பெறவரிது மக்கட் பிறவிபெற் றாலும
அறிவுநூல் ஆய்தல் அரிதே—அதினும
துறவுடையன் ஆதல் அரிதே அதின்மெய்
அறிவுடையன் ஆதல் அரிது.

உரை :—மக்கள் பிறவி பெறவரிது - எல்லாப் பிறவிகளையுங கடந்து மனிதனைப் பிறக்கக் கிடைப்பது அருமையாகும், பெற்றாலும் அறிவு நூல ஆய்தல் அரிதே - மனிதப் பிறப்படைந்தாலும் ஞான நூல்களை ஆராயச்சி செயயக் கிடைப்பது அதனிலும் அரியதாகும், அதினும் துறவுடையன் ஆதல் அரிதே - அதைப் பார்க்கிலும் பற்று நீங்கப்பெறுதல் மிகவும அருமை யாகும், அதின் மெய் அறிவுடையன் ஆதல் அரிது - அதனைப் பார்ககிலும் உண்மைப் பொருளுணர்சசி பெறுதல் மிகக் கடினமாகும், எ - று.

410\. எங்கும் பரவடிவாய் என்வடிவு நின்வடிவாய்க்
கங்குல்பகல் இன்றியுனைக் கண்டிருப்ப தெக்காலம்
மனதையொரு வில்லாக்கி வான்பொறியை நாணாக்கி
எனதறிவை அம்பாக்கி எய்வதினி எக்காலம்.

உரை :—எங்கும் பரவடிவாய் - எவ்விடங்களிலும் பரம்பொருளின் வடிவமாயும், என் வடிவும் நின் வடிவாய் - என்னுடைய உருவமும் உன்னுடைய திருமேனியாயும், கங்குல் பகல் இன்றி - இராப் பகலென்ற வுணர்ச்சியில்லாமல், உனைக் கண்டிருப்பதெக்காலம் - உன்னைத் தரிசித்துச சுகமாயிருப்பது எந்தக் காலத்தில் எனக்குக் கைவரும், மனதை யொரு வில்லாகி - நெஞ்சத்தை யொரு வில்லாக வளைத்து, வான் பொறியை நாணாக்கி - பெறிய ஐம்பொறிகளை யதிற்கட்டும் நாணாகக்கொண்டு, எனதறிவை அம்பாக்கி - என்னுடைய பகுத்தறிவை அந்த வில்லின் வழியாக எய்யும் அம்பாகக்கொண்டு, எய்வதினி எக்காலம் - நான் அடையவேண்டிய கதியாகிய நற்குறியைப் பொருந்துவது எந்த நாளில் நடைபெறும், எ - று.

## வாய்மையின் பெருமை

411. புலையனும் விரும்பாதவிப் புன்புலால் யாக்கை
நிலையெனு மருண் டுயிரினு நெடிதுறச் சிறந்தே
தலைமைசேர்தரு சத்தியம் பிறழ்வது தரியேம
கலையுணர்ந்தநீ யெமக்கிது கழறுவ தழகோ.

உரை :—புலையனும் விரும்பாத இப் புன்புலால் யாக்கை - இறந்தால் அதன் ஊனைப் பறையன் அல்லது புலையன்கூட விரும்பாத நிலையிலுள்ள இந்த வுடம்பை, நிலையெனு மருண்டு உயிரினும் நெடிதுறச சிறந்தே - நிலைபெற்று நிற்பதெனை மயங்கி யுயிரைப் பார்க்கினும் மிகவும் அதிகமான சிறப்புடைய, தலைமை சேர்தரு சத்தியம் பிறழ்வது தரியேம் - முதன்மையான மெய்ம்மையைப் பிறழவிடுவதைப் பொறுக்கமாட்டோம், கலையுணர்ந்த நீ எமக்கிது கழறுவதழகோ - நல்ல நூல்களைக் கற்றறிந்த நீ (எமக்குப் பொய்யுரைக்கும்படி) சொல்வது பொருத்தமாகுமா? (ஆகாதென்பது கருத்து), எ - று.

## இதுவுமது

412. இம்மையம்மைவீ டெனமறை புலங்கொள வியம்பும்
மும்மையுந்தரும் முறையுடைத் தெனுநிலை முரணி
எம்மையாழ்வயிற் றடக்கிநீ டுமிழ்கலா வெரிவாய்
வெம்மைகூர்நர குய்க்கினும மெய்ம்மையை விடேமால்.

உரை :—இம்மை யம்மை வீடென மறை புலஙகொள இயம்பும் - இப் பிறப்பு மறு பிறப்பு மோட்ச மென்பனவாக நுட்பமான ஞான நூல்கள் அறிவுக்குப் பொருத்தமாகக் கூறுகின்ற, மும்மையும் தரும் முறையுடைத் தெனும் நிலை மிரணி - மூன்றிலும் சத்தியமானது நன்மை தருமென்ற வுண்மை நீதிக்கு மாறாக, எம்மை யாழ்வயிற் றடக்கி நீடு உமிழ்கலா எரி

வாய் வெம்மைகூர் நரகுய்க்கினும் - எம்மைத் தனது ஆழமான வயிற்றில் வைத்து நெடுநாள் வெளியே உமிழாத தீப்பற்றி யெரிகின்ற வாயையுடைய கொடுமை மிகுந்த நரகத்திலே போட்டாலும், மெய்ம்மையை விடேம் - சத்தியத்தை நாம் கைவிடமாட்டோம், ஆல் - அசை, எ - று.

413. மாசு படினும் மணிதன்சீர் குன்றுதாம்
பூசிக் கொளினும் இரும்பின்கண்—மாசொட்டும்
பாசத்து ளிட்டு விளக்கினுங் கீழ்தன்னை
மாசுடைமை காட்டி விடும்.

உரை :—மணி மாசுபடினும் தன்சீர் குன்றுதாம் - இரத்தினமானது அழுக்கொடு சேர்ந்தாலும் தன்னுடைய சிறந்த தன்மையிற் குறைவுபடாது, பூசிக்கொளினும் இரும்பின்கண் மாசொட்டும் - இரும்பைக் கழுவிப் பயன் படுத்தினலும் அதிற் றுருப்பிடித்தல் கூடும், பாசத்துளிட்டு விளக்கினும் - கட்டுப்பாட்டில் வைத்து அறிவு விளககினுலும், கீழ் தன்னை மாசுடைமை காட்டி விடும் - கீழ் மக்கள் தம்முடைய குற்றதனைதச செயலிற் காட்டி விடுவார்கள், எ - று.

414. மனைக்கு விளக்கு மடவாள் மடவாள்
தனக்குச்சால் பாகும் புதல்வர்—மனைக்கினிய
காதற் புதல்வர்க்குங் கல்வியே கல்விக்கும
ஓதிற் புகழ்சா லுணர்வு.

உரை :—மனைக்கு விளக்கு மடவாள் - வீட்டுக்குத் தீபம்போல்பவள் மனைவி யாவள், மடவாள் தனக்குச சால்பாகும் புதல்வர் - பெண்களுக்கு உயர்வு தருபவர்கள் புத்திரர்களாவர், மனைககினிய காதல் புதல்வர்ககுங் கல்வியே - வீட்டிற்குச சிறந்த அன்பு செய்தற்குரிய பிள்ளைகளுக்கு உயாவு தருவது கல்வியாகும், கல்விக்கும் ஓதில் புகல் சால் உணாவு - கல்விக்குச சிறப்புத் தருவது புகழ்மிகுதற்கு எதுவாகிய நல்லுணர்வாகும், எ - று.

இவர்க்கு விஷம் இவ்விடத்தெனல்

415. திருடர்க்கு விடமெலாங் கையிலே காமமிகு
தெரிவைக்கு விடமுலையிலே
தீயபொய் யர்க்குவிட நாவிலே மதமுடன்
றிரிவோர்க்கு விடமதியிலே
கருதரிய கோளர்க்கு விடமுதடு தன்னிலே
காமுகர் விடங்கண்ணிலே
கட்செவி விடங்கள்பல் லடியிலே தேட்கெனிற்
கனவிடங் கடைவாலிலே

அரியதுஷ் டர்க்கென்னி லெட்டிமர மென்னவே
யங்கமெல் லாம்விடமதா
மடுத்துக் கெடுத்திடும் பகைவர்விட மனதிலே
யமபொன்விலை மாதருக்கு
மருவுவிட மல்குலிற் றெரியவச மன்றுகாண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே.

உரை :—மணவாள நாராயணன் மனதிலுறை - மணவாள நாராயண னென்னும் தொண்டரது உள்ளத்தில் வீற்றிருக்கின்ற, அலாமேலு மங்கை மணவாளனே - தாமரைப்பூவில் வீற்றிருக்கும் இலக்குமிக்குக் கணவனே!, வரத வேங்கட ராயனே - கேட்ட வரங்களை எளிதாகக் கொடுக்கும் திரு வேங்கட மலையில் வாழும் பெருமானே !, திருடருக்கு விடமெலாம் கை யிலே - கள்ளருடைய நசசுத் தன்மையெல்லாம் அவர் கையிலே காணப் படும், காமமிகு தெரிவையர்க்கு விடம் முலையிலே - காதல் மிகுந்த பெண் களுக்கு அவரது தனஙகளிலே நஞ்சுத்தன்மை யுண்டு, தீய பொய்யருக்கு விடம் நாவிலே - கொடிய பொய் சொல்லுகின்றவர்களுக்கு அவர்கள் நாக் கிலே விஷமுண்டு, மதமுடன் திரிவோர்க்கு விடம் நிதியிலே - செருக் குற்றுத் திரிகின்றவர்களுக்கு அவர்களுடைய செல்வத்திலே விஷ மிருக் கின்றது, கருதரிய கோளர்க்கு விடம் உதடு தன்னிலே - நினைப்பதற் கரிய கோட் சொற் கூறுகின்றவர்களுக்கு அவாகள் உதட்டிலே விஷ மிருப்பது, காமுகர் விடம் கண்ணிலே - பெண்களை இச்சிப்பவாகளுக்கு விஷம் அவர்கள் கண்ணிலே இருக்கின்றது, கட்செவி விடங்கள் பல்லடி யிலே - பாமபுக்கு விஷம் அதன் பல்லின் கீழிருக்கிறது, தேளுக்கு எனில் கனவிடம் கடை வாலிலே - தேளுக்கு என்றால் மிகுந்த விஷம் அதன் வால் நுனியிலே இருககின்றது, அரிய துஷ்டர்க்கென்னில் எட்டிமரம் என் னவே அங்கமெலலாம் விடமதாம் - திருத்துதற்கு முடியாத தீசசெயல் செய் கின்றவர்களுக்கு கசப்பு எட்டிமரத்தி லிருப்பதுபோல உடம்பு முழுவதும் விஷ முண்டு, அடுததுக் கெடுத்திடும் பகைவர் விடம் மனதிலே - நெருங கிச சினேகஞ்செய்து கெடுக்கின்ற சத்துருக்களுக்கு விஷம் அவர் நெஞ் சததிலே யிருககிறது, அம்பொன் விலை மாதருக்கு மருவு விடம் அல்குலில் - அழகிய பொன்னை விரும்பும் வேசியர்களுக்கு விடம் அவர்கள் நிதம்பத்தி லிருககிறது, தெரிய வசமன்று - அது எளிதாகத் தெரியுந் தரமுடைய தல்ல, காண் - அசை, எ - று.

இவர்க்கிவை யுளவேனு மிவை வேண்டுமெனல்

416. அதிவீர னென்னினுந் தந்திரவு பாயமுட
னடையலரை வெல்லல்வேண்டும்
ஆயிரம் வித்தைகற் றாலுமுல கந்தனி
லடக்கம திருத்தல்வேண்டும்
நதிகோடி நீந்திவந் தாலுமோ டந்தனை
நயந்துகரை சேரல்வேண்டும்
ஞானதத் துவமுணர்ந் தாலுமுல கத்தினி
னடக்கைதனை யறிதல்வேண்டும்
துதிசேர் குபேரனென் றாலுமொரு லாபமுறு
தொழிலுட னிருத்தல்வேண்டும்
துய்யவலிமையுடைய னெனினுமொரு சார்பினாற்
றுரைகளைக் காணல்வேண்டும்
மதியூகி யென்னினும் பெரியசொற் கொளல்வேண்டும்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே.

உரை:—மணவாள நாராயணன்-......, வரத வேங்கடராயனே- ......, அதிவீரன் என்னிலும் தந்திர வுபாயமுடன் அடையலரை வெல்லல் வேண்டும் - ஒருவன் பெரிய வீரனாயிருந்தாலும் எதிரியை நேராக எதிர்ப்பதைப் பார்க்கிலும் தந்திரமாகச சூழ்ச்சி செய்து செயமடையவேண்டும், ஆயிரம் வித்தை கற்றாலும் உலகந்தனில் அடக்கமது இருத்தல் வேண்டும் - ஒருவன் பல கலைகளைக் கற்றிருந்தாலும் அவன் கலவிச செருக்கில்லாது பணிவா யிருத்தல் வேண்டும், நதிகோடி நீந்தி வந்தாலும் ஓடந்தனை நயந்துகரை சேரல் வேண்டும் - கோடி யாறுகளை நீந்தி வரக்கூடிய வல்லமை யிருந்தாலும் தக்க சமயத்தில் தோணியை விரும்பி யதிலேறிக் கரைசேர்வது நல்லது, ஞானதத்துவம் உணர்ந்தாலும் உலகத்தினில் நடக்கைதனை அறிதல் வேண்டும் - நூல்களிலுள்ள அறிவுண்மைகளை யொருவன் கற்றாலும் உலக வழக்க மறிந்திருத்தல் வேண்டும், துதிசேர் குபேரனென்றாலும் ஒரு லாப முறு தொழிலுடன் இருத்தல் வேண்டும் - புகழப்படுகின்ற குபேரன் போன்ற பெருஞ் செல்வமுடையவனா யிருந்தாலும் ஒருவன் ஊதியம் தருகின்ற முயற்சி யுடையவனாயிருத்தல் வேண்டும், துய்ய வலிமையுடையன் எனினும் ஒரு சார்பினால் துரைகளைக் காணல் வேண்டும் - பரிசுத்தமான திறமை யுடையவனா யிருந்தாலும் ஒரு ஆதரவுபற்றி முதலாளிகளைப் பார்த்தல் வேண்டும், மதியூகி என்னினும் பெரியர் சொற் கொளல் வேண்டும்

இயற்கையான அறிவு முட்பமுடையனெனினும் அநுபவமுடைய பெரிய வர்களுடைய வார்த்தையை அனுசரிக்க வேண்டும், எ - று.

## வேசியர் இயல்பு

417. புருடனைக் கண்டவுட னேகத விடுக்கினிற்
போயொளித் திடுவர் பின்பு
பொல்லாத தாய்க்கிழவி தன்னையவர் பாலினிற்
போக்கிவச னிக்க விடுவார்
மருடருங் கண்ணினுர் சற்றருகிலே வந்து
மயல்விளைத் துறவு செய்வார்
மன்னநின் னடிகளிச் சிறுகுடிலில் வைத்ததெம்
மாதவ மெனச் சொல்லுவா
ரருணிறைந் தவர்போல விருகையி னுற்றழுவி
யாவலொடு முத்த மிடுவா
ரையநீ பிரியிலெம துயிர்பிரியு மென்றவர்க
ளாவிமுழு தும்ப றிப்பார்
கருமையணி வேசியர்கண் முறைமையிது காணென்பர்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே
கயிலையங் கிரிவாசனே.

உரை :—கற்பக விராச மேவும் கஙகைபுனை யீசனே - கற்பக விராசப் பதியில் வீற்றிருக்கும் கங்கையைத் தரித்த கடவுளே !, மஙகை மகிழ் நேசனே - உமையம்மை விரும்புங் காதலனே !, கயிலையங்கிரி வாசனே - அழகிய கயிலையில் வசிப்பவனே !, புருடனைக் கண்டவுடனே கதவிடுக்கதனில் போய் ஒளித்திடுவர் - காதலித்து வருகின்ற மனிதனைக் கண்டவுடனே வாசற் கதவின் மறைவிற்போய் விலைமகளானவள் ஒளித்திருப்பாள், பின்பு பொல்லாத தாய்க் கிழவி தன்னை யவர்பாலினில் போக்கி வசனிக்க விடுவார் - அதற்குப் பின் வம்பு பேசுவதில் வல்ல தாய்க்கிழவியென்னும் மாதினை வந்த மனிதனோடு பேசும்படி யனுப்புவாள், மருள்தரும் கண்ணினுல் சற்றருகிலே வந்து மயல் விளைத்து உறவு செய்வார் - மயக்கத்தை யுண்டாக்கக்கூடிய கண்ணினை யுடையவளாகிய வேசி கொஞ்சம் சமீபத்தில் வந்து மோகத்தை யுண்டாக்கிச சினேகஞ்செய்வாள், மன்னநின் அடிகள் இச சிறு குடிலில் வைத்தது எம் மாதவம் எனச் சொல்லுவார் - இராசாவே உங்களுடைய திருவடிகள் இந்தச் சிறிய குடிசையில் வைப்பதற்குக் கிடைக்க நாங்கள் என்ன பெரிய தவம் செய்தோ மென்பாள், அருள் நிறைந்தவர்போல இரு கையினுல் தழுவி யாவலொடு முத்தமிடுவார் - கருணை மிகுந்தவர்கள்போல இரண்டு கையினுலும் ஆலிங்கனஞ் செய்து

பொய்யான ஆசை காட்டி முத்தமிடுவாள், ஐயநீ பிரியில் எமதுயிர்ப் பிரியுமென்று அவர்களாவி முழுதும் பறிப்பார் - ஐயனே நீ என்னைப் பிரிந்து போயினால் என்னுடைய உயிர் போய்விடுமென்று சொல்லி உயிர் முழுவதையுங் கொள்ளை கொள்வள், கருமையணி வேசியர்கள் முறைமை இது காண் என்பர் - நெஞ்சத்தில் வஞ்சகங் கொண்ட விலைமாதர் தன்மையிது வென்று அறிஞர்கள் கூறுவார்கள், எ - று.

கருவத்தாற் பங்க முற்றோர்

418. பிரமனது கருவமும மாரன் புகழ்ச்சியும்
பீடுபெறு வாலி யகமும்
பேரிலங் கைக்கரச னாற்றலு மிராட்சசப்
பெண்தா டகைச் சமர்த்தும்
திரிபுரர்க ளெண்ணமுந் தக்கனது வேள்வியுந்
தீங்குபுரி துரிய னினைவுஞ்
சினங்கொள்கபி டவன்மதத் தொடுசூர பன்மன்
செருக்குமிகு வீரர் வலியு
மிரணியன் பிடிமான மும்பகா சூரன்
றியம்பொணா வுயிர் பழிப்பு
மின்னும் பராக்ரம மிகுந்தபுர வலர்மதமு
மிறவாது நிலைநின்றதோ
கரியமால் தேடியுங் காணாத பாதனே
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே
கயிலையங் கிரிவா சனே.

உரை:—கரியமால் தேடியுங் காணாத பாதனே - கரிய நிறமுடைய திருமால் தேடியும் காணப்படாத திருவடிகளை யுடையவனே !, கற்பக விராச மேவும் - ......, கயிலையங்கிரி வாசனே - ......, பிரமனது கருவமும் - ஐந்து தலையில் ஒரு தலை யிழதற் கேதுவாகிய அயனுடைய செருக்கும், மாரன் புகழ்ச்சியும் - நெற்றிக் கண்ணால் எரிதற்குக் காரணனாகிய மன்மதனது தற்புகழ்ச்சியும், பீடுபெறு வாலி அகமும்-பெரிய வரம் பெற்ற வாலியினுடைய செருக்கும், பேர் இலங்கைக்கு அரசன் ஆற்றலும் - பெரிய இலங்கை வேந்தனாயிருந்த இராவணனுடைய செருக்கோடு கூடிய திறமையும், இராட்சசப் பெண் தாடகைச சமர்த்தும் - அரக்கியாகிய தாடகையின் யாகத்தை யழிக்கும் சாமர்த்தியமும், திரிபுரர்கள் எண்ணமும் - வானில் திரிந்த திரிபுரத்து அசுரர்களுடைய தற்பெருமையான நினைவும், தக்கனது வேள்வியும் - தக்கப்பிரசாபதி சிவபெருமானை நீக்கிச் செருக்கோடு நடத்திய யாகமும், தீங்குபுரி துரியன் நினைவும் - பஞ்ச பாண்டவர்களுக்குக்

கெடுதி செய்த துரியோதனனுடைய அகந்தை எண்ணமும், சினங்கொள் கயிடவன் மதத்தொடு சூரபன்மன் செருக்கு மிகு வீரர் வலியும் - கண்ணனை எதிர்த்த மதுகயிடவ னென்னும் அசுரனுடைய அகங்காரமும் முருகப் பெருமானை எதிர்த்த சூரபன்மனுடைய அகந்தையோடு கூடிய பெரிய வலிமையும், இரணியன் பிடிமானமும் - இரணியனுடைய பிடிவாதமான தன்மதிப்பும் பகாசூரனது இயம்பொணு வுயிர் பழிப்பும் - வீமனை எதிர்த்த பகாசூர னென்பவன் உயிர்களைப் பொருட்படுத்தாது கொன்று தின்ற செருக்கும், இன்னும் பராக்கிரம மிகுந்த புரவலர் மதமும் - இவ்வாறு வீரமிகுதியால் செருக்குற்ற மன்னரது கொள்கையும், இறவாது நிலை நின்றதோ - அழியாமல் உலகத்தில் நிலைபெற வில்லையே, எ - று.

கலிகால வியல்பு

419. தாலமர நிழலினல் லோரமுத முண்கினுந்
தப்பாது குடிய ரென்பர்
தனமிகுந் துளபேர்கள் பித்தளை யணிந்திடிற்
தங்கமென் றேமொழி குவார்
வாலிபந் தன்னிலே யதிசீல ராகவே
வைகினும் விடனென் பர்காண்
வறுமைசே ரெளியவர்கள் வயிரமது பூண்கினும்
வளையற்க லெனவு ரைப்பார்
சீலம் புறத்தினு மகத்தினக் கிரமமுஞ்
செயுமீன ரைப்பு கழுவார்
சித்தசுத் தியதாகி ஞானநெறி தேர்ந்திடுந்
திவ்யபெரி யோரை யிகழ்வார்
காலகலி யுகதரும மீதென வுரைத்திடுவர்
கற்பக விராச மேவுங்
கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே
கயிலையங் கிரி வாசனே.

உரை:—கற்பக விராச மேவும் - ......, கயிலயங்கிரி வாசனே - ......, தாலமர நிழலில் நல்லோர் அமுதமுண்கினும் தப்பாது குடியர் என்பர்-பனை மரத்து நிழலிலிருந்து நல்ல மனிதர்கள் அமுதம் போன்ற பாலையுண்டாலும் அவர்கள் திட்டமாகக் கள் குடிப்பவர்களே என்று (கலிகாலத்தினர்) சொல்வார்கள், தனமிகுந்துள பேர்கள் பித்தளை யணிந்திடில் தங்கம் என்றே மொழிகுவார் - செல்வமிகுந்தவர்கள் பித்தளையினாற் செய்த நகையை யணிந்து கொண்டாலும் அது பொன்னாற் செய்யப்பட்டதென்று உறுதி கூறுவர், வாலிபத்தன்னிலே யதிசீலராகவே வைகினும் விடனென்பர் காண் - இளமைப் பருவத்திலே மிகுந்த நல்லொழுக்க முடையவர்களா

யிருந்தாலும் அப்படி இருப்பவர்களைக் காமுகரென்று கூறுவர், வறுமை சேர் எளியவர்கள் வயிரமது பூண்கினும் வளையல் கல் என உரைப்பார் - தரித்திரமுடைய ஏழைகள் வயிர நகைகளை யணிந்தாலும் அது வளையல் செய்யப்படுதற்குரிய கண்ணாடிக் கல்லென்று கூறுவார்கள், சீலம் புறத்தி னும் அகத்தின் அக்கிரமமும் செயும் ஈனரைப் புகழுவார் - புறததே நன் மைத் தோற்றமும் உள்ளததே அநீதியான செயலைபுமுடைய அற்பரை நல்லவரென்று துதிப்பர், சித்த சுத்தியதாகி ஞானநெறி நோக்கிடுந் திவ விய பெரியோரை இகழ்வார் - மனமாசு நீங்கப் பெற்று அறிவு வழியிற் றெளிவு பெற்ற தெய்வத் தன்மையுடைய பெரியோர்களை யவமதித்துப் பேசுவார், எ - று.

## உற்ற ருறவினர்க்கு உதவாமல் வம்பர்க்கு உதவுதல்

420. விரும்பி அடைந்தார்க்குஞ் சுற்றத் தவர்க்கும்
வருந்தும் பசிகளையார் வம்பர்க் குதவல்
இரும் பனைவில் வென்ற புருவத்தாய் ஆற்றக்
கரும்பனை யன்ன துடைத்து.

உரை:—இரும்பனைவில் வென்ற புருவத்தாய் - பெரிய மூங்கிலினு லாகிய வில்லினை அழகால் செயித்த புருவத்தை யுடைய பெண்ணே !, விரும்பி அடைந்தார்க்கும் சுற்றத்தவர்க்கும் - உணவு பெறுதல் வேண்டி விசுவாசத்தோடு தன்பால் வந்தவர்களுக்கும் உறவினர்களுக்கும் உணவு கொடுத்து, வருந்தும் பசி களையார் - அவர்கள் துன்புறுதற்குக் காரண மாகிய பசியைப் போக்கமாட்டாது, வம்பர்க்கு உதவல் - குறும்பு செய்யும் பிறர்க்குதவுதல், ஆற்றக் கரும்பனை யன்னது உடைத்து - மிகவும் பெரிய பனையானது தன்னை வளர்த்தவர்களுக்கு வேண்டுங் காலத்துப் பயன்பெறா மல் நெடுநாள் கழித்துப் பிறர்க்குப் பயன்படுதல் போன்ற வியல்பினை யுடையது, எ - று.

## ஈயாதான் செல்வம் பொலிவு பெறாது

421. முழவொலி முந்நீர் முழுதுட னாண்டார்
விழவூரில் கூத்தேபோல் வீழ்ந்தவிதல் கண்டும்
இழவென் றொருபொருள் ஈயாதான் செல்வம்
அழகொடு கண்ணி னிழவு.

உரை:—முழவொலி முந்நீர் முழுதுடன் ஆண்டார் - மத்தளத்தி னோசையுடைய கடல் சூழ்ந்த பூமி முழுவதையும் ஆட்சி செய்த மன்னர்கள், விழவூரில் கூத்தேபோல் வீழ்ந்த விதல் கண்டும் - திருவிழா நடந்த நகரத தில் ஆடப்பட்ட கூத்தானது முடிவு பெறுதல் போலச் செல்வம் இழந்து இறத்தலைப் பார்த்திருந்தும், இழவென்று ஒரு பொருள் ஈயாதான் செல்

வம் - ஒரு பொருளைக் கொடுத்தால் கொடுத்த அளவில் நமக்கது நட்டந் தானே என்றெண்ணி அறஞ் செய்யாதானுடைய ஐசுவரியமானது அழகொடு கண்ணின் இழவு - அழகிருக்கும்போது கண்ணை யிழந்தாற் போலவாகும், எ - று.

## பூர்வ புண்ணியத்தால் பொல்லார் பொருள் பெறுவர்

422. வழங்கார் வலியிலார் வாய்ச்சொல்லும் பொல்லார்
உழந்தொருவர்க் குற்றால் உதவலு மில்லார்
இழந்ததில் செல்வம பெறுதலும் இன்னார்
பழஞ்செய்போர் பின்று விடல்.

உரை :—வழஙகார் - ஒருவாக்கும் ஒரு பொருளையும் கொடுக்கமாட்டா தவர்கள், வலியிலா - திறமை யில்லாதவர்கள், வாயச சொல்லும் பொல் லார் - வாயினாலே சொல்கின்ற சொற்களைக் கவனித்தால் கொடியரென்று சொல்லப்படுவார்கள், ஒருவர்க்கு உற்றால் - வேண்டியவர்கள் யாருக்காவது அபாயம் நேர்ந்தால், உழர்து உதவலுமில்லார் - முயற்சி செய்து உதவி செய்யாதவர்கள், இன்னார் - இப்படிப்பட்டவர்கள், இழந்ததில் செல்வம் பெறுதலும் - அழிந்து போகாத ஐசுவரியத்தை யடைதல், பழஞ்செயபோர் பின்றுவிடல் - முன்னம் உரமிடப்பெற்ற வயல் பிற்காலத்தில் உரமில்லா மலும் மிகுந்த குவியலாக நெல்லைக் கொடுப்பது போலாம், எ - று.

## மதிப்பு மிக்கவரை அழிக்க முயலுதல்

423. மிக்குடைய ராகி மிகமதிக்கப் பட்டாரை
ஒற்கப் படமுயறும் என்றல் இழுக்காகும
நற்கெளி தாகி விடினும் நளிர்வரைமேல்
கற்கிள்ளிக் கையுய்ந்தா நில்.

உரை:—மிக்குடையராகி மிக மதிக்கப் பட்டாரை - மிகுந்த செல்வ முதலிய சிறப்புக்களுடையராய் எல்லாராலும் அதிகமாகப் போற்றப்பட்ட வர்களை, ஒற்கப்பட முயல்தும் என்றல் இழுக்காம் - எளிமை யுறும்படி செய்வோமென்று எண்ணுதல் தவறாகும், நற்கு எளிதாகி விடினும் - மிகவும் இலேசான செயலாகததோன்றினாலும், நளிர் வரைமேல் - உயர்ந்த மலையின்மீதுள்ள, கற்கிள்ளிக் கையுய்ந்தார் இல் - கல்லைக்கிள்ளி யெடுக்க முயன்று கை நோவில்லாமற் பிழைத்தவர்களில்லை. (அதுபோல அப்படி முயல்கின்றவர்களுக்குத் துன்பம் நேரிடுமென்பது கருத்து), எ - று.

அறிமடமும் அணியாதல்

424. முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
தொல்லை யளித்தாரைக் கேட்டறிதும்—சொல்லின்
நெறிமடற் பூந்தாழை நீடுநீர்ச் சேர்ப்ப
அறிமடமும் சான்றோர்க் கணி.

உரை :—நெறிமடற் பூந்தாழை நீடுநீர்ச் சேர்ப்ப - திரண்ட மடல்களை யுடைய அழகிய தாழை மரங்கள் வளர்ந்தோங்கிய நெய்தல் நிலத்தலைவனே!, முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும் - முல்லைக் கொடிக்குச் சார் பாகத் தேரையும் மயிலுக்குக் குளிர் நீங்குவதற்குப் போர்வையையும், தொல்லையளித்தாரை - முன்னாளில் கொடுத்த பாரி, பேகன் முதலிய வள்ளல்களை, கேட்டறிதும் - கேட்டு உண்மையறிவோமாக, சொல்லின் - ஆராய்ந்து கூறுமிடத்து, அறிமடமும் சான்றோர்க்கு அணி - தெரிந்தும் தெரியாமல் போலிருக்கின்ற தன்மை குணத்தாலுயர்ந்த பெரியோர்களுக்கு அழகு செய்வதாகும், எ - று.

எளியார்க்கு இன்னா செய்யாமை

425. பூவுட்கும் கண்ணாய் பொறுப்பர் எனக்கருதி
யாவர்க்கே யாயினும் இன்னா செயல்வேண்டா
தேவர்க்கும் கைகூடாத் திண்ணன்பி னார்க்கேயும்
நோவச்செய் நோயின்மை யில்.

உரை :—பூவுட்கும் கண்ணாய் - குவளைப்பூ தான் கண்ணுக்கு ஒப்பாக முடியவில்லையே என்று அஞ்சத்தக்க கண்ணையுடையவளே!, பொறுப்பர் எனக் கருதி - நாம் கெடுதி செய்தால் எளியர்களா யிருப்பதால் தாங்கிக் கொள்வார்களென் றெண்ணி, யாவர்க்கே ஆயினும் இன்னாசெயல் வேண்டாம் - எவ்வளவு தாழ்ந்தவர்களுக்காயினும் தீங்கு செய்தல் கூடாது, தேவர்க்கும் கைகூடா திண் அன்பினார்கேயும் - தேவர்களுக்குள்ளும் ஏற் படுதற்கரிய உறுதியான நட்புடையவர்களுக்கும், நோவச் செய் நோவின் மையில் - துன்புறும்படி செய்தால் அதனை சகித்துக்கொள்ளும் பொறுமை இல்லை என்றறிக, எ - று.

அடாது சொன்னவனைக் கோபியாமை

426. எய்தா நகைச்சொல் எடுத்துரைக்கப் பட்டவர்
வைதாராக் கொண்டு விடுவர்மன் அஃதால்
புனற்பொய்கை ஊர விளக்கெலி கொண்டு
தனக்குநோய் செய்து விடல்.

உரை:—புனல் பொய்கை யூர - நீர்வளமுடைய குளங்களுள்ளவூரனே!, எய்தா நகைச் சொல் - தமக்குச் சாரக்கூடாத இகழ்ச்சி மொழியை, எடுத்துரைக்கப்பட்டவர் - பிறரால் விதந்து பேசப்பட்டவர், வைதாராக்கொண்டு விடுவர் - அப்படிப் பேசியவர் தம்மை பேசியதாக வெண்ணிச் சினத்தல் செய்பவர் பலர், அஃது - அப்படிச் செய்தல், எலி விளக்குக் கொண்டு - எலியானது தீபத்தின்மேலேறி, தனக்கு நோய் செய்து விடல் - தனக்குத் துன்பத்தைத் தேடிக்கொள்வது போலாகும், எ - று.

குறிப்பு :—தனக்குப் பொருத்தமில்லாத சொல்லை ஒருவன் சொன்னால், அச் சொல் சொல்பவன் எரிகின்ற தீப்போலப் பொல்லாங்கின் சார்பிலிருப்பவன்; அவனோடு கோபங்கொள்ளுதலால் அப் பொல்லாங்கின் தொடர்பு நமக்கும் வந்து சேருமாதலின், நாம் அவனோடு கோபியாது விலகுதலே நல்லது என்பது கருத்து.

## பெரியாரைக் கைப்பித்தல் தீது

427\. எல்லாத் திறத்தும் இறப்பப் பெரியாரைக்
கல்லாத் துணையார்தாம் கைப்பித்தல் சொல்லின்
நிறைந்தார் வளையினாய் அஃதால் எருக்கு
மறைந்தியானை பாய்ச்சி விடல்.

உரை :—நிறைந்தார் வளையினாய் - கைகளில் நிறம்பப் பொருந்திய வளையல்களையுடையவளே!, சொல்லின் - ஆராய்ந்து கூறுமிடத்து, எல்லாத் திறத்தும் இறப்பப் பெரியாரை - எல்லாவற்றாலும் மிகவும் உயர்ந்த நிலை யடைந்தவரை, கல்லாத்துணையார்தாம் கைப்பிதைல் - நன்கு படியாத அளவுபட்ட அறிவுடையவர்கள் வெறுக்கச் செய்தல், அது எருக்கு மறைந்து ஆனைப் பாய்சி விடல் - எருக்குச் செடிமறைவிலே நின்று ஆனையைக் கோபித்து மதம் பிடிக்கச் செய்வது போலாம், எ - று.

குறிப்பு :—பெரிய மரத்தில் மறைந்து ஆனையைக் கோபமூட்டினால் அதினின்று ஒரு வேளை தப்பிப் பிழைத்தாலும், சிறு எருக்கம் புதரிலே மறைந்து யானையை வெகுள்விப்பவன் அதனால் உயிரிழத்தல் திண்ணம். அதுபோல, கல்லாமை அல்லது சிறு கல்வி யென்பதைப் பாதுகாப்பாகக் கொண்டு உன்னத நிலையிலுள்ளவர்களை இகழ்ந்தால் இகழ்ந்தவர் கெடுவது திணணமென்றறிக.

## மறைவிலும் தீவினை செய்யாமை

428\. எனக்குத் தகவன்றால் என்பதே நோக்கித்
தனக்குக் கரியாவான் தானாய்த் தவற்றை
நினைத்துத்தன் கைகுறைத்தான் தென்னவனும் காணார்
எனச்செய்யார் மாணா வினை.

உரை:—எனக்குத் தகவன்று என்பதே நோக்கி - இது நான் செய்யத் தகாது என்பதை மாத்திரம் கருதி, தனக்குக் கரியாவான் தானாய் - தான் செய்த பிழைக்குத் தன்னையே சாட்சியாக வைத்துக்கொண்டு, தென்னவன் - பொற்கைப் பாண்டியனென்ற மன்னன், தவற்றை நினைத்து - தன்னுடைய குற்றத்தை எண்ணி, தன் கைக்குறைத்தான் - அதற்குத் தண்டனையாகத் தன் கையை வெட்டிக்கொண்டான், (அதுபோல, தக்க பெரியோர்) காணார் என - தங் குற்றத்தைப் பிறர் காண முடியாதென்றெண்ணி, மாணா வினை செய்யார் - தீவினையான கருமத்தைச் செய்யமாட்டார்கள், எ - று.

குறிப்பு:—கீரந்தை யென்ற அந்தணன் வீட்டில் அவனுக்கு ஐயமுண்டாகும்படி கதவைத் தட்டினதற்காகத் தன் கையை ஒரு பாண்டியன் வெட்டி இழந்த கைக்காகப் பொற்கை போட்டுக் கொண்டான். கதவைத் தட்டியது அவனென்று ஒருவரு மறியாதிருந்தும் தனக்குத் தண்டனை விதித்துக் கொண்டதனால் பெரியோர் மறைவிலும் தீயன செய்யாமைக்கு அவன் கதையை யுதாரணமாகக் கூறினார்.

விலக்குவார்மேல் வெகுண்டெழுதல்

429. குலத்துச் சிறியார் கலாந்தணிப்பான் புக்கு
விலக்குவார் மேலும் எழுதல்—நிலத்து
நிலையழுங்க வேண்டிப் புடைத்தக்கால் வெண்மாத்
தலைகீழாக் காதி விடல்.

உரை:—கலாம் தணிப்பான் புக்கு - கலகத்தை நீக்குவதற்காக இடையிற் புகுந்து, விலக்குவார் மேலும் - சண்டையிடுகின்றவர்களை விலக்குகின்றவர்களிடத்திலும், குலத்துச்சிறியார் எழுதல் - இழிந்த குடிபிறப்பிற் பிறந்த அற்பர்கள் கோபித்துச் சீறிப் பாயுதல், நிலத்து நிலை அழுங்க வேண்டி - பூமிமீது செல்லாமல் நிற்கின்ற குதிரையின் நிலையை மாற்றக்கருதி, புடைத்தக்கால் - அக் குதிரையை யடித்தபோது, வெண்மாத் தலைகீழாய் காதி விடல் - வெள்ளிய குதிரைமேலேறி யிருப்பவன் சவாரி பண்ணத் தெரியாமையால் தலைகீழாக வீழ்ந்து துன்புறுதல் போலாகும் எ - று.

அன்பிலார் நட்பின் பழமைபற்றிப் புது நட்பை நீக்காமை

430. தீர்ந்தே மெனக்கருதித் தேற்றா தொழுகித்தாம
ஊர்ந்த பரிவும இலராகிச்—சேர்ந்தார்
பழமைகந் தாகப் பரியார் புதுமை
முழுநட்பிற் சாணாட்கு நன்று.

உரை:—தீர்ந்தேம் எனக் கருதி - நாம் முடிவான நட்புடையோமென்றெண்ணி, தேற்றாது ஒழுகி - நட்புடையவர்களிடத்தே தெளிவில்லாத காரியங்களைச் செய்து நடந்து, தாம் ஊர்ந்த பரிவும இலராகி - தாம்

பழகிய அன்புங் கூட வில்லாதவராகி, சேர்ந்தோர் பழமை கந்தாக - தம்மைச் சார்ந்தொழுகுபவருடைய நட்பின் பழமையை ஆதாரவாகக் கொண்டு, புதுமை பரியார் - அறிஞர் புதிதாய் வந்த நல்ல நட்பை விலக்க மாட்டார்கள், முழம் நட்பின் சாண் உட்கு நன்று - ஒரு முழங் கூடா நட்பைப் பார்க்கினும் சாணளவு தூரமுள்ள அச்சம் நல்லதாகும், எ - று.

குறிப்பு:—நெடுநாட் பழகியவராகிலும் தீமை செய்தலும் அன்பு செய் யாமையு முடையவரைப் பழமைபற்றி நண்பராகக் கருதுதல் தவறு என் றும், நற்குணமுடையார் நட்புப் புதுமையா யிருந்தாலும் தழுவிக் கொள்ளு தலே நல்லதென்றும் அறிவுறுத்தியவாறு காண்க

431. யானுந் தானு மொழிந்தானை யாதும் எவர்க்கும் முன்னோனைத்
தானும் சிவனும் பிரமனும் ஆகிப் பணைத்த தனிமுதலை
தேனும் பாலுங் கன்னலும் அமுது மாகித் தித்தித்தென்
ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற வொன்றை யுணர்ந்தேனே.

உரை:—யானுந் தானு மொழிந்தானை - என்னையும் தன்மயமாக்கித் தானேயாய் முடிந்தவனை, யாது எவர்க்கும் முன்னோனை - எவ்வகையான அறிவுப் பொருளும் எவ்வகையான சடப் பொருளும் தோன்றுதற்கு முன் னிருந்தவனை, தானும் சிவனும் பிரமனும் ஆகிப் பணைத்த தனிமுதலை - விண்டு பிரமன் உருத்திரனென்ற மூர்த்திகளாய் விரிந்த ஒப்பற்ற முதற் பரம் பொருளாயிருப்பவனை, தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகித் தித்தித்து - தேன், பால, கற்கண்டு தேவாமுத முதலிய எல்லாவற்றின் சுவைபோலப் பேரின்ப வனுபவமெனக்குத் தந்து, என் ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற ஒன்றை யுணர்ந்தேனே - என்னுடைய உடம்பிலும் உயிரிலும் உணர்ச்சியிலும் கலந்து நின்ற ஒரு பொருளானவனை யான் அனுபவத்திற் கண்டேன், எ- று.

432. கருத்தே புகுந்து கதிகாட்டுங்
கண்ணே வருக மெய்ஞ்ஞானக்
கரும்பே வருக கருணைபொழி
காரே வருக ஆனந்தப்
பெருக்கே வருக யாங்கள்பெறும்
பேறே வருக மறைசொல்கிளிப்
பிள்ளாய் வருக பிறங்கு தெய்வப்
பெம்மான் வருக குறமடந்தை
தருக்கே வருக மிடியகற்றுந்
தருவே வருக மன்பதைக்கோர்
தஞ்சே வருக எமையளிக்குந்
தாயே வருக பவப்பிணிக்கு

மருந்தே வருக சமரபுரி
வாழ்வே வருக வருகவே
மறையின் சிரமெய்ப் பொருளான
வள்ளல் வருக வருகவே.

உரை :—கருத்தே புகுந்து கதிகாட்டுங் கண்ணே வருக - உள்ளத்திற் புகுந்து நாம் உய்வதற்குரிய நல்வழியைக் காட்டியருள்கின்ற ஞானக் கண் போன்றவனே எம்மிடம் வந்தருள்க !, மெய்ஞானக் கரும்பே வருக - உண்மை யறிவுடைய கரும்பு போன்ற பேரின்பப் பொருளே வந்தருள்க !, கருணைபொழி காரே வருக - அருளாகிய நீரைப் பொழிகின்ற மேகம் போன்றவனே வந்தருள்க !, ஆனந்தப் பெருக்கே வருக - பேரின்ப வெள்ளமே வந்தருள்க !, யாகங்கள் பெறும் பேறே வருக - யாகங்கள் பெறக்கூடிய பெரிய லாபமாக விருப்பவனே வந்தருள்க !, மறைசொல் கிளிப் பிள்ளாய வருக - மந்திரங்களை யோதுகின்ற கிளிப்பிள்ளை போன்றவனே வந்தருள்க !, பிறங்கு தெய்வப் பெம்மான் வருக - விளங்குகின்ற தெய்வத்தன்மை யுடைய முதல்வனே வந்தருள்க !, குற மடந்தை தருகசே வருக - குறவர் குலத்தி லுதித்த வள்ளிநாயகிக்குக் களிப்பைத் தருகின்ற பெருமானே வந்தருள்க !, மிடியகற்றும் தருவே வருக - வறுமையை நீக்குகின்ற கற்பகமரம் போன்றவனே வந்தருள்க !, மன்பதைக் கோர் தஞ்சே வருக - மக்களெல்லாரும் அடைக்கலம் புகத் தக்கவனே வந்தருள்க !, எமை யளிக்குந் தாயே வருக - எங்களைப் பாதுகாக்கின்ற அன்னை போன்றவனே வந்தருள்க !, பவப் பிணிக்கு மருந்தே வருக - பிறவி நோய்க்கு மருந்தா யிருப்பவனே வந்தருள்க !, சமரபுரி வாழ்வே வருக வருகவே - சமரபுரியில் வீற்றிருக்கும் பெருஞ் செல்வமானவனே வந்தருள்க !, மறையின் சிரமெய்ப் பொருளான வள்ளல் வருக வருகவே - நுட்ப நூல்களின் முடிவிலுள்ள உண்மைப் பொருளான அருளாளனே வந்தருள்க !, எ - று.

## தனிப்பாடற்றிரட்டு - உரையுடன்

இரண்டாம் பாகம் - முற்றுப்பெற்றது.

---

திருமகள் விலாச அச்சு நிலையம் சென்னை :—1955,